உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.



திருக்கைலாயபரம்பரை

மெய்கண்டதேவசந்தானம்

சிற்றம்பலநாடிகளாதீனம்

திருச்செய்ஞலூர்

நாவினன்மழுவெடுத்த

ஞானப்பிரகாசவள்ளலார்

அருளிச்செய்த

# வீரநாராயணர்விஜயம்.



இஃது

காஞ்சிபுரம்

கச்சபாலயதேவராலியற்றிய

பொழிப்புரையோடு,

சிவாத்துவிதசித்தாந்தியாகிய

திருமழிசை

முத்துச்சாமிமுதலியாரவர்களால்

பரிசோதித்துத்தர,

---

சிதம்பரம்

அ - இரத்நசபாபதிமுதலியாரவர்களால்

தமது

சென்னை

இந்து தியலாஜிகல் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1898.

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# இந்நூல்வரலாறு.

---

ஆன்றோராம் சான்றோருடைத்தென்று கூறப்பட்டுள்ள தொண்டைநாட்டிற் றிராஜதானியென விளங்கும் காஞ்சிமாநகரின்கண், இன்றைக்கேறக்குறைய வைஞ்ஞூறு வருடத்திற்குமுன், மனுநீதிமுறையிற் றவறாதவனாய் வருணாச்சிரம தருமங்களையுஞ் சமயாசார வொழுக்கங்களையுந் தழுவினவனாய் விஜயமார்த்தாண்ட னென்னும் ஓர்குறுநிலமன்னவ னிருந்தான். அவன் கொலுச்சபைக்கண் உத்தியோகஞ்செய்பவருள், ஒரே பெயர் வாய்ந்தோ ரிருவரிருந்தனர். அவரில் ஒருவன் செங்குந்தன், மற்றொருவன் வேளாளன். இவரில் ஒருவனை யாதேனுமோர் காரியார்த்தமாக அரசனழைக்குங்கால், மற்றொருவன் வந் தெதிராகுவன். இவ்வாறு பலகாலு நிகழ்வதை அரசன் யோசித்து, அவ்விருவரையும் ஒருபோதழைத்து, உங்களிடுகுறிப் பெயரையேனுஞ் சிறப்புப் பெயரையேனும் வேறுபட மாற்றிக்கொண்மின்களெனக் கூறினன். அதற்குச் செங்குந்தன், இடுகுறிப் பெயரைமாற்ற யார்க்குமியலா. சிறப்புப்பெயரோ வென்றால் மற்றைய மரபினர்க்குப் பலவா யிருத்தல்போல எம்மரபினர்க்கின்றி, எக்காலத்தும் யாண்டும் ஒன்றாகவே யிருத்தலால் அதனையு மாற்றப்படாதெனக்கூறினன். இதுகேட்ட அரசன் வேளாளனை நோக்க, அவன் இவர்மொழிந்ததில் மற்றைய மரபினரைப் பற்றிக் கூறியது சரதமேயாயினும் எமதுமரபினர்க்கும் அவ்வாறின்றி, எக்காலத்தும் யாண்டும் ஒன்றாகவே யிருத்தலால் அதனையு மாற்றப்படாதெனக் கூறினன். அக்கால் அரச னிருவரிடத்துஞ் சமநோக்கஞ் செய்து, இந்தச்சந்தேகத்தினை யாவரால் உள்ளபடியுணர்ந்து நிவர்த்திக்கக் கூடுமென்று வினவினன். அதற்குச் செங்குந்தன் — கைலாயபரம்பரையில் வந்த சந்தாநாசிரியர் நால்வருள் உபசுப்பிரமணியரான வீரவாகுதேவ ரமிசைபெற்றுச் சனகமகாமுனிவ ரவதாரமாய் விளங்கும் சுவேதவனப் பெருமாளென்னு மெய்கண்டதேவ ராதீனத்தின்கண், பூர்வமோர் சிவானுபூதிமானாய்ப் பிரசித்தி பெற்றிருந்த சிற்றம்பல நாடிகளின் பிரதம மாணாக்கரு ளொருவராய் இவ்வூரின் கண்ணே இவர்க்கு மிவர்மரபினர்க்கும் ஆசிரியராகி ஞானப்பிரகாச தேசிகரென்னும் அபிடேகத் திருநாமம் வாய்ந்த ஓர் புண்ணியசொரூபியுளர், அவரை யழைப்பித்துசாவின் உள்ளபடி யுணரக்கூடுமென்று சொல்லினன். அப்போதரசன் வேளாளனை நோக்கி, உமக்கிது சம்மதமாவெனக் கேட்டனன். அதற்கவன் றனக்குஞ் சம்மதந்தானென்றுகூறி, பின்னரிச் செங்குந்தர் அத்தேசிகர் சொல்லிய உண்மையிற் பிறழ்ந்து வேறொருவரை யழைப்பித்தல் கூடாதென மொழிந்தனன். அதற்குச் செங்குந்தன் ஒருபோதும் பிறழேனென்று கூறினன்.

அதுகேட்ட அரசன் உடனே அவ்வாசிரியரைத் தன தமைச்சரைக்கொண்டழைப்பித்துத் தக்க வாதனத்திலிருத்திச் சபைக்க ணிகழ்ந்த சரிதத்தினைக் கூறி, இச்சந்தேகத்தினை நிவர்த்தித்தருள்க வென்றனன். அதற்குத் தேசிகர் அரசனைநோக்கி, ஓ காவலனே! ஒருவன் தன்றலைபோங்கால நேருமாயினும் தனது நெஞ்சாலறிந்ததிற் பிறழாது உண்மையே சொல்லுவனாகில், அவன் தானந்தவஞ் செய்பவரினுந் தலையாவன். ஆதலாற் பொய்சொல்லாமைக் கொப்பாகிய புகழ்ச்சியில்லை. அந்தணர் முதலிய நால் வருணத்தருள் கடையாய வருணத்தரான சூத்திரருள்ளே யான் சற்சூத்திர மரபென்னும் வேளாளர்குலத்தில் அவதரித்தோனேயாயினும், அம்மரபினர்க் கெல்லாம் சமயதீக்ஷை முதலியனசெய்து அவர்களைச் சன்மார்க்க நெறிக்கண் சாரவிடும் ஆசிரியனாகி, அவர்களாற் செய்யப்படும் உபகாரத்தினாலேயே சீவிக்குந் தன்மையன். இத்தன்மையனைச் சத்தியலட்சுமி குடிகொண்டிருக்கின்ற இவ்விராஜ சபைக்கண் வருவித்து, இருவகை மரபினர்க் குண்டாயுள்ள சிறப்பு நாமத்தைப்பற்றி உண்மையை விளக்கவேண்டுமென்று கேட்டால், சாதியபிமானமும் சமயாபிமானமும் சன்னியாசிக்கும் விடாவென்பதற்கொப்ப, அம்மரபிரண்டனுள் ஒன்றன்பற்றினனாகிய யான் அச்சாதியபிமானத்தினாலும் அதனாற்பெறும் ஊதியத்தினாலும் முறைபிறழ்ந்து பொய்சொல்வேனாயின், பின்னர் என்னெஞ்ச மென்னைச் சுடுவதோடு எரிவாய் நிரயங்களு மென்வரவுக் கெதிர்பார்த் திருக்குமன்றோ? என்னையொத்தோர் "நெஞ்சை யொளித்தொரு வஞ்சக மில்லை" என்னும் ஆன்றோர் வாக்கியத்தை மறக்கின், உலகமும் அவ்வுலகத்தையாளு மரசுரிமையும் அவ்வரசினால் நிகழுந் தருமமும் அத்தருமத்தினாற்பொழியு மழையும் என்னாகா நிற்கும்? பெரியோர்களுக்குப் பொய்சொல்லாமையே பேரின்பவீடென்று வேதாகம புராணேதிகாசங்கள் முக்காலு முறையிடுகின்றதால், உண்மையேபேசுவன் கேளுமென்று கூறலாயினர்.

இவ்வுலகின்கணுள்ள மானிடவருக்கத்தினர்க்கெல்லாம் நான்குவகையாக வருண பேதங்க ளுண்டான காலத்திலேயே, ஓதல் வேட்டலாதிய வைதிக வொழுக்கநிலையேற்ற அந்தணராதிய முதன் மூவருணர்க்கும் ஐயர் முதலிய சிறப்புநாமங்க ளுண்டானபோது, அவ்வொழுக்க நிலையின்றி அம்மூவர்க்கும் அடிமைப் பிள்ளைகளாகவிருந்து ஏவல்செய்யு மொழுக்கத்தினரான நான்காம் வருணர்க்குப் பிள்ளையென்னுஞ் சிறப்புநாம முண்டாகி, அம்முதன் மூவர்க்குங் காலதேச வர்த்தமானங்களால் அச்சிறப்பு நாமங்கள் பலவாறானமைபோல, நான்காம் வருணர்க்கும் அது பலவாறாயின வென்பது எங்கும் பிரசித்த நிச்சயம். அவ்வாறாயினும் அச்சிறப்பு நாமங்கள் யாவும் ஆதியிலுண்டான அவ்வப் பெயர்ப் பொருளையே தரும். இச்சபைக்கண் விவகார முகப்பில் நிற்கும் முதலியரென்னுஞ் சிறப்பு நாமம் அவற்றையொப்பதன்று. அஃதரிபிரமேந்திராதி தேவர்கட்கெல்லாந் தலைவரான சிவபிரானுக்குரிய சிறப்புநாம மாதலால், அச்சிவபிரான் குமாரர்களாகிய செங்குந்த மரபினர்க்கே எத்தேசகால வர்த்தமானங்களினுஞ் சிறப்புநாமமாய் விளங்கும். அதனை வேறொரு மரபினர் வகித்தல்

விளக்கினொளியை மின்மினிவகித்திருந்த லொப்பாம். மேலும் அதன் பெருமையைத் தேவர்களில் அயனரியரனென்னும் முத்தேவர்கள் சொல்லல்வேண்டும், முனிவர்களில் முத்தமிழ் வேந்தராகிய அகத்தியமுனிவரே கூறற்பாலர். மானவர்களில் கவிச்சக்கரவர்த்தியும் சிரச்சிங்காசனதிபதியுமாகிய ஒட்டக்கூத்தரே விளக்கத்தகுவர். இவ்வாறாயின் என்னையொத்தவன் அதன்பெருமையைக் கூறவல்லேனென்றெழுதல் அறிவின்மையேயாம். ஆதலின் அதனைச் செங்குந்தமரபினர்க்கு மாற்றப்படா. வேளாண்மரபினர்க்கோ அடிமைப் பொருளைக் காட்டுஞ் சிறப்பு நாமங்கள் அனந்தமுளவாதலின் மாற்றிக்கொள்ளப் படுமென்று கூறி முடித்தனர். இவையனைத்தையுங் கேட்டிருந்த வேளாளன் முகங்கருகி வியர்த்து விழிசிவப்பச் சினந்து ஞானப்பிரகாசதேசிகரை ஞமனைப்போ லுருத்துப்பார்த்து, ஒய்தேசிகரே! அன்னமிட்டார் வீட்டிற் கன்னமிட்டார் கூட்டுள் நீர் தலையாவீர் போலும்: செங்குந்தமரபோர் ஒருவர்க்கே முதலியரென்னுஞ் சிறப்புநாம முரியதென்று சத்தியமாகக் கூறுவீராவென்று உரப்பிக்கேட்டனன். அதற்கத்தேசிகர் வறிதேகூறாது எனது நாவினால் மழுவெடுத்துக் கூறுவேனென்றனர்.

அதுகேட்ட அரசன் மிகவியந்தவனாய் அத்தேசிகரது பிரபாவத்தை விளக்கவெண்ணியோ, அவரை உதாசினமாகப் பேசிய வேளாளன் மமதையை அடக்கக்கருதியோ, செங்குந்தன் சொல்லைத் தெளிய நினைந்தோ அத்தேசிகரைப் பார்த்து; ஐயா சைவசமயாசாரியரே! எவ்வாற்றாலேனும் இவ்விருவருங் கூறியவற்றுள் உண்மையறிய வேண்டுமென்பது என்கருத்து. நீரும் நாவினால் மழுவெடுத்துக் கூறவல்லேனென மொழிந்ததால், அவ்வாறு செய்யற் கியல்வீரோவென்று கேட்டனன். அதற்கத்தேசிகர் இப்போதே இவ்விராஜ சபையின்கண் எரிமூட்டி ஓர் மழுவை யமைத்து வைத்திரும், ஒரு சாமத்திற்குள் இச்சபைக்கு நேரேயிருக்கின்ற பூசாமண்டபப் பூங்காவுட்போய்ச் சிவபூஜை முடித்துக்கொண்டு வருகிறேனென்றுகூறிச் சென்றனர். உடனே வேந்தன் தனது சபைக்கு நேரேயுள்ள வெள்ளிடைவாசன் மத்தியில் ஓர் தீக்குண்டஞ் சமைப்பித்து அதிலோர் மழுவையுண்டாக்கியமைக்குமாறு மந்திரிகட் காக்கியாபிக்க, அவர்களும் அவ்வாக்கினைப்படி முடிப்பதின் முயன்றிருந்தார்கள். பூங்காவை நோக்கிச்சென்ற ஞானப்பிரகாசதேசிகர் அங்குள்ள சித்திரப்பொய்கையுளிறங்கி நீராடி, மரவுரி முதலியனவுடுத்துப் பூசாமண்டபஞ்சென்றிருந்து, விபூதி உருத்திராக்க முதலிய சின்னங்களைத்தரித்து, தம தான்மார்த்த பூசனையை விதிப்படி நிறைவேற்றி, ஸ்ரீ சண்முகக்கடவுளுடைய திருவுருவத்தை மனதிற்கருதி அவரது சடக்கர மந்திரத்தினைத் தியானித்துக்கொண்டு யோகுசெய்திருந்தனர். இராஜ சபைக்கண் மூட்டிய தீக்குண்டமானது பூர்வம் தாருகாவனத்து ரிஷிகள் மூட்டிய யாககுண்டம்போ லோங்கியெரிந்து நாற்புறத்தும்பற்றி, ஒருவரையும் நெருங்கவொட்டாமற் றகித்தது. அந்தயாககுண்டத்துட்டோன்றிய மழுவாயுதத்தைப்போலத் தீக்குண்டத்துளிட்ட இரும்பானது தகத்தகாயமாய்ப்பழுத்துப் பிரகாசித்தது. அம்மழுவைச் சிவபிரான்மீது விடுக்கவெழுந்த அவ்விருடியரைப்போ

லக் கொல்லர்க ளவ்வெரியிரும்பை இருமுனையினுங் குறடினாற்பிடித் தெடு த்து நின்றார்கள். இங்கினி நடக்கவிருக்குங் காரியமிதுவென்று அவ்வூரினு மயலூரினுமுள்ள பல பிரபுக்களும் பெரியோர்களுந் தெரிந்துகொண்டவர்க ளாய் ஆங்காங்குள்ள பல குடிகளோடுங்கூடிவந்து அவ்வரசவைக்கண் எள் ளிடவிடமின்றி நெருங்கியிருந்தார்கள்.

அக்கால் ஞானப்பிரகாச தேசிகர் தமது நியமநிட்டைகளை முடித்துக்கொ ண்டு, கவிச்சக்ரவர்த்தியாகிய ஒட்டக்கூத்தரை மனதிற் றியானித்து, அவரது பிரபாவத்தைத் துதித்து, ஐயனே! பூர்வம் குலோத்துங்க சோழமகாராஜனு டைய கொலுமண்டப வாயலின்கண் தேவரீர் தமது மரபினரா லமைத்த சிர ச்சிங்காதனத்திருந்து, "இந்திர னயன்மாறேவர் யாவர்க்கு முதன்மையாக- வந்தபான் மையினாற்சூல மழுப்படை யத்தனார்க்கு-முந்திய நாமந்தானு முத லிய ராகையாற்செங்-குந்தர்சந் ததிக்குமப்பேர் முதலிய ரென்றுகூறும்." என் று திருவாய்மலர்ந்தருளியது சத்தியமேயன்றோ? இத்தகைய சத்தியவாக்கினை நம்பி இவ்விஜயமார்த்தாண்ட மகாராஜனுடைய கொலுமண்டப வாயலின்கண் யான் நடத்தப்போகின்ற பிரமாணிக்கத்திற்கு யாதோரிடையூறும் வராமல் தேவரீரே முன்னின்று காத்தருளல்வேண்டும் என்று பிரார்த்தித்து, தாருகா வனத் திருடியரேவிய மழுவை ஏந்துமா றெதிர்வந்த சிவபிரானைப் போலப் பூசாமண்டபத்தினின்று மெழுந்தருளிப் பூங்காவின்மத்தியில் வருவதாயினர். இவ்வாறவர் வருங்கால், கொலுமண்டபத்தின்கண் அவர்வரவுக் கெதிர்நோக்கி யிருந்த அரசன் முதலியோருடைய விழிகட்கு வேலாயுதபாணியராகிய பால சுப்ரமண்யக் கடவுளைப் போன்றும், அவரது திருமுகமானது களங்கமற்ற பூரண சந்திரனை நிகர்த்தும், அவரது திருமேனிச் சுற்றிலுந் தோன்றிய ஒளிப் பிரபையாவும் சோடசகலைகளை யொத்தும், அவர் திருமுடிமீது கவிந்துநின்ற தருக்கள்யாவும் மேகபடலத்தை யுறழ்ந்தும், அத்தருக்களில் அலர்ந்துள்ள புட் பங்கள் யாவும் அம்மேகபடல மத்தியிற்றோன்றும் தாரகாகணங்களைப் பொரு வியும், அம்மலர்களினின்றிறையும் மகரந்தங்கள்யாவும் அந்தர வாசிகளாகிய தேவர்கள் கதம்பங்களைவாரி யிறைப்பதையொப்பவும் விளங்கின. இப்படிவிளங் கிய ஞானப்பிரகாசதேசிகருடைய வரவை அரசன் முதலாயினோர் கண்டமா த்திரத்தில் திடீரென்றெழுந்து நடுங்கி மெய்சிலிர்த்து, அரகரவென் றிருகரங் களையுஞ் சிரமேற்கூப்பி, விழிகளில் ஆனந்தபாஷ்பம்பொழிந் தாரவாரித்து, பூமியில் அடியற்ற பனைபோல் வீழ்ந்து பணிந்தார்கள். தேசிகரும் வரவரத் தம் சுயரூபத்தோடு குண்டத்தீச்சிகைக்குநேரே கொல்லரா லேந்தப்பட்டுள்ள மழு வுக்கெதிரில் வந்து, ஊங்காரஞ் செய்து நின்று நாவைநீட்டி யேந்தப் பாய்ந்த னர். அதுகண்ட அரசனும் பெரியோர்களும்-ஆ! ஆ! என்றோடித் தடுத்து, ஓ சுவாமி! தேவரீருடைய வாய்மையை நிலைநிறுத்தப் பிரமாணஞ்செய்யவும் வேண்டுமோ? தேவரீர் தரிசனமாத்திரத்தானே இச்சபைக்கண் வந்துள்ள யாரும் யானும் சிவானந்தவாழ்வைப் பெற்றோம். இத்தகைய யாங்கள் இனி நரகினுக் காளாகாவண்ணம் தேவரீரை இந்நிலைக்கண் வரச்செய்த வபராதத்

தினை மன்னித்தருள வேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். அதற்கவர் சம்மதியாது, முன் சொன்னபடி என்னுவினும் சிறிதளவேனுந் தீண்டாது விடேனென்றுகூறி யாக்கிரமித்து, மீட்டும் அம்மழுவினெதிரே நாவைநீட்டிப்பாய்ந்தனர் அந்நாவின் பரிச மதன்மீது பட்டமாத்திரத்தில் திருவருட்செயலால் பாராளும் பார்த்திபனுக்குப் பழிசம்பவிக்கு மென்றோ? செங்குந்த மரபினர்க்குச் சிந்தாகுலம் விளையுமென்றோ? அழல்வடிவாய்ச் சிவந்தெரிந்திருந்த அம்மழுவானது விபூதித்துண்டம்போல் வெளுத்து நீறாகித் துகளுருக்கொண்டு பறந்து, அரசன் முதலியோருடைய சரீரங்களிற் சென்றுபடிந்து, அவ்வவர்கள்பாலடைந்திருந்த வெளிமாசோடு உள்மாசையுந் தொலைத்துப் பிரகாசித்தது. அங்கதுகண்ட ஜனங்களெல்லாம் ஜயஜயவென்றுகூறிக் கைகொட்டி ஆர்ப்பரித்தார்கள். அந்தணர் முதலிய பெரியோர்கள் அக்ஷதையையும் மலர்களையுந்தூற்றி ஆரவாரித்தார்கள்.

இப்பால் அரசனானவன் சகல வாத்தியகோஷ முதலிய சம்பிரமங்களுடன் ஞானப்பிரகாச தேசிகரைச் சிவிகையிலேற்றி, தானும் சதுரங்க சேனைகளாதிய பரிசனங்களுடன் அவரைக்கூடி நகரியை வலமாகவந்து, அவரையவரது மடாலயத்திலிறக்கிப் பணிந்து, அளவற்ற பொருள்களைப் பரிசாகத்தந்து விடைபெற்றுத் தனதிருக்கையை யடைந்தனன். அன்றுமுத லின்றுகாறும் அத்தேசிகரை யாவரும் நாவினன் மழுவெடுத்த ஞானப்பிரகாச வள்ளலாரென்னுஞ் சிறப்பு நாமத்தாற் றுதிசெய்வதாயினர். இக்காரியங்களனைத்தையுங் கண்டிருந்த வேளாண்மரபினர்யாரும் அவரைச் சன்மானித்தலும் அவர்பாலுபதேசம்பெறுதலு மற்று, அழுக்காறடைந்த மனத்தினராய் அகல நின்றார்கள். அதுகண்டசெங்குந்தமரபினர் அவரைச் சன்மானித்து, அவரது மடாலயவிருத்திக்குக் குறைநேராதபடி காத்துவருவாராயினர். அதுபோலவே நாளதுகாறும் அம்மடாலயபரிபாலனங்களைச் செங்குந்த மரபினரே நிறைவேற்றி வருகின்றனர். இத்தகைய பிரபாவத்தை யடைந்த ஞானப்பிரகாசவள்ளலார் தம்மைச் சன்மானித்துள்ள செங்குந்த மரபினரை அபிமானித்து, பூர்வம் சுபபுராணங்களினின்றும் அவர்கள் தேவாமிசத்தினரா யிருந்து நடத்தியதாகிய சரிதங்களைத் திரட்டிக் காஞ்சி குமரகோட்டத் தடிகளின் கட்டளையால் கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள் கந்தபுராணமென்னும் பன்னீராயிரஞ் செய்யுளில் மொழிபெயர்த்ததுபோலப் பின்னர் மானவாமிசத்தினரா யிருந்து நடத்தியதாகிய சரிதங்களையும் உபபுராணங்களினின்றுந் திரட்டி அக்குமரகோட்டத் தடிகளின் கட்டளைகொண்டே ஆறாயிரஞ்செய்யுளில் வேறொரு கந்தபுராணத்தினை மொழிபெயர்த்ததன்றி, இம்மரபினர்க் கியல்பாயுள்ள தருமசிந்தையும் தறுகணாண்மையும் சத்தியநிலையும் விளங்குமாறு இந்நூலினையும் இன்னும்பல பிரபந்தங்களையும் இவ்வுலகுள்ள வரையில் நிகழுவதாக அருளிச்செய்தனர். இவர்க்குப்பின் அவ்வாதீனக் கர்த்தராய்வந்த பெரியோர்களும் பல பிரபந்தங்களைச் செய்து, அச்செங்குந்த மரபினரால் சன்மானிக்கப்பட் டிருந்தார்கள்.

---

# இந்நூற்சருக்கவட்டவணை.



## அறிக்கைப்பத்திரம்.

இதனால் யாவருக்கு மறிவிப்பது யாதெனில்:—இப்புத்தகமும் திருவொற்றியூர்ச் செங்குந்தவிநாயகர்மாலை - ஈட்டியெழுபது - திருக்கைவழக்கம் - செங்குந்தர்பிள்ளைத்தமிழ் - செங்குந்தர்தசாங்கம் - செங்குந்தரூசல் - செங்குந்தர்மாலை - செங்குந்தர்மரபுவிளக்கம்-சேனைத்தலைவர் மவிரபுளக்கச் சூறாவளி - செங்குந்தர்சங்கப்பட்டயம் - கை மகளமிசத்தினரான ஔவையார்சரித்திரம் - கவிச்சக்ரவர்த்தியாகிய ஒட்டக்கூத்தர்சரித்திரம் - என்னுமிவைகளும், உபதேசகாண்டப்பொழிப்புரை முதலிய பலபுத்தகங்களும் வேண்டுவோர் சென்னை கோவிந்தப்பநாய்க்கன் வீதி 110-வது கதவிலக்கமுள்ள வீட்டில் தாபித்துள்ள இந்து தியலாஜிகல் அச்சியந்திரசாலையில் விலைக்குப் பெற்றுக்கொள்ளலாம்.

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# வீரநாராயணர்விஜயம்

## மூலமும் உரையும்.

### காப்பு.

கலிவிருத்தம்.

பாரனாரதிபன்பழிதெறுங்கனற்
காரனாரதனக்களிற்றையுன்னுவாந்
தீரநாரார்மனச்செழியர்க்காத்தராம்
வீரநாராயணர்விசயமோதவே.

(இ - ள்.) பிருதிவிக் கதிதேவதையாகிய பிரமனும் அப்புவுக் கதிதேவதை யாகிய திருமாலும் இவ்விரண்டினுந்தீதைக்களைவதான தேயுவுக்கதிதேவதை யாகிய உருத்திரனும் பூசிக்கின்ற யானைமுகமுள்ள விநாயகக்கடவுளை, திடமும் அன்புமுடைய மனம்வாய்ந்த சோழமன்னர்கட்குத் தோழர்களாகிய வீரநாராயண ரடைந்துள்ள வெற்றிப்பாட்டைக் கூறுவதற்குத் தியானிப்பாம். எ-று.

வாழ்த்தல் வணங்கல் பொருளியல் கூறல் என்னும் மூவகையுள் இது பொருளியல் கூறலென்பதாம். அதிபனென்பது - ஈண்டு நடுநிலைத் தீபகம். பழிதெறல் - பரிபாகவினை, இதுவே சங்கார கிருத்தியம். பிரமன் திருமால் உருத்திரனென்னும் திரிமூர்த்திகளும் ஆராதித்துள்ளாரென்பதை, "திங்களணிசடைப்பெருமான்பூசையாற்றித் திரிமதிலுங்கடந்திட முன்னின்றான்யாவன்- றங்குகடற்புவிவரைப்பினெடியோனுதிசகலருக்குமூறுதவிர்க்கின்றான்யாவ-னங்கவன்மெய்ச்சரிதமொழிபெயர்ப்பவேண்டியவனடியே சரணாகவடுத்துளேற்கு - மங்கலசின்மயமதுரத்தமிழ்ச்செம்பாடல்வாரிமடமடையுடைத்துவளருமன்றே" என்னும் விநாயகபுராணத் திருவிருத்தத்தானும், பிருதிவியாதியைம்பூதங்கட்கும் பிரமன்முதற்பஞ்சகர்த்தர்களுமே அதிதேவதைகளென்பதை, "கரியமாயன்மலர்மேலெண்கண்ணனெனுமோரைவரா-யுரிய

வான்காலழலறன்மண் ணெனும்பூதங்களோரைந்தாய்ப் - பெரியவிளைக்குத்தெய்வதமாய்ப்பிறங்காநின்றசதாசிவன்மு-னரியபிரமனீறாகவறைமூர்த்திகளோரைவராய்.'' என்னும் சூதசங்கிதைப்பாவானுமுணர்க. மனம்வாக்குகாயமென்னும் திரிகரணங்களுள் மனம் முதன்மையுடைமையின் உன்னுவாமெனக்கூறினரேனும், வாக்காற் றுதிப்பாமென்பதும் காயத்தால் வழிபடுவாமென்பதும் இனம்பற்றிக் கொள்ளக்கிடந்தவாறறிக. பகைவரைவெல்லுந் தீரமும் குடிகளிடத் தன்பும் அமைத லரசியல் பாகலின், ''தீரநாரார்மனச் செழியர்.'' என்றும், அத்தகைய சோழமன்னர்கட்கு வீரநாராயணரென்னும்செங்குந்தத் தலைவர்கள் தோழராயிருந்தமையை விளக்குவான் ''ஆத்தராம் வீரநாராயணர்.'' என்றும் கூறினர். ஆத்தர் - தோழர். இச்செங்குந்தத் தலைவர்கள் சோழமன்னர்க்கு ஆபத்து நேர்ந்துழிக் காக்குந்தன்மை யுடையோராகலின், இவ்வாறு கூறினரெனினும் பொருந்தும், நட்பினியல் பதுவாகலினென்க. இதனை, ''உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே - யிடுக்கண் களைவதா நட்பு.'' என்னுந்திருக்குறளுரையானுந் தெளிக. (க)

# சிறப்புப்பாயிரம்.

## விநாயகர் துதி.

கலிநிலைத்துறை.

பாரேழுமறைநாலும்வெண்ணீறும்வாழாதபடிநிற்கவே
காரேழும்பொழின்மேவுவயமோடுநிகரற்றகயசூரனைக்
கூரேழுமொருகோடுகொடுபோர்செய்தேயன்றுகுமையச்செ
சீரேழுமதயானையிருபாதமறவாதுசிந்திப்பமே. [யுஞ்

(இ - ள்.) சத்தலோகங்களினும் சதுர்வேதங்களும் திருவெண்ணீறும் வாழ்விழந்து நிற்கும்படி, மேகம்போன்ற நிறமுடையவனாய் உலகங்களேழினும் சஞ்சரிக்கின்ற வல்லபத்துடனே தனக்கொப்பற்று விளங்கிய கயமுகாசுரனை, கூர்மையமைந்த தமது ஒற்றைக்கொம்பைக்கொண்டு யுத்தம்புரிந்து அக்காலத்தில் அழித்தருளும், சிறப்புப்பொருந்திய இருமதம்பொழியும் யானைமுகமுள்ள விநாயகக்கடவுளின் இரண்டு திருவடிகளையும் எக்காலத்தும் மறவாமல் தியானிப்போம். எ - று.

இக்கயமுகாசுரன் தான் சஞ்சரிக்கும் ஏழுலகங்களினும் தான்புரியும் கொடுமைகள் செல்லாவண்ணம் தடைபுரிவது வேதவிதிகளும் திருவெண்ணீறுமாகலின், அவ்வேதவிதிகளும் திருவெண்ணீற்றுநெறியும் அழிதற்கே முயன்றானென்பார், ''பாரேழுமறைநாலும்வெண்ணீறும்வாழாதபடிநிற்க''

என்றும், ஏனையரைப்போன்று ஒருலகவாசி யல்லவென்பார், "ஏழுபொழின் மேவுவயமோடு" என்றும், அவன் ஏனைய ஆயுதங்களாற் சாகாவரம்பெற் றிருந்த துணர்ந்த விநாயகக்கடவுள், தமது தந்தங்களி லொன்றை யொடித் துப் போர்புரிந்தழித்தாராகலின், "ஒருகோடுகொடுபோர்செய்து" என்றும், ஏனைய யானையைப்போன்று மும்மதம்பொழியும் யானையல்லவென்றும், இ ருமதம்பொழியும் யானைமுகமுள்ள விநாயகக்கடவுளென்றுங்குறிப்பிப்பான் "சிரேழுமதயானை" என்றுங்கூறினர். இச்செய்யுளின் பின்னிரண்டடிக ளினும் எழ எனற்பாலது ஏழ என எதுகைநோக்கிநீண்டன. உலகத்தில்வே தவிதிகள் தவறுமாயின் திருவெண்ணீற்று நெறிமாறுவதும், திருவெண்ணீ ற்று நெறிவிட்டவர்க்கு வேதவிதி உடன்பாடன்மையும் இயல்பாகலானும், இவ்விரண்டும் ஒன்றற்கொன்று இன்றியமையாச் சாதனங்களாகலானும், மறைநாலும் வெண்ணீறுமென ஒருங்குசேர்த்துப் பிரயோகித்தனர். இதனை "சொற்கோவுந்தோணிபுரத்தோன்றலுநஞ்சுந்தரனுஞ் - சிற்கோலவாதவூர்த் தேசிகனு - முற்கோலி - வந்திலரேனீறெங்கேமாமறைநூலெங்கே - யெந் தைபிரானைந்தெழுத்தெங்கே" என்னும் வெண்பாவானும், "மந்திரமாவது நீறுவானவர்மேலதுநீறு - சுந்தரமாவதுநீறுதுதிக்கப்படுவதுநீறு - தந்திரமா வதுநீறுசமயத்திலுள்ளதுநீறு - செந்துவர்வாயுமைபங்கன்றிருவாலவாயான் றிருநீறே." என்னும் ஆளுடையபிள்ளையாரருள்வாக்கானுமறிக. இத்தேவா ரத்தில் மந்திரமென்றது வேதமும் தந்திரமென்றது ஆகமமுமாதலையுய்த்து ணர்க. பொழில் உலகமென்பதை, "தேவர்கோவறியாததேவதேவன்செழு ம்பொழில்கள்பயந்துகாத்தழிக்குமற்றை - மூவர்கோனாய்நின்றமுதல்வன் மூர்த்திமூதாதைமாதாளும்பாகத்தெந்தை - யாவர்கோனென்னையும்வந்தாண் டுகொண்டானியாமார்க்குங்குடியல்லோமியாதுமஞ்சோ - மேவினோமவனடி யாரடியாரோடுமேன்மேலுங்குடைந்தாடியாடுவோமே." என்னும் மணிவா சகப்பிரான் மலர்வாக்கானும், விநாயகக்கடவுள் இருமதமுடையரென்பதை யும் அவ்விரண்டும் பரம் அபரம் என்னும் இருவிதஞானங்களே யென்ப தையும், "வானுலகுமண்ணுலகுவாழமறைவாழப் - பான்மைதருசைவநெ றிபார்மிசைவிளங்க - ஞானமதவைந்துகரமூன்றுவிழிநால்வா - யானைமுக னைப்பரவியஞ்சலிசெய்கிற்பாம்." என்னும் திருவிருத்தத்தானுந் தெளிக. ()

## நடராஜர் துதி.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மதம்பெறுகயந்தனையடர்ந்துரிபுனைந்தவன்மறந்தருபுரம்பொடி படக், கதங்கொணகைகொண்டிடுமெகண்டனிருள்கண்டனெரிகண் டனிலனங்கனெரியாம், விதம்படவுளந்தனினினைந்துடன்வெகுண் டவிறைவிஞ்சியிடும்வஞ்சியெதிரே, சிதம்பரநடம்புரிபொனம்பலவ னங்கழறினந்துதிபுரிந்துபணிவாம்.

(இ - ள்.) மும்மதங்களைப் பொழிந்துகொண்டு கர்வித்துவந்த யானையைக்கொன்று, அதன்தோலைப் போர்வையாகத் தரித்துக்கொண்டவரும், கொடுமையை விளைக்கும் திரிபுரங்களும் சாம்பராகும்படி கோபச்சிரிப்பு கொண்டருளிய சர்வாந்திரியாமியும், கருநிறங்கொண்ட கண்டமுடையவரும், நெற்றிக்கண்ணினாலே மன்மதனனவன் அக்கினிமயமாயழியும்படி திருவுள்ளங்கொண்டருளி யுடனேசினந்ததலைவரும், அன்பின்மேம்பட்ட சிவகாமியம்பிகைக்கெதிரே, சிதம்பரக்ஷேத்திரத்தில் ஆனந்தநடனம் புரிந்தருளும் பொன்னம்பலவாணருமாகிய நடேசப்பெருமானுடைய அழகிய திருவடிகளை நாள்தோறும் தோத்திரித்து வணங்குவாம். எ - று.

தாருகாவனத் திருடிகளாலேவிய யானையையுரித்துப்போர்த்தமையும், திரிபுரங்களையுங் காமனையும் தகித்ததும், ஆலகாலவிடத்தைக் கண்டத்தடக்கியதும், முயலகனைமிதித்துச் சிவகாமியம்மையார்க்கெதிரே ஆனந்தத் திருநடனம்புரிதலும் சிவபராக்கிரமங்களின் முக்கியமாகலின், அவற்றையொருங்குசேர்த்துச் சுருக்கிக்கூறியதென்க. சிதம்பரநடம்புரி என்பதற்குச் சிதாகாசத்தில் நடனம்புரியும் எனப்பொருள்கூறினும் பொருந்தும். விஞ்சியிடும் வஞ்சியெதிரே என்பதற்கு அகங்காரமதிகரித்த காளிக்கெதிரே எனக்கூறுவாருமுளர். கதம் - கோபம். இருட்கண்டனெனற்பாலது செய்யுணடைநோக்கி இயல்பாய் நின்றது. (ரு)

## சிவகாமியம்மையார் துதி.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஆதியிடத்தேயுதித்தவாறுபொறிகண்டஞ்சியகன்றுதன்றெண்
பாதமலர்நூபுரத்துநவமணியினினத்தினிறம்பரித்துக்காட்டி
யேதினவசத்திகளாமிவ்விளையாட்டருளுகின்றவிறைவியென்னுந்
தீதிலருட்டில்லையுறைசிவகாமசுந்தரிதாள்சென்னிசேர்ப்பாம்.

(இ - ள்.) சிவபிரான் நெற்றிக்கண்களிடத்துத்தோன்றிய ஆறுதீப்பொறிகளைநோக்கிப் பயந்துநீங்கி, தமது அழகிய திருவடிமலர்களிலணிந்திருந்த பாதச்சிலம்பினுள்ள நவரத்தினங்களின் இனத்தினதுநிறங்களைப்பெற்று உருக்கொண்டு, குற்றமற்ற நவசத்திகளாகத் தோன்றப்புரியும், இத்திருவிளையாடலைச்செய்தருளும் தலைவியென விளங்குகின்ற, கொடுமையற்ற திருவருளுடைய சிதம்பரத்தில் வீற்றிருந்தருளும் சிவகாமசுந்தரியாரது திருவடிகளை எமது சிரசிற்கணிவாம். எ - று.

சிவபெருமான் நெற்றிக்கண்களிற்றோன்றிய தீப்பொறிகளைக்கண்டஞ்சியகன்ற அம்பிகையாரது, திருவடிகளிலணிந்துள்ள பாதச்சிலம்பின் நவம

ணிகள் சிதறி, அந்நவமணிகளும் நவசத்திகளாயினவென்பதை, ''நஞ்சயின் றவனெற்றிநாட்டத்தினனல்கு - வெஞ்சுடர்ப்பொறிவெம்மையையாற்றல ள்விமலை - செஞ்சிலம்படிதாக்கலினவமணிசிதற - வஞ்சியோடினளித்திறமு ணர்ந்தனளகத்துள்'' எனவும், ''எண்ணிலாநவமணிகளினுமையுருவெனைத் துங் - கண்ணிஞற்றெரிந்தருளிஞல்வம்மெனக்கழற - வண்ணமேலோர்வகை மணிக்கொருசத்திகளாக - நண்ணிஞர்நவசத்திகளமரர்நற்றவத்தால்.'' என வும்வரும் கந்தபுராணத் திருவிருத்தங்களானுந்தெளிக. இவ்வாறஞ்சியகன் றது தேவர்களுக்குப் புத்திரப்பேறறும்படி சபித்தருளவும், தமது குமாரரா கிய முருகக் கடவுளுக்குச் சகோதரரைத் தந்தருளவுமேயாகலின், ''இவ்வி ளையாட்டருளுகின்ற விறைவி'' என்றும், சிதம்பரம் தரிசித்தவுடன் முத்தி யளிப்பதாகலின், ''தீதிலருட்டில்லை,'' என்றும்கூறினர். சென்னிசேர்ப்பாம் என்றது தலையால்வணங்குவாம் என்னும்பொருட்டு. இதனை, ''தலையே நீ வணங்காய்-தலைமாலைதலைக்கணிந்து-தலையாலேபலிதேருந்தலைவனைத் - தலை யே நீவணங்காய்'' என்னும் திருநாவுக்கரசுகளின் திருவாக்கானுமுணர்க.(ச)

## பரசிவத்துதி.

பாரொளியைச்சிதாகாசத்தொளியையெலாமாயியங்கும்பகுதி தன்றற், றேரொளியையண்டங்களத்தனையுந்திகழொளியைச்சிவ மாயோங்கும், பேரொளியைத்தன்னுருவங்கண்டவர்தங்கண்ணொ ளியைப்பேதநீக்கத், தோரொளியையேழ்நிலமுங்கடந்தநிலத்துள் ளொளியையுன்னிவாழ்வாம்.

(இ - ள்.) இப்பிரபஞ்சமென்னும் மாயாவிலாசவிளக்கமும், இதற்குள் ளும் புறம்புமான ஞானாகாசவிளக்கமும், சர்வமுந்தானாகநடிக்குந்தன்மையாற் றெளியத்தகுவதான பரமாகாசவிளக்கமும், சர்வாண்டங்களுமாகி விளங்கும் சச்சிதானந்தவிளக்கமும், இவைகட்குச்சாட்சியாகிய பெரியசிவஞானவிளக் கமும், தன்னையுணர்ந்தவர்களது ஞானக்கண்களின் விளக்கமும், அபேதம் வாய்ந்தவிடத்துதிக்கும் ஒப்பற்ற ஆனந்தவிளக்கமும், ஞானபூமிகளேழுங் கடந்தவிடத்தில்விளங்கும் அருள்விளக்கமுமாகிய பரமசிவத்தைச் சதாநியா னித்திடேறுவாம். எ - று.

மாயாவிலாசநீக்கத்தால் தெளிவும், அத்தெளிவால் பரக்காட்சியும், அக் காட்சியால் சச்சிதானந்தவிளைவும், அவ்விளைவால் சிவஞானவிளக்கமும், அச்சிவஞானத்தால் ஞானக்கண்ணொளியும், அவ்வொளியாற் பேரானந்த மும், அப்பேரானந்தத்தால் அருள்விளக்கமும் உதிக்கவேண்டுவதுமுறைமை யென்றுணர்த்துவான், பாரொளி சிதாகாசவொளி தேரொளி திகழொளி பேரொளி கண்ணொளி ஓரொளி உள்ளொளி எனவரிசைப்படக் கூறினமை

காண்க. ஞானபூமிகள்ஏழாவன:—சுபேச்சை-விசாரணை - தநுமானசி-சத்துவாபத்தி - அசஞ்சத்தி-பதார்த்தாபாவனை-துரியம். என்பவைகளே. இதனை "புலவர்புகழ்முதற்பூமிசுபேச்சைவிசாரணையிரண்டாம்பூமியாகு - நலதநுமானசிமூன்றாம்பூமிசத்துவாபத்திநாலாம்பூமி - சொலுமசஞ்சத்திப்பேரும் பதார்த்தாபாவனைப்பேருந்துரியப்பேரு-மலினமறுமகனேயைந்தாறேழுபூமிகளாவகுத்தார்மேலோர்" என்னும் கைவல்லியநவநீதத் திருவிருத்தத்தானுந் தெளிக. (௫)

## பராசத்திதுதி.

பெத்ததிசையுற்றுழலெம்போற்சிறியர்க்கிரங்கிமலம்பிரித்தங்கேந்திப், புத்தமுதங்கொடுத்துமுத்திசாதனமாநடைபயிற்றிப்புலன்வேறாக்கிச், சித்தமுதிர்சிவமாக்கிச்சிவனருளுடகங்காணுஞ்செயன்மேற்கொண்டு, தத்தமதுமனவெளியூடிருக்குமருட்டாயுபயசரணந்தாழ்வாம்.

(இ - ள்.) பாசத்திலழுந்தியுழலுகின்ற அடியேனையொத்த அறிவினர்கட்குத் திருவுள்ளமிரங்கி, ஆன்மாவைப் பந்தித்துள்ள ஆணவமலத்தைப்பிரித்தெடுத்து, ஞானமென்னும் புதிய அமுதத்தையளித்து, மோக்ஷசாதனத்திற்குரிய நடைகளைப்பயிற்சிசெய்வித்து, பசுகரணங்களைப் பதிகரணங்களாக்கிச் சித்தத்தினிடத்தில் பெருமையமைந்த சிவமயமோங்கச்செய்து, சதா அச்சிவத்தின் அருளுடனந்தரிசிக்குங் கிர்த்தியத்தைப்பூண்டு, அவ்வவ்வான்மாக்களின் மனமென்னும்வெளியிடத்தில் வீற்றிருக்கும் அருண்மாதாவாகிய பராசத்தியாருடைய இரண்டுதிருவடிகளைப்பணிவாம். எ - று.

பாசத்தி லழுந்தியுழலும் ஆன்மாக்களைச் சிவபிரான் தமதருட்சத்தியாலெடுத்து, அப்பாசத்தில் அழுந்தச்செய்த ஆணவமலத்தைக்களைந்து ஞானமளித்து மோக்ஷசாதனத்திற் பயிலுவித்துப் பதிகரணங்களாக்கிச் சிவமயமோங்கச்செய்வரென்பது நூற்றுணிபாகலின், இவையனைத்தும் அருட்சத்தியையின்றிச் சிவத்திற்கேலாமையின் பராசத்திக்கே யுரித்தாகக்கூறினர் சத்தியையன்றிச் சிவத்திற்குக் கிரியையின்றென்பதை, "விடையவாவாரகஞ் சொருபவாவாரகமெனப்பகர்விதங்களாகி- விரிமலக்கங்குலுயிர்விடயஞானத்தினொடுமிகுசொருபஞானத்தையுந்- தடையதாகச்செய்ததனுவாதிநாலையுந்தகுமாயையறிவினாலுந் -தண்ணருட்பேரறிவினாலுமத்தடைவிடுந்தகுபரையையஞ்சலிப்பா — மடலினோடெழுமவுணருடல்வேறுகூறுபடவலகைவேதாளபூத-மாடப்பெருங்கூகைகூவப்பருந்துநிழனீடச்சிவந்தவடிவே - ஞெடியிலேவியகுகனைநெடியமான்மருகனைநிகரில்போரூர்முருகனை - நுணிபகூறிவுகொடுகருதுவோரமிர்தமெனநுவலுமோரருள்புரியவே" என்னும் சிதம்பரசுவாமிகள் திருவாக்கானும், "சிவமெனும்பொருளுமாதிசத்தியொடுசேரினெத்தொழிலும்வல்லதாம்," என்னும் ஆன்றோர் வாக்கானும் தெளிக. ஆன்மாக்களு

ள்ளத்திற்சிவமோங்காவிடத்து அச்சிவத்தினிடம் தாம் தரிசிக்குந்தன்மை தடைபடுமாகலின், "சித்தமுதிர்சிவமாக்கிச் சிவனருணாடகங்காணுஞ் செயன் மேற்கொண்டு." என்றார். (சு)

## வடமூலநாதர்துதி.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

முருந்துறழுமிளமந்தகாசந்தோன்றுமூரலுலகுயிர்க்கருணீர் விளக்குநோக்க, வருந்தவநாயகியெனவானவர்சூழ்ந்தேத்துமபிராணப்பசுங்கொடியோர்வாமபாக, மிருந்தபரம்பொருண்மருண்மாவுரித்துப்போர்த்தவீசனட்டவீரட்டத்தொன்றீதென்னத், திருந்தவளர்திருப்பழூரிடமாக்கொண்டோன்றிருவடிநம்முடிக்கணியாச் செய்துவாழ்வாம்.

(இ - ள்.) புன்முறுவல் தோன்றுகின்ற மயிலிறகினடியையொத்த நிறமமைந்த தந்தபந்திகளும், உலகத்துள்ள ஆன்மாக்கட்குத் திருவருட்டன்மையைக்காட்டியருளும் பார்வையுமுடைய அருந்தவநாயகியென்று, தேவர்கள் சூழ்ந்துதுதிக்கின்ற திருநாமம்வாய்ந்த, பச்சைக்கொடிபோலும் உமாதேவியார், ஒப்பற்ற இடப்பாகத்தில் வீற்றிருக்கும் முதற்கடவுளும், மதமயக்கங் கொண்ட யானையை யுரித்துப் போர்த்தருளிய சிவபிரானுமாகிய அஷ்டவீரட்டத்தலங்களுள் இதுவும் ஒன்றென்று சிறப்படைந்தோங்கும் திருப்பழுஊரைத் தானமாகக்கொண் டெழுந்தருளியிருக்கும், வடமூலநாதருடைய திருவடிகளை நமது சிரசிற் கோராபரணமாகத் தரித்துக்கொண்டு வாழ்வோம். எ - று.

மயிலிறகினடியைத் தந்தபந்திகளுக்குவமித்தலை, "குரும்பைமென்முலையாராடக்கூந்தலினறவந்தோய்ந்த - விரும்புனலாறுபாயவிரிதிரைசுருட்டுந் தெண்ணீர்க்-கருங்கட்புலவுநீங்கிநறுமணங்கமழுமென்றூன் - முருந்துறழ் மூரலார்தமிகுதியைமொழியலாமோ" என்னும் நைடதச் செய்யுளானும், அஷ்டவீரட்டத்துள் திருப்பழூரும் ஒன்றென்பதை, "பூமன்சிரங்கண்டியந்தகன்கோவல்புரமதிகை - மாமன்பறியல்சலந்தரன்விற்குடிமாப்பழூர் - காமன்கொறுக்கையமன்கடவூரிந்தக்காசினியிற் - றேமன்னுகொன்றையுந் திங்களுஞ்சூடிதன்சேவகமே" என்னும் திருவிருத்தத்தானும் தெளிக. (எ)

## அருந்தவநாயகிதுதி.

தனக்கிரிசானகப்பெரியோனணுவினுள்ளுஞ்சரித்தியங்குமறச் சிறியன்றானேயெங்கண், மனக்கினியனெனவடியரெல்லாம்வாழ்த்திவடமூலநாதனெனவணங்கப்பாலான், வனப்பகிலம்புனலெரிகா

ன்மங்குல்சோதிமதியாவியெனத்திகழ்வோன்வாமத்தம்மை, கனக்குழலிருட்டடிக்கமலவரையுநோக்கிக்கரங்குவித்துச்சிரமிறக்கிக்கருதல்செய்வாம்.

(இ - ள்.) பொன்மலையாகிய வில்லேந்திய மகத்தானவரும், சிற்றணுவினுள்ளும் சஞ்சரித்துவிளங்கும் மிகச்சிறியவரும், தாமே யெங்கள் மனதிற்கினியவரென்று தொண்டர்களனைவரும் வடமூலநாதரெனத் துதித்துப்பணிதற்குரியவரும், அழகிய பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாயம் சூரியன் சந்திரன் ஆன்மா என்னும் அஷ்டமூர்த்தங்களாய் விளங்குபவரும் ஆகிய சிவபெருமான் இடப்பாகத்தில் எழுந்தருளியிருக்கும் அருந்தவநாயகியாருடைய, மேகமொத்த கூந்தல்முதல் பாததாமரைகள்வரைக்குந் தரிசித்து, கரங்களைச் சிரசின்மேற்குவித்தும், சிரசைத்தாழ்த்தியும் பணிந்துதியாணிப்பாம்.

தனக்கிரி-பொன்மலை. சானகம் - வில். மேருவைவில்லாகவுடையாரென்பதை, "வருந்துவனின்மலர்ப்பாதமவைகாண்பானுயடியே - னிருந்துநலமலர்புனையேனேத்தேனுத்தழும்பேறப் - பொருந்தியபொற்சிலைகுனித்தாயருளமுதம்புரியாயேல் - வருந்துவனற்றமியேன்மற்றென்னேநானுமாறே." என்றும், அணுவினுள்ளுஞ்சரித்தியங்கு மறச்சிறியன் என்பதை, "வின்னுழைகதிரின் றுன்னணுப்புரையச்-சிறியவாகப்பெரியோன்" என்றும், அஷ்டமூர்த்தமாய் விளங்குபவர் என்பதை, "போற்றியென்போலும்பொய்யர் தம்மையாட்கொள்ளும்வள்ளல் - போற்றிநின்பாதம்போற்றிநாதனேபோற்றி போற்றி - போற்றிநின்கருணைவெள்ளப்புதுமதுப்புவனநீர்தீக் - காற்றியமானன்வானமிருசுடர்க்கடவுளானே." என்றும்வரும் மணிவாசகப்பிரான் மலர்வாக்குகளானுமறிக. உலகத்துள்ள எவ்வகைவஸ்துக்களினும் பெரியது மலை, அம்மலைகளிற்பெரியது மேரு, அதனைவில்லாகக்கரத்திலேந்தியவர் மிகப்பெரியராகலிற், "பெரியோன்" என்றும், அகிலத்துள்ள அனைத்தினும் அறச்சிறியது அணு, அவ்வணுவினுண் மறைந்துலாவுவோன் அதனிலும் நுண்ணியனாகலின், "அறச்சிறியன்." என்றும் கூறினர். எனவே மகத்தினும் மகத்தும் அணுவினும் அணுவுமாயுள்ளவரென்றபடி. இதனை, "அணுவிற்கணுவாகியப்பாலுக்கப்பாலாய்" என்னும் ஔவைப்பிராட்டியார் அமுதவாக்கானுமறிக. சிவபிரானையும் அம்பிகையையும் அருச்சிப்போரும் துதிப்போரும் தரிசிப்போரும், கேசாதிபாதம் பாதாதிகேசம் என்னும் இருவகையினும்புரிவது முறைமையாகலின், அவ்விரண்டனுள் இவ்விருத்தத்திற் கேசாதிபாதமாகக்கூறினமைகாண்க. மனத்திற்கினியனெனற்பாலது மனக்கினியனெனநின்றது. இவ்வாறுவருத லிலக்கியமென்பதை, "மாடக்குச்சித்திரமுமாநகர்க்குக்கோபுரமு - மாடமைத்தோணல்லார்க்கணியும்போ - லாடிமு - லைதுரையாநின்றவணிந்துரையையெந்நூற்கும் - பெய்துரையாவைத்தார்பெரிது" என்னும் நன்னூல்வெண்பாவானுந்தெளிக. (அ)

## விநாயகக்கடவுள் துதி.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மறைமருவும்பொருளாகிமறைக்கந்தமாகியெல்லாமாகிக்கண்டங்
கறைமருவுந்திருமேனிப்பரனருளவருந்தனதுகடத்துட்புக்குச்
சிறைமருவுமரிபிரமர்க்குரியவினைபயிற்றிவெளிசெய்யுமாலந்
துறைமருவுமொருவேழச்சரணமலரிருபோதுந்தொழுதுவாழ்வாம்.

(இ - ள்.) வேதத்திற்பொருந்தும் பொருளாகியும் வேதத்திற்குமுடிவாகியும் எல்லாந்தாமாகியும், கண்டத்தினில் விடந்தங்கிய திருவுருவுடைய சிவபிரான் தோற்றுவிக்கத்தோன்றிய தமது திருமேனியினுள்ளே புகுந்து சிறைப்பட்டிருந்த திருமால் பிரமன் என்னும் இவர்கட்கு உரிமையாகிய படைத்தல் காத்தல் என்னும் கிர்த்தியங்களைக் கற்பித்து வெளியேவரும்படி செய்தவராகிய ஆலந்துறை என்னும் க்ஷேத்திரத்திலெழுந்தருளியிருக்கும், ஒப்பற்ற யானைமுகக்கடவுளின் திருவடித்தாமரைகளைக் காலை மாலைஎன்னும் இரண்டு காலங்களினும் பணிந்துய்வாம். எ — று.

விநாயகக்கடவுள் பிரணவத்தினின்றுந் தோன்றிப் பிரணவரூபியாயே விளங்கலாலும், வேதமும் பிரணவத்தினின்றும் தோன்றியதாலும், ''மறைமருவும்பொருளாகி.'' என்றும், அவ்வேதங்களாலுங்காண்டற்கரியராய்விளங்கலின், மறைக்கந்தமாகி.'' என்றும், அவ்விநாயகக்கடவுள் விஸ்வரூபமெடுத்தகாலத்தில் எல்லாப்பொருள்களுந் தம்மிடத்திற்காட்டியருளினராகலின், ''எல்லாமாகி'' என்றும், பிரணவத்தைச் சிவபிரான்நோக்கியருளலும் அவர் தோன்றினமையின், ''கண்டங்கறைமருவுந்திருமேனிப்பரனருளவரும்.'' என்றும், திருமால் பிரமன் என்னுமிருவரும் தங்கள்தங்கள் கிர்த்தியங்களைக்கற்பிக்கவேண்டுமெனப் பிரார்த்தித்தபோது, அவ்விருவரையுந்தமதுதுதிக்கையின்வழியாகத் தம் வயிற்றினுட் செலுத்திச் சிறைப்படுத்திக் கற்பித்து வெளிவிட்டனராகலின், ''தனதுகடத்துட்புக்குச்சிறைமருவுமரிபிரமர்க்குரியவினைபயிற்றிவெளிசெய்யும்.'' என்றும், திருப்பழுவூரென்னும் வீரட்டத்தலத்தில் ஆலவிருட்சத்தினடியில் எழுந்தருளியிருத்தலால் ஆலந்துறைவிநாயகரென்னும் காரணப்பெயர் தரித்தனரென்பதை விளக்குவான், ''ஆலந்துறைமருவுமொருவேழம்.'' என்றும், ஒன்று இரண்டு என்னும் செவ்வெண்ணையும் மலர் போது என்னும் ஒருபொருட்பன்மொழியையும் ஒருங்கமைத்துக்கூறுவான், ''ஒருவேழச்சரணமலரிருபோதும்.'' என்றும் கூறினர். விநாயகக்கடவுள் பிரணவத்தினின்றுந்தோன்றிப் பிரணவரூபியாகவே எல்லாந்தாமாய் விளங்குகின்றனரென்பதை, ''அகரமெனவறிவாகியுலகமெங்குமமர்ந்தகரவுகரமகரங்கடம்மாற்-பகருமொருமுதலாகிவேறுமாகிப் பலவேறு திருமேனிதரித்துக்கொண்டு - புகரில்பொருணான்கினையுமிடர்தீர்ந்தெய்தப் போற்றுநருக்கறக்கருணைபுரிந்தல்லார்க்கு - நிகரின்மறக்கருணைபுரிந்தாண்டு

கொள்ளுகிருமலனைக்கணபதியைநினைந்துவாழ்வாம்." எனவும், எல்லாப் பொருள்களுந் தம்மிடத்துக்காட்டினனென்பதை, "அகட்டிடையேயளவிறந்தவண்டங்களுறக்கிடந்த-பகட்டெழில்சேரவற்றொன்றனுட்புகுந்துபார்ப்பளவிற் - றகட்டுவராலுகள்கடல்சூழ்தரை நடுவமதன்கீழ்மேன் - முகட்டளவும் பலவுலகுமுதிர்வனத்தினிரந்தனவால்." எனவும், வேதங்களாலும் அறியாதவரென்பதை, "நாதங்களோரிரண்டாய்நலமருளுஞ்சதாசிவமாய்ப் - பாதங்களொருநான்கும்பதநான்கும்பயில்வித்த - வேதங்களறியாதவிநாயகர்தந்திருவருளாற் - பூதங்களோரைந்தும்புரையின்றியெதிர்கண்டாம்." எனவும், தனது கடத்துட்புக்குச் சிறைமருவு மரிபிரமர்க் குரியவினைபயிற்றி வெளிசெய்யும் என்பதை, "கருணைநாயகன்கடைக்கணித்தெனையெதிர்நோக்கிப்-பொருவிலாதவெண்வயிற்றினுட்புகுந்துலகனைத்து - மொருவுருவகைநோக்கியேயுணரெனவென்னை-யுருவவார்கரப்புழைவழியுள்ளுறவிடுத்தான்." எனவும், புகுந்தவழியேயென்னைப்புறத் துப்போக்கிப் பொலங்குழைசேரிருகாதின்வழியே பைந்தேன்-றெகிழ்ந்தொழுகுமலர்த்துளவவிதழிமாலைத் தேவரையும்புறம்விடுத்தானென்றுவேத - னெகிழ்ந்தவுளவியாதனுச்குப்புகன்றனென்றுநெடியதவப்பிருகுமுனிசோமகாந்த - னகந்தழையவுரைத்தயனுருலகமீளவருந்தவஞ்செய்தாக்கியதுமறையப்புக்கான்." எனவும் வரும் விநாயகபுராணத்திருவிருத்தங்களானுந்தெளிக. இவ்விநாயகர்துதிக்கு முந்தி இரண்டுதுதிகளிருக்கின்றனவே, இவ்வாறு மூன்று துதிகள் கூறவேண்டுவ தென்னையெனின், முதலிற்கூறியது நூற்காப்பாகவும், இரண்டாவதுகூறியது வழிபடுகடவுள் வணக்கமாகவும், இப்போது மேற்கூறிமுடித்ததுதி, கடவுள்வாழ்த்தின் வரிசையில் அத்தலமூர்த்தியாகிய வடமூலநாதர் அருந்தவநாயகி என்னும் இருவருக்குப்பின் அவர்கள் குமாரரின் வரிசையில் மூத்தபிள்ளையார் கூறவேண்டியமுறைமையிற்கூறியது. ஆகலின் இம்மூன்றுதுதிகளும் அத்தியாவசியகம் வேண்டற்பாலனவே என்பதை யுய்த்துணர்க. (கூ)

## முருகக்கடவுள் துதி.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சூரனுரம்பிளந்துமனக்கண்டிறந்தோமல்றினிமேற்றோன்றுங்காலம்
பாரணவுநந்தொழும்பருள்ளகக்கட்படலமெனப்பற்றுமூன்று
பேரணவுங்காசமலமறவொடுக்கிலுலவாதுபெருமையென்னுங்
காரணத்தாலிலைவடிவேற்கையேந்துமுருகனிருகழற்காற்சேர்வாம்.

(இ - ள்.) சூரபன்மாவின் மார்பை அக்காலத்தில் இவ்வேலாயுதத்தாற் பிளந்து அகங்காரத்தால் மூடப்பட்டிருந்த அவனது ஞானக்கண்ணைத்திறந்தனம், அதற்கப்பால் இனிவருங்காலத்தில் நிலவுலகத்துதிக்கும் நமது தொண்டர்களின் உளக்கண்களை மூடிக்கொள்ளும் படலங்களென்று மூன்றுபெயர்களையுடைய, காசமாகிய மலங்களையும் பற்றறும்படியொழித்தால் நமது

கீர்த்தி யழியாதென்னுங் காரணத்தினாலே, அச்சவடிவமைந்த கூர்மையை யுடைய வேற்படையைத் திருக்கரத்தேந்திய முருகக்கடவுளின், வீரக்கழலணிந்துள்ள இரண்டு திருவடிகளை யடைக்கலம்புகுவாம். எ - று.

சூரனைவேலாயுதத்தாலழித்தனரென்பதை, "சேல்பட்டழிந்ததுசெந்தூர்வயற்பொழிறேங்கடம்பின்- மால்பட்டழிந்ததுபூங்கொடியார்மனமாமயிலோன்-வேல்பட்டழிந்ததுவேலையுஞ்சூரனும்வெற்புமவன் - கால்பட்டழிந்ததிங்கென்றலைமேலயன்கையெழுத்தே." என்னும் அருணகிரிநாதர் அருள்வாக்கானும் அறிக. அச்சூரன் அகங்காரத்தால் ஞானமிழந்து தனக்குச் சிவபிரானருளிய வரத்தினளவையுமறந்து, மற்றையோர் சொற்களுங்கேளாதழிந்தனனாகலின், "மனக்கண்டிறந்தோம்" என்றனர். அகங்காரமித்தன்மைத்தென்பதை, "ஆங்காரமானகுலவேடவெம்பேய்பாழ்த்தவாணவத்தினும்வலிதாகா - வறிவினைமயக்கிடும்கடுவெறியவொட்டாதியாதொன்றுதொடினுமதுவாய்த் - தாங்காதுமொழிபேசுமரியரப்பிரமாதிதம்மொடுசமானமென்னுந்-தடையற்றதேரிலஞ்சுருவாணிபோலவேதன்னிலசையாதுநிற்கு - மீங்காரெனக்குநிகரென்னப்பிரதாபித்திராவணாகாரமாகி - யிதயவெளியெங்கணுந்தன்னரசுநாடுசெய்திருக்குமிதனொடெகேரமும் - வாங்காவிலாவடிமைபோராடமுடியுமோமௌனோபதேசகுருவே - மந்த்ரகுருவேயோகதந்த்ரகுருவேமூலன்மரபில்வருமௌனகுருவே." என்னும் தாயுமானார் திருவாக்கானும், சூரபன்மனும் பூர்வமே தொண்டுபூண்டவனாகலினானும் அவன் அகங்கரித்து நம்முடனெதிர்த்தமையானும் அவனைத்தண்டித்து ஞானம் விளக்கினோம், மற்றுள்ள அடியார்களின் அகக்கண்களை மூடியுள்ள மலங்களென்னும் காசத்தைத் தரிசனமாத்திரத்தாற் களைவோமெனத் திருக்கரத்தில் வேலேந்தியிருக்கின்றனரென்பார், "காசமலமற" என்றுங்கூறினர். மலங்கண் மூன்றாவன: ஆணவம் காமியம் மாயை என்பனவாம். இம்மூன்றும் அநாதியே ஆன்மாக்களைப் பற்றியிருத்தலின், அவைகள் ஓர்காலத்தில் ஒருங்கேயொழியாவென்பதுணர்ந்து, அவற்றைத் தினேதினே நமது தரிசனத்தாலொழிக்கவேண்டுமெனக்கருதியதிருவருளே வேற்படையாதலின், "காரணத்தாலிலைவடிவேற்கையேந்தும்." என்றதென்க. இவ்வாறு திருவருட்சத்தியேவேற்படையென்பதை, "இலகருட்சத்தியேசத்தியாகக்கையிலெடுத்தஞானச்சேவகா." என்னும் சிதம்பரசுவாமிகள் திருவாக்கானுந்தெளிக. (௧௦)

## இதுவுமது.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கயிலாயமுற்றவானருளாலுதித்துவளர்கருணாகரக்குமரவே, எயில்
வேல்விடுத்தசூரர்கிளைவேரறுத்தமார்சிறைமீளவிட்டருளுவோர், ப
யில்வேதனைச்சிறையிலிடுமீளிபெற்றுவலிபடர்சேவனற்றுவசமைம்,
மயில்வாகனக்குரிசிலிருவாரிசக்கழல்கண்மறவாதுளத்தினினைவாம்.

(இ - ள்.) திருக்கயிலையில் வீற்றிருந்தருளும் சிவபெருமான் திருவருளாலவதரித்துக் கிருபைக்கிடமாக வளர்கின்ற குமாரக்கடவுளும், கூர்மையானவேற்படையையேவி அசுரர்களினத்தை வேரோடழித்து, அவர்களாற்றண்டிக்கப்பட்டிருந்ததேவர்கள் சிறையினின்றும் நீங்கும்படி விட்டருள்பவரும், வேதம் பயின்றுள்ளபிரமனைச் சிறையிலடைக்கின்ற வல்லபம்பெற்று, வல்லபமமைந்த சிறந்தசேவற்றுவசமும் பசியமயில்வாகனமு முடைய கடவுளாகிய முருகக்கடவுளின் இரண்டுதாமரைமலர்போலும் திருவடிகளை எக்காலத்தும் மறவாமல் மனத்திற் சிந்திப்பாம். எ - று.

திருக்கைலையிற்சென்று சிவபிரானைப்பிரார்த்தித்துக்கொண்ட தேவர்கண்மீதுவைத்த அன்பினால் அருண்மீக்கூர்தலும், அவ்வருளா லவதரித்தாரென்பதையும், அருளாலவதரித்தவராகலின் அவரும் அருணிரம்பியவரேயென்பதையும் விளக்குவான், "கயிலாயமுற்றவரனருளாலுதித்துவளர்கருணாகரக்குமரவேள்." எனவும், அயிலென்பதும் வேலென்பதும் ஒருபொருள்பயக்குஞ்சொற்களேனும் அயிலென்னும் பதத்திற்குக் கூர்மையென்னும்பொருளு முண்டென்றுணர்த்துவான், "அயில்வேல்." எனவும், அசுரர் அமரர் என்னும் இருதிறத்தவரில் அமரர்கள் அசுரரால் வருந்திச் செயலற்று உயிர்ப்பிணங்களா யிருந்தமையின், அவர்கள் சிறையைநீக்கிப் பிழைப்பித்தும், அசுரர்கள் கொடுமையின்மிக்கோராய் அகங்கரித்து வாழ்ந்திருந்தாராகலின், அவர்களை வேரறக்கொன்றும் திருவிளையாடல் புரிந்தனரென்பார், "அசுரர்கிளைவேரறுத்தமரர்சிறைமீளவிட்டருளுவோர்" எனவும், அவ்வாறு சிறைமீட்பித்தவர் மீட்டும் சிறைப்படுத்துதலும் புரிந்தனரென்பார், "பயில்வேதனைச்சிறையிலிடுமீளிபெற்று." எனவும், அண்டகோடிகளனைத்து நடுங்கக்கூவு மாற்றலுடைமையின், "வலிபடர்சேவனற்றுவசம்" எனவும், பசுமைக்கும் கருமைக்கும் ஒற்றுமை யுண்மையை விளக்குவான், "மைம்மயில்." எனவும் கூறினர். அன்பினால் அருண்மீக்கூர்தலென்பதை, "அருளென்னுமன்பீன்குழவிபொருளென்னுஞ்-செல்வச்செவிலியாலுண்டு." என்னுந்திருக்குறளானும், சிறையைநீக்கிச்சிறைபுரிந்தனர் என்பதை, "கஞ்சாதனத்தனைச்சிறையிடுவன் முத்தமிழ்க்கவிஞனைச்சிறைவிடுப்பன் - கடியகுன்றடுவனிருள்கடியுங்குணக்குன்றுகனகும்பனுக்கருளுவ - னெஞ்சாதகடலழித்தரிவைமுருகாவென்றிசைக்கவருள்வாரிதருவ னிகலவுணர்களைகட்டடைந்தகடவுளரெனுமிரும்பயிர்தழைப்பவைப்ப-னஞ்சாயசமணர்கழுவேறவிட்டடியர்நாடோறுமீடேறவருளுவ — னவைதழுவுபுத்தன்முடியிடறியழலடுமென்பைநளினமங்கைக்கிணைசெய்வ - னஞ்சாதிருந்திடேலிவன்வெகுளிகொளுமுனமம்புலீயாடவாவே - யருமறையினொலிநிலவுசமரபுரிமுருகனுடனம்புலீயாடவாவே." எனவும், வலிபடர்சேவனற்றுவசம் என்பதை, புலன்மறுகுபொறியையுறகமடயெனவுட்கொண்டுபொருமுக்குணங்கள்வென்று-பூரகமிரேசகந்தாரகமெனுந்தொழிற்புசன்றகாலிற்பயின்று - கலகமறுநடுநாடிசென்றுமுச்சுடர்களின்கதிர்மன்

டலங்கடந்து - கணபணுடவியுரகன்முடியிற்றுளக்கமறுகம்பத்தினசைவற்றுளோர் - மலவிரவுவிடியமிகுதுறவுணர்வுநசையறுதன்மலிகுணக்குன்றின்முடிமேன் - மன்னுஞானக்கதிரெழுந்தொளிபரப்பமாறுதுதசநாதமுழுதுமலகில்பவதுயிலறக்கூவுசேவலனுடனம்புலீயாடவாவே - யருமறையினொலிநிலவுசமரபுரிமுருகனுடனம்புலீயாடவாவே.'' எனவும் வரும் சிதம்பரசுவாமிகள் திருவாக்குகளானுமறிக. (கக)

## நந்திதேவர் துதி.

கலிவிருத்தம்,

வெந்தியங்கரணீறணிமெய்த்தவர்
புந்தியந்தலப்போதனைப்போற்றுமா
வந்தியம்பெறவானவரேத்துறு
நந்தியங்கணநாதனைவாழ்த்துவாம்.

(இ - ள்) அக்கினியிற்பட்டு விளங்கும் சிவபிரானுக்குரிய திருவெண்ணீற்றைத்தரித்துக்கொள்ளுகின்ற உண்மைத்தபோதனர்களின் இருதயமாகிய அழகியதானத்தில் வீற்றிருக்கும், ஞானசொரூபராகிய சிவபிரானைத்துதிப்பதற்குவந்து, இசைபொருந்தும்படி தேவர்கள் துதிக்கின்ற நந்திதேவரென்னும் சிறந்த கணநாதனைத் துதிப்பாம். எ - று.

திருவெண்ணீறு, கற்பம் - உபகற்பம் - அநுகற்பம் என மூத்திறமாய்ச் சிவாகமங்களிற் கூறியுள்ளபடி அக்கினியாற்புரியப்படுவதாகலின், "வெந்தியங்கரணீறு.'' எனவும், அதை உத்தூளனமாகவும் திரிபுண்டரமாகவுந்தரித்தலியல்பாகலின் அவ்விரண்டையுமடக்கிப்பொதுவாய், "அணி.'' எனவும், அவ்வாறு உத்தூளனமாகவேனும் திரிபுண்டரமாகவேனும் தரித்துள்ளவர்களைச் சாமானியர்களாக எண்ணப்படாதென் றுணர்த்துவான், "மெய்த்தவர்.'' எனவும், அத்தகையோருள்ளமே தாம்வசிக்கும் ஆலயமாகக்கொண்டு சிவபிரான் ஞானசொரூபியாய் வீற்றிருக்கின்றனரென்பார், "புந்தியந்தலப்போதனை.'' எனவும், தேவர்கள் பல வாத்தியக்கருவிகளுடன் துதித்தார்கள் என்பான், "இயம்பெறவானவரேத்துறு'' எனவும், சிவகணங்கட்குத் தலைவர் நந்திதேவரென்பான், "நந்தியங்கணநாதன்'' எனவும் கூறினர். விபூதி மூத்திறப்பகுதி யுடையனவென்பதை, "கற்பமென்றநுகற்பமென்றுபகற்பமென்றாய் - முற்பவந்துடைத்தருடரும்பூதிமூன்றாகு - மற்புதந்தருகோமயந்தரைப்படுவதன்முன் - விற்கலன்படுத்தைந்துவில்லைத்தொடுவிளைத்தல்'' என்னும் உபதேசகாண்டத் திருவிருத்தத்தானும், உண்மைத்தபோதனர்களிருதயத்தில் வீற்றிருப்பவரென்பதை, "வென்றுளேபுலன்களைந்தார்மெய்யுணருள்ளந்தோறுஞ் - சென்றுளேயமுதமூற்றுந்திருவருள்போற்றியேற்றுக்-குன்றுளேயிருந்துகாட்சிகொடுத்தருள்கோலம்போற்றி - பன்றுளேமாறியாடு

மறைச்சிலம்படிகள்போற்றி'' என்னும் திருவிளையாடற் புராணத் திருவிருத்தத்தானும், நந்திதேவர் சிவகணத் தலைவரென்பதையும் சிவபிரானைப் பணியச்செல்லும் தேவர்கள் முதலில் நந்தியெம்பெருமானைப் பணிவரென்பதையும், ''செம்பொருளாகமத்திறந்தெரிந்தரு - நம்பவமறுத்தநன்னந்திவானவ - னும்பர்தமணிமுடியுரிஞ்சக்கன்றிய - வம்பவிழ்மலரடிமனத்திருத்துவாம்'' என்னும் ஸ்ரீகாளத்திபுராணத் திருவிருத்தத்தானுந்தெளிக. சிவபிரானைப்பணியச்சென்ற தேவர்கள் முதலில் நந்தியெம்பெருமானைப் பணிந்துவிடைபெற்றுச் செல்வாரென்பது கருத்து. (கஉ)

## வீரவாகுதேவர் துதி.

பேரவாகுப்பிறந்துழலெம்மனோர்
கோரவாகுலக்கூட்டமியாவையும்
பேரவாகுப்பிரான்றுணைக்குத்துணை
வீரவாகுவின்மெல்லடிபோற்றுவாம்.

(இ - ள்) பேராசைப்பெருக்காற் பூவுலகிற் பிறவியெடுத்துழல்கின்ற என்போன்றவர்களின் கொடுமை மிக்க துன்பத்தொகுதியனைத்தும் ஒழியும்படி, ஆகுவாகனராகிய விநாயகக்கடவுளின் சகோதரராகிய முருகக்கடவுளுக்குச் சகோதரரான, வீரவாகுதேவரின் மிருதுவான திருவடிகளைத்துதிப்பாம்.

பேர் அவா கு எனவும் கோர ஆகுலம் எனவும் பேர ஆகுப்பிரான் எனவும் பிரித்துப்பொருள்கொள்க. கு-பூமி. ஆகு-பெருச்சாளி, அவாவினாற் பிறவிநேருமென்பதை, ''அவாவென்பவெல்லாவுயிர்க்குமெஞ்ஞான்றுந் - தவாஅப்பிறப்பீனும்வித்து'' என்னும் திருக்குறளுரையானும், கோரவாகுலக் கூட்டமென்பதை,''கருவிடையழுந்துந்துன்பமுநிலத்தின்கண் ணுறிற்கொடியவெங்நோயான் - மருவுவெந்துயருநரைதிரையெய்திவருந்திடுந்துன்பமுங்கூற்று - ஒருவினையொருவுந்துன்பமுமீட்டுங்கருக்குழியொன்றுறுதுயரும்-வெருவரவெண்ணியின்பவீடதனைமேவநன்குணர்தலேவேண்டும்'' என்னும் ஆனந்தத்திரட்டுச்செய்யுளானும், விநாயகக்கடவுளின் சகோதரருக்குச் சகோதரர் என்பதை, ''பேரவாகுவையுடையவனிளவல்பேரருளாற் - சூரவாகுலம்வானவர்பெறுவகைதொலைப்பா - னேரவாகுறுஞ்செம்மணிப்பாவை தன்னிடத்தில் - வீரவாகுவந்துதித்தனனுலகெலாம்வியப்ப'' என்றும், ''தேவியதுகேட்டுமைந்தர்க்கயிலருளவர்க்கெல்லாஞ்சிவன்வெவ்வேறு-தாவில்சுடர்வாளுதவிவியர்ப்பில்வருமோரிலக்கந்தனயரோடு - நீவிர்களுமொன்றிநுங்கட்கிறையவனாகியசேனயகீங்கலின்றி - யேவலவன்பணித்தனசெய்தொழுகுதிரென்றனவருமிசைந்துதாழ்ந்தார்.'' என்றும் வரும் கந்தபுராணத் திருவிருத்தங்களானுந்தெளிக. வீரவாகு என்பது சுத்தவீரத்தன்மையுடைய புயங்களைப்படைத்தவ ரென்பதை விளக்கிய காரணப்பெயர். வீரத்தன்மையை

விளக்கற்குப் புயவலியே முக்கியமென்பதை, "நாடியபொருள்கைகூடும்ஞானமும்புகழுமுண்டாம்-வீடியல்வழியதாக்கும்வேரியங்கமலைநோக்கு - நீடியவரக்கர்சேனைநீறுபட்டழியவாகை - சூடியசிலையிராமன்றோள்வலிகூறுவோர்க்கே" என்னும் கம்பராமாயணச்செய்யுளினுங்காண்க. (சங)

## சைவசமயாசாரியர் துதி.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

எணங்கண்டாரொளிகண்டுமணிமன்றம்புகுசோதி யிறைஞ்சியந்நாண், மணங்கண்டார்சிவஞானவழிகாணவருசோதிவணங்கிப்பைங்காக், கணங்கண்டாரளிபுகலூரிலிங்கத்துளொளிசோதிகருதிப்போதக், குணங்கண்டார்தருவேழமெழுசோதிதொழுதுள்ளக்குறைகளைவாம்.

(இ - ள்,) தமது கருத்துணர்ந்துநிறைந்த சோதியைத் தரிசித்து அழகிய திருச்சிற்றம்பலத்திற் கலந்தருளிய சோதியுருவாகிய ஆளுடைய வடிகளைப்பணிந்து, தமது திருமணத்தைத் தரிசிக்கவந்தாரனைவரும் அந்நாளிலேயே பதிஞானமார்க்கத்தைத் தரிசிக்குமாறுவிளங்கிய சோதி சொரூபமாகிய ஆளுடைய பிள்ளையாரை வந்தித்து, பசிய சோலைகளின் கூட்டங்களைநோக்கி வண்டுகணிறைந்திருக்கும் திருப்புகலூரின்கணெழுந்தருளியுள்ள சிவலிங்கத்தில்மறைந்தருளிய சோதிவடிவாளராகிய ஆளுடையவரசுகளைத் தியானித்து, தமது ஞானநிலைமையைத் திருவுள்ளங்கொண்டருளிய சிவபிரானுற்றரப்பெற்ற வெள்ளையானையின்மீ தாரோகணித்துச் சென்ற சோதிமேனியராகிய ஆளுடையநம்பிகளைப் பரவி, நம்மனத்தின்கணுள்ள குறைபாடனைத்து மொழிவாம். எ - று.

தம்முடைய வுள்ளக்கருத்துணர்ந்த சிவபிரான்கட்டளைப்படி திருச்சிற்றம்பலத்தில் மறைந்தனரென்பார், "எணங்கண்டாரொளிகண்டு மணிமன்றம்புகுசோதி." எனவும், திருமணத்தைத் தரிசிக்கவந்தோ ரனைவரையும் சோதியிற் கலப்பித்தருளினராகலின், "மணங்கண்டார்சிவஞானவழிகாண வருசோதி." எனவும், திருப்புகலூரிற் சிவலிங்கரூபமாயிருந்தனராகலின், "புகலூரிலிங்கத்துளொளிசோதி." எனவும், கயிலையினின்றும் சிவபிரான்விடுத்த வெள்ளையானையின்மீதாரோகணித்துக் கயிலைக்கெழுந்தருளினராகலின், "போதக்குணங்கண்டார்தருவேழமெழுசோதி." எனவும் கூறினர். ஆளுடையவடிகள் திருச்சிற்றம்பலத்தில் மறைந்தனரென்பதை "நின்றபுகழ்ப்புலியூரர்நேசமுடன்புடைசூழச் - சென்றருளுச்சிட மானசெம்பொனினம்பலமெய்தி-யொன்றியலித்தமிழ்மாலைப்பொருளிவரென் றுரைசெய்து-மன்றதனிற்கடிதேகிமறைந்தன ரங்கவர்காண." என்னும் திருவாதவூர்ப்புராணத்திருவிருத்தத்தானும், ஆளுடையபிள்ளையார் நல்லூர்ப்பெருமணம் என்னுந்தலத்தில் திருமணத்தைத் தரிசிக்கவந்தோர்களனைவரையும் சோதியிற்கலப்பித்தரு

ளினரென்பதை, "ஞானமெய்ந்நெறிதான்யார்க்குநமச்சிவாயச்சொலாமென்-றானசீர்நமச்சிவாயத்திருப்பதிகத்தையங்கண்-வானமுநிலனுங்கேட்கவருள்செய்திம்மணத்தில்வந்தோ - ரீனமாம்பிறவிதீரயாவருஞ்சுகவென்ன." எனவும், "வருமுறைப்பிறவிவெள்ளம்வரம்புகாணாதழுந்தி - யுருவெனுந்துயரக்கூட்டிலுணர்வின்றிமயங்குவார்க - டிருமணந்துடன்சேவித்தமுன்செலுஞ்சிறப்பினாலே-மருவியபிறவிநீங்கமன்னுசோதியினுட்புக்கார்." எனவும், ஆளுடையவரசுகள் திருப்புகலூரிற் சிவலிங்கமா யமர்ந்தனரென்பதை, "மண்முதலாமுலகேத்தமன்னுதிருத்தாண்டகத்தைப் - புண்ணியாவுன்னடிக்கே போதுகின்றேனெனப்புகன்று - நண்ணரியசிவானந்தஞானவடிவேயாகி - யண்ணலார்சேவடிக்கீழாண்டவரசமர்ந்திருந்தார்." எனவும், ஆளுடையநம்பிகள் வெள்ளையானைமீதூர்ந்து திருக்கைலைக் கெழுந்தருளின ரென்பதை, "ஏற்றதொண்டரையண்டர்வெள்ளானையினெதிர்வலங்கொண்டேத்த - நாற்றடங்கடன்முழக்கெனவைகைநாதமீதெழுந்தார்ப்பப் - போற்றிவானவர்பூமழைபொழிந்திடப்போதுவாருயிரொல்லாஞ்- சாற்றுமாற்றங்களுணர்பெருந்துணைவரைமனத்தினிற்கொடுசார்ந்தார்." எனவும் வரும் அருண்மொழித்தேவர் அமுதவாக்குகளானுமறிக. ஏனைய நூல்களில் நால்வர்தோத்திரங்கூறுகையில் ஆளுடைய பிள்ளையார் ஆளுடையவரசுகள் ஆளுடைய நம்பிகள் ஆளுடையவடிகள் எனக் கூறியிருக்க, இந்நூலாசிரியர் முறைபிறழ்ந்து ஆளுடைய வடிகளை முற்படக்கூறிய தென்னையெனின், இவர் அவரவர் காலக்கிரமத்தை யாராய்ந்து வரிசைப்படுத்தினரென்க. முத்திபேதங்கள் பதமுத்தி பரமுத்தியென இருவகைப்பட்டு அவ்விரண்டினுள் பரமுத்தி உருவமுத்தி அருவமுத்தி அருவுருவமுத்தி என மூவகைப்படும். ஆகக்கூடிய நான்கனுள் முறையே ஆளுடைய நம்பிகள் பதமுத்தியும் ஆளுடையவடிகள் உருவமுத்தியும் ஆளுடைய பிள்ளையார் அருவமுத்தியும் ஆளுடைய வரசுகள் அருவுருவமுத்தியும் அடைந்தமை யுய்த்துணர்க. இத்தகைய முத்திகள் நான்கேசிறந்ததென்பதை, "செத்தேபோனாற்சிரியாரோ." எனவும், "மண்மேல்யாக்கைவிழுமாறும்வந்துன்கழற்கேபுகுமாறு - மண்ணுவெண்ணக்கடவேனோவடிமைசாலவழகுடைத்தே." எனவும் வரும் மணிவாசகப்பிரான் மலர்வாக்குகளானும், "முத்தியினுந்தேகமிலசமூவிதமாஞ்சித்திபெற்றோ - ரெத்தனைபேரென்றுரைப்பதெந்தாய்பராபரமே." என்னுந் தாயுமானார் திருவாக்கானுந்தெளிக. (கச)

## அறுபத்துமூன்றுநாயன்மார்களிற் பதின்மர்துதி.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மலர்வீழ்த்தயானைகரந்துணித்தோர்வேதமந்திரமாப்பகர்ந்தோர்நீற்றுண்மைகொண்டோர், வலமைபெறுமாறூரர்முன்படர்ந்தோர்வாவியினாற்கண்பெற்றோர்மாதேவன்றா, ணிலவுமுடியெனப்பூண்

டோராதிரைக்கணீணிதியடளிப்போர்புற்றீபமெரிப்போர்பாப், பலமூவேந்தர்க்குரைப்போரமுதளிப்போர்குந்தப்படைக்குலத்திலவதரித்தபதின்மரையும்பணிவாம்.

(இ - ள்.) சிவகாமியாண்டார் கொண்டுவந்த பள்ளித்தாமத்தைப் பறித்துதறியயானையைத்தடிந்த எறிபத்தநாயனாரும், வேததாற்பரியங்களனைத்தையும் மூவாயிரம் திருமந்திரமாகத்திருவாய்மலர்ந்த திருமூலநாயனாரும், திருவெண்ணீற்றினுண்மையைக் கடைப்பிடியாகக்கொண்டிருந்த மெய்ப்பொருணாயனாரும், ஆளுடையநம்பிகள் திருக்கைலைக் கெழுந்தருளுவ துணர்ந்து யோகத்தால் அவரைத்தியானித்துக்கொண்டு அவர்க்குமுன் சென்றருளிய பெருமிழலைக்குறும்பநாயனாரும், சமணர்களுடன் வாதிட்டுச் குளந்தோண்டிக்கண்பெற்றுக்கொண்ட தண்டியடிகணாயனாரும், சிவபிரான் திருவடிசூட்டப் பெற்றமையையே முடியாகக்கொண்டுலகாண்ட கூற்றுவநாயனாரும், பிரதி திருவாதிரைநக்ஷத்திரந்தோறும் சிவனடியார்கட்குப் பொன்னளித்துவந்த நரசிங்கமுனையரையநாயனாரும், தமிழிற் கோவைபாடி மூவேந்தர்க்கும் பொருளுணர்த்திவந்த காரிநாயனாரும், சிவனடியார்க் கமுதளித்துவந்த இடங்கழிநாயனாரும் என்று சொல்லத்தக்க செங்குந்தர்குலத்தில் அவதரித்த இப்பதின்மரையும் வணங்குவாம். எ - று.

இந்நூலாசிரியர் செய்த இச்செங்குந்தப்பெருமக்கள் துதிக்கு முதனூல் பொற்களந்தை புகழேந்திப்புலவர் செய்த திருக்கைவழக்கமேயாம். அதில், "நாவலூர்நம்பியெனுநாரையூர்நம்பியெனு-மேவுமிருநம்பியரான்மெச்சுங்கை-சேவினன்ற-னுதிரைதோறெண்ணிலடியவர்க்குப்பொன்னூறு- நீதிரியவேயளிக்குந்தேசிகக்கை-நீதியொடு-வெம்பகையைவென்றுவிளைபொருளைமெய்யடியர்-தம்பொருளாயாக்குந்தயாளக்கை-யம்பொன்முடி-வன்றெண்டன்வேதண்டமன்னுமுனேயோகாற்ற-மன்றெண்டையாங்குகைத்தமாண்புக்கை - யின்றெண்டு-செய்யுஞ்சிவபத்தர்சிந்தைகலங்கப்பழிக்கும்-வெய்யர்வெந்நாவையரிவெற்றிக்கை-துய்யதமிழ்க் - கோவைபலதம்பெயராற்கூறிமூவேந்தரிடந்-தேவைபொருள்கொண்டுபெணிதேடுங்கை-யாவினைந்தா-டண்ணலுக்கென்றுய்மலரையாயாதுமோந்தாண்மூக்-கெண்ணலன்போற்றுண்டித்தவேற்றக்கை- தண்ணளியொன்-றில்லாரிற்றெண்டர்க்கென்றிட்டநெற்போர்கவர்கேட் - பல்லாரைவிண்ணேற்றும்பாழிக்கை-புல்லான் - பொரவிளைத்துவஞ்சவாட்புத்தகம்போதிப்பான்-வரவிளைக்காதாருயிர்வண்கை-யிரவிகுல-மன்னுயுலகோம்பிமாநிதியச்சாலைதிறந்-தென்னுதன்றெண்டர்கொளைக்கிட்டிடுகை-மின்னார்பொன்னம்பலவன்றுட்டுணையையாயுமணிமுடியாய் - நம்பியணிந்தேயுலகாணுயகக்கை-யம்புவியில்-வெள்விடையோற்காமலரைவீழ்த்தியதும்பிக்கையறக் - கொள்விடைகூரும்பரசாற்கொய்திடுகை-யெள்ளுறுபுல் - லீட்டிவிளக்கெரித்தவின்பணிமுட்டச்சிகையை-நீட்டிவிளக்கெரித்தநேர்மைக்கை-நாட்டக் - குறையையமணர்கொளக்குண்டமெடுத்து-நிறைபுனல்செய்திட்டநிமலக்கை-மறை

நெறியின்-மூவாயிரமநுவைமுல்லையானுக்கைபுக்கு - நாவாலினிதுரைத்தநன் னயக்கை.'' எனப்பதினால்வரைக் குறித்திருக்க, இவர் பதின்மரைமாத்திரம் துதித்ததற்குக் காரணம் ஆலோசிக்குமிடத்து இவர்க்கு முன்னரே தம்ம வர் செயற்கையால் திருத்தொண்டர் புராணம் இயற்கை திரிந்து வழங்கி யதுபோலும். அத்திருக்கைவழக்கத்தையும் சின்னாட்குமுன் அச்சிற்பதித்த வர் இந்நூலாசிரியரைப்பின்றொடர்ந்து நால்வரைக் குறைத்தனர். ஆயினு மேறக்குறையநூற்றாண்டுக்குமுன் இவ்வாசிரியர் மாணாக்கபரம்பரையுளொரு வர் திருக்காஞ்சி—முத்தமிழ்சூரி-வீரபத்திரதேசிகர்செய்துள்ள ''செங்குந்த சிலாக்கியர்மாலை.'' என்னும்பிரபந்தத்தில் ''ஒப்புயர்வற்றசிவாகமமேழ்நான்கி னுண்மையெலா-மெப்புவனத்தும்விளங்கவாமேக்கிக்கிறந்தவுட - விற்புகுந்தா ண்டுக்கொன்றாகவேமூவாயிரமனுவைச்- செப்புறஞானக்கதிரோர்செங்குந்த சிலாக்கியரே.'' எனவும், ''ஆரணமோதுமபிடேகர்தம்மிலவதரித்துப்-பூரண நற்றமிழ்க்கோவைகள்பாடிப்புரவலர்பா-லேரணவப்பொருள்கூறிப்பொன்பெ ற்றிறையின்பணிகள்-சீரணவச்செய்திறலோர்செங்குந்தசிலாக்கியரே.'' என வும், ''ஒருநூறுபொன்னையுலப்பிலிநாட்சைவவுத்தமர்க்குத்-தருநூறிலன்புக் கெதிர்தூர்த்தவேடன்றனித்துறலு- மிருநூறுபொன்றந்திகலும்புறமதரேவிடு ம்பற்-செருநூறும்வாழ்க்கைசிவண்வோர்செங்குந்தசிலாக்கியரே.'' எனவும், ''தன்னரசிற்சைவமாணெறிவைதிகஞ்சார்நெறிகண்-மன்னுறுநாளிலரன்றொ ண்டர்க்குண்டிவழங்கலற்ற-வின்னலொடேநெற்களவாடுவோன்முனிவனையவ ரே-தின்னநிதியும்விடுத்தோர்செங்குந்தசிலாக்கியரே.''எனவும்,''பொருந்தல ர்போர்க்குடைந்திட்டோர்க்கெந்நாளும்புகலிடமா-யிருந்தவர்க்காடெய்தச்செ ன்றமர்வென்றதிலெய்திடும்பொன் - விருந்தரருந்தவர்க்காக்குதலன்றிவிமல னிடந்-திருந்துபணிக்குமளிப்போர்செங்குந்தசிலாக்கியரே.''எனவும்,''சருக்க லைநேர்குழற்சங்கிலிகேள்வனைக்காதலித்த-பெருக்கமதாற்சித்தியாவையும்பெ ற்றவன்பிஞ்ஞகன்பா-லிருக்கைபெறலறிந்தாற்றாதுயோகிலிணங்கிமுன்னர்-தி ருக்கயிலைப்பதிமேயோர்செங்குந்தசிலாக்கியரே.''எனவும்,''பன்முறையாயோ தனத்தெய்த்தமேவலன்பட்டிமையர்ற்- கொன்முறையாய்ந்தரன்சின்னங்குல வுறுகோலமுடன் - சொன்முறைநூல்கரவாண்மறைத்தெய்தச்சோர்வின்றியு யிர்-சென்முறைசெல்லவிடுத்தோர்செங்குந்தசிலாக்கியரே.'' எனவும், ''அண் டார்புரத்தைச்சிரித்தெரித்தானையவன்பொறியைத் - தொண்டாதரிக்குமவன டியாரைத்துணிந்திகழ்நாத்-தண்டாயஞ்சிக்கியொள்வாளாற்றறிபடத்தக்கண மே-சென்டாயுதனிற்செய்தீரர்செங்குந்தசிலாக்கியரே.'' எனவும், ''பாராளு மன்னவன்றேவிமுக் கண்ணற்காம் பைம்மலரென் - றோராளெடுத்துமோந் தேகலுங்கூந்தலீர்த்தொண்ணசியால் - வாராருங்கோணமரிந்தவள்கேள்வன் கைவாங்கவிட்ட - சீரார்சொன்மாலையுடையோர்செங்குந்த சிலாக்கியரே.'' எனவும்,''வேயைவெல்தோளிபங்கன்றொண்டர்க்கென்றுவிசித்தநெற்றீ-நோ யையாற்றுதினத்தோருணக்கண்டுளெநொந்துதந்தை- தாயைமனையைத் தம

ரையவர்மூலேத்தண்சுதையுண்-சேயையசிகொடுமாய்த்தோர்செங்குந்தசிலாக்கியரே.'' எனவும், "ஏர்சான்றசெம்பியர்க்கல்லாலிடோமுடியென்னத்தில்லை- யூர்சான்றவந்தணரோதவுமாகுலமுற்றரன்று-ணேர்சான்றமாமுடியாகுறவேண்டிநெடுங்கனவிற் - சீர்சான்றவாதுபெற்றுண்டோர்செங்குந்தசிலாக்கியரே.'' எனவும், "என்றுமலர்பறித்தேறூர்திக்காரமியற்றுந்தொண்டர்- நின்றலறச்சிந்துந்தம்பியொடைவர்நெடுமழுவாற்- பொன்றவிகுத்திறைமெய்யன்புக்கின்னுயிர்போக்கவெண்ணிச்-சென்றவுயிரைமீள்வித்தோர்செங்குந்தசிலாக்கியரே.'' எனவும், "தொகைபெறும்பல்பொருளாற்சிவன்கோயிலிற்றூய்விளக்கிட்-டகமகிழ்காலின்மையெய்திக்கணம்புலறுத்துவிற்று-மிகைகெடலின்றியதையேயெரித்ததுமிக்கின்மையாற்-சிகையெரித்திட்டசெயலோர்செங்குந்தசிலாக்கியரே.'' எனவும், "முகைத்தபொழுதேபெறுங்குருடேகிக்கண்முன்றெரிய- விகைத்தகயத்தொண்டினிதின்முற்றிப்புகலீறிலொட்டாற்-பகைத்தவமணர்குருடாகியேந்தற்பணிப்பினவர்- திகைத்துநிலேவிடச்செய்தோர்செங்குந்தசிலாக்கியரே.'' எனவுமப் பதினூன்கு திருத்தொண்டர்களும் பாழ்படாதமைந்திருக்கக் கண்டாம். இஃதிதுகாறும் கையெழுத்துப்பிரதி. (கரு)

## ஏனைய நாயன்மார் துதி.

புந்தியெனும்பகைவனிறப்போந்துவாட்டிப்புறங்கண்டுதனியரசாச்செயங்கொண்டெங்கு, மூந்தியுறச்சிவபோகம்பெரிதுந்துய்த்துமோகமெனுங்கடனீந்திமுத்திநாட்டில், வந்துமயலிறவாண்டுமுழுதுநாமேமாதேவனடிக்கடியாரெனலுமாறி, யந்திவணனடிக்கமலஞ்சேர்ந்துவாழுமடியார்களடிமலர்கட்கன்புசெய்வாம்.

(இ - ள்.)மனமென்னும் பகைவனழியும்படி எதிர்த்துச்சென்று அவனையடக்கி முதுகுகாட்டி யோடும்படியாகச்செய்து வெற்றிகொண்டு தனியரசுசெல்லவும், எவ்விடத்தும் சிவபோகம் முற்பட்டோங்கும்படி விசேடமாயனுபவித்து ஆசையெனும் கடலேத்தாண்டி அக்கரையிலுள்ள முத்தியென்னும் நாட்டையடைந்து மயக்கநீங்க வரசாட்சி புரிந்து, நாமே முழுவதுமாயுள்ள சிவபிரானுக் கடியார்களென்னும் தற்போதமுமொழிந்து, செவ்வானநிறமுள்ள திருமேனியையுடைய சிவபிரான் திருவடித்தாமரைகளேக் கலந்துவாழ்கின்ற ஏனையநாயன்மார்களின் திருவடித்தாமரைகட்குப் பத்திமைபுரிவாம். எ - று.

ஓரரசன் தனியரசு செலுத்த வேண்டுமாயின், தனக்குள்ளபகைவர்களோடெதிர்த்து யுத்தம்புரிந்து, அவர்களேயடக்கி முதுகுகாட்டி யோடும்படிவெற்றிகொண்டு, ஏகசக்கிராதிபத்தியம்பெற்று அரசபோகங்களேயனுபவிக்கவேண்டும். அதுபோலச் சிவபோகமென்னும் ஏகசக்ராதிபத்தியம் பெற விரும்புவோர், அப்பேற்றையடையாவண்ணம் தடைப்படுத்துவதாகிய பகையெ

ன்னும் மனதை முன்னர் வெற்றிகொள்ளவேண்டுமென்பார், "புந்தியெனு ம்பகைவனிறப்போந்துவாட்டிப் புறங்கண்டுதெனியரசாச்செயங்கொண்டெங் கு-முந்தியுறச்சிவபோகம்பெரிதுந்துய்த்து," எனவும், அச்சிவபோக மிருப் பது முத்திநாட்டிலாகலானும், அம்முத்திநாடு ஆசைக்கடற்கக்கரையிலுள்ள தாகலானும், "மோகமெனுங்கடனீந்திமுத்திநாட்டில்வந்து." எனவும், போ கத்தையனுபவிப்போர்க்கு மயக்கமும் நாமேபெரியமென்னும் கர்வமுமுண் டாதலியற்கையாதலால், இச்சிவபோகம் அத்தன்மைத்தன்றென்பார், "மய லிறவாண்டுமுழுதுநாமேமாதேவனடிக்கடியரெனவுமாறி." எனவும், அந் நாடும் அப்போகமும் ஆகிய அனைத்துமாய் விளங்குவது சிவபிரான் திருவடி யேயென்பார், "அந்திவண்ணனடிக்கமலஞ்சேர்ந்துவாழும்" எனவுங்கூறினர். ஆசைக்கடற்கக்கரையிலுள்ளது முத்திநாடென்பதை, "மோகமெனுங்கடல் கடந்துமுத்தியெனுங்கரைசாண்பான்மொழிந்தகாலாம்-பாகமெனுமலர்தூவிப் பத்தியெனும்புனலாட்டிப்பரிந்துசாத்திச்- சோகமெனப்பாவித்துத்தூரியமெ னும்விளக்கேற்றிச்சோகநீக்கி - யாகமெனுங்கோயிலின்கணறிவென்னுங்கண பதிக்கேயன்புசெய்வாம்." என்னும் சிவஞானவள்ளலார் திருவாக்கானும், மனதைப் புந்தியென்றதை, "காதென்றுமூக்கென்றுகண்ணென்றுகாட்டி யென்கண்ணெதிரே - மாதென்றுசொல்லிவருமாயைதன்னைமறலிவிட்ட-தூ தென்றெண்ணுமற்சுகமென்றுநாடுமித்துற்புத்தியை-யேதென்றெடுத்துரைப் பேனிறைவாகச்சியேகம்பனே." என்னும் வெண்காட்டடிகளின்வியன்வாக் கானுந்தெளிக. அன்றியும் மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்னும் நான்கும் அந்தக்கரணங்களேனும், மனம் ஒன்றே நினைக்கையில் மன மாகவும் ஆலோசிக்கையில் புத்தியாகவும் தீர்மானிக்கையில் சித்தமாகவும் முயற்சிக்கையில் அகங்காரமாகவும் விளங்குமென்பது நூற்றுணிபு. (கசு)

## சந்தானகுரவர் நால்வருள் மெய்கண்டதேவர்துதி.

பெருங்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பண்டகப்பிரமர்கோளியாழ்முனியாற்பரனுணர்ந்துரோமசனு ன்முன்-பரசமயக்கோளரியெனக்குகனைப்பணித்தவாறவற்குவாவரு க்க, னண்டுநற்குலமன்னெடுஞ்செலன்மறுத்ததகலமற்றவற்பழியூழ் க்கா-வற்றொருசூழ்ச்சனகாம்சத்தொடுங்கடந்தையணுகவுய்த்திரௌர வாகமத்தில், விண்டதோர்ஞானஞ்சுயசையாப்பாலான்மிசைவிக்கக் கெடிலத்துட்சுவேத- வியலெனுற்பவவில்லொருவிமூவாண்டில்வெ ண்ணெயைங்கானிடந்தமிழோர்ந், துண்டிடுங்காராச்சுதையெனவா தையுலகமுண்டுயமொழிபெயர்த்த, வொப்பின்மெய்கண்டதேவனு ண்மலர்த்தாளுன்னியெம்வினைகளையொழிப்பாம்.

(இ-ள்.) முன்னொருகால் கைலாயபதியாகிய சிவபெருமான் உலகின்க ணுண்டாகிய அகம்பிரமவாதிகளின் கோட்பாட்டை நாரதமுனிவராலுணர்

ந்து, அதற்குமுன் சமணராதிய புறச்சமயிகள் செய்துவருங்கொடுமையை உரோமசமுனிவராலுணர்ந்தபோது அவரம்சத்தில்தமதிளையபிள்ளையாரைப் பரசமயகோளரியாய் அவதரிக்கக்கட்டளையிட்டதுபோல, அக்குமாரக்கடவுளின் இளவலாகிய வீரவாகுதேவர் சிறந்த சூரியகுலத்துதித்த முசுகுந்தச் சக்கரவர்த்தியுடன் செல்வதற்குத் தடைகூறிய தோடம் நீங்க அச்சக்கரவர்த்தியை நிந்தித்ததோடத்திற்காக அத்தகைய ஓர்தோடமேற்றுள்ள சனகமுனிவரம்சத்துடனே மகதநாட்டில் திருக்கடந்தையம்பதியில் அயோனிஜராய்ச் செலுத்தி, இரௌரவாகமத்திற் கூறியுள்ளதாகிய ஒப்பற்ற சிவஞானபோதத்தை நந்திதேவருடைய பத்தினியாராகிய சுயசையைக் காராவாகப் புவியில் வரச்செய்து அவ்வாவின் பாலா லுணர்விக்க, அஃதுணர்ந்தபின்னர் கெடிலநதி தீரத்துள்ள சரவண வனமென்னும் தம துற்பவவீட்டை நீங்கி, மூன்றுவயதில் திருவெண்ணைநல்லூர் விநாயகக்கடவுளிடம் தமிழ்க்கலைகளுணர்ந்து, தாம் தேவாம்சமாகிய காராப்பாலாலுணர்ந்த சிவஞானபோதத்தைத் தாமுண்ட பாலைப்போலவே உலகத்தினருண்டு ஈடேறும்பொருட்டுத் தமிழில் மொழிபெயர்த்தருளிய சுவேதவனப்பெருமாளென்னும் மெய்கண்டதேவருடைய அன்றலர்ந்த தாமரைமலரையொத்த திருவடிகளைத் தியானித்து நமதுவினைகளைப் போக்குவாம். எ-று.

உரோமசமுனிவரம்சத்துடன் குமாரக்கடவுள் ஆளுடைய பிள்ளையாராய் அவதரித்தனரென்பதை "ஒழுகலரிதழிகலியிலுழியுலகுபழிபெருகுவழியைநினையா—முழுதுடலிலெழுமயிர்கடழுவுமுனிகுழுவினொடுகெழுவுசிவனைத் - தொழுதுலகிலிழுக்குமலமழியும்வகைகழுவுமுரைகழுமனகரப் - டழுதிலிறையெழுதுமொழிதமிழ்விரகன்வழிமொழிகண்மொழிதகையவே." என்னும் ஆளுடைய பிள்ளையார் அருள்வாக்கானும், "ஈசர்மிழலையிறையவர்பாலிமயப்பாவைதிருமுலைப்பா-றேசமுய்யவுண்டவர்தாந்திருமாமகனாராதலினாற் - காசுவாசியுடன்பெற்றார்கைத்தொண்டாகுமடிமையினால்-வாசியில்லாக்காசுபடிபெற்றுவந்தார்வாகீசர்." என்னும் அருண்மொழித்தேவர் அமுதவாக்கானுந் தெளிக. குமாரக்கடவுளின் கட்டளையை வீரவாகுதேவர் மறுத்ததன்றி, முசுகுந்தச் சக்கரவர்த்தியை இழித்துக்கூறின ரென்பதையும், அதுகேட்ட குகப்பெருமான் சினந்து மறுத்த தோடத்திற்கு மானவாம்சமடைவாயெனக் கட்டளையிட்டன ரென்பதையும், "முழுதருட்புரிதருங்கடவுள்சொல்வினவியேமுடிவதில்லாச் - செழுமதித்தண்குடைச்சூர்குலந்தனையடுந்திறலினேங்கள்-பழிபடப்பானுவின்வழிவருஞ்சிறுமகன்பாங்கராகி-யிழிதொழிற்புரிகிலோமெனமறுத்துரைசெய்தார்யாரும்வீரர்." எனவும், "ஞானநாயகனவர்மொழிதனைத்தேர்ந்துநம்முரைமறுத்தீ - ரானதோர்பான்மையானீவிர்மானுடவராயவனிமன்னன் - சேனையாகிப்புறம்போற்றியேபற்பகற்சேர்திர்பின்னர்-வானுளோர்புகழவேநோற்றுநம்பக்கலில்வருதிரென்றான்." எனவும்வரும் கந்தபுராணத் திருவிருத்தங்களானுந்தெளிக. ஆயின்- ஒன்பதின்மரும் அவ்வாறே கூறியிருக்க அப்பாவம் இவரைமாத்திரம் சேர்வதெங்ஙனமெனின், அவ்

வொன்பதின்மருள் மூத்தோர் இவராகலானும், இவர்முந்திக் கூறியதால் இவர்துணைவர்களும் தமையன் வார்த்தையைத் தட்டாதுகூறினராகலானும், அப்பாவத்திற் கிவரேகாரணரென்பது தேற்றம். வீரவாகுதேவரே மெய்கண்டதேவராய் அவதரித்தனரென்பதை, "முந்தடன்மொய்ம்பனருந்தவமாற்றுமுசுமுகனை-நிந்தைசெயூழ்முறைநிற்பவுலகினிரீச்சுரர்கோ- ளுந்தமகதிமுனியரனுரிடத்தோதவுவை- சிந்தச்சுவேதத்துதித்தோர்செங்குந்தசிலாக்கியரே." என்னும் செஙகுந்த சிலாக்கியர்மாலைத் திருவிருத்தத்தானுந்தெளிக. சனகாதியர் நால்வரும் சிவபெருமான் முதலிலருளிய வேதார்த்தத்திற் றெளிவடையாதுமயங்கி மீட்டும் சிவாகமங்களையுபதேசிக்கப் பிரார்த்தித்த தோஷத்தால், அந்நால்வரும் சிவஞான முதிர்ச்சியுடையராய்ப் புவியில் அவதரிக்க வேண்டியிருத்தலின், முதலில் சனகாம்சத்தை வீரவாகுதேவரவதாரத்திற் கலந்து, (தமதிளையபிள்ளையாருருவாகிய அனற்பொறியை வாயுதேவனோடுங் கூட்டிக் கங்கைக்கணுள்ள சரவணப்பொய்கைக்கனுப்பியதுபோல) கெடிலநதிக்கணுள்ள சுவேதவனத்திற்கனுப்பினரென்பார், "அற்றொரூழ்ச்சனகாம்சத்தொடுங்கடந்தையணுகவுய்த்து." எனவும், "கெடிலத்துட்சுவேதவியலெனுற்பவவில்." எனவுங்கூறினர். "மிசைவிக்க" என்பதற்கு, உண்பிக்கவெனப் பொருள்கொள்ளினுமிழுக்காது. சனகாதியர் நால்வரும் முதலில் மயங்கினரென்பதை, "முந்தைவேதமுழுதுமுணர்த்தியே - யெந்தையேகவிருநிலம்போந்துதஞ்-சிந்தையொன்றுந்திறனரிதாகலி- னுந்துபின்னருநோற்றலைமேயினர்." என்னும் கந்தபுராணத்திருவிருத்தத்தானுந்தெளிக. சுயசை மருத்துவின்புத்திரியும் நந்தியெம்பெருமான்பத்தினியுமென்பதனை, இலிங்கபுராணம் சிலாதரன் மகவுவேண்டித் தவம்பண்ணின அத்தியாயத்தானுமறிக. தீவினை போக்கத்தக்கதும் நல்வினை ஈட்டத்தக்கது மாயினும், பிறவியறவேண்டினோர்க்கு இருவினைகளுமறவேண்டுதலின், "எம்வினைகளையொழிப்பாம்." என்றனர். (கள)

## ஏனையமூவர்துதி.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

விடைத்தேவன்பணிப்பான்மெய்கண்டான்றன்பின் - வியன்
கயிலைவிடுத்துமுறையீடாயன்னோன், புடைத்தேருஞ்சனற்குமர
னாதிமூவர் - புவியிலருணந்திமுனும்புனிதராகிக், கடைத்தேறிச்சக
லர்மலமொழிந்துமுத்தி – கைக்கொள்சிவஞானசித்தியாதிநூல்கள்,
படைத்தேவருஞ்சைவநெறியையோர்ந்து – பதம்பெறச்செய்திறத்
தைநிதம்பரவிவாழ்வாம்.

(இ - ள்.) இடபவாகனராகிய சிவபெருமான் கட்டளையினாலே மெய்கண்டதேவர் அவதாரத்தின்பின், அப்பெருமானிடத்தில் ஞானோபதேசமடைந்துள்ள சனற்குமாரர் முதலிய மூவரும் முறைப்படியே திருக்கயிலை

யை விட்டுநீங்கி, நிலவுலகத்தில் அருணந்திசிவாசாரியர் மறைஞானசம்பந்த சிவாசாரியர் உமாபதிசிவாசாரியர் என்னும் மூவராய் அவதரித்து, மும்மலமுடையோர்களாகிய சகலர்களெல்லாம் மலமொழிந்து முத்தியின்பத்தைக்கைக்கொள்ளத்தக்க மார்க்கம் பாலிக்கும் சிவஞானசித்தியார் முதலிய நூல்களை இயற்றி, எல்லாரும் சைவசமயமார்க்கத்தை யுணர்ந்து சிவபதமடையச்செய்துள்ள வல்லபத்தை நாடோறும் துதித்து வாழ்வடைவாம். எ - று.

இங்ஙனம் "விடைத்தேவன்" என்பதற்கு நந்தித்தேவனெனப் பொருள் கொள்ளினு மமையும், அத்தேவனிடத்திலு மிவர்கள் ஞானோபதேசம் பெற்றுள்ளாராகலின். இருவரிடத்திலு முபதேசம்பெற்றுள்ள சனகாதியர்களுள் வரில் முன்னோராகிய சனகர் மெய்கண்டாராய் வந்ததுபோலவே, சனற்குமாரர் அருணந்தி சிவாசாரியராகவும் சனாதரர் மறைஞானசம்பந்த சிவாசாரியராகவும் சனந்தனர் உமாபதி சிவாசாரியராகவும் அவதரித்தனரென்பார், "மெய்கண்டான்றன்பின் - வியன்கயிலைவிடுத்துமுறையிடாயன்னோன் - புடைத்தேருஞ்சனற்குமரனாதிமூவர்-புவியிலருணந்திமுனும்புனிதராகி" என்றும் - இம்மூவருள், அருணந்திசிவாசாரியர் சிவஞான சித்தியார் - இருபாவிருபது - என்னும் இரண்டு நூல்களும், மறைஞான சம்பந்த சிவாசாரியர் சிவதருமோத்திரம் என்னுமோர் நூலும், உமாபதிசிவாசாரியர் சிவப்பிரகாசம்-திருவருட்பயன்-வினாவெண்பா-போற்றிப்பஃறொடை-கொடிக்கவி-நெஞ்சுவிடுதூது-உண்மைநெறிவிளக்கம்—சங்கற்பநிராகரணம்- கோயிற்புராணம்-சிவபுண்ணியத்தெளிவு என்னும் பத்து நூல்களும் இயற்றினமையின், "சிவஞானசித்தியாதிநூல்கள்." என்றும் கூறினர். (கஅ)

## திருக்கச்சிநகராளவந்தவள்ளலார்துதி.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

நச்சிருந்தமணிமிடற்றொடொருமாவின்கீழ்நகுமொளியுமணிமன்றநடமுங்காணும், பிச்சிவனப்பூமதுவார்காமகோட்டப்பெருமாட்டிச்சிலம்பகின்றுதயஞ்செய்தோர், பச்சிரதங்கமழ்குந்தப்படைப்பேர்கொண்டுபயின்மரபோர்கைலாயபரம்பரைக்கண், கச்சிநகராளவந்தவள்ளலார்தங்கவின்வளருங்கமலவடிகருதிவாழ்வாம்.

(இ - ள்.) விடமணிந்த நீலகண்டத்துடனே ஒப்பற்ற மாவிருட்சத்தின் கீழ்வீற்றிருக்கும் சிவசோதியையும் அழகியபொன்னம்பலத்திற்புரியும் ஆனந்தநடனத்தையுஞ்ச தாதரிசிக்கும் பித்துடையவரும், மலர்கள் தேனைச்சொரிகின்ற சோலைசூழ்ந்த காமகோட்டத்தில் வீற்றிருப்பவருமாகிய உமாதேவியாரின் சிலம்பினின்றும் உதித்தவராய்ச் செவ்விய உதிரங்கமழ்கின்ற குந்தமென்னும் ஆயுதப்பெயரைக்கொண்டு விளங்கும் மரபினராகிய திருக்கைலாயபரம்பரையிலவதரித்த, கச்சிநகராளவந்தவள்ளலாரென்னும் ஆசாரியருடைய அழகுமிக்க தாமரைமலர்போலும் திருவடிகளைச் சிந்தித்தீடேறுவாம். எ-று

உமாதேவியார்க்குச்சிவபிரான் திருவுருவத்தையும் நடனத்தையும் சதா தரிசித்திருக்க விருப்பமாகலின், "நச்சிருந்தமணி மிடற்றெருமாவின்கீழ்நகுமொளியுமணிமன்றநடமுங்காணும்பிச்சி" எனவும், குந்தப்படை பகைவர்களுதிரந்தோய்ந்திருத்தலினாலும், சிவசத்தியின் சிலம்பிற்றோன்றிய உபசுப்பிரமணிய மரபினர்க்குச் சிவசத்தியே அப்படையையருளி அதனையே தம் மரபிற்கும்பெயராகவளித்தமையாலும், "பச்சிரதங்கமழ்குந்தப்படைப்பேர்கொண்டபெயின்மரபோர்" எனவும், இம்மரபோர் கைலாயபரம்பரையினராய் விளங்கலையுணர்த்துவான், "கைலாயபரம்பரைக்கண்" எனவும் கூறினர். இதனை "அன்றாளுடைப்பிள்ளைகண்டோங்கும்பாளயமாகிக்கச்சி - நின்றொரூருட்சமயாதிதீக்கைநிறுவிமுத்தி - குன்றுவகையிற்றந்தாளவரும்வள்ளலார்குழுவிற் - சென்றுரிமையர்யாருஞ்செங்குந்தசிலாக்கியரே." என்னும் செங்குந்த சிலாக்கியர்மாலைத் திருவிருத்தத்தானுந்தெளிக. அம்பிகையார் சிவபிரான் திருக்கோலத்தை சதாநோக்கிக்கொண்டிருப்பரென்பதை, "நகந்தருங்கொடிகண்களைநாணியே-முகந்திரும்புமுறையிற்றிரும்புமான்- மகிழ்ந்திடங்கதிர்வீரமழுவலந் - தகுந்தகுந்தகுமென்னத்தயங்குற." என்னும் பிரபுலிங்கலீலைச் செய்யுளானுமுணர்க. ஆசையின்மிகுதியேபித்தாகலின், "பிச்சி"என்றனர். பிச்சு பித்து என்னுமிரண்டும் ஒருபொருட்சொற்களே. அன்றியும் எதுகைநோக்கிப் பித்தெனற்பாலது பிச்செனநின்றது எனக்கூறுவாருமுளர். (கக)

## திருவாலவனங்கார்க்கோடகமுனிவர்துதி.

கார்க்கோடன்னிலைபெயரவண்டகோளங்கதிமாறக்குலாசலங்களதிரவெண்டிக், கார்க்கோடவருந்தகர்மாப்பற்றிக்காளிகைத்தாளம்பறித்தவிறற்கைக்கோள்வீரர், கார்க்கோடன்றிருமரபிற்றோன்றியாலங்காட்டரனாருணடனங்காணவந்த, கார்க்கோடகம்முனிவரருணிறைந்தகனகவனசக்கழல்கள்கருத்தில்வைப்பாம்.

(இ - ள்.) கடலும் தன்னிலைவேறுபடவும், அண்டகோடிகள் தத்தம் நிலைபெயரவும், அஷ்டகுலபர்வதங்களு மதிரவும், திக்குப்பாலகர்கள் திசைமாறவும் அதிவேகமாய்வந்த ஆட்டுக்கடாவைப் பிடித்து, காளியின்கரத்தேந்தியதாளத்தைப் பிடுங்கியவல்லபமும் ஒழுக்கமுமமைந்த நவவீரர்களின் மேகத்தின் கொள்கையையுடைய சிறந்தகுலத்திலவதரித்து, திருவாலங்காட்டில் எழுந்தருளியிருக்கும் இரத்தினசபாபதியின் திருவருணிருத்தத்தைத்தரிசிக்க வந்த கார்க்கோடகரென்னும் முனிவருடைய திருவருணிரம்பிய பொற்றாமரைபோன்ற திருவடிகளை இருதயத்திலிருத்துவாம். எ - று.

கார்கோள் - கடல். கோடல்-வேறுபடல். கோள் - கொள்கை. கார்கோள் எனவும் திக்கார் கோட எனவும், இயல்பாய் நிற்கவேண்டுவனவாகிய இரண்டும் செய்யுளிசைநோக்கி இரட்டித்துநின்றன. ஆட்டுக்கடாவைப்

பிடித்ததை, "ஆடலந்தொழின்மேல்கொண்டேயனைவருமிரியச்செல்லு - மேடமஞ்சுறவேயார்த்துவிரைந்துபோய்வீரவாகு - கோடவைபற்றியீர்த்துக் கொண்டுராய்க்கயிலைநண்ணி - யேடுறீபத்தண்டாரிளையவன்முன்னருய்த்தான்" என்னும் கந்தபுராணத்திருவிருத்தத்தானும், "ஓதியவேள்வியினுவப்பநாரதன் - போதவேதகர்தனைப்பொங்குதீத்சர - வேதனைப்படுப்பதைவிரைந்துகட்டியே - சேதனைக்குதவினதிருச்செங்குந்தமே." எனவும், காளிகைத்தாளம்பறித்ததை, "ஆலங்காட்டினிலரனுடனன்றுவாதாடுங்-கோலங்காட்டியகாளிதன்கொற்றம்போய்வெள்கப் - பாலங்காட்டியபன்மணித்தாளமேபறித்துச் - சீலங்காட்டியகுந்தர்நற்பெருமையார்தெரிப்பார்." எனவும் வரும் ஈட்டியெழுபதின் திருவிருத்தங்களானுந்தெளிக. சிவபிரானுடன் வாதாடுங்காளி திருக்கரத்தேந்திய தாளத்தைப்பறித்தற்கு வல்லபத்தொடு ஒழுக்கமுமுடையோர்க்கன்றி ஏலாதாகலின்,"கைக்கோள்"என்றுகூறினர். ஆதலினன்றோ இம்மரபினர்க்குக் கைக்கோளர் என்னும்பெயருமமைந்துள்ளது. இப்பெயருமமைந்துள்ள தென்பதை, "உதிதருமத்திறல்வீரரரியணைமேலம்மையுடனுறைந்தநாதன் - பதமலர்கள்பணிந்தெழலுமவர்க்கண்டோர்ப்பதியைப்பரிவாஞேக்கி - மதியுமிகுதிறலுமெழின்மானமுங்கையெனப்பெறு நம்மைந்தரின்னோர் - புதியரலர்நந்திதனிச்கணத்தவரென்றுன்சுருதிப்பொருளாய்நின்றுன்." என்னும் கந்தபுராணத்திருவிருத்தத்தானுமுணர்க. மேகங்கைம்மாறுகருதாது உலகிற்குதவல்போல, இவ்வீரர்களும் எதருதவிநோக்காது கருணையால் உதவுவோராகலின், கார்க்கோடன்திருமரபு" என்றனர். இக்கார்க்கோடர் செங்குந்த மரபினரென்பதை "முக்கணனெண்டோண்முதல்வஞேர்தாளண்டமுட்டவிட்டங்-கொக்கநின்றுபேபரியைவென்றவுலட்பினலம்-புக்குறுமாலவனத்திற்கார்க்கோடன்புரிமடத்தெண் - டிச்சுமெச்சச்கலைதேர்ந்தோர்செங்குந்தசிலாக்கியரே." என்னும் செங்குந்த சுவலாக்கியாமாலைத் திருவிருத்தத்தாலு முணர்க. (உ௦)

## கவிச்சக்ரவர்த்திதுதி.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இன்னும்புவியிற்புன்கவிகளில்லையுண்டேற்றலையறுப்ப
மென்னுங்கொடிகளெழுந்தார்ப்பவீட்டிப்பாடியரிந்ததலை
முன்னந்துதிப்பவெழுப்புமருண்மூர்த்தியாகும்புலவர்பிரான்
பொன்னங்கமலப்பூஞ்சரணுமுறத்துமகத்தும்புகழ்ந்துய்வாம்.

(இ - ள்) இன்னும் நிலவுலகத்திற் றேர்ச்சியற்ற அற்பக்கவிஞர்களில்லை. இருப்பார்களாகில் அவர்கள் தலையையறுப்போம். என்றெழுதியுள்ள வெற்றிக்கொடிகள் மேலோங்கிச் சத்திக்கும்படி ஈட்டியெழுபதென்னும் பிரபந்தத்தைப்பாடி, அரிந்த சிங்காதனமிட்ட தலைகளெல்லாம் முறப்பட்டுத் தம்மைத் தோத்திரிக்குமாறு எழுப்பிய கிருபைவடிவினராகிய கவிச்சக்கரவர்த்தியாரு

டைய பொன்போலும் அழகிய செந்தாமரைமலரொத்த திருவடிகளை, வெளியே கூறும் தோத்திரங்களாலும் மனதாற்சிந்திக்கும் தியானங்களாலும் புகழ்ந்து ஈடேறுவோம். எ-று.

தேர்ச்சியற்ற அற்பக்கவிஞர்களால் அவனிக்கிடையூறும் அருந்தமிழ்க்குக் கௌரவபங்கமுநேர்வதால், அத்தகையோரைத் தண்டிப்பதே கடமையாகக்கொண்டு, "அற்பக்கவிஞர் தலையறுப்போம்" என்றெழுதிய வெற்றிக்கொடிநாட்டியிருந்தனராகலின், "இன்னும்புவியிற்புன்கவிகளில்லையுங்கேடற்றலையறுப்ப - மென்னுங்கொடிகளெழுந்தார்ப்ப." என்றும், ஈட்டியெழுபதென்னும் அற்புதப்பிரபந்தம் அருளிச்செய்வதற்காக ஆயிரத்தெண்மர்தலையைச் சிரச்சிங்காதனமாக்கி அதன்மீதிருந்து திருவாய்மலர்ந்து முடித்திறங்கி, மீட்டும் அச்சிரங்கள் அவவவ்வுடலுடனொட்டியெழும்படி எழுபெழுபதென்னும் பிரபந்தமும்பாடி எழுப்பினரென்பதுணர்த்துவான். "ஈட்டிப்பாடியரிந்ததலை முன்னந்துதிப்பவெழுப்புமருண்மூர்த்தி." என்றும், இக்கூத்தர் கவிச்சக்கரவர்த்தியென்னும் பட்டமுடையாரென்பதைக்குறிப்பிப்பான், "புலவர்பிரான்" என்றும், அகத்திற்றியானித்தலும் புறத்திற்றுதித்தலும் வெவ்வேறுசெய்கைகளேயாயினும் இவ்விரண்டும் ஒத்திருத்தலே பத்தித்திறத்திற் கிலக்கணமாகலின், "புறத்துமகத்தும்புகழ்ந்துய்வாம்" என்றுங்கூறினர். "முற்றுமுணர்ந்தவரில்லைமுழுவதூஉங்-கற்றனமென்றுகளியற்க" எனவும் "எல்லாமறிந்தவருமேதுமறியாதவருமில்லை" எனவும் ஆன்றோர்கள்பலருங்கூறியிருக்க, இப்புலவர்பிரான் அற்பக்கவிஞர்களைத்தலையறுத்தல் அதிபாதகமன்றோவெனின், அற்றன்று-ஓர்கவிஞனய் வெளிவந்தவன் ஓர் நூலையேனும் நல்லாசிரியனையடுத்து நற்றெண்டு பூண்டொழுகிச் சந்தேகவிபரீதங்களறக்கற்று வெளிவராவிடின், அந்நூற்பொருளை வேறுபடுத்தி யுலகெங்கும் பரவச்செய்து விபரீதம் விளைப்பனாகலின், அத்தகையோனுக் கச்சம் விளைப்பான் எழுதியதே யன்றி அவ்வாறு புரிந்த தின்றென்க. என்னை? அக்கொடிநாட்டியபோதே ஒவ்வொருவரும் பூரணக்கவிஞர்களாய்விட்டனராகலின். இவ்வாறே ஒவ்வோர் பிரபலவித்துவான்களும் ஒவ்வோர் வெற்றிக்கொடி நாட்டியிருந்தன ரென்பதையும், பலமுகஞ்சென்று வென்றன ரென்பதையும், இத்தகைய பல புன்கவிகள் வெளிக்கொண்டபோது சில பெரியோர் வருந்தினரென்பதையும், இக்கூத்தர் காலவியோகமாகக்கண்ட ஔவைப்பிராட்டியாரும் புகழேந்திப்புலவரும் குலோத்துங்க சோழமகாராஜனும் இனியற்பகவிகளதிகரிக்குமேயென்று தனித்தனி வருந்தினரென்பதையும், "குட்டுதற்கோபிள்ளைப்பாண்டியனிங்கில்லை-குறும்பியளவாக்காதைக்குடைந்துதோண்டி - யெட்டினமட்டறுப்பதற்கோவில்லியில்லை- யிரண்டொன்றாய்முடிந்துதலையிறங்கப்போட்டு-வெட்டுதற்கோகவியொட்டக்கூத்தனில்லை - விளையாட்டாக்கவிதைதனை விரைந்துபாடித்-தெட்டுதற்கோவறிவில்லாத்துரைகளுண்டுதேசமெங்கும்புலவரெனத்திரியலாமே." எனவும் "தென்மதுரைவேப்பத்தூர்சங்கவாணர்-சிர

மசைப்பச்சிதைர்தோடச்செய்யும்வீரத்-தன்மைகொள்பொய்யாமொழியான் பகழிக்கூத்தன்—ருழ்கவிஞர்தலைசாய்த்துத்தக்கோர்தம்பால்- நன்மையினுற்றிறைவாங்கும்கவிச்சக்ரேச-நாமன்முதலானோரிந்நானிலத்தி - லின்னையிறைலன்றேபுன்கல்விகற்றோ-ரெல்லாரும்வல்லாராயிமைக்கின்றரே." எனவும், "கல்லார்கசடறவீணைகவிஞரெனத்திரிவா-ரெல்லாமறிந்தவர்போலிறுமாப்பரிவர்களிடம் - வல்லான்கவியொட்டக்கூத்தனைப்போற்றிறைவாங்கிடுவோ-ரில்லாமையாலல்லவோயெங்குமிப்படியெய்தினரே." எனவும், "காளியருளாற்பொய்யாமொழிநூல்கற்றான் - கம்பனேபிரமராக்கதனாற்றேர்ந்தா-னீளவுமேயருணகிரிகுகனாலாய்ந்தா. - னெடுங்கூத்தன்வாணிதனப்பாலுண்டோர்ந்தான்- கோளில்பரையாற்காளமுகிலாசானுன் - குவலயத்திலிப்படிமுன்னாளிற்பலபேர்-வாளுலவும்வரகவியாயிருந்தாரின்னாள்-வழுக்கவிகளிருக்குநிலைவகுக்கொணாதே." எனவும், அந்நாளிற்பரமனிருகருணையாலே-யருத்தியொடுந்தொட்டுவிட்ட குறையினாலே-யெந்நாளுமழியாச்சீர்பெற்றிறும்பூ-தெத்தனையோகாட்டியிவிதிருந்தார்மேலோ-ரிந்நாளிற்கல்விசிலகற்றலோடு-மெல்லாமும்வல்லார்போலிமைத்துப்பாடி - முன்னாளின்மேலோரேயாமென்றோதி-மூடரொலாம்வியப்பகதைமுடிப்பர்தாமே." எனவும், ஔவைப்பிராட்டியார், "நூற்றெண்பதின்காதநாங்குநறுந்தமிழி - னேற்றமினியென்னுயியலுமோ-சாற்றுபுவிராசர்யாரும்புகழுமொட்டக்கூத்தக்-கவிராசன்காட்சியிலாக்கால்." எனவும், புகழேந்திப்புலவர், "என்கவிஞத்தன்மையிருந்தென்பயன்றருமே-புன்கவிஞப்பூடனைத்தும்பொங்குமே-யின்கவிஞ - ரெய்ப்பிடைவைப்பின்றியினைப்பரேகூத்தனுயி - ருய்ப்பிலதாயோயவுநின்." எனவும், குலோத்துங்கசோழராஜன் "ஒன்றேயுரைப்பனுயர்பாணினியுலகோகைவிட்ட-வன்றேயொழிர்தநல்லாரியச்செம்மையருளுருவக்குன்றேயனையவிக்கூத்தனென்னோடுகுலாவல்விட்ட-வின்றேயொழிந்தவியற்றமிழ்ச்செம்மையிருநிலத்தே" எனவும்வருந்தனிப்பாக்களானும், அற்பக்கவிஞர்களாற் பற்பல இடையூறுவிளையுமென்பதை "கல்லாதவருநனிநல்லர்கற்றோர்முன்-செல்லாதிருக்கப்பெறின்" எனவும், "தேரான்றெளிவுந்தெளிந்தான்கணையுறவுந்-தீராவிடும்பைதரும்." எனவும்வரும் திருக்குறள்களானுந்தெளிக. அன்றியும் பலகுடிகளையாளும் அரசர்கள், நீதிமார்க்கங்களைத் தங்கள்குடிகள் செவ்வனேயுணராதவழி தண்டிக்கப்படும் என விதியேற்படுத்துவது எவ்வாறு முறைமையோ, அது போலக் கவிச்சக்கரவர்த்தியா யுள்ளவர்கள் தங்களிற் குறைந்த கவிஞர்களைச் செவ்வனேகற்றுத்தேர்ச்சியடையுமாறுவிதியேற்படுத்தல் கடமையேயென்க.

## தில்லைவாழ் செங்குந்தர்துதி.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஒப்புயர்விலதொன்றதன்றொழிலேந்தா லுலகுளவெனுஞ்சிவஞானன், செப்பகம்பிரமரனிச்சுராருணரத்தெரித்துசந்தானவாரியரு-

ளெய்ப்பில்பின்னிருவரிரந்தபுல்லமுதை யீய்ந்துபொன்னம்பலத்துவச, மிப்புவியேத்தவேற்றுசெங்குந்த விறைவர்தாட்பணிபுரிந்துய்வாம்.

(இ - ள்.) ஓர் சமானுதிகரகிதமாகிய பரமசிவ மூண்டென்றும், அப்பரமசிவத்தாற் புரியும் பஞ்சகிருத்தியங்களால் பலவாகிய புவனங்க ளுண்டென்றும் விளக்குகின்ற, வேதாந்தத்தெளிவாகிய சித்தாந்தமென்னும் சிவஞானத்தை, மெய்ஞ்ஞானியர்களால் இழித்துக் கூறப்படும் அகம்பிரமவாதிகளும் அனீச்சுரவாதிகளும் தெளியும்படி விளக்கியருளிய சந்தானசாரியர்கள் நால்வருள், சிவானுபூதித் தன்மையிற் குறைவுபடாத மறைஞான சம்பந்த சிவாசாரியரும் உமாபதி சிவாசாரியரும் யாசித்த அற்பமாகிய அன்னப்பாகைத் தந்து, இப்புவியின்கணுள்ளோர் யாரும் துதிக்கும்படியாகத் தில்லைப் பொன்னம்பலவருடைய துவசா ரோகண மகோற்சவத்தினைச்செய்யும் பேற்றைவாய்ந்த செங்குந்தமூர்த்திகளுடையதிருவடித்தொண்டுகளைச்செய்து ஈடேறுவாம். எ - று.

தில்லைவாழந்தண ரொருவராகிய உமாபதிசிவாசாரியர் காலத்தில் சிதம்பரத்தையரசாண்டிருந்ததிரியம்பகச்சோழராஜன் இவரதுபத்தித்திறத்தையும் அதனுல் விளங்கும் தெய்வீகத் தன்மைகளையும் வடகலை தென்கலை என்னும் உபயகலாவல்லபங்களையும் நன்குணர்ந்து, அவரிடத்தில் தனக்குதித்த மெய்யன்பின் மேம்பாட்டால் சிவிகை - கவிகை-திருச்சின்னம்-சாமரம்-பகற் றீவட்டி என்னும் இவைகளை விருதாகக் கொடுத்து உபசரித்து வந்தான். அந்நாளில் ஓர்நாள் உமாபதிசிவம், தாம் தினந்தோறும் முடிக்கும் கட்டளையாகிய ஸ்ரீ சபாநாயகரின் உச்சிகால பூஜையை முடித்துவிட்டு, சிவிகைமீதாரோகணித்து வெண்கொற்றக்குடை நிழற்றவும் திருச்சின்ன மூதவும் வெண்சாமரை வீசவும் பகற் றீவட்டி பிடித்துவரவும் உலாவருகையில், எதிர்ப்பட்டெழுந்தருளிவரும் சந்தானகுரவரு ளொருவரும் அவதூதாச்சிரமியுமாகிய மறைஞான சம்பந்த சிவாசாரியர் இவர்வருகின்ற ஆடம்பரத்தைக் கண்ணுற்று, ஓய் பகற்குருடரே!, வாருமென்றழைத்தனர். அதுகேட்ட உமாபதி சிவம் திடுக்கிட்டுத் திடீரென்று சிவிகையினின்றுங் கீழிறங்கித் தண்டாகாரமாகப்பணிந்தெழுந்து அவரைப்பின்றொடர்ந்துசெல்ல, அப்போது சிலதூரஞ்சென்ற மறைஞான சம்பந்தர்க்குத் தீபனமெழ, அக்கால் தாம் சென்றிருந்தவிடம் செங்குந்தர் வீதியா யிருக்கக்கண்டு பெருங்களிகூர்ந்து உமாபதி சிவத்தை நோக்கி, சிவகுமாரானுஜர்களாகிய செங்குந்தர்வீதி இதுவாகையால் இவ்வீதியில் நம்பசியைத் தீர்த்துக்கொள்ளுவோமாயின் சிவப்பிரசாதமாகுமென்றுகூறி, அங்கு நூற்பாவை விரித்துக்கொண்டிருந்த செங்குந்தர்களிடஞ்சென்று தமது பசிதணிக்க ஆகாரங் கேட்டனர். அதுகேட்ட செங்குந்தர்கள் துணுக்குற்று, சுவாமிகாள்! தேவரீர் அடியெங்

கள் குடிசைக் கெழுந்தருளின் அறுசுவையோடு கூடிய அமுதுடைக்க ஆவலுடையேம். இங்கொன்று மில்லையே: என்று அநுதாபப்படுகையில் மறைஞானசம்பந்தர் அங்கு நூல்தோய்ப்பதற்காகக் கொண்டுவந்து வைத்திருந்த கூழினைப்பார்த்து இதை வார்க்கப்படாதா என்றுவினவ, அவர்கள்-ஐயோ! அது நூல்தோய்ப்பதற்குக் கொணர்ந்த உப்பிலாக் கூழென்றோத, அதற்கவர் நீங்கள் கரத்தாற்பரிசித்தயாவும் தேவாமுதத்தினுஞ் சிறந்த சிவப்பிரசாதமாகுமாதலால் இன்னும் தடைகூறாது கரத்தில் வாருமென்று கட்டளையிட, அக்கட்டளையை மறுக்கத் துணிவின்றி அவ்வாறே வார்த்தனர். அதையவருண்கையில் முழங்கையிரண்டினும் வழிந்தகூழை அருகிலிருந்த உமாபதிசிவம் மாறிமாறி உண்டது. அத்தருணத்தி லவ்வழியே எழுந்தருளிய ஏனைய தீக்ஷதர்களிற் சிலர் கண்ணுற்று அருவருப்புடன் சென்றார்கள். அப்பால்தமதாசிரியரை அரிதிற்பிரிந் தில்லடைந்த உமாபதி சிவாசாரியர் தமது வழக்கப்படி மறுதினம் உச்சிகால பூசைக்குச் சபைக்கெழுந்தருள, முன்ன மறைஞானசம்பந்தரின் முழங்கையால் வடிந்த கூழைக்குடிக்கையிற் கண்ட தீக்ஷதர்கள் பூஜைசெய்ய வேண்டாமென்று தடுத்துவிட்டார்கள். உடனேயவர் சிதம்பரத்திற்கடுத்த கொற்றவன்குடியென்னும் ஊரில் வசித்து தமது ஆன்மார்த்தமாயுள்ள சபாநாயகரைத் தினமுந்தவறாது பூசித்துக்கொண்டிருக்கையில் ஆனித்திருமஞ்சன மகோற்சவம் நேரிட, அதின் துவஜாரோகணோற்சவம் அச்சோழராஜனுடைய தாகையால் அஃதுசற்று மேறாதிருக்கக்கண்ட அவ்வரசன் வருந்தி, அடியேன் யாதோர் தவறுமின்றி அரசுசெலுத்தி வருகையில் இவ்விதமாகத் துவசாரோகணம் தடைப்படவேண்டிய காரணமென்னையோ; எம்பெருமானே! அதையறிவிக்க வேண்டுமெனத் துதித்துக்கொண்டிருந்தான். அக்கால் நடராஜப் பெருமான் திருவுளமிரங்கி, ஓசோழனே! நமது தீக்ஷதர்கள் உமாபதியிடத்தில் அசுத்தமெண்ணித் துரத்திவிட்டதை நீகவனிக்காமையால் இவ்விதயிடையூறு நேர்ந்தது. இப்போதே கொற்றவன்குடிக்குச் சென்று அவனையும் அவனாசிரியனுக்குக்கூழ்வார்த்த செங்குந்தனையும் அழைத்துவந்து ஏற்றுவித்தால் ஏறுமென்று அசரீரிவாக்கருளினர். அதுகேட்ட திரியம்பகச் சோழன் ஆனந்த பரவசனாய்த் தில்லைவாழந்தணர்களுடன் சென்று உமாபதி சிவாசாரியரையும் செங்குந்தரையும் அழைத்துவந்துகொடியேற்றுவித்து, கொடிக்கவியென ஓர்பிரபந்தமும் அவராற்பாடப்பெற்றனன். அன்றுமுதலின்றுவரையில் அச்செங்குந்தர்களே கொடியேற்றிவருகின்றார்களென்பது சரிதமாகலின், அச்சரிதையைச்சுருக்கி இச்செய்யுளிலமைத்திருப்பதையுய்த்துணர்க. சிவபிரான் ஒப்பற்றவராயிருந்து பஞ்சகிருத்தியங்களியற்றலால் உலகு விளங்குகின்றதென்பார், "ஒப்புயர்விலதொன்றதன்றொழிலைந்தா லுலகுள." என்றும், இவ்வாறறிதலே மெய்யுணர்வாதலின், "சிவஞானம்." என்றும் கூறினர். இதனை, "உலகமேயுருவமாகயோனிகளுறுப்பதாக-விலகுபேரிச்சாஞானக் கிரியையுட்கரணமாக-வலகிலாவுயிர்கட்கெல்லா மிருபயனுக்கியைந்து -நலமிகுதொழில்களோடு நாடகநடிப்பனாதன்."

என்னும் சிவஞானசித்தித் திருவிருத்தத்தானுந்தெளிக. இவ்வாறு உமாபதி சிவாசாரியர் தமதாசிரியரோடு செங்குந்தரால்வார்த்த கூழுண்டு அவர்களால் கொடியேற்றுவித்துக் கொடிக்கவிபாடி யருளினரென்பதை, "தம்புகழோங் கநாளேயப்பாகுனுமிறைதன்கூபாத் - தும்பரமுதினெழுகுமலைதயுனுமாபதி யா -லம்பலவன்றுசமேற்றுமாதிக்கயொடார்கொடிப்பா - செம்பியனேத்திட ப்பெற்றோர்செங்குந்தசிலாக்கியரே.' என்னும் செங்குந்த சிலாக்கியர்மாலைத் திருவிருத்தத்தானும், மறைஞானசம்பந்த சிவாசாரியர் செங்குந்தர்குலம் சிவகுமாரானுஜர்குலமானதால் மற்றெல்லாவற்றினும் சிறந்தகுல மெனவும், அவர்கள்கரத்தாற்பரிசித்த கூழ் தேவாமுதத்தினுஞ்சிறந்த சிவப்பிரசாதமாகு மெனவும் கூறினரென்பதை, "உலத்தினிற்புட்பராகமொளியினிற்கதிராமை ந்து - புலத்தினிற்கருங்கண்வாவிப்பூவினிற்கமலஞ்சொல்லுங் - குலத்தினிற் செய்யகுந்தங்குன்றினின்மேருக்குன்றந் - தலத்தினின்மதுரைமேலாந்தர மெனுந்தகைமைத்தம்மா." எனவும், "கோக்களைமின்னனுரைத்தவத்தரைக் குலத்தில்வேத - மாக்களைச்சிசுவைக்கொன்றுன்செய்ந்நன்றிமறந்தானுசா- னுக்கமதழித்தான்பாவமனைத்துஞ்செங்குந்தர்வீதி - நேக்கிடப்பிச்சைவாங்கி த்தின்றிடத்தீருமன்றே." எனவும் வரும் மதுரைப்புராணத் திருவிருத்தங்க ளானுந்தெளிக. (௨௨)

## ஆக்கியோன்பெயர் முதலியவை.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அரிந்ததலையாசனத்திலிருந்தெழுந்தோராயிரத்தெண்டலைகளங்கம்
பொருந்தவுயிரீந்தவனலருளீட்டியெழுபதெனும்புனிதநூலி
லிருந்தபழுவூர்வீரநாராயணதிபர்தமிசையைமிக்கோர்
விரிந்தநறுங்காப்பியமாச்செய்யெனமற்றவனருளால்விளம்பப்புக்கி.

(இ - ள்.) உடலினின்றுநீங்க அரிந்தடுக்கிய சிரச்சிங்காதனத்தினின்று மெழுந்து ஒப்பற்ற ஆயிரத்தெட்டுச்சிரங்களும் அவ்வவ்வுடலிற் சேரும்படி அவைகட் குயிரளித்தவராகிய கவிச்சக்ரவர்த்தியாரால் திருவாய்மலர்ந்தரு ளிய ஈட்டியெழுபதென்னும் அற்புதப்பிரபந்தத்திற்கூறியிருந்த திருப்பழு வூர் வீரநாராயணதியர் கீர்த்தியை, பெரியோர்கள் பலரும் விரிவான சிறப் பமைந்த காவியமாகச்செய்வாயென்று கட்டளையிடுதலும் அக்கவிச்சக்ரவர் தியார் திருவருளாலே கூறப்புகுந்து. எ - று.

இச்செய்யுளில் இக்காவியத்திற்கு முதனூலும், அதை யாக்கியோன்பெ யரும், இக்காவியத்தலைவர்களின் பெயரும், இந்நூலாசிரியர் இதைககூறிய தற்குக்காரணமுங்கூறினர். எங்ஙனமெனின்? "ஈட்டியெழுபதெனும் புனித நூலிலிருந்த." என்றதனன் முதனூலும், "ஆயிரத்தெண்டலைகளங்கம் பொருந்தவுயிரீந்தவன்." என்றதனல் அந்நூலாக்கியோன்பெயரும், "பழுவூர்

வீரநாராயணதியர்தமிலைச.'' என்றதனால் இக்காவியத்தலைவர் பெயரும், ''மிக்கோர் விரிக்கநறுங்காப்பியமாச்செய்யென.'' என்றதனால் இந்நூல்செய்தற்குக் காரணமும் விளக்கினமை காண்க. இதுவுமேல்வருங்கவியுங்குளகம்.

## இதுவுமது.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

காசிபவடிகள்கோத்ரன்கந்தவேள்புராணஞ்சொற்றோன்
மாசிலாவபிடேகத்தன்மழுவேந்துஞ்சபதநாவன்
றேசுயர்சேய்ஞலூரிற்றிகழுஞானப்ரகாசன்
வீசெழிற்பழுவைவீரர்விசயநூல்விளம்பினானே.

(இ - ள்.) காசிபமுனிவர் கோத்திரத்தில் அவதரித்தவரும், குமாரக்கடவுளின் புராணமாகிய கந்தபுராணத்தைப்பாடியருளினவரும், குற்றமற்ற அபிஷேகஸ்தரும், ஓர்சபதத்திற்காக நாவினால் மழுவெடுத்தவரும், விளக்கம்மிக்க திருச்சேய்ஞலூர் என்னும் க்ஷேத்திரத்தில் வாழ்ந்திருந்தவருமாகிய ஞானப்பிரகாசதேசிகரென்பவர், அழகின் மிகுந்தவர்களாய்த் திருப்பழுவூரில் வாழும் சுத்தவீரர்களின் விஜயம் என்னும் இந்நூலைத் திருவாய்மலர்ந்தனர். எ - று.

ஏ-அசை. இந்நூலாசிரியர் சிவபரம்பரைச் சைவருக்கு வேறான பிரமபரம்பரைச்சைவரெனக் குறிப்பிப்பான், ''காசிபவடிகள்கோத்ரன.'' என்றும், கச்சியப்ப சிவாசாரியர் திருவாய்மலர்ந்தருளிய கந்தபுராணம்பன்னீராயிரம் பாக்களமைந்த பாரகாவியமாயிருப்பதால், அதைச் சுருக்கி அத்தொகையிற் பாதியாகிய ஆறாயிரம் பாக்களில் ஓர்கந்தபுராணம் இவர்பாடியருளினமையின், ''கந்தவேள்புராணஞ்சொற்றோன்.'' என்றும், அவாந்தரசைவரான ருத்திரர்க்குச் சமயாதி தீக்ஷைகள் புரியும் ஆசிரியரென்பார், ''மாசிலாவபிடேகத்தன்,'' என்றும், வேளாளருக்கும் செங்குந்தருக்கும் முதலியார் என்னும் பட்டம் வழங்கிவருவதையுணர்ந்த ஓரரசன் இப்பட்டம் வாஸ்தவத்தில் எவர்க்குரியதோ அதையறியவேண்டுமென்னும் அவாவுடையவனாய்த் தனது சபைக்கண் இதுபற்றி யழைப்பிக்க வந்திருந்த ஞானப்பிரகாசதேசிகரென்னும் இவரைக் கேட்டபோது இவர்வேளாளராயிருந்தும் இப்பட்டம் செங்குந்தர்க்கே யுரியதெனக்கூற, அதுகேட்ட வேந்தன் நம்பாமலிருந்தனர் ஆனால் இவர் சொல்லில் அவநம்பிக்கைகொண்டு சந்தேகிக்க, அப்போ திவர் அக்கினியிற்காய்ந்த மழுவைத் தமது நாவினால் நக்கி (முதலியார் என்னும் பட்டம் செங்குந்தர்க்கேயுரியது.) எனச் சபதஞ்செய்தா ரகலினானும், அன்றுமுத லிவர்க்கு நாவினான் மழுவெடுத்த ஞானப்பிரகாச வள்ளலாரென்னும் பெயர்வழங்கி வரலானும், ''மழுவேந்துஞ்சபதநாவன்.'' என்றும், சூரசங்காரார்த்தம் எழுந்தருளிய ஸ்ரீசண்முகக்கடவுள் மண்ணியாற்றங்கரையை யடையுமளவில் அத்தமான காலமானமையின், அங்கு தேவதச்சனைக் கொண்டு நகரம் சிருட்டித்துச் சிவாலயம் கண்டு சிவபெருமானைப் பூசித்தா

ராகலின், அத்தலத்திற்குக் காரணப்பெயராய்ச் சேய்நலூரென்று வழங்கிப் பின் சேய்ஞலூரென மருவிய தென்பதை விளக்குவான், "தேசுயர்சேய்ஞ லூர்." என்றும், இந்நூற்கு வீரநாராயண விஜயம் எனப்பெயராகலானும், அவ்வீரநாராயணர்கள் திருப்பழூவூரில் அவதரித்தவர்களாகலானும், "பழு வைவீரர் விஜயநூல்," என்றும் கூறினர். குமாரக்கடவுள் பூசித்தமையின் அத்தலத்திற்கப்பெயர் வந்ததென்பதை "வீரவேளிதுவிளம்புதலோடு-மாரும் வானவர்களம்மொழிகேளா-வேரெலாமுடையவிந்நகர்சேய்ஞ - லூரதென்று பெயரோதினரன்றே." என்னும் கந்தபுராணத் திருவிருத்தத்தானுந் தெளிக. இச்செய்யுளில் ஆக்கியோன்பெயரும் நூற்பெயரும்விளக்கினமை காண்க.

## இந்நூற்பயன்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பாட்டும்பயனுமருளிரதம்பழுக்குங்கற்பதருக்கூத்தன்
சூட்டும்வீரவாகுவெனச்சொன்ஞனதனுலவர்சரிதங்
கேட்டுக்கருதுபவர்க்கெல்லாங்கீர்த்திவாய்க்குமதுபுனித
நாட்டுமதுமெய்த்துணிவுதருஞானமதுதந்தருடருமே.

(இ - ள்) செய்யுளும் அதன் தாற்பரியமுமாகிய திருவருட்சாரம் பழுக்கும் கற்பகவிருட்சமொத்த கவிச்சக்கரவர்த்தியே முடிசூட்டத்தக்க வீரவாகுவென்று திருவாய்மலர்ந்தனராதலின், அத்தகைபோர் மான்மியத்தைச் சிரவணித்துத் தியானிப்போரனைவர்க்கும் பெருங்கீர்த்தியுண்டாகும். அது தூய்மையைவிளைக்கும். அது நிலைபேறுள நிச்சயத்தைப்பயக்கும். அது மெய்ஞ்ஞானத்தை யருளித் திருவருளைப்பாலிக்கும். எ-று. ஏ-அசை.

சகலகலாவல்லியின் திருவருட்பேறுற்றவர்க்கே திவ்வியவாக்குண்டாகிச் செய்யுளுக்கும் பொருளுக்குமமையுமாகலின்,"பாட்டும்பயனுமருளிரதம்பழுக்கும்." எனவும், பழுத்தல் கனிக்கேயுரித்தாகலானும், அதுபரித்தற்கோர் விருட்சம்வேண்டுமாகலானும், "கற்பதரு" எனவும் கூறினர். எனவே கவிச்சக்கரவர்த்தியே தருவாகவும், அவர்செய்யுள்களை கனியாகவும், அச்செய்யுள்களின் தாற்பரியங்களே அக்கனியின்சாரமாகவும் உவமித்தமை யுய்த்துணர்க. அத்தகைய கவிச்சக்கரவர்த்தியே,"சூட்டும்வீரவாகுவெனச்சொன்னன்." என்றதை, "சூட்டும்வீரவாகுவெனச்சொல்லும்பழுவூர்வீரனமை - மூட்டுங்காலமூழிவெள்ளமூடுங்காலமாகாதே - வேட்டங்காலில்வீழாதோர் மேலுமுளரோவீதியுலா - யீட்டுங்காலங்குந்தங்கண்டெழுமேகழுகுப்பருந்துகளும்," என்னும் ஈட்டியெழுபதின் திருவிருத்தத்தானறிக. (௨௫)

## அவையடக்கம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கொற்றக்குந்தப்படைவீரங்கொண்டுபூதவுடனிணையா
துற்றச்சமரம்பொருதுபுகழுடலங்கரப்போர்தஞ்சரிதஞ்

சொற்றப்பதமென்சொல்லென்னச்சொல்லார்நல்லோர்சமநிலையர்
குற்றங்காணுர்குணங்குற்றங்குறியாவறிவிற்கென்ணுமே.

(இ - ள்.) வெற்றியமைந்த ஈட்டி என்னும் ஆயுதத்தை வீராவேசத்துடன் கரத்திற்றுங்கி, பூதசார சரீரத்தை ஓர் பொருளாகக் கருதாதுசென்று, தாங்கள் சென்ற அப்போரை எதிர்த்துவென்று புகழ்ச்சரீரத்தைப் பாதுகாப்போர்களாகிய செங்குந்த வீரர்களின் சரித்திரத்தைக்கூறிய இவன்சொற்கள் என்னசொற்களென்று நல்லோர்கள் கூறமாட்டார்கள். என்போன்றவர்கள் இதிற் குற்றங்காணமாட்டார்கள். குணமிது குற்றமிது என்னும் பகுப்பறிவற்றவர் புத்திக்கு எக்குற்றம் விளங்கும். எ - று.

மானிடவடிவெடுத்தோர்க்குப் பூதவுடம்பென்றும் புகழுடம்பென்றும் இரண்டுடலங்களுண்டு. அவற்றுள் பூதவுடம்பு அனைவருக்கும், புகழுடம்பு அரியதினும் அரியதாய்ச் சிற்சிலர்க்கும் லபிக்கும். இவ்விரண்டினும் பூதவுடம்பு அழிவுற்றது, புகழுடம்பு அழிவற்றது. இப்பூதவுடம்புடனே பலகற்பங்களிருப்பினும்பயனில்லை. புகழுடம்படைந்து சிலபகலிருப்பினும் எக்காலத்தும் அப்புகழ் அழியாது. ஆகலின் இச்செங்குந்த வீரர்கள் பூதவுடம்பைப் பொருளாகக்கருதாது புகழுடம்பையே வளர்த்தனரென்பார், "பூதவுடனினையாதுபுகழுடலங்காப்போர்." என்றும், கற்றுணர்ந்த நல்லோர்கள் தமக்குக் குற்றம் நேராவண்ணம் கவனித்து நடப்போராகலின் பிறர் குற்றத்தை நாடமாட்டார்களென்பார், "சொற்றப்பதமென்சொல்லென்னச்சொல்லார்நல்லோர்." என்றும், என்போன்றவர்களுக்கெனக்குள்ளவறிவவ்வளவேயுண்மையின் எனது குற்றத்தைக் காணமாட்டார்களென்பார், "சமநிலையர் குற்றங்காணுர்." என்றும், என்னினுங் கல்லாதவர்க்குக் குற்றமிதுகுணமிது என்று பகுக்கும் அறிவின்மையின் அவர்களுக்குங்குற்றந்தோன்ருதென்பார், "குணங்குற்றங்குறியாவறிவிற்கென்ணும்." என்றுங்கூறினர். பூதவுடம்பு புகழுடம்பு என்னும் இருவகையுடம்புண்டென்பதை, "கலைமகள்வாழ்க்கைமுகத்ததெனினு-மலரவன்வண்டமிழோர்க்கொவ்வான்-மலரவன்செய்-வெற்றுடம்புமாய்வனபோன்மாயாபுகழ்கொண்டு-மற்றிவர்செய்யுமுடம்பு." என்னும் குமரகுருபரசுவாமிகள் திருவாக்கானும், என்னினுமிக்கோர் என்னையொத்தோர் என்னினுமிழிந்தோர் என்னும் முத்திறத்தவருங் குற்றங்காணுரென்பதை, "நல்லார்பிறர்குற்றநாடாநலந்தெரிந்து - கல்லார்பிறர்குற்றங் காண்பரோ - வல்லாத - வென்போல்வாரென்னையிகழ்வாரோவென்கவிக்குப்-பின்பாரோகாண்பார்பிழை." என்னும் ஔவைப்பிராட்டியார் அமுதவாக்கானுமறிக. அன்றியும், இந்நூலியற்றியோர்-திருவருட்டன்மையினாய் நாவினன் மழுவெடுத்த ஞானப்பிரகாசசுவாமிகளாகலானும், இதைப் பசுபோதத்தாற்கூருது திருவருள்முயற்சியாற்கூறுதலின் அதையுணர்ந்த பெரியோர்கள், "சொற்றப்பதமென்சொல்லென்னச்சொல்லார்." என்றனரெனப்

பொருள்கூறினும் பொருந்தும். அவையடக்கம் என்பது அவைக்கடங்குத லென்றும் அவையையடக்குத லென்றும் இருதிறப்படுமாகலின், இச்செய்யுளால் அவையை யடக்கினரென்றறிக. சொற்றப்பதமெனற்பாலது செய்யுளிசைநோக்கி இரட்டித்தது. (உ௬)

## வாழ்த்து.

தாழிசைப்பா.

உலகுதொழநடமாடியுடனரசாளுங்குரிசி
லலகில்பெரும்புகழ்பரவுமபயனகளங்கவள்ளன்
மலைமுதுகிற்புலிபொறித்தமனதீரன்வளவேசன்
பலகலையுந்தெரிதருபராந்தகச்சோழன்வாழி.

(இ - ள்.) உலகத்திலுள்ள ஆன்மகோடிகளனைத்தும்பணியும்படி ஆனந்த நடனஞ்செய்யும் சிவபிரானுடனே அரசாட்சிபுரியும் மன்னவனும், அளவிறந்த பெருங்கீர்த்தியடைந்த நிர்ப்பயமுடையவனும், களங்கரகிதனும், வள்ளற்றன்மையுடையவனும், நேரிமலையிற் புலிக்கொடியை நாட்டிய மனோதிடமுள்ளவனும், சோழநாட்டதிபனுமாகிய பலகலைகளையுமுணர்ந்துள்ள பராந்தகச்சோழமகாராஜன் வாழக்கடவன். எ - று.

பஞ்சசபைகளி லொன்றாகிய இரசிதசபையில் நடமிடுகின்ற சோமசுந்தரக் கடவுளே சவுந்தரபாண்டியனாகித் திருவாலவாயில் அரசுபுரிந்தாராகலானும், அவர் பாண்டிநாட்டிற் கதிபராயிருந்ததுபோல இவ்வரசனும் சோழநாட்டிற் கதிபனாயிருந்தமையானும், சோழன் பாண்டியன் சேரன் என்னும் மூவேந்தருக்குள்ளே சேரனீங்க ஏனை இருநாட்டரசர்களும் சம்பந்தத்துவமடைந்திருந்தமையானும், "உலகுதொழநடமாடியுடனரசாளுங்குரிசில்." எனவும், அனேகஞ்சிவாலயங்களைக் கட்டிமுடித்து உலகெங்கும் அழியாப் புகழ்படைத்தமரபினனாகலின், "அலகில்பெரும்புகழ்பரவுமபயன்." எனவும், வளப்பமுடையது சோழநாடாகலின், "வள்ளல்." எனவும், நேரிமலையிற் புலிக்கொடிநாட்டினனென்றுணர்த்துவான், மலைமுதுகிற்புலிபொறித்தமனதீரன்." எனவுங்கூறினர். மூவேந்தராண்ட மூன்நாட்டினும் சோழநாடே வளப்பமுடையதென்பதை, "வேழமுடைத்துமலைநாடுமேதக்க- சோழவளநாடுசோறுடைத்து - பூழியர்கோன்-றென்னாடுமுத்துடைத்துதெண்ணீர்வயற்றொண்டை-நன்னாடுசான்றோருடைத்து." என்னும் ஔவைப்பிராட்டியார் அமுதவாக்கானுமறிக. இச்சோழராஜன் காலத்திலே இச்சரிதநடந்ததென்க.

## இதுவுமது.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஆருயிரின்வருக்கங்களனைத்தும்வாழியருமறையாகமமார்க்கமிபாவும்வாழி, பாருலகின்மழைமுகில்கள்வாழியெங்கும்பரவுமறை

போராதியவர்கள்வாழி, தாருவைநேர்கரத்தர்சிவபூசைநேசர்சந்ததமுமொழுக்கங்கைக்கொள்வோராகு, மேருவில்லிதனயன்றன்றுணைவரொன்பான்வீரர்மரபினரென்றும்விளங்கவாழி.

(இ - ள்.) ஆன்மவர்க்கங்களெல்லாம் வாழக்கடவன. அருமையான வேதாகமநெறிகளனைத்தும் வாழக்கடவன. நிலவுலகின்கண் வருஷிக்கும் மேகங்கள் வாழக்கடவன. எவ்வுலகினும் புகழத்தக்க வேதியர்கள் முதலிய சதுர்வருணத்தினரும் வாழக்கடவர். கற்பகத்தருவைப்போன்று உதாரமுள்ள கையினரும், சிவபூசை விருப்பினரும், எக்காலத்தினும் ஒழுக்கம் படைத்தவர்களுமாகிய மேருவரையை வில்லாகத்தாங்கிய சிவபெருமான் குமாரருக்குத் துணைவர்களென்னும் நவவீரர்களின் சந்ததியாரான செங்குந்த மரபினர் எக்காலமும் வாழக்கடவர்கள். எ - று.

ஆன்மவர்க்கங்களீடேறுவழி வேதாகமங்களும்; அம்மார்க்கங்களடை பெறுவிடின் மேகங்கள் மழைவருஷித்தலும், அம்மழைவறக்குமேல் வருணாச்சிரமங்கள் நிகழ்தலுங் கூடாவாகலின் ஒன்றற்கொன்று காரண காரிய முறைமையாக வரிசைப்படக் கூறினமைகாண்க. புண்ணிய விசேடத்தால் சிவசிந்தனையும் அதனால் ஒழுக்கமு மடையவேண்டுமென்பதை யுணர்த்துவான், "தாருவைநேர்கரத்தர்சிவபூசைநேசர்சந்ததமுமொழுக்கங்கைக்கொள்வோர்." என்றும், இச்செங்குந்தமரபினர் உபசுப்பிரமணிய குலோற்பவரென்பான், "மேருவில்லிதனயன்றன்றுணைவரொன்பான்வீரர்மரபினர்." என்றும் கூறினர். (௨அ)

## செங்குந்தப்புலவர்கள் துதி.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கூடனகர்ச்சங்கத்தார்சிரமசைக்கக்குலவுதில்லையரன்பொற்காசளிக்கக்கந்தன், பாடல்பகரெனக்கேட்கக்கம்பருலாப்பாடப் பண்பமையுரிகண்டுரைக்கக்குகன்கோயிலமைக்கப்,பீடமையுந்தணிகைமான்மியங்காந்தக்காண்டம் பிறங்கியவாசிட்டவுரைபெருக்கிக்கூற, நீடருள்சேர்கவிவாணர்முதற்செங்குந்த நெறிமரபோர்திருவடிகணிணைந்துவாழ்வாம்.

(இ - ள்.) மதுரையென்னும் க்ஷேத்திரத்தில் வாழ்ந்திருந்த கடைச்சங்கத்தார்கள் சிரமசைக்கவும், விளக்கமுற்ற சிதம்பரத்தில் வீற்றிருந்தருளும் நடராஜமூர்த்தி பொற்காசு அளித்தருளவும், திருச்செந்தூர் முருகக்கடவுள் நம்மீது பாடல்பாடுவாயென்று வேண்டவும், ஏகாம்பரநாத ருலாப்பிரபந்தமியற்றவும், இலக்கணமமைந்த உரிச்சொல்நிகண்டுரைக்கவும், குமாரக்கடவு

ளின் ஆலயம் புதுக்கவும், பெருமையமைந்த தணிகைச்சரிதத்தையும் மகாகாந்தத்தின் ஏழாவதுகாண்டமாகிய உபதேசகாண்டத்தையும் திருவாய்மலரவும், உலகெங்கும் பரவியிருக்கும் ஞானவாசிட்டமென்னும் நூலுக்கு விருத்தியுரையருளிச்செய்யவும், விசேடத்திருவருளைப்பெற்ற பாவலர்கள் முதலாக ஒழுக்கமமைந்த செங்குந்தமரபினர்களின் திருவடிகளைத் தியானித்து ஈடேறுவாம்.எ - று.

திருவாலவாயின்கணிருந்த சங்கத்தாரைச் சிரமசைக்கச்செய்தவர் பொய்யாமொழிப்புலவர். சிதம்பரேசர் பொற்காசளிக்கப்பெற்றவர் படிக்காசுப்புலவர். முருகக்கடவுளைபாடும்படி கேட்கப்பெற்றவர் பகழிக்கூத்தர். ஏகாம்பரநாதருலாப்பாடியவர்கள் இரட்டையர்கள். உரிச்சொல்நிகண்டுசெய்தவர் காங்கேயமுனிவர். திருப்போரூரில் முருகராலயமமைத்தவர் சிதம்பரசுவாமிகள். தணிகைப்புராணமருளிச்செய்தவர் கச்சியப்பமுனிவர். உபதேசகாண்டந்திருவாய்மலர்ந்தவர் கோனேரியப்பநாவலர். ஞானவாசிட்டத்திற்கு விருத்தியுரை யியற்றியவர் பிறைசை அருணசல சுவாமிகள். இவர்களனைவரும் செங்குந்த மரபினராகலின், "செங்குந்தநெறிமரபோர்" என்றனர். இவர்களிம்மரபினரென்பதை, "உரமசைத்தார்கலி சூழ்புவியாளு முசிதன் முன்னாள்-கரமசைத்தார்ப்பப் புனலமிழ்சங்கக் கவின்பலகை-வரமசைத்தும்பர் வயங்கவுமற்றதில் வாழ்புலவர் - சிரமசைந்தொன்றவும் வைத்தோர்செங்குந்தசிலாக்கியரே." எனவும், "புகழ்பூத்திடுந்தில்லை மேலோனையம்மையைப் போற்றியெங்கு - மிகழ்பூத்திடாதபொற் காசைப்பஞ்சாக்கரத் தின்படிமே-னிகழ்பூத்தல்பெற்றுப்புள் வேளூர்க்கலம்பகநீட்டியருத் - திகழ்பூத்துநின்ற செயலோர்செங்குந்தசிலாக்கியரே." எனவும், "புதைந்தோடமாயேந்திர மன்றுசெற்றபுனிதன்வினை - வதைந்தோடயார்க்கும்பிள்ளைத்தமிழோதென வாய்மலர்ந்தே-பதைந்தோடப்பாவலர்பாடும்வேப்பத்தவர்பாடுகுன்றிச்- சிதைந்தோடச்செய்ததிறலோர்செங்குந்தசிலாக்கியரே." எனவும், "அத்தைமசன் குருடம்மான்மகன்முடமாகிக்கீழ்மே - லொத்துறைந்தேகூறு பாடோடணிகொளுலப்பில்கவி -முத்தரிலோதியேகம்பருலாமுன்மொழிந்தெவருஞ்-சித்தமுவப்பத்திரிவோர்செங்குந்தசிலாக்கியரே." எனவும், "மடம்பெறுமாந்தர் மருவுரமண்டலமாண்புருட - னிடம்பெறவோங்குமுரிச்சொனிகண்டையினிதுரைத்துக்-குடம்பெறுமாமுனியொப்பத்தமிழ்வழக்குவலயத்திற் - றிடம்பெறவைத்ததிறலோர்செங்குந்தசிலாக்கியரே." எனவும், "அங்கயற்கண்ணியருள்வாங்கிச்சாதனமாகியநான் - கெங்குமுலவுறச்சாந்தலிங்கன்மொழிக்கின்னுரையும்- பங்கமில்கண்ணுடைவள்ளன்மொழிக்குரையும்பகர்ந்த-சிங்குவையுற்றதிறலோர்செங்குந்தசிலாக்கியரே."எனவும், "மேனாள்வழவூர்மறைநாதருட்பஞ்சம்வீட்டிப்பின்னோன்-மானுரைவேட்குமவர்பானுதித்துக்கைகம்மாமுகவ-னுறுதகாதையகிலத்தவர்தொழ வாய்ந்துரைத்த - தேனார்கிளவிப் புலவோர்செங்குந்த சிலாக்கியரே." எனவும், "பிறப்பிலியீன்ற பிரான்காதையையவன் பேரருளாற்—றுறப்பவருந்துதிப் பக்கச்சியப்பன்முன் சொற்

றவறு-திறப்பருதிக்கப்புறந்தோர்பகுதியைத்தீஞ்சுவைகள்-சிறப்பவுரைத்ததி றலோர்செங்குந்தசிலாக்கியரே." எனவும், "எட்டுமிரண்டுமெண்ணீராறுதத் துவத்தேதயங்கி- யொட்டியுமொட்டாவொருபொருளைச்சுட்டியோர்வையெ லாம்-வெட்டிவிளக்குநல்வேதாந்தசாகைவிரித்திடும்வா-சிட்டவுரைமுனைச்செ ய்தோர்செங்குந்தசிலாக்கியரே." எனவும் வரும் செங்குந்த சிலாக்கியர்மாலை த்திருவிருத்தத்தானுமுணர்க. பொய்யாமொழிப்புலவர் பாண்டியனவைக்கட் சென்றகாலம் கடைச்சங்கத்தார் மறைந்து பலகையுடன் பொற்றாமரைத்த டாகத்தில் அமிழ்ந்திருந்தகாலமாகலின், அப்பாண்டியன் அவர்பெயரைக் கேட்டவளவில் ஆச்சரியமுடையவனாய் இப்பெயருமக்குரித்தான துண்மை யாயின் பொற்றாமரையில் அமிழ்ந்துள்ள பலகை மிதந்து அதிற்கடைச்சங்க த்தார் நாற்பத்தொன்பதின்மரும் வீற்றிருந்து சிரமசைக்கும்படி பாடுவீரென க்கேட்க, அப்படியே பாட அப்பலகைமிதந்து அதிற்சங்கத்தார் நாற்பத்தொ ன்பதின்மரும் சிரமசைத்தனர். இதனை, "பூவேந்தர்முன்போற்புரப்பாரிலை யெனினும் - பாவேந்தருண்டென்னும்பான்மையாற் - கோவேந்தன்-மாறன றியமதுராபுரித்தமிழோர்-வீறணையேசற்றேமிதந்." எனவும், "உங்களிலேயா னொருவனொவ்வுவனோவொவ்வேனோ - திங்கட்குலனறியச்செப்புங்கள்-சங் கத்தீர் - பாடுகின்ற முத்தமிழ்க்கென் பைந்தமிழுமொக்குமோ - வேடெழு தாரேமெழுவீரே." எனவும்வரும் வெண்பாக்களானும், படிக்காசுபெற்றகா ரணத்தா லவர்க்கப்பெயர் வழங்கியதென்பதை, "மட்டாருந்தென்களந்தை ப்படிக்காசனுரைத்ததமிழ்வரைந்தவேட்டைப் - பட்டாலேசூழ்ந்திடினுமூவு லகும்பரிமளிக்கும்பரிந்தவ்வேட்டைத் - தொட்டாலுங்கைமணக்குஞ்சொன் னாலும்வாய்மணக்குந்துய்யசேற்றி- னட்டாலுந்தமிழ்ப்பயிராய்விளைந்திடுமே பாட்டினதுநளினந்தானே." எனப் பிற்காலத்தார் கூறிய விருத்தத்தானும், திருச்செந்தூர் முருகக்கடவுளே பகழிக்கூத்தரைப் பிள்ளைத்தமிழ்பாடும்படி கேட்டனரென்பதை, "பூமாதுபோற்றும்புகழ்பகழிக்கூத்தாநின் - பாமாலை சாத்தநாம்பற்றேமா -வேமங்-கொடுக்கவறியேமாவெங்கூற்றுவன்வந்தாலுந்- தடுக்கவறியேமாநாந்தாம்." என்னுமுருகக்கடவுளருளிய வெண்பாவானும், இரட்டையர்கள் ஏகாம்பரநாத ருலாப்பாடின ரென்பதை, "மேதைப்புல வரெண்ணேகாம்பரசம்புமெச்சநெடுங் - காதைப்புலவரிரட்டையர்பாடுங்கல ம்பகமு - மோதற்கரியநல் லேகம்பவாண ருலாவுமந்த - மாதைப்பனுவலும் பாராட்டிடுந்தொண்டை மண்டலமே." என்னுந்தொண்டைமண்டலசத கத் திருவிருத்தத்தானும் அறிக. ஏனையவர்க்கும் இவ்வாறே வருவனவற்றை அவ்வந்நூல்கடோறும் காண்க. இத்துதி இந்நூலுரையாசிரியர் கூறியது.

சிறப்புப்பாயிரம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் காப்புட்பட - ௨௬.

---

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

முதலாவது.

# நூல்வரலாற்றுச்சருக்கம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மதிநிலவொளிகான்முத்தமணிதருந்தவளச்சங்க
நிதியுதிதரலுங்கஞ்சநிதியுதிதரலுமாகிப்
பொதிமதுப்பிலிற்றுவண்டார்பூம்பொழில்வளர்க்கும்பொன்
நதியுதித்தளவளாவுநலமுறுஞ்சோழநாடு.

(இ - ள்.) சோழநாடானது, சந்திரகிரணம்போலும் பிரகாசம்வீசும் முத்தங்களை ஈனுகின்ற வெண்ணிறமமைந்த சங்குக்கூட்டங்கள் பிறப்பதும் தாமரைக்கூட்டங்கள் பிறப்பது முடைத்தாகி, மலர்களில் நிறைந்துள்ள தேனைத் துளிக்கும் வண்டுகணிறைந்த அழகியசோலைகள்வளரச்செய்யும் காவிரிநதிதோன்றிக் கலந்துள்ள நல்லவளப்பத்தையுடையது எ - று.

காவிரிநதிப்பெருக்கால் எங்கெங்கு நீர்நிறைந்து அவ்வவ்விடங்களினும் சங்குகளும் தாமரைகளும் பிறந்து நிறைவுற்றுச் சோலைகளும் தழைத்திருக்கும் வளமுடையது சோழநாடென்றபடி. முத்துக்கள் பிறக்குந்தானங்களிற் சங்கும் தாமரையும் சேர்ந்திருத்தலின், "முத்தமணிதருந்தவளச்சங்கநிதியுதிதரலுங்கஞ்சநிதியுதிதரலுமாகி," என்றனர். சங்கினும் தாமரையினும் முத்துப்பிறக்குமென்பதை, "தந்திவராகமருப்பிப்பிபூகந்தனிக்கதலி-நந்துசலஞ்சலமீன்றலைகொக்குநளினமின்னார் - கந்தரஞ்செந்நெல்கழைகன்னலாவின்பல்கட்செவிகா-ரிந்துவுடும்புகராமுத்தமீனுமிருபதுமே." என்னுஞ்செய்யுளானுணர்க. நிதி என்பதற்கு நிறைவு என்னும்பொருளிருத்தலின், குபேரனிடத்துள்ள சங்கநிதி பதுமநிதி என்னும் இவ்விருநிதிகளும் ஈண்டுள்ளதாக அலங்கரித்துக் கூறினமையறிக. (க)

பம்பியநீரமாரும்படிகலாரடியுலாக்கண்
டம்புயமலர்மேற்செங்காலனநடைபயிலச்சூடித்
தும்பிநின்றார்ப்பநாறுஞ்சுகமணத்தடங்கண்முற்றுஞ்
செம்பியர்நெறியினுளத்திருத்தமிக்குளவிந்நாடு.

(இ - ள்.) சோழராஜர்கள்மனுநெறிவழுவாதரசாளச்செல்வமுயர்ந்திருக்கும் இச்சோழநாடு, பரவிய நீர்நிறைந்த தடாகத்தின்படிகளிலே மகளிர்கள் அடிவைத்துலாவலைநோக்கி, தாமரைமலர்மீதுள்ள செந்நிறக்கால்களைப்படைத்த அன்னப்பறவைகள் அம்மகளிர்களுடைய நடையைக் கற்றுக்கொள்வ

தற்காகச் சூழ்ந்திருக்கும். அதைக்கண்டு அவர்கள் கூந்தலிலுள்ள வண்டுகளொலிக்க அம்மகளிர்கள் நீராடலால், அத்தடாகங்களனைத்தும் நறுமணஞ்சூழ்ந்திருக்கும். எ-று.

தடாகத்தில் நீராடவந்த மகளிர்கள் அதன்படிகளிலுலாவலைத் தாமரையிலுள்ள அன்னங்கள் நோக்குகை, அவர்கணடையை அவ்வன்னங்கள்கற்றுக்கொள்ளமுயல்வதற்கும், அக்கால் அவர்கள் அளகங்களிலுள்ளவண்டுக்ளொலித்தலை, அன்னங்கள் அவ்வாறு கற்றுக்கொள்ளுகின்றனவென்று தங்களுக்குள்ளே வார்த்தையாடலுக்கும் உவமித்து, அவர்கள் நீராடலாற் றடாகங்களெங்கும் நறுமணங்கமழுகின்றன என்றுரைத்தமையுணர்க. (௨)

கருக்குலங்கழலப்பாடுமுறுவரிற்காமர்வண்டர்
மருக்குலங்கமழப்பாடுமலர்வனத்தழகுகாட்டத்
தருக்குலங்ககனமுட்டுந்தண்டலைகுலவும்பானுத்
திருக்குலத்தவர்கணீதிசெலுந்தகையுளவிந்நாடு.

(இ - ள்.) சூரியகுலத்திராஜர்களால் அரசாளத்தக்க தன்மையடைந்த இச்சோழநாடு, பிறவித்தொகுதிகள் நீங்குமாறு பாடிய நால்வரைப்போன்று அழகமைந்த வண்டுகள் வாசனைத்தொகுதிகள் பரிமளிக்கப் பாடுகின்ற மலர்களுடைய மிகுதியினழகைக்காண்பிப்பதற்காக, விருட்சத்தொகுதிகள் ஆகாயமளவுமோங்குஞ் சோலைகளையுடைத்தாய் விளங்கும். எ - று.

சிவமணங் கமழப்பாடியோர் நால்வராகலின் அதுபோன்ற மலர்மணங்கமழ வண்டுகள் பாடுதலானும், இவ்வண்டுகளும் மலர்களின் மகரந்தத்திற்படிந்து பாடுதலால் மலர்மணமும் சமயாசாரியர்கள் நால்வரும் சிவனருளிற்படிந்துபாடுதலால் சிவமணமுங் கமழ்தலாலும், அவ்வாசிரியர்கள் தலங்கடோறும் சென்று பாடுதல்போலவே இவ்வண்டுகளுஞ் சோலைகடோறும் சென்று பாடுதலாலும் ஒற்றுமைப்படுத்தி யுவமித்தனரென்க. மலர்கள் கோட்டுப்பூ கொடிப்பூ நீர்ப்பூ நிலப்பூ என நால்வகைப்படுதலாலும், அந்நான்கிற் கோட்டுப்பூவே உன்னதமுடையதும் ஏனையவை அஃதின்மையுமாகலின் அக்கோட்டுப்பூக்களே ஏனையவற்றின் வளப்பத்தை அதிதூரத்திலுள்ளவர்க்கும் விளக்குகின்றன வென்பார், "மலர்வனத்தழகுகாட்டத்தருக்குலங்ககனமுட்டும்." என்றனர். (௩)

சங்குடனிப்பிமுத்தந்தருவரம்பிமைப்பச்செய்ய
பங்கயமிமைப்பநீலோற்பலமலர்ந்திமைப்பப்பைங்கூ
ழெங்கணுமிமைப்பப்பின்னேரேரினமிமைப்பப்பண்ணை
தங்கழும்விளைவுண்டாகுந்தண்ணரனிறைசோணாடு.

(இ - ள்.) குளிர்ந்த நீர்வளமிகுந்த இச்சோழநாடு, வயல்வரம்புகளிலே சங்கின் முத்துக்களும் சிப்பியின் முத்துக்களும் பிரகாசிக்கவும், செந்தாமரை

பிரகாசிக்கவும், குவளைமலர்கள் பிரகாசிக்கவும், நெற்பயிர்கள் எவ்விடத்தும் பிரகாசிக்கவும், சூத்திரர்கள் உழுகின்ற ஏர்க்கூட்டங்கள் பிரகாசிக்கவும், அவ்வவ்வயல்களிலே பொன்னும் விளையத்தக்கதா யுள்ளது. எ - று.

நீர்வளப்ப மிகுதியைக்கூறி அவ்வளப்பத்தால் எவற்றினுமேலாய பொன்னும் விளையுமென்றனர். தங்கமும் என உம்மைகொடுத்துக் கூறியதால், தங்கம்விளையும் நிலங்கள் வேறிருக்கினும் இந்நிலமும் அந்நிலங்கட்கொத்தசிறப்புடைத்தென்று குறிப்பித்தவாறு.

இத்திருநாட்டிலர்தவிரவிதன்குலத்துவேந்த
ரொத்தெழின்முடிதரித்தற்குத்தமதலங்களாகிப்
பத்திராசனங்கொண்டுள்ளபதிகளாக்கருவூராதிச்
சித்திரக்கோயின்மேயதிருநகரைந்தவற்றில்.

(இ - ள்.) சிறந்த இச்சோழநாட்டில் அச்சூரியகுலத்தரசர்கள் பட்டாபிஷேகத்திற்குரியவர்களாய் அழகியமகுடஞ்சூட்டிக்கொள்வதற்கேற்ற உயர்ந்தநகரங்களாகிச் சிங்காதனங்க ளமைந்துள்ள அரண்மனைகள் பொருந்திய, கருவூர் முதலாகிய பெரியநகரங்கள் ஐந்துண்டு. அவ்வைந்துள். எ - று.

பத்திராசனம்-சிங்காதனம். சித்திரக்கோயில்-அரண்மனை. சோழராஜர்கட்கு மகுடாபிஷேகம் புரியும் பஞ்சதலங்களாவன:—உறையூர் - தஞ்சை-குடந்தை-கருவூர் - திருவாரூர் என்பவைகளே. இதனானன்றே சோழராஜர்கட்குப் பஞ்சசிங்காசனாதிபதிகள் எனப் பெயர்கூறுவர். (ரு)

தேம்பொழிந்தலர்ந்துநாறச்சிறையளிகுடைந்துபாடும்
பூம்பொழிலுறைந்தைமூதூர்பொதுவறப்புரக்குநீரான்
வேம்பொளிரகலப்பாண்டிமீனவன்மருகனென்னார்
கூம்பொழிபாதுகையாற்றுதிகுலோத்துங்கவேந்தன்.

(இ - ள்.) தேனைச்சொரிந்து மலர்கள் விகசித்து மணம் வீசுமாறு சிறகுகளையுடைய வண்டுகள் கிண்டி ரீங்காரஞ்செய்கின்ற அழகிய சோலைகளமைந்த உறையூரென்னும் பெரியநகரத்தைத் தனிச்செங்கோல் செலுத்தியரசாளும் தன்மையினன் யாரெனில், வேப்பமாலைவிளங்கும் மார்பினையுடைய பாண்டிநாட்டையாளும் பாண்டியராஜனுக்குமருகனும்,பகைவர்கள் சதாகாலமும் கரங்களைச் சிரமேற்கூப்பித் துதிக்கின்றவனுமாகிய குலோத்துங்கச் சோழன். எ - று.

வண்டுகள் கிண்டுதலால் மலர்கள்விண்டு தேன்சொரிந்து மணம்வீசுஞ்சோலை என்பார், "தேம்பொழிந்தலர்ந்துநாறச்சிறையளிகுடைந்துபாடும்பூம்பொழில்." என்றும், ஏனைய அரசர்களிடத்துத தான் பகுதிவாங்கலேயன்றித் தானொருவர்க்கும் பகுதிகட்டுவா னல்லனென் றுணர்த்துவான், "பொதுவறப்

புரக்குரோன்." என்றும்,பூவேந்தருக்குள் சேரனுக்குப்பனைமாலையும், சோழனுக்கு ஆத்திமாலையும், பாண்டியனுக்கு வேப்பமாலையு முரித்தாகலின், "வெம்பொளிரகலப்பாண்டிமீனவன்." என்றும், அப்பாண்டியன் மகளைக் கொண்டிருத்தலின், "மருகன்" என்றும் கூறினர். (௬)

தாதைநாடொடங்கித்தம்பேர்சபையகத்திருந்துகல்வி
போதமார்குரவனுகிப்புன்கவிதலையெடாமன்
மேதகுதுவசநாட்டிமிளிர்கவியரசுசெய்யு
நீதியாலுயர்ந்தகூத்தனிகரிலற்புதங்கள்கண்டான்.

(இ-ள்.) அக்குலோத்துங்கச்சோழன், தனது பிதாவின் காலமுதலாகத் தங்கள் பெருமைமிக்க அரசவையில் வீற்றிருந்து, தனக்குக்கல்விபோதிக்கும் ஆசாரியராகி,அற்பக்கவிஞர்கள் ஓங்காவண்ணம் மேன்மையமைந்த வெற்றிக்கொடிநாட்டி, எங்கும் விளங்குகின்ற கவியரசாட்சிபுரியும் நீதியின்மேம்பட்ட அம்பலக்கூத்தரென்னும் கவிச்சக்கரவர்த்தியின் ஒப்பற்ற அற்புதங்களைக் கண்ணுற்றனன். எ - று.

இவ்வம்பலக்கூத்தர் குலோத்துங்கச்சோழனுக்கு வித்தியாகுருவாயிருந்தனரென்பதை, "ஆடுங்கடைமணிநாவசையாமலகிலமெங்கு - நீடுங்குடையைத்தரித்தபிரானிந்தநீணிலத்திற் - பாடும்புலவர்திறைதருங்கூத்தன்பதாம்புயத்தைச் - சூடுங்குலோத்துங்கச்சோழனென்றேயெனைச்சொல்லுவரே." என்னுங்குலோத்துங்கச்சோழன் திருவாக்கானுமுணர்க. இக்கவியின்முதலிரண்டடியும் அம்பலக்கூத்தர் அருளியதாகவும், அதுகேட்டசோழன்தனதாசிரியர் தன்னைப்புகழ்தற்குத்தொடங்கினுரெனவஞ்சிப் பின்னிரண்டடியும் தானேபாடித்துதித்ததாகவுங்கூறுவர். இக்கவிச்சக்கரவர்த்தியாரின் இருமுதுகுரவரும் இவருக்குச்சிறுகாலையில் தரித்தபெயர் அம்பலக்கூத்தரென்றும், அக்கால் இவருடன்விளையாடும்பாலியர்கள் கூத்தன்கூத்தன் எனவழங்கிவந்தாராகலின், அதுமுதலாக அம்பலம் என்பது மறைந்து கூத்தரென்றே நிலைபெற்றதென்றும், ஆயிரத்தெண்டலைகளாலாய சிரச்சிங்காதனத்தின்மீ தெழுந்தருளியிருந்து ஈட்டியெழுபதென்னும் அற்புதப்பிரபந்தத்தை அருளிச்செய்து, மீட்டும் அத்தலைகள் அவ்வுடல்களிற்பொருந்தப்பாடியதால் ஒட்டக்கூத்தரெனவழங்கியதென்றும் வருவதை அப்புலவர்பிரான் அருட்சரிதத்தாலறியலாம். (எ)

ஒருபகலிமையம்பூத்தவுமைசிலம்புதித்துவையம்
பெருகுசெங்குந்தராரும்பீடுயர்சிரங்கையேந்தி
மருவியேயொருங்குகூடிமன்னவைமாடம்புக்குக்
குருமணித்தவிசீதென்னக்கொட்டினரன்நந்தமாக.

(இ - ள்.) ஓர்தினத்திலே, இமையவரையிலவதரித்தருளிய பார்வதிதேவியார் பாதச்சிலம்பில் அவதரித்தவர்களாய், உலகத்தில் மேன்மையுற்றுள்ள

செங்குந்தர்களனைவரும் பெருமைமிக்க முடிகளைக் கரத்திற்றாங்கிக்கொண்டு, அவ்வத்தேயத்துள்ளார்களுங்கலந்து ஒன்றாகச்சேர்ந்து, அரசவையமைந்துள்ள அரண்மனையுட்புகுந்து, மாணிக்கச்சிங்காதனமிதுவென்று சொல்லத்தக்கதாய் அனேகந்தலைகளைக்கொட்டினார்கள். எ - று.

எண்சாணுடம்பிற் சிரசேபிரதானமாகலானும், அதினும் உத்தமாங்கமாகலானும், அதினும் வெற்றியைநாட்டவும் வல்லபத்தைக்காட்டவும் வீணேயுயிரிழக்காதுகுலச்சீர்விளங்கற்குக்கொய்தசிரங்களாகலானும், "பீடுயர்சிரம்." என்றும், அச்சிரங்கள்தோறும் உதிரந்தோய்ந்து செந்நிறமடைந்து பிரகாசித்தலால், அந்நிறமுடைத்தாய்ப்பிரகாசிக்கும் மாணிக்கமணியையுவமித்து, "குருமணித்தவிசு." என்றும், இவ்விபவம் நடந்தது உறையூரிலேனும், இச்செய்திகேள்வியுற்ற அவ்வத்தேயங்களிலுள்ள செங்குந்தரனைவரும் இதற்குடன்பட்டுத் தலைகளரிந்தேந்திக்கொண்டு வந்தார்களாகலின், "சிரங்கையேந்திமருவியேயொருங்குகூடி" என்றும், கூத்தர்கூறியது ஆயிரத்தெண்டலைகளேனும் அறுபட்டதலைகள் விசேடமாகலின், "அனந்தமாகக்கொட்டினர்." என்றும் கூறினர். (அ)

அணிந்தெழிலோங்குஞ்சென்னியணைமிசையிரத்தவாடை
துணிந்தனரிட்டாரத்திற்றோன்றிப்பல்லொளியானக்குக்
கணிந்தனவில்லாச்சென்னிகவித்தனபார்வைகொட்கத்
திணிந்தனவயங்கைகூறுஞ்செருக்கெனக்குறுவிச்சில்ல.

(இ - ள்.) அலங்கரித் தழகாக உயர்ந்திருக்கும் சிரச்சிங்காதனத்தின்மீது, மனோதிடத்துடனே உதிரப்பாவாடைவிரித்தார்கள். அச்சிங்காதனத்தில் அளவிடுதற்கில்லாதனவாகிய அனேகந்தலைகள் பல்லொளிகாட்டிச் சிரித்துவிளங்கிச் சத்தித்தன. சிலதலைகள் கண்கள்சுழலும்படி வெற்றித்தன்மையையோதுகின்ற தருக்கையொத்துச் சினக்குறிகாட்டி வலித்திருந்தன. எ-று.

சிரங்களை வரிசைப்படவடுக்கிச் சிங்காதனமாக்கினராகலின், "அணிந்தெழிலோங்குஞ்சென்னியணை." என்றார். கணித்தனவில்லா வெனற்பாலது எதுகைநோக்கிக் கணிந்தனவில்லா எனமெலிந்துநின்றது. (கூ)

மானவராகப்போந்தபயனதுவந்ததென்ன
வானனம்பானுநோக்கியலராவிந்தப்பூக்கண்
மானமிக்கிருந்தசில்லவள்ளலாருளையுன்னி
மோனமுற்றிருந்தபோலுந்தோன்றினமுடியனந்தம்.

(இ - ள்.) சிலதலைகள் மானிடர்களாகப்பிறந்த பிரயோசனங்கிடைத்ததென்று, சூரியனைக்கண்டு மலர்ந்த தாமரைமலர்களையொத்துக் களித்திருந்தன. அனேகந்தலைகள் முருகக்கடவுளின் திருவருளைத் தியானித்துக்கொண்டு மௌனநிலைமை யடைந்தமைபோல விளங்கின. எ - று.

மரபு மதம் என்னும் இரண்டினுள் ஏதேனும் ஒன்றைவிளங்கச்செய்த லே மானிடசரீரம் எடுத்தோர்க்குப் பயனாகலின், "மானவராகப்போந்தபய னதுவந்ததென்ன." என்றும், முருகக்கடவுளின் துணைவர்மரபினராகலா னும், அவரருளாலேயே இக்குலப்பெருமைவிளங்கி, மீண்டும் தாங்களனைவ ரும் உயிர்பெற்றெழவேண்டுமாகலானும், "வள்ளலாரருளையுன்னிமோனமு ற்றிருந்தபோலுந்தோன்றின." என்றுங்கூறினர். (௪௦)

துண்டவெண்பிறையார்க்கென்றுந்தொண்டரியாமெனற்குச்சான்றின்
புண்டரநுதலிற்றோன்றப்பொலிந்தனமுடியனந்தங்
கண்டகர்க்காயுமாபோற்கனநகைக்கோட்டஞ்செய்து
கொண்டனவென்னக்காணக்குறிக்கொண்டசிரங்கள்சில்ல.

(இ - ள்.) வெள்ளிய மூன்றாம்பிறையையணிந்த சிவபெருமானுக்கு எக் காலத்தினும் அடிமை பூண்டவர்கள் நாங்கள் என்பதற்குச் சாட்சியாவது போல, அனந்தந்தலைகள்நெற்றிகளிலே திரிபுண்டரங்காணும்படி விளங்கின. சிலதலைகள் பகைவர்கண்மீது கோபிப்பதுபோல வீராட்டகாசஞ்செய்துகொ ண்டன என்றுசொல்லத்தக்க குறிபடைத்தன. எ - று.

சிவபிரானணிந்துள்ளது மூன்றாம்பிறையாகலின்,"துண்டவெண்பிறை யார்." என்றும், சிவபிரானடியார்க்குத் திருவெண்ணீற்றின் திரிபுண்டரம் நெற்றியில்விளங்கவேண்டுவது முறையாகலின், "தொண்டர்யாமெனற்குச் சான்றின் - புண்டரநுதலிற்றோன்ற." என்றும்கூறினர். இதனை, "எவரே னுந்தாமாக விலாடத்திட்ட திருநீறுஞ்சாதனமுங்கண்டாலுள்கி." எனவரும் ஆளுடையவரசுகளின் அருள்வாக்கானுமறிக. கனநகைக்கோட்டஞ்செய் தல் - வீராட்டகாசஞ்செய்தல். எனவே கோபச்சிரிப்பென்பது கருத்து. ()

காண்பவரெல்லாமிந்தக்கவிவலங்கொல்லோகுந்தர்
மாண்புடைவீரங்கொல்லோவாணிசீர்க்கருணைகொல்லோ
நாண்மகிழிற்றைக்காட்சிநவமினியென்னுமென்னுங்
கோண்மனத்தவர்வாரந்தீர்குரைகடல்போன்றாரன்றே.

(இ - ள்) இக்காட்சியைப்பார்ப்பவர்களனைவரும், இவ்விளைவு இந்தக் கவிச்சக்கரவர்த்தியின்வல்லபந்தானோ? செங்குந்தவீரர்களின் மாட்சிமைப் பட்டவீரந்தானோ? கலைமகளாரின் சிறந்ததிருவருள்தானோ? யாவர்க்கும் மகி ழ்ச்சியைவிளைக்கும் இத்தினக்காட்சியின்புதுமை எவ்வாறாய்முடியுமென்னும் எண்ணங்கொண்ட மனமுடையவர்களாய், அலையற்ற சமுத்திரம்போன்று நிர்ச்சத்தமாயிருந்தார்கள். எ - று.

அன்று-ஏ-அசைகள். இவ்விளைவுக்குச்காரணம் கவிச்சக்கரவர்த்தியின் வல்லபமென்போமாயின் அவர்சென்று ஒருதலையையும் அறுக்கவில்லையே, அறுத்தவர்கள் செங்குந்தர்களாகலின் அவர்கள் வீரந்தானென்று சொல்வோ

மாயின், அவர்களும் கவிச்சக்கரவர்த்தியின் வாக்கைநம்பிச் செய்தார்களாக லின், அவர்நாவிலிருந்து விளங்கும் கலைமகளாரின் கருணைவல்லபமே காரண மாகுமெனத் தீர்மானித்தார்களென்பதுகருத்து. இத்தினம்போன்ற களிப்பு எத்தினத்தும் யாவர்க்கும் ஒரேதன்மையாய் விளைந்ததின்றாகலின்,“நாண்மகி ழிற்றை.” என்றும், அலைகள்புரளும்போதுண்டாகும் கோஷ்டத்திற்கும் அ வைகளடங்கினபோதுண்டாகும் நிர்ச்சத்தத்திற்கும் ஒப்பின்றாகலின், “வார ந்தீர்குரைகடல்.” என்றுங்கூறினரென்க. வாரம்-அலை. (கஉ)

ஆயவிச்சிரத்திலான்றவணையிடைப்பதுமவங்க
மேயவாசனந்தான்கொண்டுமிக்கிறுமாந்திருந்தான்
பாயவாரிதிசூழ்வையப்பலவருணத்தர்வேந்தர்
தூயபாவலவரேத்தித்தொழுங்கவிக்கூத்தனம்மா.

(இ - ள்.) விரிந்தகடலாற் சூழப்பட்ட உலகத்திலுள்ள பற்பலமரபின ரும் மன்னர்களும் தூய்மையமைந்த கவிவாணர்களும் துதித்துப்பணியும் அம்பலக்கூத்தரென்னும்கவிச்சக்கரவர்த்தியானவர், ஆயிரத்தெண்டலைகளா லாயசிங்காதனத்தில் பதுமாசனமிட்டு மிகத்தருக்குற் றெழுந்தருளி யிருந்த னர். எ - று.

பன்மரபினரும் பூவேந்தர்களும் பாவேந்தர்களும் பரவிப்பணிய எழுந் தருளினரென்க. பதுமாசனமென்பது - இருதொடைமே லிரண்டுள்ளங்கா லையுமாறிவைத்திருத்தல். இதனை “வலக்குறங்கதனிலிடப்பதமேற்றிவலப்பத மிடக்குறங்கேற்றல் - சொலத்தகுங்கமலவாசனமதனிற்பின்னதாய்த்துணைக் கரமாற்றி-நலத்தகுதாளிற்பெருவிரல்பிடித்தல்பெற்றபத்மாசனநவிலி-னூலப் பிலாசனங்களுளவவற்றியைந்தவாசனத்திருத்தலேயுரித்தாம்.” என்னும் கா சிகாண்டத்திருவிருத்தத்தானுமறிக. இக்கவிச்சக்கரவர்த்தியார்இறுமாந்திருத் தல் கூடுமோவெனின், இத்தகைய பெருமக்களுக்கு இறுமாப்புண்டாதல் அகங்காரத்தால் விளைந்த கர்வத்தினாலல்ல, மற்றென்னெனின், கடவுட்டன் மையின் நிச்சயத்தாலாகலின் அதுதக்கதேயென்க. என்னை? கலைமகளார் தி ருவருட்சத்திக்குச்சர்வவல்லபமுமுண்டென்னுந்திண்ணத்தால் இறுமாந்தா ராகலின். இதனை, “இறுமாந்திருப்பன்கொலோ—வீசன்-பல்கணத்தெண்ண ப்பட்டுச்-சிறுமானேந்திதன்சேவடிக்கீழ்ச்சென்றங் - கிறுமாந்திருப்பன்கொ லோ.” என்றும், “யாமார்க்குங் குடியல்லோ மியாதுமஞ்சோம்.” என்றும், “தீனருக்கெளியேனலேன்றிருவாலவாயரனிற்கவே.” என்றும், ஆளுடைய வரசுகள் ஆளுடையவடிகள் ஆளுடைய பிள்ளையார் என்னும் பெருமக்கள் மூவரும் முறையே ஓதியுள்ளமை காண்க. அம்மா - வியப்பிடைச்சொல், ()

கறையில்வெண்மரையாட்காயகலையொடுபடிகமென்ன
யிறைபெறுங்கர்ப்பந்தாதியெடுத்தோதியனந்தங்கோடி
யறையொணுச்சங்கத்துத்தமாங்கமீந்தோர்கணுப்ப
ணுறைகழலரசரேறுயுறைபவன்றன்னைநோக்கி.

(இ - ள்.) மாசகன்ற வெண்டாமரையாளாகிய சரச்சுவதி தேவியார்க்கு "ஆயகலை" என்றதோடு "படிகம்" என்னச்சிறப்பமையுங் காப்புச்செய்யுட்களையுடைய ஓரந்தாதிப் பிரபந்தத்தைத் தொடங்கிப்பாடியருளி, அளவிட்டுரைத்தற்கேலாத அனந்தங்கோடி பெயர்கள் கூடியிருக்குங் கூட்டத்திலே, சிரச்சிங்காதனமிட்ட செங்குந்தத்தலைவர்கண் மத்தியில், உட்கார்ந்திருக்கும் வீரக்கழலணிந்துள்ள மன்னவர்களாகிய யானைகளுக்கு ஆண்சிங்கம்போன்று வீற்றிருந்த குலோத்துங்கச்சோழனைப்பார்த்து. எ . று.

கலைமகளார்வீற்றிருப்பது வெண்கமலத்தாகலின், "வெண்மரையாள்" என்றனர். இதனை, "வெள்ளைக்கலையுடுத்துவெள்ளைப்பணிபூண்டு-வெள்ளைக் கமலத்தில்வீற்றிருப்பாள் - வெள்ளை-யரியாசனத்திலரசரோடென்னைச்-சரியாசனம்வைத்ததாய்." என்னும் காளமேகப்புலவர்வாக்கானுமறிக. ஆயகலையொடுபடிகமென்ன யிறைபெறுங்காப்பந்தாதி யெடுத்தோதி என்பதை "ஆயகலைகளறுபத்துநான்கினையு-மேயவுணர்விக்குமென்னம்மை - தூய - வுருப்பளிங்குபோல்வாளென்னுள்ளத்தினுள்ளே-யிருப்பளிங்குவாராதிடர்." எனவும் "படிகநிறமும்பவளச்செவ்வாயுங் - கடிகமழ்பூந்தாமரைபோற்கையுந்-துடியிடையு-மல்லும்பகலுமனவரதமுந்துதித்தாற் - கல்லுஞ்சொல்லாதோ கவி." எனவும்வரும் சரச்சுவதியந்தாதியின் காப்புப் பாக்களானுமறிக. இவ்வந்தாதியை இக்காலத்தார் கம்பர்பாடியதெனக் கழறுவர். (௧௪)

ஈட்டியையவியர்துபூவார்புவனையென்றெடுத்துச்சொற்ற
பாட்டகந்தோன்றும்வென்றிப்பலசரிதத்தோர்வல்லான்
வீட்டவள்களநாண்பெற்றவீறுமெய்த்தலையின்பேறுங்
கேட்டியென்றருளிற்கூறத்தொடங்கினன்கீர்த்திமிக்கான்.

(இ - ள்.) செங்குந்தத்தைச்சிறப்பித்து, பூவார்புவனை எனத்தொடங்கிக் கூறிய எழுபதுபாடல்களினும் விளங்குகின்ற வெற்றியமைந்தபல சரித்திரங்களுக்குள், ஒப்பற்ற வல்லான்மனைவி தன்கழுத்திலுள்ள மங்கிலியப்பிட்சை பெற்றுக்கொண்ட பெருமையையும் மெய்த்தலைகொடுத்தபேற்றையும் நீகேட்கக்கடவாயென்று இசையின்மேம்பட்ட கவிச்சக்கரவர்த்தியார் திருவருளால் திருவாய்மலரலாயினர். எ - று.

அப்பிரபந்தத்தின் எழுபதுபாடல்களினும் அனேகம் வெற்றிப்பாடுகள் கூறியிருத்தலின், "வென்றிப்பலசரிதத்து." என்றும், இல்லாள் மனையாள் என்பன பத்தினியின் பெயர்களாகலின் அப்பொருடோன்ற, "வீட்டவள்" என்றும் கூறினர். வீறு - பெருமை. (௧௫)

சோழனவைச்சிறப்புச்சருக்கம்முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௬௦.

——(o)——

## மூன்றாவது.

# வீரநாராயணச்சருக்கம்.



கோட்டமெண்ணிலவாய்ப்பொன்னிக்குளிர்கரையிரண்டன்மாட்டு
மேட்டிமையொடுங்கொண்டோங்குமேதகுநாட்டில்யாவுங்
கேட்டலுமுண்மைஞானங்கிளைத்தெழப்பாடுமூவர்
பாட்டகத்திருந்துதோன்றும்பழுவைமாநகரொன்றுண்டால்.

(இ - ள்.) காவேரிநதியின் குளிர்ச்சியுள்ள இரண்டுகரைகளில் அளவிறந்தனவாகிய மேன்மையமைந்துள்ள தேவாலயங்களை யுடைத்தாய்ச் சிறப்புற்றோங்கிய சோழநாட்டிலே, எல்லாவுயிர்களும் கேட்டவுடனே மெய்ஞ்ஞானம் மேம்பட்டு விளங்கப் பாடுகின்ற சைவசமயாசாரியர்கள் மூவருளிய தேவாரங்களிலமைந்துவிளங்கும் திருப்பழுவூரென்னும் உயர்வுடைந்த நகரம் ஒன்றுண்டு. எ-று. ஆல்-அசை.

சமயாசாரியர்கள் மூவருளிய தேவாரங்களைக் கேட்டவுடனே சராசர வுயிர்கள்யாவும் மெய்ஞ்ஞான மடையுமென்பதுகருத்து. என்னை? தேவாரங்கள் பண்களென்னும் இசையமைந்திருத்தலின்,அவ்விசையைக் கேட்டவளவில் அனைத்துயிரும் மனமுருகுதலியல்பாகலினென்க. இவ்வாறுசராசரவுயிர்களனைத்தும் இசைக்குமனமுருகுதலை, "இவ்வாறுநிற்பனவுஞ்சரிப்பனவுமிசைமயமாய் - மெய்வாழும்புலன்கரணமேவியவொன்றாயினவால்- மொய்வாசநறுங்கொன்றைமுடிச்சடையாரடித்தொண்டர் - செவ்வாயின் மிசைவைத்ததிருக்குழல்வாசனையுருக்க." என்னும் அருண்மொழித்தேவர் அமுதவாக்கானும், திருப்பழுவூர் தேவாரம்பெற்றதென்பதை, "முத்தன்மிகுமூவிலைநல்வேலன்விரிநூல - னத்தனெமையாளுடையவண்ணலிடமென்பர்- மைத்தழைபெரும்பொழிலின்வாசமதுவீசப் - பத்தரொடுசித்தர்பயில்கின்ற பழுவூரே." என்னும் ஆளுடையபிள்ளையாரருள்வாக்கானுமறிக. (க)

அந்நகரிருந்தாளீசனடியவர்க்கடியன்செங்கோன்
மன்னவராஞ்செங்குந்தமரபினனுலகமெங்குஞ்
சொன்னகோமதிப்பேர்கொண்டான்சுந்தரச்சுதனிலாமன்
முன்னவர்சிவனேயென்றுமுயன்றனன்விரதம்பன்னாள்.

(இ - ள்.) அத்திருப்பழுவூரென்னும் தலத்தில் ஆன்மாக்களை யடிமைகொண்டருளும் வடமூலநாதர்க் கடிமைபூண்டவனுகவும்,செங்கோல்செலுத்தும் அரசர்களாகிய செங்குந்தர் மரபினனாகவும், அகிலமெங்கும் புகழப்பட்ட கோமதி என்னும் பெயருடையவனாகவுமிருந்த அரசன், அழகுள்ள ஓர்புத்திரனில்லாமையால், முதல்வனே! சிவபெருமானே! என்றுபலகாலம் பிரார்த்தித்துப் பலவிரதங்களை யநுஷ்டித்துவந்தனன். எ - று.

செங்குந்தமரபினர் ஆதியில்நவவீரர்களென்னும் தேவாம்சமுடையரா யிருந்து, முருகக்கடவுளின் கட்டளையால் முசுகுந்தச்சக்கரவர்த்திக்குச் சம் பந்திகளாய் மானவாம்சம்பெற்று, அதுமுதல் அரசர்களாயினமை தோன்ற "செங்கோன் மன்னவராஞ்செங்குந்த மரபு." என்றார். இம்மரபினர்க்கு இக்காரணத்தானன்றே தேவாம்சவிருதும் மானவாம்சவிருதும் இரண்டும் வழங்கிவருகின்றன. இவ்வாறிரண்டும் இம்மரபினர்க்குண்டென்பதை, "நங் கையர்வேய்த்தோள்பழகுநாகணவாயேகுந்த - வங்கையர்தங்கேதனநீயாய்த் துரையாய் - துங்கமிகு-காவலொடுவைகித்தங்காவலர்மெய்காக்குமெழிற் - சேவலொடுவேங்கையுமாந்தேர்." என்னும் முத்துக்குமாரதேசிகரருளிய, செங்குந்தர்தசாங்கவெண்பாவானுந்தெளிக. (உ)

எண்ணியவெண்ணமெல்லாமீந்தருளிறைவனோக்காற்
கண்ணியவரசன்றேவிகருப்பமுண்டாகிப்பத்தாய்
நண்ணியதிங்களோரைநலமுறவமைந்தநாளிற்
புண்ணியம்பூத்ததென்னப்புதல்வனைப்பயந்தாண்மன்னோ.

(இ - ள்.) அடியார்கள் நினைத்தநினைவுகளனைத்தையும் பாலித்தருளும் வடமூலநாதர் கடாக்ஷத்தினால், பெருமைபெற்ற அவ்வரசன்பத்தினி கருப்ப முற்று, பத்தாவதுமாதத்தில் நல்லமுகூர்த்தமமைந்த சுபதினத்திலே, புண்ணி யமே யுதித்ததுபோன்று ஓர்புத்திரனை யீன்றனள். எ - று.

மன் - ஓ - அசைகள். இப்புத்திரனாற் பாவகிர்த்தியங்கள் புரிந்துகொ ண்டிருந்த கொரேனாகிய வல்லானழிந்து, உலகமெங்கும் புண்ணியம் மே லோங்கப்போகின்றமையின், "புண்ணியம் பூத்ததென்ன." என்றார். (௩)

கற்பினின் வடமீனன்னாள் கரையுமவ்வோரையூடே
யற்புதப்பொலிவாவன்னோற்கனுசனைப்பயத்தலோடுந்
தற்பரன்றிருத்தாளுன்னித்தலைவன்றன்மகார்க்குநாமம்
விற்பனவீரனாராயணனெனவிளம்பினானே.

(இ - ள்.) கற்புநிலைமையில் அருந்ததியைப்போன்ற அவ்வரசபத்தினி, முற்கூறிய அம்முகூர்த்தத்திற்றானே, அதிசயமிகுதியாக முதற்புத்திரனுக் கிளவலையு மீன்றவுடனே, கோமதி என்னும் அவ்வரசன் சிவபிரான் திருவடி களைத் தியானித்து, தனதுபுத்திரர்களாகிய இருவர்க்கும், விவேகமுள்ள வீர ன் எனவும் நாராயணன் எனவும் நாமகரணஞ்சூட்டினான். எ - று.

இவ்விருவரும் ஒரேகர்ப்பத்தில் ஓர்தினத்துதித்த இரட்டைப்பிள்ளைக ளென்ப துணர்த்துவான், "கரையுமவ்வோரையூடேயற்புதப்பொலிவாவன் னோற்கனுசனைப்பயத்தலோடும்."என்றனர். அநுசன்-இளவல். இதனை இரா மனுக்குப்பின்பிறந்த இலக்குமணனுக்கு இராமாநுஜன் எனவழங்குதலானுங் காண்க. இவ்வரசன் சைவசமயத்தனாயிருந்தும் நாராயணனென்னும் பெய

ரைத் தன்புத்திரனுக்குத்தரிக்கலாமோ? எனின், செங்குந்தமரபினனாகலின், தம்மரபின்றின் சகோதரராகிய முருகக்கடவுளை மருகனாகவுடைமையானும், முருகக்கடவுளைத்துதிப்போர் திருமாலைச்சிறப்பித்துரைப்பதுமரபாகலானும், கௌமாரசமயிகட்குத் திருமால் எக்காலத்தும் பேதமின்றாகலானும், செங்குந்த மரபினரும் பெரும்பாலும் கௌமாரசமயிகளேயாகலானும் இவ்வாறு நாமந்தரித்தனனென்க. கௌமாரசமயிகள் திருமாலைத்துதித்தலை, அருணகிரிநாதரருளிய திருப்புகழ்தோறுங்காண்க. (ச)

தினகரரிரட்டைப்பேறாய்ச்செனித்தனபுதல்வர்க்காணு
மனதிறும்பூதுமிக்குவாகுபூரித்தன்பாசத்
தனமறையவர்க்குநல்கித்தமரெலாமகிழவாற்றிக்
கனவடமூலநாதன் கருணையைவியந்தான்மன்னோ.

(இ - ள்) அவ்வரசன் ஆதித்தர்கள் இரட்டைப்பேறாக உதித்ததுபோன்ற தனதுபுத்திரர்களைநோக்கி,மனத்தின்கண் ஆச்சரியம் அதிகரித்துப் புயங்கள் பூரிப்படைந்தவனாய், சொர்னதானங்களை வேதியர்கட்கு விருப்புடனளித்து, உறவின்முறையாரனைவரும் மனமகிழச்செய்வித்து, மேன்மையமைந்த வடமூலநாதர் தனக்குப்பாலித்த திருவருளைச்குறித் ததிசயித்தனன். எ-று.

மன்-ஓ-அசை. வெகுநாளாக ஓர்புத்திரனுமின்றி மனம்வாடியிருந்தானாகலின், திவ்யதினகரோதயம்போன்ற இரட்டைப்பிள்ளைகள் பிறந்தமாத்திரத்திற் பெருமகிழ்வடைந்தானென்றபடி. (ரு)

மதிக்கலைகடுப்பநாளால்வளர்ந்தெழுமகார்க்கைந்தாண்டின்
முதுக்கலையவரானன்னூன்முற்றுறச்செய்துமுன்னால்
விதிக்கலையடுங்கூர்வாளிவிற்றொடுத்தங்கையேந்துங்
கதிக்கலைசுடர்வாட்குந்தங்கற்பித்துக்களித்தானன்றே.

(இ - ள்.) வளர்பிறைச்சந்திரன்கலைகளைப்போல் தினந்தோறும் வளர்ந்துவருகின்ற இரண்டு புத்திரர்கட்கும், ஐந்துபிராயத்திலே வேதமுணர்ந்த வேதியர்களால், நீதிநூல்களை முழுவதும் கற்கும்படிசெய்து, அதன்பிறகு வைதிகவிதிகளையும் சாஸ்திரங்களையும், கொல்லத்தக்க அம்புகளை வில்லிற் பூட்டிக் கையிலேந்துந் தகுதியையுரைக்கின்ற தநுர்வேதவிதிகளையும், வாட்போர் வேற்போர் என்னும் இவைகளையும் தனதுபுத்திரர்கட்குக் கற்பித்துக் களிப்புற்றனன். எ - று.

அன்று-ஏ-அசைகள். தனதுபுத்திரர்கட்குப் பிரதமத்தில் பொதுவான நீதி நூல்களையும், அதன்பின் வைதிகமார்க்கங்களையும் ஞானசாஸ்திரங்களையும், அதன்பின் தங்கண்மரபினர்க்குரிய விற்போர் வாட்போர் வேற்போர் என்னும் போர்வகைகளையும் அவ்வவ்வாயுதங்களின்பரிட்சையைவிரித்துக்கூறுகின்ற தநுர்வேதத்தையும் சங்கையறக்கற்பித்துச்சந்தோஷித்தனனென்க.

குசைகசைகொண்டுதாவுங்குரகதத்திவர்ந்துகாலின்
விசையினுங்கடுகத்தூண்டும்விதமுடன்மதமாதங்க
மிசைவருந்திறலுங்கற்றுவிளங்கினர்வயதைந்தார்ந்த
தசவருடங்களாகித்தருணராயிருக்குமேல்வை.

(இ-ள்.) அப்புத்திரர்கள் இவ்வாறுகற்றுத்தேர்ந்தபின், தாவிச்செல்லுங் குதிரைமேலேறி, ஓர்கரத்திற் கடிவாளமும் மற்றோர்கரத்திற் சவுக்குங்கொண்டு,வாயுவேகத்தினும் விரைவாகச்செலுத்தத்தக்க அஸ்வபரிட்சையுடனே, மதங்கொண்டயானையின்மீதேறிச்செலுத்தும் கஜபரிட்சையுங்கற்றுத் தேர்ச்சியுற்று விளங்கினார்கள். அப்புத்திரர்கட்குப் பதினைந்துவயதுநிரம்பிக் கௌமாரப்பருவமுடையவர்களா யிருக்குங்காலத்தில். எ - று.

அரசற்குரிய மநுநீதி வேதவொழுக்கங்கள் அஸ்திரசஸ்திரபரிட்சைகள் என்னும் இவைகளிற்றேர்ந்தபிறகு, இரதகஜதுரகபதாதிகளென்னும் சதுர் விதசைனியங்களில் முற்பட்டதாகிய இரதபரிட்சையுடன் அதிற்பூட்டும்துரகபரிட்சையும் தனியே ஏறிச்செலுத்தத்தக்க கஜபரிட்சையுமுணர்ந்தார்களென்றபடி. இவ்வளவுவித்தைகளையும் ஐந்துவயதிற்குமேற் பதினைந்துவயதிற்குள்ளாகக் கூர்ந்தபுத்தியாற் கற்றுத்தேர்ந்தனரென்பார், "ஐந்தார்ந்ததசவருடங்கள்." என்றும், ஓராண்டுமுதற் பதினாறுவரையிற் கௌமாரப்பருவமாகலின், "தருணராயிருக்குமேல்வை." என்றும் கூறினர். (எ)

## கலிவிருத்தம்.

கஞ்சமலரோடைவருகாவிரியினீரால்
விஞ்சளவில்சாலிகள்விளைந்தவயலங்கண்
கொஞ்சுகிளியுங்குயிலினங்குலவுசோலைத்
தஞ்சைநகர்பூமியெனுந்தையன்முகம்போலும்.

(இ - ள்.) காவிரிநதியின் நீரால் நிறைந்திருக்கும் தாமரை மலர்களலர்ந்த ஓடைபாய்தலாலே, அளவுகடந்த நெற்பயிர்கள் விளைந்திருக்கும் வயல்களினருகிலுள்ள, மழலைச் சொற்களையுடைய கிளிகளும் குயிற் கூட்டங்களும் சஞ்சரிக்கின்ற சோலை சூழ்ந்த தஞ்சைமாநகரமானது, பூதேவியென்னும் ஓர் தெய்வப்பெண்ணின் முகத்தைப்போல் விளங்கும். எ - று.

காவிரியினீரால் கஞ்சமலரோடைவரும் எனவும் அளவில் விஞ்சுசாலிகள் எனவும் மாற்றுக. எனவே காவிரியினீர்ப்பெருக்கால் தாமரைமலரோடைகணிரம்பி, அவற்றினின்றும் பாய்கின்றநீரால் நெற்பயிர்கள் விளைந்து, பக்கத்துள்ளசோலைகள் தளிர்த்திருக்கும் என்றபடி. (அ)

ஆயநகரத்தினடுவெண்டமுறுமாடம்
பாயொளியமாமணிபசுங்கனகமெங்கு

மேயமணிமண்டபவிநோதமிதுவென்னச்
சீயவணையொன்றுறவிருந்ததுதிகழ்ந்து.

(இ - ள்.) அந்நகரத்தின் மத்தியில், ஆகாயத்தையளாவிய அரண்மனையும் அதனுள் பரவிய காந்தியைப்படைத்த சிறந்த இரத்தினங்களும் பசும்பொன்னும் எவ்விடத்தினும் பொருந்திய அழகிய ஓர்மண்டபமும், அதனுள் விசித்திரமிதுவென்று கண்டோர் கூறும்படி ஓர்சிங்காதனமுமமைந்து விளங்கியிருந்தது. எ - று.

சோழராசர்சட்குரிய மகுடாபிஷேகப் பஞ்சதலங்களுள் தஞ்சையுமொன்றாதலின், ஆங்கோரரண்மனையும் மண்டபமும் சிங்காதனமுமிருந்ததென்றார். (கூ)

பனகமணியார்ந்தவரியாசனமிசைப்பைங்
கனகமுடிவீரர்குலவேம்பனெனுங்காளை
யனகமதிமந்திரியுடன்கொலுவமர்ந்தான்
றினகரகுலோற்பவபராந்தகதிறற்கோ.

(இ - ள்.) சூரியகுலோற்பவனாகிய வல்லபமமைந்த பராந்தகச் சோழன் நாகரத்தினங்கள் பதித்துள்ள சிங்காதனத்தின்மீது, பசும்பொற்கிரீடமணிந்த நவவீரர்களின் குலத்துதித்த வேம்பனென்னும் பெயருடைய காளைப்பருவமமைந்த சிறந்தமதிமந்திரியுடன் கொலுவீற்றிருந்தனன். எ-று.

நவமணிகளுள் ஏனையமணிகள் நீங்க மாணிக்கமணியொன்றினாலேயே யமைத்த சிங்காதனமென்பார், "பனகமணியார்ந்தவரியாசனம்." என்றும், தஞ்சைவேம்ப னென்போர் நவவீரர் சந்ததியாரென்பதையும் மிகுபராக்கிரமமுடைய மந்திரியென்பதையுமுணர்த்துவான், "பைங்கனகமுடிவீரர் குலவேம்பனெனுங்காளை-யனகமதிமந்திரி." என்றும் கூறினர். இவ்வேம்பனென்போர் இத்தன்மையரென்பதை, "பஞ்சம்வெம்பத்தரும்பனேயேநாவான்மிகவேபாடாது - தஞ்சைவேம்பனைப்புகழ்ந்தேமதுமுன்செய்ததவமேயா-மெஞ்சவெளிதோவூழியுருத்திரன்கைக்கொளுமூவிலைவேலே - வஞ்சமாயைபவதரித்ததிவன்கைக்குந்தவரவாமால்." என்னும் ஈட்டியெழுபதினிருங்கவிக்கருத்தானு முணர்க. அமைச்சருக்குத் தருமகுணமே யமைந்திருக்கவேண்டுதலின், "அனகமதிமந்திரி." என்றார். இதனை, "அறனறிந்தான்றமைந்தசொல்லானெஞ்ஞான்றுந்-திறனறிந்தான்றேர்ச்சித்துணை." என்னும் திருக்குறளுரையானுந் தெளிக. (௧0)

சாகையுளவேதநவினுவினர்கள்சார்ந்தா
ரேகனருளாசிகளியம்பினரிருந்தார்
மாகதர்புகழ்ந்தனர்கள்வன்னமயிலன்னா
ரோகையொடுசாமரையிரட்டினருகந்தே.

(இ - ள்.) சாகைகளமைந்துள்ள வேதங்களையோதுகின்ற நாவைப் படைத்த வேதியர்களமைந்து ஒப்பற்றவராக விளங்கும் சிவபெருமான் திருவருளாலடையவேண்டிய ஆசிவசனங்களைக்கூறி வீற்றிருந்தார்கள். மாகதர்கள்வந்து வெவ்வேறுபுகழ்ந்தார்கள். பசுநிறமமைந்த மயில்போன்ற சாயலையுடைய நிர்த்தனமாதர்கள் மனக்களிப்புடனே ஒருப்பாடேற்று வெண்சாமரை வீசினார்கள். எ - று.

வேதம் ஒன்றே பலசாகைகளாகப் பிரிந்துள்ளதாகலின், "சாகையுள வேதம்." என்றார். இதனை, "ஆகையான்மறையுமொன்றேயருமறைப்பொருளுமொன்றே-சாகையாலனந்தமாகித்தழைத்ததச்சாகையெல்லா - மோகையாலிவனையேத்துமுலகுதயாதிக்கீந்த - வேகனுணையினன்மூன்றுமூர்த்தியாயிருந்தவன்றே." என்னும் திருவிளையாடற் புராணத் திருவிருத்தத் தானும் தெளிக. மயில்வன்னமன்னரெனமாற்றிப் பொருளுரைக்கினுமாம். (௧௧)

சுந்தரமிகுந்தசபையின்பகுதிசூழ
விந்திரசுபோகமிதுவென்னவெகுமன்னர்
வந்தடிவணங்கமகிழும்வளவர்கோமான்
புந்தியினினைந்திதுபுகன்றிடுவனன்றே.

(இ - ள்.) இராஜசபைக்குரிய அழகின் மேம்பட்ட அங்கத்தினர்களனைவரும் புடைசூழ்ந்திருக்கவும், இதுவே இந்திரனுடைய உயர்ந்தபோகமென்றுசொல்லும்படி அநேகமன்னர்கள் ஒருங்குகூடிவந்து தனது பாதங்களிற்பணியவும் மனமகிழ்வுற்றிருந்த அப்பராந்தகச்சோழன், தனது சித்தத்தில் இவ்வாறெண்ணிக் கூறுகின்றனன். எ - று.

அன்று - ஏ - அசைகள். இராஜசபைக்குரிய அங்கத்தினராவார்:— புரோகிதர் - அமைச்சர் - சேனாதிபதியர் - பாவலர் - நாவலர் - பண்டிதர் என்னும் இவர்போல்வாராம். வேற்றரசர்கள் பலரும் பணியும்படி வீற்றிருத்தலால், தேவர்கள் பலரும் பணிய வீற்றிருக்கும் இந்திரனுக்கொப்பாக்கி, "இந்திரசுபோகமிது." என்றார். (௧௨)

தாரணியிலேநமதுசக்கரநெறித்தான்
பூரணமதாயிலகவாகினிபுரக்குந்
காரணமலிந்தபுயவென்றியுளகாளை
வீரனுளனோவெனவிளம்பமுனெழுந்தே.

(இ - ள்.) இவ்வுலகத்திலே நமது ஆஞ்ஞைசக்கரத்தின் மார்க்கமானது எங்கும் நிறைவுற்றுவிளங்குமாறு, நமது சைனியங்களைக்காக்கத்தக்க வீரத்தன்மை மேம்பட்ட புயபலமுடைய காளைப்பருவமமைந்த வீரனொருவனுண்டோவெனக்கூறலும், அவ்வேந்தனுக்கு நேராய் எழுந்துநின்று. எ - று.

செங்கோல்செலுத்தும் அரசனுடைய ஆக்ஞாசக்கரம் அவனது ராசாட்சியின் எல்லைமுழுவதும் செல்லவேண்டுவதாகலின், "பூரணமதாயிலக." என்றும், அத்தகைய ஆக்ஞைசெல்லுதற்குச் சைனியபலமே முக்கியகாரணமாகலின், "வாகினிபுரக்கும்." என்றும் கூறினர். வாகினியென்பது சைனியம். அது கணகமூன்றென்னும் ஒரளவையுடையது. அதாவது-சைனியத் தொகை பத்தினுள் ஒன்று. அவை:—பதாதி - சேனாமுகம் - குமுதம் - கணகம் - வாகினி - பிரளயம் - சமுத்திரம் - சங்கம் - அநிகம் - அக்ரோணி என்பவைகளாம். இவற்றுள், யானை ஒன்று இரதம் ஒன்று குதிரை மூன்று காலாள் ஐந்து என்னும் இவைகூடியது பதாதி, இப்பதாதிமும்மடங்குள்ளது சேனாமுகம், இச்சேனாமுகம் மும்மடங்குள்ளது குமுதம், இக்குமுதம் மும்மடங்குள்ளது கணகம், இக்கணகம் மும்மடங்குள்ளது வாகினி, இவ்வாகினி மும்மடங்குள்ளது பிரளயம், இப்பிரளயம் மும்மடங்குள்ளது சமுத்திரம், இச்சமுத்திரம் மும்மடங்குள்ளது சங்கம், இச்சங்கம் மும்மடங்குள்ளது அநிகம், இவ்வநிகம் மும்மடங்குள்ளது அக்ரோணியாகலின்; இச்சோழன் தனது சைனியங்களை வாகினி என்னுங்கணக்காகவே வகுத்திருக்கின்றனனாகலின், "வாகினி" என்றுரைத்தனன். அத்தகைய சைனியங்களைக் காக்கும் தந்திரமும் புயவலியும் வீரத்தன்மையும் காளைப்பருவமு முடையவனொருவன் வேண்டுமென்பான், "புரக்குங்காரணமலிந்தபுயவென்றியுளகாளை - வீரனுளனோ". என்றனனென்க. (கரு)

மன்னனடிமுற்றொழுதுவந்தியரின்மிக்கோன்
பொன்னிநதியோடுபர்புலிக்கொடிபடைத்தோ
யிந்நிலமிருந்தபழுவூரகமிருப்போர்
நன்னெறியவீரனொடுநாரணனெனும்பேர்.

(இ - ள்.) அச்சபையிலுள்ள மங்கலப்பாடகர்களிற் சிறந்த ஒருவன், அப்பராந்தகச் சோழன் முன்பாகவந்து பாதங்களிற்பணிந்து, காவேரிநதியுடனே விபாக்கிரத்துவசத்தையு முடையவரே! இச்சோழமண்டலத்தில் சிறப்புற்றுவிளங்கும் திருப்பழுவூரென்னும் வீரட்டக்ஷேத்திரத்தில் வசிப்போராகிய, நன்மார்க்கமமைந்துள்ள வீரனென்றும் நாராயணனென்றும் பெயர்பெற்றிருப்பவர்கள். எ - று.

அரசருக்குள்ள தசாங்கங்களில் நகரத்திற்கு வளப்பந்தருவது நதியும், வெற்றியை விளக்குவது துவசமுமாகலின், "பொன்னிநதியோடுபர்புலிக்கொடிபடைத்தோய்." என்றும், இவ்வுலகத்துள் தமிழ்வழங்குந் தேயங்களின் சிறந்த மண்டலங்கள் மூன்றனுள் மேம்பட்டது சோழமண்டலமும் அம்மண்டலத்துள்ள க்ஷேத்திரங்களுள் மேம்பட்டது வீரட்டக்ஷேத்திரமுமாகலின், "இந்நிலமிருந்தபழுவூரகம்." என்றும் கூறினர். வீரநாராயணரென்போர் நன்மார்க்கமமைந்தவீரர்களென்பதை, "பாவிக்குறும்பறுக்கும்

பழூரன்முன்பன்னிருவர் - மேவிக்குளத்துற்றகம்பத்திலேறியூன்விசிக்கொண்டே - யாவிக்கிறுதிசெய்யாமல்வல்லாளையடக்கியபின் - றேவிக்குமாங்கிலியப்பிச்சையிட்டவர்செங்குந்தரே.'' என்னும் செங்குந்தமாலைத் திருவிருத்தத்தானும் தெளிக. (௬௪)

சேயநவவீரருறுசீர்மரபுளாரோர்
மாயவிவுளிக்கணொருவாதுலவுவார்நற்
றாயினனைவர்க்குமருடன்மைதமதுள்ளத்
தேயவரிராமனொடிலக்குமணனொத்தார்.

(இ - ள்.) அவர்கள் சிறப்பமைந்த நவவீரர்களவதரித்துள்ள மேன்மை வாய்ந்தமரபிலுதித்துள்ளவர்கள். நிகரற்ற மாயாவல்லபமுள்ளகுதிரைகளின் மீது எக்காலமும் சஞ்சரிக்கின்றவர்கள். ஈன்ற தாயைப்போன்று உலகத்துள்ள அனைவர்க்கும் உதவத்தக்க ஈகைக்குணத்தைத் தங்களிதயத்தில்வாய்க்கப்பெற்றுள்ளவர்கள். பிரியாவிடையாயிருப்பதில் இராமமூர்த்தியையும் இலக்குமணமூர்த்தியையும் போன்றவர்கள். எ - று.

அவர்கட்குச் சுத்தவீரத்தன்மை வாய்த்திருப்பதுடன் மாயாவல்லபமுமுண்டென்று குறிப்பிப்பான், ''மாயவிவுளிக்கணொருவாதுலவுவார்.'' என்றும், வீரத்தன்மையின் மேம்பாடடைந்தோராகலின், அவர்களிடத்துச் காருணியமின்றோவென்னும் ஐயநிகழக்கூடுமோகலின், அச்சந்தேகத்தை நிவாரணிக்கும்பொருட்டு,''நற்றாயினனைவர்க்குமருடன்மைதமதுள்ளத்தேயவர்'' என்றும், அவர்கள் சகோதர வொற்றுமையினும் குறைந்தவர்களல்லரென்பான், ''இராமனொடிலக்குமணனொத்தார்.'' என்றும் கூறினர். பாராட்டுந்தாய் வளர்க்குந்தாய் ஈன்றதாய் எனப்பொருள்பயக்கும் செவிலித்தாய் கைத்தாய் நற்றாய் என்னும் மூவருள் ஏனையர் நீங்க, ''நற்றாய்.'' என்றதென்க. ()

ஆறுமுகவேளைமறவாதவறிவாளர்
சீறுபுலியோடரிகுசேர்ந்தெனவொருங்கே
வீறுபெறுமாண்மையொடுவென்றியமைமன்னர்
மாறுதவியோதரியவண்மையுடையார்கள்.

(இ - ள்.) சண்முகக்கடவுளைச் சதாகாலமும் தியானிக்கும் மெய்யுணர்ச்சியுள்ளவர்கள். சிறத்தக்க புலியும் சிங்கமும் ஒன்றுகூடி யிருப்பதுபோன்று மேன்மைமிக்க மனோதிடத்துடனே ஜெயமடைந்துள்ள தலைவர்கள். கைம்மாறின்னதென்று சொல்லுதற்கரிய வள்ளற்றன்மை யுடையவர்கள். எ - று.

தெய்வபல மில்லார்க்கு எவ்வகைப் பலமிருக்கினும் துர்ப்பலமாகலின், இவர்கட்குத்தெய்வபலமு முண்டென்றறிவிப்பான், ''ஆறுமுகவேளை மறவாதவறிவாளர்.'' என்றும், இவர்களிருவரும் சமவலி யுடையரேனும் இளை

யோர் மூத்தோரென்னும் முறைமையைப் பாதுகாப்பதற்காகப் புலியைப் போன்றும் சிங்கத்தைப்போன்று மிருந்தார்களென்பான், "சீறுபுலியோ டறுகுசேர்ந்தென." என்றும், வலியுள்ளாரும் மனோதிடத்துடன் முயற்சியாராயின் காரியங்கள் கைகூடாவாகலின், அந்தகையமனோதிடமுமுள்ளாரென்பான், "வீறுபெறுமாண்மையொடு வென்றியமை மன்னர்." என்றும், இவ்விதமாய் வல்லபங்களுடன் இவர்கள் பிறர்க்குப் புரியும் உதவிக்காகக் கைம்மாறும் வேண்டாதவர்களென்பான், "மாறுதவியோதரிய வண்மையுடையார்கள்." என்றும் கூறினர். (கசு)

கண்டவர்மனக்கவலைகாண்கலர்சொல்வாய்மை
விண்டவர்கண்மெய்யிதுவிழைந்திலரிகழ்ந்தே
கொண்டவர்வெறுப்பினையகோதில்குணசீலர்
பண்டவமினுந்தைதொடர்பற்றியுளரென்றான்.

(இ - ள்.) இவ்விருவரையும் பார்த்தவர்கள் தங்களுக்குள்ள மனக்கவலையைக் காணமாட்டார்கள். சத்தியவசனம் கூறுகின்றவர்கள். இச்சரீரத்தை விரும்பாதவர்களாய் இகழ்ச்சிகூறி வெறுப்புற்றிருப்பவர்கள். இவ்வாறாகிய குற்றமற்ற குணங்களமைந்த தூயர்கள், பயனில் காரியத்தைப் பாராட்டாதவராகிய உமதுபிதாவின் சிநேகத்தை முற்காலத்திலடைந்துள்ளவர்களெனக் கூறினான். எ - று.

இவர்களைப் பார்த்தோர்களின் மனக்கவலையைத் தாங்களே விசாரித்து அதற்குத்தக்க முயற்சியெடுத்துக்கொண்டு நிவாரணிப்போராகலின், "கண்டவர் மனக்கவலை காண்கலர்." என்றும், இதயசுத்தி யில்லார்க்குத் தெய்வ பத்தியும் தெய்வவலியில்லார்க்கு வெற்றியுமமையாவாகலானும், அத்தகைய இதயசுத்தி சத்தியவசனத்தினாலுண்டா மாகலானும், "சொல்வாய்மைவிண்டவர்கள்." என்றும், சரீரவாஞ்சையுள்ளார்க்கு வீரத்தன்மை யமையாதாகலின், "மெய்யிது விழைந்தில ரிகழ்ந்தே கொண்டனர் வெறுப்பு." என்றும், இவர்கள் புதியரல்லர் உமது தந்தையின் நேசர்களே என்பான், "பண்டவமினுந்தைதொடர்பற்றியுளர்." என்றுங்கூறினர். இதயசுத்தி சத்தியவசனத் தாலமையு மென்பதை, "புறந்தூய்மைநீரானமையுமகந்தூய்மை - வாய்மையாற்காணப்படும்." என்னும் திருக்குறளுரையானும் தெளிக. (கஎ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சொற்றமொழியான்மிகவுமுளமகிழமுடி துளக்கித்தூயரென்று, நற்றமர்களாயொழுகுஞ்செங்குந்தகுலவீரநாரணப்பேர், பெற்றவரைநாங்காணவவைக்கண்வரவேண்டுமெனப்பெரிதும்போந்திங், குற்றவகைசொன்மினெனவிருவருக்குவிடைகொடுத்தானொருவனன்றே.

(இ - ள்.) இவ்வாறு மங்கலப்பாடகன் கூறியவார்த்தையால் மனமகிழ்ச்சியுற்றுச் சிரக்கம்பிதஞ்செய்து, தூய்மையமைந்தவர்களும் எக்காலத்தும் சிறந்த சுற்றத்தினர்களுமாய் நடந்துவருகின்றவர்களாகிய செங்குந்தர்கள் வமிசத்திலவதரித்த, வீரனென்றும் நாராயணனென்றும் பெயர்படைத்துள்ள அவ்விருவரையும், அதிவேகமாய்ப்போய் நாம் காணும்படி நமது சபைக்கு வரவேண்டுமென்றழைத்து, அவர்கள்வந்த செய்தியை யறிவிப்பீர்களென்று ஒப்பற்ற அப்பராந்தகச்சோழன் இரண்டொற்றர்களுக்குவிடைகொடுத்தனுப்பினான். எ - று.

அன்று - ஏ - அசைகள். நற்றமர்களாயொழுகும் என்பதை, "முகத்தின்மென்மீசைமிளிர்வோர்மறைதெரிமுதறிவோ — ரகத்திற்றயவுகொண்டோர்வந்திரக்கினுமன்னமிட்டுத் - திகத்திசைதோறுந்திறைகொள்கரதலச்செம்மையினாற் - செகத்தினிற்செம்பியர்க்காதாரமானவர்செங்குந்தரே." என்னும் செங்குந்தர்மாலைத் திருவிருத்தத்தானுந்தெளிக. (கஅ)

ஈதுணராமுற்கடிதினுடனகத்திருப்பழுவூரெய்தியன்னார்
பாதமலர்ப்பணிந்துவந்தவகையிங்கிதமாப்பகராநிற்குந்
தூதுவருமுன்னேகப்பின்னுபயவாம்பரியிற்சுத்தவீர
நீதிபருஞ்சென்றார்களெதிர்கொண்டுசோழனவைக்கிலையிற்புக்கான்.

(இ - ள்.) இவ்வாறு கூறியதைக்கேட்பதற்கு முன்பாகவே அதிவேகமாய் அவ்விருவரும் திருப்பழுவூரையடைந்து, அவ்வீரர்களின் திருவடித்தாமரைகளில் நமஸ்கரித்து, தாங்கள்வந்தசெய்தியை இனிமையுடன் சொல்லிக்கொண்டிருக்கும் அத்தூதுவர்களிருவரும் முன்னேசெல்ல அவர்கள் பின்னாகத் தாவிச்செல்லுங்குதிரையின்மீது அச்சுத்தவீரர்களாகிய நீதிமான்களிருவரும் ஏறிப்போனார்கள். அப்போது பராந்தகச்சோழன் அவ்விருவரையும் எதிர்கொண்டுபசரித்து தனதுசபைக்கழைத்துச்சென்றான். எ-று.

தூதுவர்கள் இனிமையாயுரைக்கவேண்டுவது விதியாகலின், "வந்தவகையிங்கிதமாப்பகராநிற்குந்தூதுவர்." என்றார். இதனை, "தொகச்சொல்லித்தூவாதநீக்கிநகச்சொல்லி - நன்றிபயப்பதாந்தூது." என்னும் திருக்குறளுரையானுந்தெளிக. (கக)

வீரமணிகாணமதுபங்கிலுறையுந்தஞ்சைவேம்பரோடும்
பாரதனையானாளப்பகையடக்கநஞ்சேனாபதியாக
நேருமெனநீர்வேண்டுங்காலற்றாய்நேருவதுநிசமென்றோதிப் [னே.
போரணுகில்வருதும்விடைதாருமெனக்கொண்டுதம்மூர்புக்கார்மன்

(இ - ள்.) வீரமணிகளே! நம்மிடத்திலமர்ந்திருக்கும் தஞ்சைவேம்பரென்னும் நம்மினத்தாருடனே, யான் இவ்வுலகத்தை யரசுபுரிவதற்காக எனக்குப் பகைவராயுள்ளவர்களை யழிக்கும்பொருட்டு நமது சேனாபதிக

ளாதற் கிசைவீரென்று பிரார்த்திக்க, நீர் விரும்பும்போது அவ்வாறேயிசைவதுண்மையென்றுரைத்து யுத்தம் நேர்ந்தால் வருகின்றோம், ஆதலால் விடைகொடுக்கவேண்டுமென்றுகூறி விடைபெற்றுக்கொண்டு தங்களூருக்குச்சென்றார்கள். எ - று.

மன் - ஓ - அசைகள். வீரவான்களென எவ்விடத்தும் பிரசித்தியுற்றோராகலின், எங்கும் பிரகாசம்வீசுகின்ற மணிகளுக்கொப்பாக்கி, "வீரமணிகாள்." என்றும், தஞ்சைவேம்பனென்பவர் முன்னரேதன்னிடத்து மந்திரியாயிருத்தலின், "நமதுபங்கிலுறையுந்தஞ்சைவேம்பர்." என்றும் கூறினன்.

திருப்பழுவையாளர்தமதகமுறலும்பகையொழிந்துசேணிேேனாங்கிச், செருக்குழுவைக்கொடிநிமிர்ந்ததெனமகிழ்ந்தான்றஞ்சையர்கோன்றீயபாவப், பெருக்குருவாம்விக்கலன்றனியல்புரைத்துங்கேட்டியளிபிரசமாந்தி, முருக்குடைத்துத்தாதாடுஞ்சேதாம்பற்றடத்துறந்தைமூதூர்மன்னா.

(இ - ள்.) செவ்வாம்பல்கள் நிறைந்துள்ள தடாகத்தில் அம்மலர்களிலெல்லாம் வண்டுகள் முகையவிழ்த்து அவற்றினின்றொழுகும் தேனைக்குடித்து அம்மகரந்தங்களைப் பூசிக்கொண்டுலவும் புராதனமான உறையூரையரசாளும் குலோத்துங்கச்சோழனே! திருப்பழுவூரென்னும் திவ்யதலவாசிகளாகிய வீரர்நாராயணரென்னுமிருவரும் தன்னுடைய மனோபீஷ்டத்திற்கிசைந்தவளவில், தஞ்சைமாநகரத்திலிருந்த பராந்தகச்சோழன் தனதுபகைவர்களழிந்து வீரத்தின்மேம்பட்ட புலிக்கொடி ஆகாயமளாவ ஓங்கிவளர்ந்தது போன்று களிப்புற்றான். இனி கொடிய பாவத்தின் விசேடமே ஓருருவாக விளங்கிய விக்கலனென்பவன் தன்மையைக் கூறுகின்றோம் கேட்பாயாகவென்று ஒட்டக்கூத்தர் திருவாய்மலர்ந்தருளினர். எ - று.

தமதகமுறலும் என்பதற்குத் தமதரண்மனைக்கு வந்தவளவில் எனக்கூறலுமாம். களிப்பின்மேம்பட்டான் என்பார், "சேணிேேனாங்கிச்செருக்குழுவைக்கொடிநிமிர்ந்ததெனமகிழ்ந்தான்." என்றும், விக்கலன் சரிதையை விவரித்துக் கூறுதற்குமுன்னமே அவனித்தன்மையனெனத் தொகுத்துக் கூறுவான், "தீயபாவப்பெருக்குருவாம்விக்கலன்." என்றும், சோழர்கட்கு ஐந்து இராஜதானிகளுளவாகலின், பராந்தகச்சோழனைக்கூறுகையில், "தஞ்சையர்கோன்." என்றும், குலோத்துங்கச் சோழனைக்கூறுகையில், "உறந்தைமன்னா." என்றும் கூறினர். (உக)

வீரநாராயணச் சருக்கம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - எக.

---

## மூன்றாவது
# விக்கலச் சருக்கம்.

காசுறவெறுங்கதையுரைத்தமித்ராகவருகாளையர்களாகியுலவு,
மாசுமிகுபுன்கவிகணங்கவிகளாகவருளார்ந்துளநினைந்துதலையாம்,
வீசுவலெனக்கொடியுயர்த்திமுடியொட்டிடவிநோதகவியோதுமுதி
யோன், பாசமகலீசனடிநேசமுளனாகிவருபாவலர்பிரானுவலுமே.

(இ - ள்.) திரவியமடைவதற்காக வீண்கதைகளைப்பாடி அளவிறந்தவர்களாகத் திருகின்ற இளையோர்களாகிய குற்றம் மிகுந்த அற்பக் கவிவாணர்களையெல்லாம் பிரபலக் கவிவாணர்களாகும்படிச் செய்வதற்குக் கருணைகூர்ந்து திருவுள்ளங்கொண்டு நாம் தலையை வெட்டுவோமென்று ஓர்கொடி நாட்டினவரும், அறுபட்ட தலைகள் சரீரத்திலொட்டும்படி அற்புதக்கவிதைகள் பாடியருளியவரும், இயல்பாகவே பாசங்களினீங்கிய சிவபிரான் திருவடிகட் கன்புடையவருமாய் விளங்கிய அறிஞராகிய கவிச்சக்கரவர்த்தியென்னும் ஒட்டக்கூத்தர் திருவாய் மலர்கின்றனர். எ - று.

அற்புதசரிதைகளைவிடுத்து அற்பச்சரிதைகளைப் பொருளபேட்சையாற் குற்றம் நிறைந்த கவிகளிற்பாடுவோர்களைத் திருத்துவதற்காகவே அக்கொடி நாட்டினரன்றிக் கொலைபுரிதற்கல்ல வென்பதைக் குறிப்பிப்பான், "புன்கவிகணங்கவிகளாகவருளார்ந்துளநினைந்து." என்றும், ஏனைய புலவர்களெவரும் பாடாத அற்புதக்கவிபாடியவ ரென்பான், "விநோதகவியோதுமுதியோன்." என்றும், சிவபிரானுக்குரிய எண்குணங்களுள்ளே, அநாதியே பாசங்களிற்கட்டுண்ட சீவர்களை யாட்கொள்ளும் ஆற்றலை விளக்கும் இயல்பாகவே பாசங்களி னீங்குதலென்னும் ஓர்குண மிருத்தலின், "பாசமகலீசனடி." என்றும் கூறினர். எண்குணங்களாவன:—தன்வயத்தனாதல்-தூயவுடம்பினனாதல் - இயற்கையுணர்வினனாதல் - முற்றுமுணர்தல்-இயல்பாகவேபாசங்களினீங்குதல் - பேரருளுடைமை - முடிவிலாற்றலுடைமை-வரம்பிலின்பமுடைமை என்பவைகளாம். சிவபிரானுக் கெண்குணங்களுள்ளனவென்பதை, "கோளில்பொறியிற்குணமிலவேயெண் குணத்தான்-றாளை வணங்காத்தலை." என்னுந்திருக்குறளுரையானுந்தெளிக. (க)

காலவளமாரிபெயலாலமிதமானதருகானமுயர்வானமதுதோய், சாலவமெனும்பெரியதேயமுளதன்னதுதனக்குயர்வனப்பருளுமா, போலலமூகத்துமுதசாலவழியினூறிவருபொங்குபணிலங்கடளா, வாலெலாணிவரம்பிலமையுற்பொலிநலவூரெனும்வளம்பதியிருந்ததிலே.

(இ - ள்.) வளப்பத்தைத் தரத்தக்க மழையானது காலந்தவறாமற் பெய்வதனால், அளவிறந்த விருட்சங்களடர்ந்த பூஞ்சோலைகள் ஆகாயத்திற் படியத்தக்க சாலவமென்னும் பெரியதேசம் ஒன்றுண்டு. அந்தேசத்திற்கு மிக்க அழகைக்கொடுப்பதுபோல, கொழுமுனையிலுழுத சாலின் வழியாகத் தவழ்ந்து வருகின்ற சங்குகளும் முத்துக்களும் விசேடித்த வெண்ணிறப்பிரகாசத்தைக் கரைகளில் வீசிக்கொண்டிருக்கும் வயல்கள் நிறைந்த வளப்பம்பொருந்திய நல்லூரென்னும் ஓர்நகரம் அத்தேசத்திலுள்ளது. எ - று.

நாடு நகர் என்னும் இரண்டின் வளப்பங்களையும் சுருக்கிக் கூறுவான், "அமிதமான தருகானமுயர்வானமதுதோய் சாலவம்." என்றும், "பொங்குபணிலங்கடரளவாலொளிவரம்பிமையயற்பொலி நல்லூர்." என்றும் கூறினர். (௨)

நல்லறிவிரக்கமிகுபோகனெனிரட்டனிருநத்தமுளனப்பதனவா,னி
ல்லவள்கருக்கொடுமகற்பெறுமையுற்றனளிரட்டனெனிருந்ததருவி
ற், புல்லுருவியென்பதுமுளைத்ததெனலாமலதுபூவினிலுளாரையடு
வா, னெல்லணிமுதற்கிரகவேழணிலிருந்தனுருவங்கொடுமுளைத்
ததெனலாம்.

(இ - ள்.) அவ்வூரிலே நல்லுணர்ச்சியும் கருணையும் விசேடித்த போகனென்னும் பெயருடைய ஓர் இரட்டன், இரண்டு கிராமங்களுடையவனாகவும் சொற்ப ஐஸ்வரியவந்தனாகவு மிருந்தான். அவனுடைய பத்தினி கருக்கொண்டு ஓர் புத்திரனைப்பெற்றாள். அப்புத்திரன், இரட்டன் என்றிருந்த ஓர் விருட்சத்தின்கீழ்ப் புல்லுருவி முளைத்ததுபோலென்று கூறலாம். அல்லது நிலவுலகத்துள்ளாரை இம்சிக்கும்பொருட்டு, அழகமைந்த சூரியன் முதலாகக்கூறும் நவக்கிரக வரிசையில் ஏழாவதெண்ணிலிருந்த ஓர்கிரகம் மானிடவுருவமடைந்து தோன்றியதென்று கூறலாம். எ - று.

சூரியன் முதலாகக்கூறும் நவக்கிரகங்களில் ஏழாவதாயுள்ளது சனியாதலால், அச்சனியனே அவதரித்தது எனக்கூறலாமென்றபடி. (௩)

புத்திரனுதித்தமையறிந்தகமகிழ்ந்தினிதுபோகனறபோதுமிய
லாற், பத்தருமாமறைபயின்றவர்களாதுலர்பதிக்கணலிவுற்றவர்த
மக், கித்தினமதிற்றன்மளிக்குதுமெனச்சொலியெதிர்ந்தபொழுதார்
ந்தபிசுனத், தத்தகையருக்கனுவுமுற்றுதவிடானிதனையப்பொழுது
கத்திலெணுமே.

(இ - ள்.) அப்போகனென்னும் இரட்டன் தனக்குப் புத்திரோற்பத்தியானதையுணர்ந்து மனங்களித்து, இனிமையுடன் நீதிநூல்களிற் கூறியுள்ளமுறைப்படி அடியார்களாயுள்ளோர் அருமையான வேதங்களையுணர்ந்தவர்கள் யாசகர்கள் தனதுதேயத்திலுள்ள வறியர்கள் என்னும் இவர்

களுக்கு இத்தினத்திலே சொர்னதானஞ் செய்கின்றேனென்று கூறி, அவ்வாறவர்கள் வந்தபோது தனக்குச் சம்பவித்த உலோபகுணத்தால் அவர்களுக்கு ஓரணுவளவாயினும் தானம்புரியாமலிருந்தான். அப்பொழுது அவ்விரட்டன் இவ்வாறு தன்மனத்தில் நினைக்கின்றான். எ - று.

புத்திரோற்பத்தியைக்குறித்து அன்னதானம் பூதானம் கோதானம் வஸ்திரதானம் சொர்னதானம் முதலியவை செய்யவேண்டுவது செல்வமுடையோர் கடமையென நூல்களில் விதித்திருக்கின்றமையின், "அறமோதுமியலால்." என்றும், அப்புத்திரனால் விளையப்போகும் கெடுதிகட்கறிகுறியாய் மிகுந்தகோரகுணமாகிய உலோபகுணம் அவன்பிதாவுக் குதித்ததென்பார், "ஆர்ந்தபிசுனத்து." என்றும் கூறினர். பிசுனம் - உலோபம்.

என்னமதுநன்னெறியிறந்ததகம்பதியெழுந்தழுமோதைமட
வார், சொன்னமதிமாமுகமெலாமறுபொழுங்கொடுசுளித்ததுபழித்
தவிவைகள், சின்னமதிபாலகனெனத்தெளிதரும்படிதிகழ்ந்ததுசிவ
ச்செயலென்று, முன்னருறுசாதகமுதற்கருமமெனவுமுடித்துமகனெ
ன்னுமுறையால்.

(இ - ள்.) ஈதென்னே! நமது மனம் நன்மார்க்கத்திற்றவறியது. இந்நகர முழுமையும் அழுகுரலோசை விசேடித்தது. மகளிர்களுடைய பொன்னிறமமைந்த சந்திரவட்டமான முகங்களெல்லாம் அழகற்றிருப்பதுடன் சுளிப்பையுமடைந்தன. இத்தன்மையான கெட்டகுறிகள், நமதுபுத்திரன் அற்பகுணமுடையபிள்ளையென்று நாமுணர்ந்துகொள்ளும்படி சிவபெருமான் கிர்த்தியத்தால் விளங்கியதென்றெண்ணி, எப்படியாயினும் தனதுபுதல்வனென்னும் முறைமையால், முதலிற்புரியவேண்டுவதாகிய சாதகன்மமுதலிய மற்றுள்ள கிரியைகளையும் செய்துமுடித்து. எ - று.

யாவருக்கும் தானஞ்செய்யவேண்டுமென் றெண்ணிய தன்மனதில் உலோபகுணமுதித்ததும், அழுகுரலோசைமிக்கதும், மகளிர்கள்முகம்வாடியிருப்பதும் ஆகிய இக்குறிகள் நமது புத்திரனாலுதிக்கும் தீமைக் கறிகுறிகளாமெனக் கருதினானேனும் சாதகன்மமுதலிய கிரியைகளை மாத்திரம் குறைவின்றி முடித்தனனென்றபடி. (௫)

விக்கலனெனச்சொலுரிமைப்பெயருரைத்துமதிவெண்கலையினு
ணூலமார், தக்கவகையானனிவளர்க்கமதிமுற்றிவருடங்களொருப
ஞ்சமுதிரப், புக்கனருங்கலையுரைப்பவரிடந்தனது புந்திதெளிவுற்
றொரிரதங், கைக்களிறுளைப்புரவியூர்தறனுவிஞ்சையிலைவகைவரவு
ணர்ந்தனனரோ.

(இ - ள்.) அப்புத்திரனுக்கு விக்கலனென்னும் உரிமைப்பெயர்கூறி, சந்திரனது வெள்ளிய பிறையைப்போன்று தினந்தோறும் மேன்மையமைந்த தகுதியான முறைமையில் வளர்த்துவருகையில், மாதங்கள் சென்று ஐந்துவருடங்களாக, அருமையான நூல்களையோதுவிக்கும் ஆசாரியரிடத்தடைந்து, தன்னுடைய மனதில் அந்நூல்களையுணர்ந்து தெளிந்து, நிகரற்றதாகிய தேரேற்றம் துதிக்கையுடைய யானையேற்றம் பிடர் மயிருடைய குதிரையேற்றம் வில்வித்தை என்னும் இவைகளை ஒழுங்கமையத் தெளிந்தனன். எ - று.

புத்திராபேட்சையாற் பாராட்டிச் சீராட்டி வளர்த்தானென்பார், "நலமார்தக்கவகையானனிவளர்க்க." என்றார். (சு)

## வே று.

சீதமுகைமுருக்கவிழ்ந்துசெந்தாதுபுடைபரந்துதேறலூற்றக், காதமணந்தரவறிந்தபூவைகருங்குயிலாலுங்கானமெல்லாம், போதமருங்குமாருடன்விளையாடும்படைபயிலும்புக்குமீளுந், தாதைமனங்களிதூங்கநனகுலவிக்கலேபயின்றுதனியிருக்க.

(இ - ள்.) தண்ணிய மலரரும்புகள் இதழ்கள் விண்டு செவ்விய மகரந்தங்கள் பக்கத்திற்பரவித் தேனைச்சொரிய, அப்போது அம்மலரின்வாசனை காததூரம் பரிமளிக்க, அதையுணர்ந்த நாகணவாய்ப்புட்களும் கருங்குயிலும் ஒலிக்கின்ற சோலைகள்தோறும் நல்லறிவுடைய பிள்ளைகளுடனே விளையாடுவான். ஆயுதப்பயிற்சிபுரிவான். வீட்டிற்குப்போய்த்திரும்புவான். இவ்வாறு தனது பிதா மனமகிழும்படி நன்றாகச் சஞ்சரித்துவரும் நாளில், ஓர்நாள் சாத்திரம்படித்துக்கொண்டு தனியாயிருக்கும்போது. எ - று.

போதமருங்குமருடன் என்பதற்கு மலர்களைவிரும்பி அங்குவந்த பிள்ளைகளுடன் எனக் கூறினுமாம். (எ)

சித்தசலனந்தவிரோர்முனிவரன்மற்றவன்மனையிற்செய்யபாதம்,வைத்தபெரும்பாக்கியத்தைக்கண்டுவகைகொண்டினியவசனத்தாலும், பத்திசெயுமனத்தாலுமுடிவணங்கியடிவிழவப்பாலற்காணு, முத்தனெருமனுவோதிச்சோமநாதன்பதநீமுன்னுகென்றான்.

(இ - ள்.) அலைவற்ற மனமுடைய ஒப்பற்றவராகிய ஓர்முனிவர், அவ்விக்கலன்வீட்டில் தம்முடைய சிவந்ததிருவடிகளைச்சாத்திய பெரும்புண்ணியத்தைப்பார்த்து மனங்களித்து, இனிமையான வார்த்தைகளாலும் மெய்ப்பத்தியுடைய இருதயத்தாலும் சிரத்தைத்தாழத்தித் திருவடிகளிற் பணிய, அம்முனிவர் அப்புதல்வனை நோக்கி, அவனுக்கு ஓர் மந்திரத்தையுபதேசித்து, சோமநாதேஸ்வரரின் திருவடிகளை நீ தியானிக்கக் கடவாயென்று கட்டளையிட்டனர். எ - று.

அந்நகரத்திலுள்ள சிவபெருமானுக்குச் சோமநாதேஸ்வரரெனத் திருநாமமாகலின், "சோமநாதன்பதம்" என்றார். ஒருமனுவென்றது - திருவைந்தெழுத்தை. (௯)

ஏற்றமதியிதுவென்றுகடைப்பிடியாவிக்கலனவ்வீசனேச, மாற்றியனம்பானீயங்கண்படுவதறமனுவையன்பாலோதிப், போற்றியிருதிங்களிதுநோற்றிடலுங்காருணியம்பொங்குமீச,னேற்றினுமையொடுந்தேவர்முனிவர்சூழாம்பதமிறைஞ்சவெளியனானான்.

(இ - ள்.) இதுவே நமக்குத்தக்க போதனையென்று விக்கலன் உறுதிகொண்டு, அன்னம் தண்ணீர் நித்திரை இவைகளையொழித்துச் சிவபிரானைப்பூசித்து, அத்திருவைந்தெழுத்தை அன்புடன் தியானித்துத் துதித்து, இரண்டுமாதம் அகோராத்திரமாக இவ்வாறநுஷ்டிக்கையில் கருணை விசேடித்த சிவபெருமான் இடபவாகனத்தின்மீது உமாதேவியாருடன் தேவர்கள் முனிவர்கள் என்னும் இவர்களுடைய கூட்டம் தமது திருவடிகளைப் பணிந்துவரும்படி காட்சியளித்தருளினர். எ - று.

தவஞ்செய்வோர் நித்திரை அன்னபானாதிகள் என்னுமிவற்றை வர்ஜிக்கவேண்டுவது முறைமையாகலின், "அனம்பானீயங்கண்படுவதற." என்றும், எவ்விரதமும் தியானமும் அன்பிலார்க்குப் பலியாதாகலின், "மனுவையன்பாலோதி." என்றும், திருமாலாதி தேவர்கட்கும் காண்டற்கரியவராகலின், "எளியனானான்." என்றும் கூறினர். (௧௦)

கண்டெழுந்துமும்முறைசூழ்ந்தையனடிவணங்கியிருகண்ணீர்வாரக், கொண்டலெனக்கைம்மாறு கருதாதுவந்துதவுங்கோவேயேழை, பண்டையநாள்செய்தவமே சோமநாதப்புனிதபரமேயால, முண்டவனேயெனப்பரவியுச்சிமிசைக்கரங்கள்குவித்தொடுங்கிநின்றான்.

(இ - ள்.) விக்கலன் சிவபிரான் காட்சியைப்பார்த்தவுடனேயெழுந்து மூன்றுவிசை பிரதக்ஷணம் புரிந்து அப்பெருமான் திருவடிகளைப் பணிந்து இரண்டு கண்களிலும் ஆனந்தபாஷ்பம் சொரிய, மேகத்தையொத்து எதிருதவி எண்ணாது வலிய எழுந்தருளிவந்து கிருபை பாலிக்கும் தலைவரே! ஏழையாகிய அடியேன் முற்பிறவிகள்தோறும் செய்துவந்த தபோபலம்போன்றவரே! தூயராகிய சோமநாதக்கடவுளே! ஆலகாலவிடத்தை யமுதமாயுட்கொண்டவரே! என்றுதுதித்துச் சிரமேற் கரங்களைக்குவித்து மனவொருமைப்பாட்டுடன் எதிரிலே நின்றான். எ - று.

மனோலயம் வாய்க்காவிடத்துச் சிவதரிசனத்தாற் பயனின்றாகலின், "ஒடுங்கிநின்றான்." என்றார். (௧௧)

எனைவேண்டியிக்நோன்புநோற்றனைநீயிகுதுங்கேளென்னவிச, னனைவுறுசெங்கமலவடிமிசைப்பணிந்தெனுண்டவனேநாயேனுன்ற ன், புனிதவுருக்காட்சியுற்றேனிவ்வுலகிலெவ்விடத்தும்போகமீள, நி னைபுமனவேகமுடனந்தரத்தேசெலச்சுழலநேயமாக்கள்.

(இ - ள்.) அக்கால் காட்சிகொடுத்த சிவபிரான் விக்கலனை நோக்கி, நீ எதைவிரும்பி இத்தவம்புரிந்தனையோ அப்பேற்றைக் கொடுக்கின்றோம் கேட் பாயாகவென்று திருவாய்மலர்தலும், விக்கலன் குளிர்ந்துள்ள செந்தாமரை மலர் போன்ற அப்பெருமான் திருவடிகளில் வணங்கி, எனது ஆண்டவரே! நாயினுங்கீழ்ப்பட்ட அடியேன் தேவரீருடைய தூய்மையமைந்த திருவு ருவத்தைத் தரிசிக்கப் பெற்றேன். இனி இந்நிலவுலகத்திலுள்ள எவ்விடங் கட்கும் செல்லவும் திரும்பவும், நினைக்கின்ற மனோவேகத்துடன் ஆகாய மார்க்கமாய்ச்சென்று சுற்றவும், வல்லபமுள்ள குதிரைகள். எ - று.

நனைவுறு செங்கமலவடி என்பதை, "நனைந்தனையதிருவடியென்றலை மேல் வைத்தார் நல்லூரெம்பெருமானார் நல்லவாறே." என்னும் ஆளுடைய வரசுகளின் அருள்வாக்கானுமுணர்க. (கஉ)

வேண்டுமொருநான்குடலமெவ்விதச்சத்திரத்தோடுவெஞ்சரத் தாற், காண்டகையவெந்நெருப்புகக்கவரும்படையதனுற்கதையாற் சின்னம், பூண்டறியாவொருகவசமென்னிரண்டுகரமேந்தப் புவன மெல்லா, மாண்டுவிழும்படிவமுறும்வச்சிரவாள்கதைவேண்டுமேற்று மையா.

(இ - ள்.) ஒப்பற்றதாய் நாங்குவேண்டும். அடியேனுடைய சரீரம் எவ்விதப்படைகளாலும் கொடிய பாணங்களாலும் காணுதற்கரிய கடுே நெருப்புப் பொறிகளைக் கக்குகின்ற தேவாஸ்திரங்களாலும் கதையினாலும் அழிவுபடாத ஓர்வச்சிரகவசமும், அடியேனுடைய இருகைகளிலும் தாங்கத் தக்கதாய் உலகமனைத்துமெதிர்க்கினும் அழியத்தக்க உருவுடைய வச்சிரவாள் வச்சிரக்கதை என்னும் இவைகள் பாலித்தருளவேண்டும். ஐயனே! இன்னும். எ - று.

பொதுவாகச் சுத்தவீரர்கள் தாங்குகின்ற அஸ்திரசஸ்திரங்களா லழி யாமைவேண்டி முதலில், "எவ்விதச்சத்திரத்தோடுவெஞ்சரத்தால்." என் றும், அதன்பின் தேவாஸ்திரங்களாலும் அழியாமையைவேண்டுவான்; "வெந்நெருப்புகக்கவரும்படையதனால்." என்றும், தனக்கும் ஓர்வச்சிரக் கதைவேண்டுமாகலின் அது ஏனையகதைகளால் அழியாமை வேண்டுவான், "கதையால்." என்றும் கூறினனென்க. (கங)

மண்ணவர்கள்கண்டறியாமந்திரமுந்தந்திரமுமாயத்தேரு, ம ண்ணலெனக்கருடியெனப்பரமேசனன்குதிதறியர்யாது, முண்ணி

னையாயிவைபதறிப்போகவிழைவாற்கேட்கலுற்றாயிதெந், தண்ணளியானீபிழைக்கத்தந்தனமென்றவையருளிச்சாற்றுகின்றான்.

(இ – ள்.) நிலவுலகத்தார்கள் எக்காலமும் கண்டறியாத மந்திரமுந்தந்திரமும், மாயமமைந்த இரதமும், அண்ணலே! அடியேனுக்குப் பாலிக்க வேண்டுமெனப் பிரார்த்திக்க, அதைத்திருச்செவி யேற்றருளிய சிவபெருமான் அவனைநோக்கி, நீ நன்மைதீமை யுணராய். எதையும் மனதிற் சிந்திக்கவில்லை. இகலோகாபேட்சையால் அவசரமுடையவனாய் இவ்வரங்களைக் கேட்டனை. இதனை எமதுகாருணியத்தால் நீஉயிருடன் வாழும்படி யளித்தோமென்று அவ்வரங்களைப் பாலித்து, மேலும் திருவாய் மலர்கின்றனர்.

நீ கேட்டவை யனைத்தும் இகலோகவாழ்க்கையை யபேக்ஷித்தவைகளாகையால், இவைநீ ஈடேறத்தக்கவைகளன்றென்பார், “நன்குதீதறியாயாதுமுண்ணினையா யிவைபதறிப் போகவிழைவாற்கேட்க லுற்றாய்.” என்றும், இத்தகைய வரங்கள் நீ உயிர்வாழ்ந்திருத்தற்கு மாத்திர முதவியேயன்றி வேறன்றென்பார், “நீபிழைக்க.” என்றும் திருவாய் மலர்ந்தனர். (கச)

இருடியுனக்குதவியதுமிதுவேண்டியலநீயுமிந்தநோன்பு
புரியுமுதலிதுவரையுங்கருதாதுநடுகினைந்தபுன்மையாலிவ்
வரமுநடுவகலுமெனவணங்கியெமதையவநின்மாளாவண்ணந்
தருதியிதுன்றிருவருளுக்கழகென்றான்பரமனதுதந்தகன்றான்.

(இ - ள்.) முன்னுன்னிடத்தில் வந்தமுனிவன் உனக்குபதேசித்ததும் இவ்வரங்களைப் பெறும்படியல்ல, நீயும் இத்தவம்புரியத் தொடங்கியது முதலிதுவரைக்கும் இவ்வெண்ணங்கொள்ளாமல் நடுவில் நினைத்துக்கொண்டதீமையால், இவ்வரங்களும் நடுவிலே அழிவையடையும் எனத் திருவாய் மலர்ந்தருள, உடனே விக்கலன் பணிந்து, எமது பெருமானே! அவ்வாறு வரமழிவதனால் அடியேனிறவாதவாறு வரம் பாலிக்கவேண்டும், இதுதான் தேவரீர் திருவருளுக்குப் பாங்காகுமெனப் பிரார்த்தித்தான். சிவபெருமான் அவ்வாறே பாலித்துக் கரந்தருளினர். எ – று.

தவம்புரிவோர் பிரதமத்திற் சங்கற்பித்துக்கொண்டு இடையில் மாறுபடாது நிலை நின்றான் மாத்திரமே அவ்வரங்கள் நிலைக்குமென்பதையுணர்த்துவான், “நடுநினைந்தபுன்மையாலிவ்வரமுநடுவகலும்.” என்றனர். சிவபிரான் திருவாக்கின்படி இவ்வரங்கள் நடுவிலழிவதையும், அவ்வாறழிந்த போதும் உயிர் நீங்காமையையும் பின்வரும் சரித்திரங்களா லுணர்க. (கரு)

பெற்றபடையொடுகவசமதுதாங்கிப்பரியிரதம்பிறங்கவேறி, யுற்றவிடந்தனியுலவியெந்நாடுங்கண்டிந்தவுலகமெல்லாஞ், சுற்றிவருங்காவிரியாலெந்நாட்டுநன்னாடாந்தொன்னாடென்னக், கற்றவர்கள் சொற்றவிசைத்தென்னாட்டில்வளமோங்குகடம்பூர்வந்தான்.

(இ - ள்.) விக்கலன் - தான்பெற்றுக்கொண்ட வச்சிரவாள் வச்சிரக் கதை வச்சிரக்கவசம் என்னும் இவைகளைத் தாங்கிக்கொண்டு, மாயக்குதிரைகள் பூட்டிய தேரில் விளக்கமுறும்படியேறி, தன்மனதில் நினைத்த இடங்கட்கெல்லாம் தனியாகச் சஞ்சரித்து, இந்நிலவுலக முழுமையுமுள்ள எல்லாநாடுகளையும் பார்த்துக்கொண்டு, சூழ்ந்து பாய்கின்ற காவிரி நதியினால் எல்லா நாடுகளினும் சிறந்த நாடென்றும் புராதன நாடென்றும் கற்றுணர்ந்த பெரியோர்கள் கூறியுள்ள புகழ்வாய்ந்ததாகிய தென்னாட்டிலே, வளப்பம் மிக்க கடம்பூருக்குவந்து சேர்ந்தான். எ - று.

காவிரி சூழ்ந்த சோழநாடே சிறந்ததெனப் பெரியோர்கூறியுள்ளாரென்பதை, "தண்ணீருங்காவிரியேதார்வேந்தன்சோழனே - மண்ணாவதுஞ்சோழமண்டலமே - பெண்ணாவா - ளம்பொற்சிலம்பியரவிந்தத்தாளணியுஞ் - செம்பொற்சிலம்பேசிலம்பு." என்னும் வெண்பாவானு முணர்க. (௧௬)

தன்னகத்திலொருநினைவுகொண்டாழம்பாதலம்போஞ்சாகரந்தா, னென்னவகன்றகலமொடுநீளமீரைம்பான்வேலியெண்ணிற்பேச, நின்னயமாம்பேரகழிமுன்னமைத்தவ்வகழிநடுநின்றிருக்க, மின்னுடனேவழுவழுத்தவெஃகத்தூணெட்டமைத்தான்விக்கலன்றான்

(இ - ள்.) விக்கலனென்பவன் தன்மனதில் ஓரெண்ணங்கொண்டு, ஆழமானது பாதாளலோகம் வரையிற் செல்லுகின்ற சமுத்திரமென்று சொல்லும்படி விசாலித்து கணக்கில் கூறுமிடத்து நூறுவேலி அகலமும் நூறுவேலி நீளமுமுடையதாய் நிலைபேறாயுள்ள பெரிய அகழி ஒன்றை முன்னே ஏற்படுத்தி, அவ்வகழியின் நடுவே நிற்கத்தக்கதாய் வழுவழுப்புடனே ஒளியுடைத்தாகிய எழுகுத்தம்ப மெட்டைச் செய்துநட்டான். எ - று.

வேலியென்பது ஐந்துகாணிகள் கொண்டது. எனவே ஐந்நூறுகாணி அகலமும் அவ்வளவே நீளமுமுள்ள தென்றபடி. எண்ணிற்பேச என்றமையால், இன்னும் மேம்பட்ட அளவையுடையதென்பது கருத்துப்போலும்.()

அத்தூண்கணூறடியின்வட்டவகலப்பருமனாகுநீளம், பத்தேழுயோசனையாந்துலாங்கைதகடாதியதாற்பண்ணியையமபான், வித்தாரயோசனையிலவற்றின்மேற்பரப்பிநனிவிளங்கத்தைத்து, சத்தானவச்சிரவெண்பளிங்காதிகொண்டுமதில்சமைத்தான்மன்னோ.

(இ - ள்.) அவ்வெழுகுத் தம்பங்கள் ஒவ்வொன்றும் சுற்றளவாகிய பருமன் நூறடியுடையது. அவற்றின் நீளமோ ஒவ்வொன்றும் பதினேழுயோசனைதூரமாகும். அதன்மேல் துலாக்கள் கொடுங்கைகள் தகடுகள் முதலியன அவ்வெழுகினாலேயே செய்து ஐம்பது யோசனைதூரம் பரவவைத்து நன்றாய் விளங்கும்படிதைத்து, வலியும் வெண்மையுமுடைய வயிரக்கற்கள் பளிங்குக்கற்கள் முதலியவைகளைக் கொண்டு மதில் ஏற்படுத்தினான்.

மன் - ஓ - அசைகள். அவ்வெட்டுத் தம்பங்களையும் ஐம்பதுயோசனை சுற்றளவுள்ளதாக அஷ்டதிக்குகளினும் நட்டு, அவற்றின்மேல் உத்திர முதலியவைகளைப்பரப்பி, இவைகள் கழலாவண்ணம் ஆணிகள் தைத்துச் சுற்றிலும் வயிரக்கற்களாலும் பளிங்குக்கற்களாலு மதிலமைத்தான் என்றபடி.()

மேகபடலங்களெலாந்தன்னரையிலுடையாகவிக்கியோங்கி, நாகநகரங்காணுங்கோட்டையுளேகட்டுடைந்துநனையுகுப்பத், தாகமகலப்பானஞ்செய்துமதுகரமுரலுந்தண்பூவாசச், சேகரமேசெய்யுமிளங்காலதனலசைவனத்தெண்செப்பவொண்ணு.

(இ - ள்.) மேகங்களை யெல்லாந் தன்னிடையிற் றுகிலாகக் கட்டிக்கொண் டுயர்வுடைத்தாகி, தேவலோகத்தை எட்டிப்பார்க்கின்ற அக்கோட்டைக்குள்ளே, இதழவிழ்ந்து தேனைச்சொரிய அதனையுணர்ந்த வண்டுகள் தங்களுடைய தாகந்தீரும்படி குடித்துக் கீதங்களைப் பாடுகின்ற குளிர்ச்சியுற்ற மலர்களின் மணத்தைச் சேர்த்துக்கொண்டு வருகின்ற தென்றற்காற்றினால், அசைகின்ற சிங்காரவனங்களின் தொகை சொல்லமுடியா. எ - று.

மேகமண்டலத்தைத் தாண்டியுள்ள உன்னதமுடைய சோலைகளென்றபடி. (கஅ)

செம்பவளக்காலனந்தன்பெடையோடுகளிதூங்கித்தேறலுண்ணு, மம்புயமாதியநீர்ப்பூவலர்ந்தபூந்தடமனந்தமாணிப்பொன்னல், விம்பமணியுடனேங்கிவிளங்குமணிக்கற்படியின்மேவுமாதர், தம்படிவமொன்றனந்தங்காட்டுநீரகலாததடமனந்தம்.

(இ - ள்.) சிவந்தபவளம்போலும் கால்களைப்படைத்த அன்னப் பறவைகள் தங்கள்பெட்டைகளுடனே களிப்புற்றுத் தேனைக்குடிக்கின்ற சிறந்த தாமரைமுதலிய நீர்ப்பூக்கள் விகசித்துள்ள தடாகங்கள் அளவில. மாற்றுயர்ந்த பசும்பொன்னாற் செய்தமைத்துள்ள அழகின் மிகுத்துவிளங்கும் பதுமைகளமைந்து, நவமணிகளாற் படிகளமைந்து, அப்படிகளில் நீராடவருகின்ற மகளிர்களின் வடிவம் ஒவ்வொன்றையும் அனந்தமாகக் காட்டுகின்ற நீருறுத தடாகங்கள் அளவில. எ - று. (கக)

அங்கொருபூங்காவினிடைமாதரொடுசலக்கிரீடையாடநீரந், தங்குநவமணிவிளங்குந்தடமழகுபெறவியற்றித்தபணியத்தாற், புங்கமிகுமணிமாடநாற்புறமுஞ்செய்தவற்றிற்புதுமைதோன்ற, விங்கிதமாயாலிங்கனதிகரணச்சித்ரமிசையவாற்றி.

(இ - ள்.) அவ்விடத்துள்ள ஓர் மலர்ச்சோலையின் மத்தியில், மகளிர்களுடன் தான் ஜலக்கிரீடை யாடும்படி, நீர நிலைத்திருக்கும் ஒன்பதுவகை இரத்தினங்களும் பதித்துள்ள படிகள் பிரகாசிக்கின்ற ஓர் தடாகத்தை அழ

கமையச்செய்து, அந்தடாகத்தைச் சூழ்ந்த நாற்றிசைகளிலும் பசும்பொன்னால் உயர்வோங்கிய அழகிய மாளிகைகளை யமைத்து, அம்மாளிகைகளிலே அதிசயம் விளங்கும்படி இனிமையுடனே ஆலிங்கனமுதலாகிய கலவிக்குரிய கரணங்களாகிய சித்திரங்களைப் பொருந்தச் செய்து. எ - று.

ஜலக்கிரீடைத் தடாகமாகலின், இதற்கு நாற்புறத்தினும் மணிமாடங்களும் அம்மணிமாடங்கள்தோறும் கலவிக்குரியகரணச்சித்திரங்களும் அமைத்தானென்க. மணிமாடம் என்பதற்கு மணிகளாலமைத்த மண்டபங்களெனினுமாம். ஆலிங்கனமுதலாகச் சொல்லத்தக்க கரணங்கள் நாற்பத்தொன்பதாகலின், அவற்றைத் தொகுத்து, "ஆலிங்கனாதிகரணச்சித்ரம்." என்றார். (உக)

அரசமணிமண்டபமும்பந்தாடுமேடைகளுமணியினோங்கப், புரிசைபசமணியணியாநெடுமாடவீதிகளும்புலமைசான்ற, விரசமதிமந்திரிகள்வாழுமகமுஞ்சமையமிசையவோதிப், பரசுசுகசாரணருமாகதரும்வாழுமகம்பண்பிற்செய்தான்.

(இ - ள்.) அதன்பின் அழகுதோன்றும்படி அத்தாணி மண்டபமும் பந்தாடும் மேடைகளும் அமைத்து, மதிலுக்குள்ளாக அழகின் மேம்பட்டதாய் வரிசைவரிசையாயிருக்கும் நீண்ட மாடவீதிகளும், கல்விரசமிக்க இனிமையான அறிவுள்ள மந்திரிகள் வாழ்கின்ற மாளிகைகளும், தருணமறிந்து இசைவானவற்றைக்கூறிப் பணிகின்ற வேவுக்காரர்களும் மாகதர்களும் இருக்கத்தக்க மாளிகைகளும் அழகுடனியற்றினான். எ - று.

சிவபெருமானருளத் தான் பெற்றுக்கொண்ட வரத்தால், ஒரு அரசனைப் போலவே தன்னைமதித்து, அரசருக்குரித்தாகிய மந்திரிகள் சுகசாரணர்கள் மாகதர்கள் என்று சொல்லத்தக்க இத்தகைய அங்கத்தினர் வசிக்குமிடங்களும் அமைத்தானென்க. (உக)

பன்னகமெட்டாற்பரிக்குமுலகமெனவெண்டூணம்பாரித்துள்ள, தன்னிகரிலிப்பெரியமணியாணவெழினகரத்தடநீர்பாய, வுன்னதமாகித்தளிர்த்துக்கிளையோடியலர்ந்துகனியோங்கத்தேமாப், பொன்னுருவச்சுளைபுதவுந்தீம்பலாத்தெங்கீச்சுபூகந்தாலம்.

(இ - ள்.) அஷ்டமாநாகங்களாற் சுமக்கின்ற உலகத்தைப் போன்று எட்டுத்தூண்களாற் சுமக்கப்பட்டுள்ளதும், தனக்கொப்பற்றதும், இரத்தினமயமான பெரிய கோட்டையுள்ளதுமான அழகிய அந்நகரத்துள்ள தடாகங்களின் நீர்பாய்வதால், அதியுயரமா யோங்கித் தளிர்கொண்டு கிளைகள் பரவிப் புஷ்பித்துக் கனிகள் விசேடித்து விளங்கும்படி, மாமரங்களும் பொன்போன்ற நிறமமைந்த சுளைகளைக்கொடுக்கும் மதுரமாகிய பலாமரங்களும் தென்னைமரம் ஈச்சமரம் கமுகு பனைமரம் இவைகளும். எ - று.

சுந்தரமாமடலவிழும்பூங்கமுகுபாசிலையதூயவாழை, கந்தமல ர்ச்சண்பகம்வெண்மந்தாரமல்லிகைதண்கடிகொள்சாதி, பந்தரினம ருமுருகார்பன்னூட்டுச்செடிமரமென்பாத்தியெல்லா, மெந்திரத்திற் றந்திரமாயவ்வகழிநீர்தடம்பாயிசைவுஞ்செய்தான்.

(இ - ள்.) சிறந்த அழகுடைய பாளைகள் விரியும் மேன்மையமைந்த கமுகமரங்களும், பச்சிலையையுடைய சுத்தமமைந்த வாழைமரங்களும், மணமுள்ள மலர்கள் நிரம்பிய சண்பகமரங்களும், வெண்மந்தாரை மரங் களும், மல்லிகை மலர்கள் குளிர்ந்தமணமுள்ள சாதிமல்லிகை மலர்கள் என் னும் இவைகள் மலர்ந்துள்ள பந்தல்வகைகளும், மருவும் இன்னும்பல தேய த்துள்ள வாசனைவீசும் செடிகள் மரங்கள் என்னும் இவைகளின் பாத்திகட் கெல்லாம், எந்திரங்களின்வழியாய் யுத்தியுடனே அவ்வகழிநீர் தடாகங்களிற் பாயும்படியான பொருத்தங்களும் அமைந்தான். எ-று. இரண்டும் குளகம்.

தென்றலிளம்பூங்காவின்றுதளைந்துதற்படியத்தெருவுலாவு, ம ன்றிலினம்பூவைபுறவாதியபல்பறவைமுனமாடுமஞ்ஞை, மன்றமெ, ணவளிபாடுங்கிள்ளைபெடையொடுகொஞ்சும்வானவன்னஞ், சென் றினியதடமூலவியிளைப்பாறிமீண்டேகுந்தேவலோகம்.

(இ - ள்.) தென்றற்காற்று அழகிய இளஞ்சோலைகளி லுள்ள மகரந் தங்களில் முழுகி, அவை தன்மேற்படியும்படி பெற்றுக்கொண்டு வீதிகளி லுலாவும். அச்சோலைகளிலுள்ள அன்றிற்பறவைத் தொகுதிகள் நாகண வாய்ப்புட்கள் புறவுமுதலிய பறவைகள் கண்டு களிக்கும்படி மயில்கள் நட னமாடும். அச்சோலைகளைச் சபையாகவெண்ணி வண்டுகள் கீதம்பாடும். கிளி கள் தங்கள் பெட்டைகளுடன் கொஞ்சிக்கொண்டிருக்கும், தேவலோகத்து அன்னப்பறவைகளும் அச்சோலைகட்கு வந்து, அங்குள்ள இனிமையானதடா கங்களில் உலாவி இளைப்பாற்றிக்கொண்டு திரும்பித் தங்கள் தேவலோகத் திற்குச் செல்லும். எ - று.

ஆடல்பாடலிரண்டும் அச்சோலைகளில் நடந்தனவென்பார், "ஆடுமஞ் ஞை." எனவும், "அளிபாடும்" எனவும் கூறினர். தேவலோகத்து அன்னங் கள் அச்சோலைகளில் வந்துலாவி இளைப்பாறிச்செல்லு மென்றதனுல், அச் சோலைகளின் குளிர்ச்சியும் உன்னதமும் விளக்கியவாறென்றறிக. (உ௪)

அத்தினடுவிற்பவளக்காலணந்தங்கொடுநிறீஇயரியிற்போதி, வை த்துயருமாடகவிதானமதுமேலுயர்த்திமணியின்மின்னு, முத்திரமிட் டுப்பனிருபொற்கலசமும்பகலிஞெளிரவேற்றிச், சுற்றிநிரைநிரையா கவெண்டாளமணிமாலைசுடரத்தூக்கி.

(இ - ள்.) அச்சோலையின் மத்தியில் பவளத்தாற் சணக்கிறந்த கால் களைநாட்டி, பச்சைக்கற்களால் போதிகைகணிறுத்தி, மேலே மாற்றுயர்ந்த

பசும்பொன்னால் மேற்கட்டிதூக்கி, ஒளிவீசும் இரத்தினங்களால் உத்திரம் போட்டு, அதன்மீது பன்னிரண்டு பொற்கலசங்களைச் சூரியனைப்போற் பிரகாசிக்கும்படி வைத்து, அதைச் சுற்றிலும் வரிசைவரிசையாக ஒளிவிளங்கும்படி வெண்ணிறமமைந்த முத்துமணிமாலையைந் தொங்கவிட்டு. எ - று.

அதில் எனற்பாலது எதுகைநோக்கி அத்தில் என வலுத்து நின்றது. ஆதித்தர்கள் பன்னிருவராகலின், இக்கலசங்கள் பன்னிரண்டையும் அவர்கட்குவமித்து, "பனிருபொற்கலசமும்பகலினொளிர." என்றார். (உரு)

பாசொளியகற்படுத்த தூயநிலமரியினெருத்தம்பரிக்கு
மாசனமுண்டாக்கியதனிருபுறமும்பொன்னுலகரம்பைமானத்
தேசினியங்கும்பதுமைபலவவற்றுளொன்றுமணித்தீபமேந்தும்
வீசுமிரண்டாருகளைத்தென்றனறுங்காலினிள்வேனிலென்ன.

(இ - ள்.) பசுநிறமமைந்த மரகதக்கற்கள் பதித்துள்ள பரிசுத்தமான பூமியிலே, ஆண்சிங்கங்கள் சுமக்கின்ற ஆசனத்தை ஏற்படுத்தி, அவ்வாசனத்தின் இரண்டுபக்கங்களினும் தேவலோகத்து அரம்பையரை யொத்து அழகமைந்துள்ள பதுமைகள் அனந்தமாம். அவற்றுள்ளே ஓர்பதுமை, தன்கரத்தில் இரத்தினதீபம் தாங்கும். இரண்டு பதுமைகள், இளவேனிற் பருவத்து வீசும் நறுமணமுள்ள தென்றற் காற்றைப்போல வெண்சாமரைகளை வீசும். எ - று. (உசு)

ஒன்றினியமாமகரயாழெடுத்துநரம்புளறியொலியுண்டாக்கு[மற்றை
மொன்றுபெருந்தண்ணுமையைத்தாளத்திற்கேற்றவகையொலிக்கு
யொன்றுநடமாடுமபிநயமாகமுன்வளைக்கையொளிரநீட்டி [கே.
யொன்றுபலவிசைபாடும்பாவனையாய்த்தலையசைத்தேயுலவுமாங்

(இ - ள்.) ஓர்பதுமை, இனிமையும் சிறப்புமமைந்த மகரயாழை யெடுத்துக்கொண்டு அதிலுள்ள தந்திகளைமீட்டிக் கீதம்விளைக்கும். மற்றோர் பதுமை, பெரியமத்தளத்தைத் தாளத்திற்கமையும்படி முழக்கும். வேறோர் பதுமை, வளையலணிந்துள்ள முன்கையைப்பிரகாசிக்கும்படி நீட்டிக்காட்டி அபிநயங்களுடன் நிர்த்தனஞ் செய்யும். பின்னோர்பதுமை, பல இராகங்களைப் பாடுகின்ற பாவனையாகத் தலையை யசைத்துக்கொண்டு அவ்விடத்தில் உலாவிக்கொண்டிருக்கும். எ - று. (உஎ)

பலசமரம்பொருதுசிலீமுகங்கொண்டுவிற்றொடுக்கும்படியுலாவும்
பலவடிவாள்கையேந்தியோடிவருங்கண்டவர்கள்பாறும்வண்ணஞ்
சிலசின்னமெடுத்தூதுஞ்சிலபூரிதொட்டுதுஞ்சிலகைகொட்டுஞ்
சிலவென்றிகொண்டுவருமரசரெனச்செயசங்கந்தெளிவினூதும்.

(இ - ள்.) இன்னும் பல பதுமைகள் ஒன்றுடனொன்று போராடி அம்புகளை எடுத்துக்கொண்டு வில்லிற் பூட்டும்படி உலாவிக்கொண்டிருக்கும்.

இன்னும் பலபதுமைகள் பார்த்தவர்கள் அச்சமுற்றேடும்படி கூர்மையான வாளா யுதத்தைக் கையிலெடுத்துக்கொண்டு ஓடிவரும். இன்னும் சிலபதுமைகள் எக்காளத்தை யெடுத்து ஊதிக்கொண்டிருக்கும். இன்னும் சிலபதுமைகள் கைகொட்டிக்கொண்டிருக்கும். இன்னும் சிலபதுமைகள் போரில் வெற்றியடைந்து வரும் அரசர்களைப்போலத் தெளிவாக வெற்றிச்சங்கம் ஊதிக்கொண்டிருக்கும். எ - று. (உஅ)

தானுள்ளகற்பமெலாம்வாழவகையுண்ணிலையாச்சதுரமாக, மீனுள்ளவண்டமுறவெழுநிலையமணிமாடமிக்கவாற்றித், தேனுள்ள மொழிமடவார்சிறையிருக்குமணிமாடஞ்செய்துவானக், கானுள்ள பொன்னுலகமிதுவென்னச்செய்தமைத்தான்காளேபின்னும்.

(இ - ள்.) வழங்கிவந்துள்ள கற்பங்கடோறும் தான் வாழ்வதற் குரிய காரணத்தை மனதிலெண்ணி, நட்சத்திரங்கள் நிறைந்துள்ள ஆகாயமளாவும்படி சதுரமாக அழகிய ஏழுநிலை உப்பரிகையைப் பெரிதாகக்கட்டி, அதற்குள்ளே தேன்போன்ற மதுரமமைந்த வார்த்தைகளை யுடைய மகளிர்கள் சிறையிருக்கின்ற அழகிய மாடங்களையும் அமைத்து, உயர்வாகிய கற்பகச் சோலை யிருக்கின்ற தேவலோகம் இதுவென்று சொல்லும்படி விக்கலன் அவ்விடத்திலும் சோலைகளை ஏற்படுத்தினான். எ - று. (உகூ)

மாமாயவிஞ்ஞைசையினுன்மந்திரத்தாலந்தரத்தேழ்மதிலுண்டாக்கிச்
சாமாறதில்லைநமக்கெப்போதுமென்றுபுயந்தணியவீங்கி
நாமேறுந்தவிசங்கம்பத்தினியாளருகிருக்குநட்பாமன்றேற்
பூமாலைமாமகுடம்புனைதறகாதென்னவிதுபுந்திசெய்தான்

(இ - ள்.) சிறந்த மாயாவித்தையாலும் மந்திரத்தாலும் அவ்வுன்னதக் கோட்டைக்குள்ளே ஏழுமதில்களை ஏற்படுத்தி, நமக்கு யெப்போதும் சாகின்றதன்மை கிடையாதென்றெண்ணிப் புயங்கள் விசேடமாகப் பூரித்து, நாம் ஏறுகின்ற சிங்காசனத்திற்குரிய அங்கமாவது பத்தினி சகிதமாய்ப் பிரியமுற்றிருப்பதாகும், அப்படிக்கில்லாவிட்டால் மலர்மாலையும் சிறந்த கிரீடமும் அணிவது தகுதியல்ல வென்று இதைச்சிந்தித்தான். எ - று.

இவன் இவ்வளவு விநோதமாகவும் பத்திரமாகவும் கட்டியது நாம் மரணமடையோமென்றெண்ணிய ஓரெண்ணத்தினலென்று விளக்குவான், "சாமாறதில்லைநமக்கெப்போதுமென்றுபுயந்தணியவீங்கி." என்றும், அரசர்களாய்ச் சிங்காதன மேறுவோர் முந்தி விவாகம் முடித்துப் பத்தினி சகிதராயிருந்தாலன்றி யாகாதிகிர்த்தியங்கட் குதவாரென்பதை விளக்குவான், "நாமேறுந் தவிசங்கம் பத்தினியா ளருகிருக்கு நட்பாம்." என்றும் கூறினர். இவன் தனக்குத்தானே ஓர் அரசனாக மதித்திருந்தானாகலின், இவ்வாறெண்ணினனென்க. (௩0)

வேறு.

ஊரினெல்லையுளேமகிடற்செற்று
ளாரவைத்தரண்காப்பானகழ்ப்புறஞ்
சாரத்தாருகற்செற்றுடனைப்பல
சீரில்வைத்துச்செயலுஞ்சொலியெழீஇ.

(இ - ள்.) அவ்வூரின் எல்லைக்குள்ளே துர்க்கா தேவியை சிறப்புடன் பிரதிஷ்டைசெய்து, அக்கோட்டையைக்காவல்காக்குமாறு அகழிக்குவெளியில் காளிகா தேவியைப் பொருந்தும்படி பல சிறப்புடன் பிரதிஷ்டைசெய்து, தான்போகின்ற செய்தியையும் அவ்விருவர்க்குங்கூறி வெளிக்கொண்டு. எ - று.

அவன்மீது பகைகொண்டு அவ்வூரினெல்லையைத்தாண்டி வருபவரையழிக்க அவ்வெல்லைக்கருகில் துர்க்காதேவியையும், அவ்வெல்லையையும் தங்கள் சாமர்த்தியத்தாற்றண்டிக் கோட்டைக்குட் பிரவேசிக்க வருபவரையழிக்க அகழிக்கருகில் காளிகாதேவியையும் காவல்வைத்தனனென்க. (கூக)

வாம்பரிக்கணிவர்ந்தனன்மாயையா
லோம்பலுற்றபுரநின்றுமும்பரிற்
றேம்பும்வேகத்திற்சென்றுதன்னூர்புகுந்
தேம்பலோடும்பிதாவெதிரெய்தினன்.

(இ - ள்.) தாவிச்செல்லும் குதிரையின்மீதேறிக்கொண்டு, மாயாவல்லபத்தால் தான் காத்திருந்த நகரத்தினின்றும் ஆகாயமார்க்கமாய் அதிவேகத்துடன்போய்த் தனது சுதேயத்தை யடைந்து, மகிழ்ச்சியுடனே தனது பிதாவெதிரிற் சென்றனன். எ - று.

ஓம்பலுற்றபுரநின்றும் என்பதற்குத் துர்க்கை காளி என்னும் இருவராற் காவல் செய்யப்பட்டுள்ள நகரத்தினின்றும் எனக்கூறுவாருமுளர். ()

இத்துணைப்பகலெங்ககன்றுயெனு
மத்தனுக்கான்வந்தளித்ததைப்
பத்தியிற்சொலப்பாலகன்றன்மண
மொத்தவண்ணமுடிக்கவுளங்கொண்டான்.

(இ - ள்.) மகனே! இத்தனை நாளாய் நீ எங்கு சென்றிருந்தா யென்று வினவிய தனது பிதாவுக்கு, சிவபிரான் காட்சி கொடுத்தது வரம்பாலித்தது என்னு மிவற்றை வரிசையாகக்கூற, அதுகேட்ட போகன் தனது புத்திரனுக்குத் திருமணத்தைப் பொருந்தும் விதமாய் முடிக்கும்படி நினைத்தான். எ - று.
(கூகூ)

மஞ்சிருந்ததுமாமலர்பூத்தது
விஞ்சுமுற்பலமேயதுவெண்மதி
யஞ்சச்சிந்துரந்தீற்றியதாடவர்
கெஞ்சுகொம்மையிரண்டுகிளைத்தது.

(இ - ள்.) மேகங்குடியிருந்து அதிற் சிறந்தமலர்கள் பூத்துள்ளது போன்ற கூந்தலையும், விசேடித்த நீலோற்பல மிருப்பதுபோன்ற கண்களும், வெள்ளைநிறமுடைய அர்த்த சந்திரன் அச்சமுறும்படி சிந்துரப்பொட் டணிந்துள்ளது போன்ற நெற்றியும், புருடர்கள் தழுவுதற்குக் கெஞ்சுகின்ற இரண்டு சிகரங்கள் தோன்றியது போன்ற தனங்களும். எ - று. (கூச)

குமிழரும்புளதொண்வளைகொண்டதோ
ரமிழ்துடன்வடுகார்ந்தமொழியது
கமலமோடுமொண்காந்தளலர்ந்தது
கமழனங்கவல்லிப்பெயர்கண்டது.

(இ - ள்.) குமிழமலர்போலும் நாசியும், ஒள்ளிய வள்ளைக்கொடி போலும் செவிகளும், ஒப்பற்ற அமிர்தத்துடன் தெலுங்கு என்னும் ஓர் பாஷையும் கலந்த சொற்களும், செந்தாமரை மலருடனே செங்காந்தண் மலரும் விகசித்திருப்பது போன்ற கரசரணங்களும், எங்கும் விளக்கமுற்ற அனங்க வல்லி என்னும் பெயரும் உடையவள். எ - று. (கூரு)

இத்தகையவிளங்கொடிநேடியே
யுத்தமத்தினமோர்ந்துநல்லோரையி
லெத்தலத்துளசுற்றத்தரீண்டியே
யொத்தவுள்ளத்தராயுவந்தோங்கவே.

(இ - ள்.) இவ்வாறான இலக்கணங்களமைந்துள்ள ஓர் பெண்ணைப் பார்த்து, ஓர் சுபநாளை நிச்சயித்து, அன்றைக்குக் குறித்திருந்த நல்ல முகூர்த்தத்தில் எவ்வூரிலுள்ள உறவின் முறையாரும் கூடி ஒருப்பட்டமனமுடையவர்களாய்க் களிப்புற்று விளங்க. எ - று. (கூசு)

கதலியோடுகமுகுகளுட்டியோர்
விதமதாமணப்பந்தரும்வேய்ந்துள
மிதவிநோதம்விளக்கியபோகன்றன்
சுதனையொப்பனைதுன்னநவின்றனன்.

(இ - ள்.) வாழை கமுகு என்னும் இவைகளை நட்டு, ஒப்பற்ற தனமையமைந்த கலியாணப் பந்தரும் போட்டு, அப்பந்தருக்குள்ளே அளவிறந்த விநோதங்களை யெல்லா மியற்றிய போகனென்பவன், தனது புத்திரனாகிய விக்கலனை அலங்கரிக்கும்படி கட்டளையிட்டனன். (கூஎ)

இனையவண்ணமவ்வேந்திழைதன்னையு
மனைமுன்மாதரலங்கரித்திட்டனர்
கனைகொள்பல்லியங்காமரொலித்திட
வினைமுடிப்பான்மணப்பந்தர்மேவினர்.

(இ - ள்.) இவ்வாறாகவே அனங்கவல்லியையும் அவள் மாதாமுதலிய மாதர்கள் அலங்கரித்தார்கள். முழக்கமுடையனவாகிய பலவகை வாத்தியங்களும் அழகுடனே கோஷிக்க, அவ்விருவரும் மணச்சடங்கை நிறைவேற்றும்பொருட்டுக் கலியாணப் பந்தருக்குள் வந்தார்கள். எ - று. (௩அ)

அனங்கவல்லியணிமலர்மாலிகை
வனைந்துவிக்கலன்வாகுவிற்சூட்டலு
மனங்களித்தவன்மங்கலச்சூத்திர
மனங்கவல்லிகளத்திலணிந்தனன்.

(இ - ள்.) அவ்வண்ணம் மணப்பந்தற்குள்வந்த அனங்கவல்லி, அழகிய மலர்மாலை யொன்றை அலங்கரித்து விக்கலன் புயத்தில் அணிந்தவளவில், அவ்விக்கலன் மனக்களிப்புற்று மங்கலசூத்திரத்தை அனங்கவல்லியின் கழுத்திற் றரித்தான். எ - று. (௩௯)

ஒக்கலாயுளயாவருமோகையோ
டக்கணத்திலவர்களைவாழ்த்தியே
தக்கவாறுசமைத்துளபோனக
மொக்கவேவிருந்துண்டுளுவந்தனர்.

(இ - ள்.) அத்தருணத்திலே சுற்றத்தினராயுள்ள அனைவரும் பெருமகிழ்ச்சியுடன் அவ்வதூவரர்களை யாசீர்வதித்து, தகுதியமைந்த வண்ணமாய்ச் சமைத்திருந்த போஜனத்தை யாவரும் ஒருங்குகூடி விருந்தாகப் புசித்து மனமகிழ்ந்தார்கள். எ - று.

தக்கவாறு சமைத்துள போனகம் என்பதற்குத் தகுதியமைந்த அறுசுவையோடு கூடிய போஜனம் என்றுரைப்பினு மமையும். (௪0)

ஆயபின்னரனைவருந்தத்தம
தேயமேகுறச்சிந்தையிலுன்னியே
மேயபோகனொடோதிவிடைபெறீஇ
நேயமோடுசென்றூர்பதிநேடியே.

(இ - ள்.) அவ்விவாகம் நிறைவேறிய பிறகு சுற்றத்தினர் யாவரும் தங்கள்தங்கள் ஊருக்குப்போக மனதிலெண்ணங்கொண்டு, அங்கிருந்த போகனென்பவனுடன் கூறிவிடைபெற்றுக்கொண்டு மிக்கன்புடையவர்களாய் தங்களூரைநாடிச் சென்றார்கள். எ - று. (௪௧)

கடிமுடிந்துகழிந்தசின்னுளிலே
கடிமிருந்தொளிர்காமராணிலே
முடிபுனைந்திடமுன்னுகவென்றகக்
குடிலமுள்ளகுமாரன்கழறியே.

(இ - ள்.) இவ்வாறு விவாகம் நிறைவேறின சிலதினங்களுக்குப்பின், காவலோடுகூடிய அழகமைந்த எனதரண்மனையில் எனக்கு மகுடாபிஷேகம் செய்விக்க எண்ணுவீராகவென்று, மனதில் வஞ்சகம் நிறைந்துள்ள விக்கலன் தன்பிதாவுக்குக்கூறி. எ - று. (சஉ)

விந்தையாகவிளங்கிரதத்தினற்
கந்துகங்களைப்பூட்டிக்கருதுநற்
றந்தைதாய்தமர்தாரமுமேறவே
மந்திரத்துருமாற்றிவிடுத்தனன்.

(இ - ள்.) விநோதமாக விளங்குகின்ற இரதத்திலே நான்குகுதிரைகளையும்பூட்டி, தன்னைச் சதா சிந்தித்துக்கொண்டிருக்கும் நல்லதந்தையும் தாயும் சுற்றத்தினரும் மனைவியும் ஏறினமாத்திரத்தில் மாயாமந்திரத்தைச் செபித்துச் செலுத்தினன். எ - று. (சங)

தன்றெலுங்குறுநாட்டைத்தணந்துதேன்
றுன்றுதீந்தமிழ்நாட்டினைத்துன்னியே
யென்றுங்கல்வியெழிலுணர்வாதிய
பொன்றிடாத்தொண்டமண்டலம்புக்கதே.

(இ - ள்.) அத்தேர், தனது ஜனனதேசமாகிய வடுகுவழங்கும் நல்லூரென்னும் நாட்டைநீக்கி, தேன்சேர்ந்ததுபோன்று மதுரமமைந்ததாகிய தமிழ்நாட்டைச்சேர்ந்து, எக்காலத்தினும் கல்வியறிவொழுக்கங்கள் முதலியவை அழிவுபடாத தொண்டமண்டலத்தில் வந்தது. எ - று.

தமிழ் என்னும் பதத்திற்கே இனிமையெனப் பொருளிருத்தலின், "தேன்றுன்றுதீந்தமிழ்நாடு." என்றும், அத்தகைய இனிமையுடைய நாட்டிலே எக்காலத்தினும் கல்வியறிவொழுக்கங்கள் குன்றுவாதலின், "என்று ங்கல்வியெழிலுணர்வாதியபொன்றிடாத்தொண்டமண்டலம்." என்றும் கூ ர். (சச)

மற்றம்மண்டலமாமுகமென்னவே
யுற்றகாஞ்சிவளநகர்தன்னுளே
பொற்றகொன்றையர்புத்திராய்த்திகழ்
வெற்றிசேர்நந்திகோத்திரர்மேன்மையும்

(இ - ள்,) அத்தொண்டமண்டலத்தின் சிறந்தமுகமென்று சொல்லத்தக்கதாயிருக்கும் வளப்பமிக்க காஞ்சிநகரத்தினுள்ளே, பொன்போன்ற நிறமுடைய கொன்றைமலர்மாலையணிந்த சிவபிரான் புதல்வர்களாக விளங்குகின்ற வெற்றியமைந்த நந்தியெம்பெருமான் கோத்திரர்களாகிய செங்குந்தகுலத்தினர்கள் மேன்மையும். எ - று.

தொண்டநாட்டிற்சிறந்தது காஞ்சிநகரமே யாதலின், "அம்மண்டலமாமுகம்." என்றும், குமாரக்கடவுளின் துணைவராகச் சிவபிரானருளிய இலக்கத்தொன்பதின்மரின் சந்ததியாராகலின், "பொற்றகொன்றையர்புத்திரர்." என்றும் கூறினர். (சரு)

ஆங்கவ்வீராபிடேகராய்மறை
தாங்கியோதலுந்தாரணிகாத்தலுந்
தேங்குநற்கலைவாணிபஞ்செய்தலு
மோங்குநம்பன்றிருப்பணியோம்பலும்.

(இ - ள்.) அந்நகரிலுள்ள அச்செங்குந்தவீரர்கள் அபிஷேகத்தராயிருந்து வேதங்களைக்கரத்திலேந்தி யோதிக்கொண்டிருத்தலும், உலகபரிபாலனம் புரிதலும், விசேடித்த சிறந்த வஸ்திரவியாபாரம் செய்தலும், பெருமைமிக்க சிவபிரான் திருப்பணிகளைப் பாதுகாத்தலும். எ - று.

சிவபிரான் சர்வகிர்த்தியங்கட்கும் தலைவராயிருப்பதுபோன்றே, அவரது புத்திரர்களாகிய இம்மரபினரும், உலகத்தில்வழங்கும் நால்வருணத்தினரின் கிர்த்தியங்கட்கும் தலைவரென்பதை விளக்கியவாறய்த்துணர்க. (சசு)

எண்டிசாமுகத்துள்ளுமிருந்தரன்
றொண்டரெய்தத்தொழும்புகொடேய்மையுங்
கண்டிவூருணங்காதைசெலாதெனக்
கொண்டுசோழமாமண்டலங்கூடியே.

(இ - ள்.) அஷ்டதிசைகளினுமிருந்து சிவனடியாராய் வந்தார்க்கு அவர்கள்தொண்டுபுரிகின்ற பரிசுத்தத்தையும்பார்த்து, இந்நகரத்திலே நமது கதைநடக்காதென்று மனத்திலெண்ணிக்கொண்டு, மேன்மைமிக்க சோழமண்டலத்திற்சேர்ந்து. எ - று. (சஎ)

காயமீவழியாற்கடம்பூரக
மாயதோரகழிக்கிடைமாவரண்
மேயசித்திரவீதியிலக்கணம்
போயெவர்க்குமிருக்கைபொருத்தினன்.

(இ - ள்.) ஆகாயத்தின் மேற்செல்லும் மார்க்கத்தாற் கடம்பூரிலுள்ள ஒப்பற்ற அகழிநடுவிலமைந்த பெரியகோட்டையிற்பொருந்திய அழகிய வீதிகளில் அக்கணமேசென்று, தன்னுடன்வந்த சுற்றத்தினர்முதலிய யாவர்க்கும் வசிக்குமிடங்கள் ஏற்படுத்தினன். எ - று. (சஅ)

கற்பகம்பொலிகாமருலகமோ
வற்புதப்பெருக்காயவுமொண்ணுமோ
விற்பரவுமிம்மாநகர்மேன்மையைச்
சொற்பராவத்துதிப்பவரேவரே.

(இ - ள்.) இது கற்பகவிருக்ஷம் விளங்குகின்ற அழகிய தேவலோகமோ? இதன்கணுள்ள விநோதங்களின்விசேடங்களை ஆராயமுடியுமோ? ஒளிபொருந்திய இப்பெரியநகரத்தின் மேன்மையை சொற்கணிரம்பப் புகழத்தக்கவர்கள் எவர்கள்?. எ - று.

எனவே அந்நகரத்தின் பெருமையையும் விநோதங்களையும் விவரித்துமுடிவாகக்கூற எவர்க்கு மேலாதென்றபடி, (சகூ)

மின்செய்நூலிடையாளுடன்விக்கலன்
மன்செய்மாமணியாசனமுற்றொரு
பொன்செய்மாமுடிசூடினன்றாதையான்
முன்செய்மாதவமுற்றினமானவே.

(இ-ள்.) ஒளிபொருந்திய நூல்போலும் இடையையுடைய அனங்கவல்லி என்னும் தன்பத்தினியுடனே விக்கலனென்பவன், தலைமைபெற்றுள்ள சிறந்த இரத்தினாதனத்தில் ஏறியிருந்து, பசும்பொன்னாலமைந்த ஒப்பற்ற கிரீடத்தை, தான் முன்செய்த பெருந்தவம் முடிந்ததுபோன்று, தனதுபிதாவாற் சூடிக்கொண்டான். எ - று.

இவன் சாதாரணச் சமுசாரியேயன்றி அரசனன்றாகலின், ஏனைய அரசர்கள் அந்தணர்கள்முதலிய பெரியோர்கள் யாவருமின்றித் தன்பிதாவைக்கொண்டே முடிசூட்டிக்கொண்டானென்க. (ருo)

மறைமுழக்கமறப்பலவாத்தியங்
குறைவிலாதுகலித்தனகோலமென்
றறையுஞ்சூகரமார்கொடியோங்கிய
மறமெழுந்ததுமானவெழுந்தது.

(இ - ள்.) வேதகோஷங்கள் நீங்கிப் பலவாத்தியகோஷங்கள் மாத்திரம் குறைவுபடாது கோஷித்தன. உடனே விசேடித்த பாவங்க ளெல்லாம்

ழ்ருருக்கொண்டு தோன்றியதுபோல, கோலமென்று யாவருங்கூறத்தக்க பன்றியினுருவமைந்த துவசம் மேலோங்கியது. எ - று.

வேதவிதிப்படி மகுடாபிஷேகத்திற்குரிய கிரியைகளொன்றும் நடவாமையின், "மறைமுழக்கமற." என்றும், இரட்டர்களுக்குரியது பன்றிக்கொடியாகலின், அதற்குரிய கோலம் சூகரம் என்னும் இரண்டுபெயர்களையுங் குறிப்பிப்பான், "கோலமென்றறையுஞ்சூகரம்." என்றும், இவ்விக்கலன் இனிச்செய்யப்போவது பாப கிர்த்தியங்களேயென்று கொடிநாட்டியதுபோன்றதென் றுணர்த்துவான், "மறமெழுந்ததுமானவெழுந்தது." என்றும் கூறினர். (௩௧)

என்றவிக்கலனின்னினிப்போகநாந்
துன்றுமாறுதுணிந்திடனன்றெனு
வன்றவிற்பொலியாழியந்தேரிவர்ந்
தொன்றுமூரிலகங்கொடுழன்றனன்.

(இ - ள்.) இவ்வாறுகூறிய விக்கலன், இனிமேல் நாம் போகங்களையடையும்வண்ணம் யோசிப்பதே தகுதியென்று, அன்றிரவிலேயே விளக்கமுற்ற உருளைகளையுடைய அழகிய இரதத்தின்மீதாரோகணித்து, பக்கத்திலுள்ள ஊர்கள்தோறும் கருவித்துத் திரிந்துகொண்டிருந்தான். எ - று. (௩௨)

கதையெடுத்துக்கபாடமுடைத்துயிர்
வதையெடுத்துமறுத்தவர்மாளமா
நிதியெடுத்துளநேரிழையார்களை
விதியெடுத்ததுறங்கியவேலையே.

(இ - ள்.) தனது வச்சிரக்கதையைக் கையிலெடுத்துக்கொண்டு அதனால் ஒவ்வோர்வீட்டின் கதவுகளைப்பிளந்து, அப்போதுவந்து தடுத்தவர்களிறக்கும்படி உயிர்வதைபுரிந்து, அவர்களுடைய பெருஞ்செல்வங்களையபகரித்து, அவ்வீடுகளிலுள்ள நேர்மையான ஆபரணமணிந்திருக்கும் மகளிர்களை அவர்கள் நித்திரைபுரியும்சமயத்தில் அவ்வவர்களின் விதிவசத்திற்கேற்கச் சிறையெடுப்பான். எ - று. (௩௩)

பண்டமெத்தனைபாருளதத்தனை
கொண்டுமாயக்கொடிஞ்சியிருத்தியே
பெண்டிருக்குப்பெருமனைவைத்தலுங்
கண்டெளிந்தனர்கன்னியரேவரும்.

(இ - ள்.) உலகத்தில் எத்தனைவித வஸ்துக்களிருக்கின்றனவோ, அத்தனையும் அபகரித்துக்கொண்டு மாயாவல்லபமுள்ள தேரில் நிரப்பி, தனதுதே

வியாகிய அனங்கவல்லியிருக்கின்ற பெரிய அரண்மனையில் வைத்தமாத்திரத்தில், அவனாற் சிறைபிடிக்கப்பட்ட பெண்களனைவரும் கண்விழித்துக்கொண்டார்கள், எ - று. (ருச)

மாவனங்கவல்லியெனதையவிப்
பூவைமாரென்செயவெனப்பொன்னிநின்
னேவலாற்றுநரென்றனன்கைப்படும்
பூவைமாரகம்பொங்கினர்பாவமே.

(இ - ள்.) சிறப்புற்ற அனங்கவல்லியென்னும் அவன்தேவி, எனதுதலைவரே! நாகணவாய்ப்புட்களைப்போன்ற மொழிகளைப்படைத்த இம்மாதர்கள் என்னவேலை செய்வதற்கென்று வினவலும், அதுகேட்டவிக்கலன், திருமகளையொத்தவளே! இவர்கள் உனது பணிவிடைபுரிகின்றவர்கள் என்றுரைத்தான், அவன்கையி லகப்பட்டுக்கொண்ட அம்மாதர்களெல்லாம் மனக்கொதிப்புற்றார்கள். இது பெரும்பாதகமாகும். எ - று. (ருரு)

தீமையென்பதுதேரிலனித்தின்
நாமியற்றியகாரியநன்றெனு
மாமதத்தினிவர்ந்துமயங்கிய
காமுகர்க்கிருகண்டெரியுங்கொலோ.

(இ - ள்.) தானியற்றிய செய்கைகள் கொடுஞ்செய்கைகளென்பதைத் தெளியாதவனாய், இன்றைக்கு நாம் செய்தகாரியம் நல்லதே என்றெண்ணுவான், மிகுதியான ஆணவமேற்கொண்டு மயக்கமுற்றிருக்கும் பேராசையுடையோர்க்கு இரண்டுகண்களுந்தெரியுமோ? தெரியாது. எ - று. (ருசு)

இவ்வனங்கவலிதனதின்பமுங்
கொவ்வைவாயமுதுங்கொண்டுகோகிலந்
துவ்வருஞ்சுகமன்னமென்றோகையு
மொவ்வுமாறுவகைக்கடன்மூழ்கினன்.

(இ - ள்.) இத்தகைய அனங்கவல்லியின் காமவின்பத்தையும் கொவ்வைக்கனிபோலும் அதரபானத்தையும் அனுபவித்துக்கொண்டு, குயிலும் கிடைத்தற்கரிய கிளியும் அன்னமும் மிருதுவான மயிலும் ஒத்திருக்கும்படி சந்தோஷசாகரத்தில் மூழ்கியிருந்தான், எ - று.

குயில்கள் இசைப்பதற்கும் கிளிகள் வசனிப்பதற்கும் அன்னங்கள் நடப்பதற்கும் மயில்கள் நடிப்பதற்கும் எவ்வாறு ஒற்றுமையோ? அதுபோல அனங்கவல்லியும் விக்கலனும் ஒருவர்க்கொருவர் ஒற்றுமையாய் நடந்துவந்தார்களென்றபடி. (ருஎ)

வேறு.

வெற்றியினாற்புயவலியால்வீரியத்தாற்செல்வத்தா
லெத்திசையின் மன்னருக்கும்யானேவல்லானென்று
செற்றலர்கள்தாமறிதல்செயப்பரிசைதன்மீது
பொய்த்தலையொன்றினைவிருதாய்ப்பொலிவுறவைத்திலகினனே.

(இ - ள்.) ஜெயத்தினாலும் புஜபலத்தினாலும் வீரத்தினாலும் செல்வத்தினாலும் எத்திக்கிலுள்ள அரசர்க்கும் நானொருவனே வல்லவனென்று, பகைவராயுள்ளவர்களனைவரும் அறிந்துகொள்ளும்படி, தனதுகேடகத்தின்மேல் ஓர் பொய்த்தலையை விருதாய்விளங்கும்படி வைத்துக்கொண்டிருந்தான். எ - று எதிர்த்த பகைவர்கள்தலையை வெட்டும் வல்லபமுடையே னென்பதைக் காட்டும்படி பொய்த்தலை கேடகத்தி லமைத்தானென்க. (௩அ)

வேறு.

அற்றமுமிருளுங்காணுங்கள்வரினன்றியந்தக்
கொற்றவெம்படையுமாயக்கொடிஞ்சியுமுள்ளவன்றான்
மற்றொருநிசியிற்சோன்மாநகரடைந்துவேண்ட
லுற்றதுகவர்ந்தான்கண்டாருயிரறமடித்துமீண்டான்.

(இ - ள்.) தருணமும் இருட்காலமும் பார்த்துக்கொண்டிருக்கும் ஏனைய கள்வர்களைப்போலல்லாமல், சிறப்புற்றிருக்கின்ற வெற்றியமைந்த வச்சிரக்கதையும் மாயத்தேருமுடைய அவ்விக்கலன், மற்றோரிரவில் சோனுடைய பெரிய நகரத்திற்சேர்ந்து, தனக்குவேண்டிய பொருள்களைக் கவர்ந்துகொண்டு, அப்போ தெதிர்த்தவர்க ளுயிர்நீங்கக்கொன்று திரும்பினான். எ - று. (௩௯)

வேறொருநிசியிலான்றவேப்பந்தார்மன்னன்றேய
மேறினன்வளைத்துமோதியெதிர்த்தவர்தங்களாவி
பாறவெம்படையால்வாட்டிப்பல்வகைப்பொருளும்வாரித்
தாறறியாதபொல்லாத்தறுகணனிருந்தானன்றே.

(இ - ள்.) மற்றோரிரவில் பெருமைமைந்த வேப்பமாலையணிந்த பாண்டியனுடைய தேயத்திற்சேர்ந்து சூழ்ந்தெதிர்த்து, அப்போ தெதிர்த்தவர்களுடைய உயிர்போகும்படி கொடிய கதாயுதத்தாற்கொன்று, அவ்விடத்துள்ள பலபொருள்களையும் சேர்த்துக்கொண்டு, நன்மார்க்கமறியாத கொடியதுஷ்டனாகிய விக்கலன் வாழ்ந்திருந்தான். எ - று. அன்று-ஏ-அசைகள். (௪௦)

சிங்களங்குட்கஞ்சிந்துசீனமாளவமராடங்
கொங்கணங்குருவவந்திகோசலஞ்சூரசேன

மங்கமலாடங்காசமாந்திரங்கன்னடங்க
லிங்கமென்றுரைக்குந்தேயமிசைரனென்றுலாவும்.

(இ - ள்.) சிங்களம் குடகம் சிந்து சீனம் மாளவம் மராடம் கொங்கணம் குரு அவந்தி கோசலம் சூரசேனம் அங்கம் மலாடம் காசம் ஆந்திரம் கன்னடம் கலிங்கம் என்று கூறுகின்ற ஐம்பத்தாறுதேயங்களினும் இராக்கதனென்று சொல்லும்படி திரிவான். எ - று. (சுக)

சாலையிலுலவுங்கஞ்சத்தடங்களிலுலவும்வாசச்
சோலையிலுலவுமாதர்துயிலிடமுலவுமெல்லா
மூலையுமுலவும்வீடுமுற்றமுமுலவுமெந்த
மாலையுமிருளிற்கண்டார்வயிறனலெரியவென்னுன்.

(இ - ள்.) அவ்விக்கலன், எல்லாமாலைக்காலங்களினும் இருளில்தன்னைப் பார்த்தவர்கள் வயிற்றிலே அக்கினிபற்றி யெரியும்படி, அந்நகர்களிலுள்ள அறச்சாலைதோறும் திரிவான், தாமரைமலர்ந்துள்ள தடாகங்களில் திரிவான், மணம் வீசும்சோலைகளில் திரிவான், மகளிர்கள்நித்திரைபுரியுமிடங்களில் திரிவான் மூலைகள்தோறும் திரிவான், வீடுகளிலும் முற்றங்களிலும் திரிவான். எ - று.

தாரணிவிளைந்தவெல்லாந்தன்னகரிருக்கக்கண்டு
பூரணவளமுண்டாக்கிப்பொலிந்தனமென்னப்பொங்கி
வாரணிகலசக்கொங்கைமங்கையர்தமைச்சேர்ண்டாங்கோ
ரூரெனச்சிறையுளாக்கியுய்த்தனனனந்தமாடம்.

(இ - ள்.) உலகத்தில் விளைந்துள்ளவைகளனைத்தும் தன்னகரிலே யிருக்கப்பார்த்து, நாம் சம்பூர்ணமான வளப்பம்பெற்று விளங்கியிருக்கின்றோமென்று களித்து, கச்சணிந்திருக்கும் கலசங்கள்போன்ற தனங்களையுடைய மாதர்களையெல்லாம் சேர்த்துக்கொண்டுபோய், அது ஓர்நகரென்று சொல்லும் அளவிறந்த வீடுகளில் சிறைப்படுத்தினன். எ - று. (சுஙு)

ஏவலிலனந்தம்பேர்களிருந்திடவென்னவாசற்
காவலிலனந்தம்பேர்கள்காத்திடவென்னப்பல்லார்க்
கோவலியானையாடுகுதிரைமுன்மேய்க்கப்பார்க்க
மாவலியுடையமாயன்மதிலகங்கொடுபோய்விட்டான்.

(இ - ள்.) அனேகர் தானேவிய வேலைசெய்துகொண்டிருக்கவும், வாய்தற்படியில் அனேகர் காவல்காத்துக்கொண்டிருக்கவும், பலபேர்களை சிறந்த வலியுள்ள யானை ஆடு குதிரை முதலானவைகளை மேய்க்கவும் பார்க்கவும் ஏற்படுத்தி, பெருவல்லபமமைந்த மாயாசாலக்காரனுகிய விக்கலன், அவர்களையும் அவைகளையும் கோட்டைக்குள் கொண்டுபோய்விட்டான். எ - று.

அவ்வவைக்குரிய தொழிலாளிகளை ஏற்படுத்தி, யானைகள் குதிரைகள் ஆடுகள் முதலாகியவற்றையும் கோட்டைக்குள் சேர்த்துவைத்தானென்க. ()

எதிர்த்திடுமரசராவியெழுந்திடத்தலைகொண்டேகிக்
கதித்ததன்சோலையெல்லாங்கட்டினன்பனையின்காய்போல்
விதித்ததுசெய்யாராவிவிட்டவர்வல்லான்கோட்டை
மிதித்தவர்காலனூரைமேவினரென்பமாதோ.

(இ - ள்.) அவ்விக்கலன் தன்னுடன் எதிர்ப்பவர்களினுயிர் நீங்கும்படி அவர்கள் தலையை அறுத்தெடுத்துக்கொண்டுபோய், பனங்காயைப்போன்று தன்னுடைய விசாலித்த சோலைகளனைத்திலும் கட்டினன், அவன் கட்டளையிட்டதைப் புரியாதுவிட்டவர்களெவர்களோ? அவர்களெல்லாம் உயிர்விட்டவர்களே யாவார்கள், அவன் கோட்டையை மிதித்தவர்களெல்லாம் யமலோகத்தை மிதித்தவர்களே யாவார்கள் என்று கூறுவார்கள், எ - று. மாது - ஓ - அசைகள். (சுரு)

பிள்ளையைப்பிரிந்தமன்னர்பெண்டிரைப்பிரிந்தமாந்தர்
தள்ளையைப்பிரிந்தமக்கடலைவனைப்பிரிந்தமாதர்
துள்ளியமனத்தால்வாடத்துணைவுகொள்வையமேற்றிக்
கொள்ளைகொண்டிரவிலந்தக்கோட்டையுளிருக்கச்செய்வான்.

(இ - ள்.) அரசிளங் குமாரரைப்பிரிந்த வேந்தர்களும் நாயகிமாரைப் பிரிந்தநாயகர்களும் தாய்மாரைப்பிரிந்த புத்திரர்களும் நாயகர்களைப்பிரிந்த நாயகிமாரும் ஆகிய இவர்களனைவரும் மனம் துடிதுடித்து வருந்தும்படி, இராக்காலத்தில் அதிவேகமாயோடும் இரதத்தி லேற்றிக்கொண்டு, அவர்கள் பொருள்களையும் கொள்ளையிட்டு, அவர்களையும் அப்பொருள்களையும் அக்கோட்டையிலிருக்கும்படி சேர்ப்பான். எ - று.

எனவே பிதாக்களைவிட்டுப் பிள்ளைகளையும் மனைவியரைவிட்டு மணவாளர்களையும் தாயைவிட்டுத் தனயர்களையும் பத்தாக்களைவிட்டுப் பத்தினிமாரையும் பிடித்துக்கொண்டுபோய்ச் சிறைப்படுத்தினனென்க. (சுசு)

மகுடமொன்றணிந்துகாந்துமாமணித்தவிசிலேறிப்
புகலுவனமைச்சர்நீவிர்பொருந்துசாரணர்கணீவிர்
புகழுமாகதர்கணீவிர்புரோகிதராகுநீவிர்
தகுசதுரங்கசேனைத்தலைவர்கணீவிரென்றான்.

(இ - ள்.) ஒப்பற்ற இரத்தினமகுடமணிந்து, சிறந்த அரதனச்சிங்காசனத்திலுட்கார்ந்திருந்து, அங்குள்ளவர்களைப் பார்த்துக் கூறுகின்றவனாய், நீங்கள் மந்திரிமார்களென்றும், பொருந்திய வேவுகாரர்கள் நீங்களென்றும்,

நீங்கள் என்னைப்புகழ்வோர்களென்றும், நீங்கள் புரோகிதர்களாகுமென்றும், தகுதியமைந்த நால்வகைச் சைனியங்கட்கும் தலைவர்கள் நீங்கள்தானென்றும் கூறினன். எ - று. (கூஎ)

வடிவமுமிளமையுங்கொண்மாதரைப்பெண்டிரென்பான்
கடிதினிற்புணர்ந்தபின்னர்க்காந்தர்வமணமீதென்பான்
கொடிமலர்ச்சோலைவேலைகுணமிலார்க்குரைப்பானேவும்
படிசெயில்விடுவனின்றேற்பதைபதைத்திடப்புடைப்பான்.

(இ - ள்.) முன்சிறைப்படுத்தியுள்ள மாதர்களுக்குள்ளே, அழகும் இளமையுமமைந்த மகளிர்களைப்பார்த்து நீங்கள் எனது மனைவிமார்களெனக் கூறுவான், அதிவிரைவாக அவர்களைத் தழுவியபிறகு, இதுதான் காந்தருவவிவாகமெனக் கழறுவான், அச்சீர்மையிலாமாதர்கட்குப் பகற்காலத்தில், மலர்க்கொடிகணிறைந்துள்ள சோலைக்குரிய வேலைகளைக் கூறுவான், அவனேவிய அவ்வாறே செய்தால் சும்மாவிடுவான், அப்படி செய்யாவிடில் உயிர் பதைபதைக்கும்படி அடிப்பான். எ - று.

அஷ்டவிதமணங்களுள் காந்தருவமும் ஒன்றாகலின், "காந்தருவமணமீது." என்றனன். எண்விதமணங்களாவன:—பிரமம் - பிரசாபத்தியம் - ஆரிடம் - தெய்வம் - காந்தருவம் - ஆசுரம் - இராக்கதம் - பைசாசம் - என்பனவாம். இவற்றுள், பிரமசாரிக்குக் கன்னியைத் தீமுன்னர்க்கொடுப்பது பிரமமணம். தலைமகனினத்தார் வேண்டத் தலைமகளினத்தார் சம்மதித்துக் கன்னியைத் தீமுன்னர்க்கொடுப்பது பிரசாபத்தியமணம். ஒன்றிரண்டு பசுவுமெருதும் வாங்கிக்கொண்டு கன்னியைத் தீமுன்னர்க்கொடுப்பது ஆரிடமணம். வேள்வியால்வந்த கன்னியைத் தீமுன்னர்க்கொடுப்பது தெய்வமணம். கொடுப்பாரும் கேட்பாருமின்றி இருவருந் தனியிடத்தெதிர்ப்பட்டுத் தாமேகூடுவது காந்தருவமணம். பெண்ணுக்குப் பொன்சூட்டிச் சுற்றத்தாருக்குப் பொன்வேண்டுவன கொடுத்துக்கொள்வது அசுரமணம். பெண்ணும் பெண்ணினத்தாரு முடன்படாமல் வலிதிற்கொள்வது இராக்கதமணம். துயின்றாளைச்சென்றுகூடுவது பைசாசமணம். (கூஅ)

கொந்தலராளகவேற்கட்கோமகளனங்கவல்லி
சுந்தரச்சசியேயென்கோசோலைகற்பகமதென்கோ
விந்திரனிவனேயென்கோவிருந்தபன்னிதிகளெல்லா
மந்தமாநிதிகளென்கோவாவினந்தேனுவென்கோ.

(இ - ள்.) கொத்துக்களாயுள்ள மலர்களைச்சூடிய கூந்தலையும் வேல்போலும் கண்களையும்படைத்த அரசபத்தினிபோன்ற அனங்கவல்லியென்பவள் அழகமைந்த இந்திராணியேயெனச் சொல்வோமோ? அங்குள்ள சோலைகளை

ல்லாம் கற்பகச்சோலைகளென்று சொல்வோமோ? இவ்விக்கலனை இந்திரனென்று சொல்வோமோ? இவனிடத்திருக்கும் பல நிதிகளெல்லாம் அவ்விந்திரனிடத்துள்ள நவ நிதிகளென்று சொல்வோமோ? அங்குள்ள பசுக்கூட்டங்களெல்லாம் காமதேனுக்களென்று சொல்வோமோ? எ - று.

விக்கலனை இந்திரனென்றுரைத்ததற்கேற்ப ஏனையவு முரைத்தமை காண்க. நவநிதிகளாவன:—கச்சபநிதி-கற்பநிதி-சங்கநிதி-நந்தநிதி-நீலநிதி-பதுமநிதி-மகாநிதி-மகாபதுமநிதி-முகுந்தநிதி என்பனவாம். (சுசு)

வாரிடுங்களபக்கொங்கைமாசுணவளைக்கைமோதி
மாரடித்தந்தோவென்னமாதராரழவனந்த
ரூரடித்துலையிலிட்டானொருவனேயல்லாலிந்தப்
பாரிடத்தென்னேமுன்னேபின்னெவர்பார்த்தார்பார்ப்பார்.

(இ - ள்.) ஆங்காங்குள்ள பலபெண்களெல்லாம் தங்களுடைய கச்சணிந்து களபம்பூசியுள்ள தனங்களில் மாசுபடியுமாறு, வளையலணிந்த கைகளால் மோதி மார்பிலடித்துக்கொண்டு, ஐயோ! என்று அழும்படி, அனேக ஊரையடித்துலையிற்போட்டவன், இவனொருவனே யல்லாமல் வேறொருவன் இந்தநிலவுலகத்திலே முன்னே பார்த்தவர்கள் யாவர்? இனிப் பார்ப்பவர்கள் யாவர்? ஈதென்ன ஆச்சரியம். எ - று. (எ0)

வேறு.

தாயேயென்னச்சாற்றியுணைந்தாரொருசாரார்
வாயேமோதிவருந்தியிளைத்தாரொருசாரார்
தீயேநெஞ்சந்தீராதென்றாரொருசாரா
ரேயேவீரமிழந்தனமென்றாரொருசாரார்.

(இ - ள்.) ஓரிடத்துள்ளவர்கள் தாயே தாயே என்று கூறி மனம்வருந்தினார்கள். மற்றோரிடத்திலுள்ளவர்கள் வாயிலடித்துக்கொண்டு வாடிச்சோர்ந்தார்கள். வேறோரிடத்திலுள்ளவர்கள் எங்கள் மனதிற்பற்றிய நெருப்பவியாதென்றார்கள். பின்னோரிடத்திலுள்ளவர்கள் தங்களைத்தாங்களே ஏசிக்கொண்டு நாம் வீரமிழந்தோமே என்றார்கள். எ - று. (எக)

ஓகோவென்றேயுள்ளமுடைந்தாரோர்பாலா
ராகாவென்றேயாகமறந்தாரோர்பாலார்
காகாவென்றேகடவுளையுன்னினரோர்பாலார்
சாகாமையைநாஞ்சகியோமென்றாரோர்பாலார்.

(இ - ள்.) ஓர்பக்கத்திலுள்ளவர்கள் ஓ! ஓ! இப்படியாய்விட்டதா? என நினைத்து மனம்நொந்தார்கள். ஓர்பக்கத்திலுள்ளவர்கள் ஆ! ஆ! என்றுகூறிச்சரீ

ரம் மறந்தவர்களானார்கள். ஓர்பக்கத்திலுள்ளவர்கள் எங்களைக் காத்தருள்வீராக காத்தருள்வீராக என்று,தங்கள் குலதேவர்களைச்சிந்தித்தார்கள். ஓர்பக்கத்திலுள்ளவர்கள் நாங்கள் சாகாதிருப்பதைச் சகிக்கமாட்டோமென்றார்கள். எ - று.

வேறு.

பைப்படுமரவின்வாய்ப்படுதேரைபான்மையிக்கொடியவன்கொடுமைக்
கிப்படியாற்றாதுலகெலாமலையவிறந்தவரொழியநின்றவி
தப்பியமன்னரேவருங்கூடித்தனித்தனியொருவரோடொருவர்
செப்புவரிந்தப்பூமிவிட்டெங்குச்செல்லுவோமிரவெலாமென்றே.

(இ - ள்,) படத்தையுடைய சர்ப்பத்தின்வாய்ப்பட்ட தேரையின் தன்மையைப்போன்று, இப்பாவியின் கொரேச்செய்கைகளுக்கு இவ்வாறு உலகத்துள்ளாரெல்லாம் சகிக்கமாட்டாமல் அலைந்துகொண்டிருக்க, அவனுடனெதிர்த்திறந்தவர்கள்தவிர, அவனுடனெதிர்க்காமல் தப்பி உயிர்பிழைத்திருந்த அரசர்களனைவரும் ஒருங்குசேர்ந்து, ஒருவரோடொருவர் தனித்தனியாக, இராக்காலமுழுவதும் இந்நிலவுலகத்தைவிட் டெங்குப் போவோமெனக் கூறுவார்கள். எ - று. (எரு)

சத்துருவானுலெதிரெதிர்பொருதுசமர்க்களந்தோள்வலிதோன்ற
வெற்றியேபெறினுந்தோல்வியேயுறினுமேன்மையாமிவ்வகையொன்று
முற்றிலன்புவியிற்றலைதனைவைத்தேயுறங்கவுங்கண்டிலமிவனே
குற்றமுங்கொடியபாவமுமுடையான்கோனெறியலவிதுகொடுங்கோல்

(இ - ள்.) நேரான பகைவனுயிருந்தால் எதிருக்கெதிராகப் போர்புரிந்து போர்க்களத்திலேயே அவரவர்கள் புஜபலம்விளங்கும்படி வெற்றியடைந்தாலும் தோல்வியடைந்தாலும் மேன்மையாகும். இவனோ இவ்விதங்களொன்றும் செய்கின்றானில்லை. பூமியிற் றலைவைத்துப்படுக்க நிம்மதிகாணோம். அன்றியும், துர்க்குணங்களும் அவைகளால்விளையும் பெரும்பாவங்களும் வாய்க்கப்பெற்றவன், இவன் செலுத்துவது செங்கோலல்ல கொடுங்கோலாகும். எ - று.

பகைவரோ டெதிர்த்து வெல்லின் பராக்கிரமன் என்னும் கியாதியும், தோல்வியுற் றிறக்கின் வீரசொர்க்கமடைந்தான் என்னும் புகழும் விளைதலின், "வெற்றியேபெறினுந் தோல்வியேயுறினுமேன்மையாம்," என்றும், இவன் கொடுங்கோல் செலுத்துதலால், "குற்றமுங்கொடியபாவமுமுடையான்." என்றும் கூறினர். (எசு)

அம்பினால்வேலாலிறந்திடானம்மவம்மமற்றிவன்பெயர்சொன்னால்
வெம்பியேயழுதபிள்ளைவாய்மூடும்விரைந்தெவரவனுடன்பொருது

வம்பிடவல்லாரில்லையிங்கிவனேமனைநடுக்கொள்ளைகொள்வதனு
லிம்பரிலாரும்பகையிலாதுறவாயிருப்பதேநலமெனவிசைந்தார்.

(இ - ள்.) அன்றியும் விக்கலன், அம்பினுலும் வேலாலும் இறக்கின்றவனல்லன், அம்மம்ம!! இவன் பெயரைச்சொன்னுல் அழுதபிள்ளையும் வாய்மூடிக்கொள்ளும், ஆதலால் அதிசீக்கிரத்தில் இவனுடன் எதிர்த்துப் போர்புரியவல்லவர்கள் ஒருவருமில்லை. மேலும் இவனே ஏனைய கள்வர்களைப்போன்றிராமல் நம்முடைய அரண்மனைகளின் நடுவேவந்து கொள்ளையடித்துக்கொண்டிருப்பதனுல், இவ்வுலகத்துள்ளநாமனைவரும் அவனுடன் பகைத்துக்கொள்ளாமல் நேசப்பட்டிருப்பதே நல்லகாரியமென்று சம்மதித்தார்கள். எ - று. (எரு)

இம்மிதங்காணுமறங்கடைபிடித்தவேதிலன்பெறத்திறைகொடுபோய்க்
கம்மிதங்காணுவகழியின்கரையைக்கண்டனர்நின்றனர்யாரும்
விம்மிதமுடையவேந்தநீவருகவேண்டுமென்றிரைந்தனர்கடல்போற்
சம்மதியுரைமினென்றெழுபகலைத்தணந்துயர்புரவிமேல்வந்தான்.

(இ - ள்) அளவுபடாத இவ்விதபாவச்செயல்களைக் கைக்கொண்டிருக்கின்ற தமது பகைவன் பெற்றுக்கொள்ளும்படி அரசிறைகொண்டுபோய், நீராழத்தின் அளவு காணுததாகிய அவ்வகழியின் கரையைக்கண்டு, அவ்விடத்திலே அரசர்களனைவரும் நின்றுகொண்டு, ஆச்சரியமடையத்தக்க செய்கைகளையுடைய அரசனே! நீ இவ்விடத்திற்கு வரவேண்டுமென்று கடல்போற் கோஷித்தார்கள். இவ்வாறிவர்கள் அழைத்து எழுநாள் சென்றபிறகு, உயர்வுள்ள மாயையினையுடைய குதிரையின்மீதேறிக்கொண்டு, உங்கள் சம்மதத்தைக் கூறுங்களென்று எதிரில்வந்தான். எ - று. (எசு)

பூவகத்துணராநிறமெழிலுருவம்புனிதநல்லிலக்கணம்பொலிந்த
மாவகத்தொளியார்கண்ணொளிகவருமணிமுடிமாசிலாக்கவசங்
காவகத்திருப்போன்கைப்படுமெணிப்பேர்க்கதைகதிர்வாள்கரங்கதிக்கச்
சோவகத்துதயஞ்செய்தெழுபகலிற்றேன்றினனுரெனத்திகைத்தார்.

(இ - ள்.) அப்போதவ்வரசர்கள் இந்நிலவுலகத்திற் கண்டறியாத நிறத்தினையும் அழகுமிக்கஅவயவங்களையும் பரிசுத்தமாகிய சிறந்தஇலக்கணங்களையுமமைந்த குதிரையின்மீது, தமது காந்தியாற் பார்க்கின்றவர்கள் கண்ணொளியைமழுங்கச்செய்கின்ற இரத்தினங்கள்பதித்த மகுடத்துடனும் களங்கமற்ற கவசத்துடனும் கற்பகச்சோலையிலிருக்கிற இந்திரன்கையிலிருக்கும் இரத்தினத்தின் பேர்கலந்த கதாயுதமும் பிரகாசம்வீசும் வாளாயுதமும் கைகளிற் சிறந்திருக்க, உதயகிரியென்னு மதிலினுச்சியில் உதயமாகிவருகின்ற சூரியனைப்போல் வந்தவன் ஆரென்று திகைத்தார்கள். எ - று.

இந்திரன் கரத்திலிருப்பது வச்சிராயுதமாகலானும், அது நவமணியுள் ஓர் மணியாலாயதாகலானும், இவன்கரத்திலிருப்பதும் வச்சிரக்கதை வச்சிரவாளேயாகலானும், "காவகத்திருப்போன்கைப்படுமணிப்போர்க்கதை." என்றும், இவ்விக்கலன் இரவிற் றுயில்புரிந்தபின் ஒருவருக்குந்தெரியாமற் கவர்ந்துபோகப் பிறகவன் பெயரைக் கேள்வியுற்றதேதவிர அவனுருவத்தை இவ்வரசர்கள் ஓர்காலமும் பார்த்திராமையின், "ஆரெனத்திகைத்தார்." என்றும கூறினர்.()

பின்றெளிந்திவனேயுலகெலாமிரவிற்பெரிதலேத்தலமரும்வல்லா
னென்றவர்காணுவரசனேயாங்களிதுமுதலிறையிறையளவுங்
குன்றலின்றாகித்தருதுமென்றாருங்குடிப்பெயரேனவுங்கூறி
நன்றொருமுறையாவரைதருமடலேநல்கினருவந்தனன்சென்றான்.

(இ - ள்.) அதன்பிறகு இவன்றான் உலகமுழுமையும் இராக்காலத்திற் சென்று மிகவருத்தித்திரிகின்ற வல்லாளுருமென்று தெளிந்தவர்களாகி அவனைப்பார்த்து, அரசனே! நாங்களனைவரும் இன்றுமுதலாக இறையளவுங்குறையாதபடிக்குக் கப்பங்கொடுத்து வருகின்றோமென்று, ஒவ்வொருவரும் தங்கள்தங்கள் குடிப்பெயரும் மற்றையவற்றையும் சொல்லி, ஒரேமாதிரியாக வணக்கத்துடன் எழுதிய பகுதிச்சீட்டையும் அவன்கரத்திற் கொடுத்தார்கள். அதற்கவனொருப்பட்டவனாகிப்போயினான். எ - று.

"குடிப்பெயரேனவும்" என்றது-குடிப்பெயர், தந்தைபெயர், தம்பெயர், தந்தேசப்பெயர், தம் ஆளுகையினளவு முதலியவாமென்க. (எஅ)

தீயவனன்னுமொடங்கிமிக்கடங்கித்தீயமுட்போந்திலனொரு
நேயமுற்றுரியதிறைதரலொழியார்நித்திறைகொண்டனரிருந்தார்
சீயநேர்தஞ்சைக்கோமகனிதெலாந்தெரிந்திடற்கமைச்சனைநோக்கி
நீயுரையிரட்டன்செயலெனவிந்நெறிப்படியுரைத்தனன்மன்னோ.

(இ - ள்.) கொடியவனாகிய அவன் அத்தினமுதலாக மிகவும் அடக்கமுடையவனாய் எத்தேசத்தினுள்ளும் செல்லாதிருந்தான். அவ்வரசர்களெல்லாம் அவனிடத்தில் அன்புடையவர்களாகிக் கப்பத்தொகையைத் தடையின்றிச் செலுத்திக்கொண்டு நிம்மதியாய்த் தூக்கம்பிடித்திருந்தார்கள். ஆண்சிங்கத்தையொத்த தஞ்சைமாநகராதிபனாகிய பராந்தகச்சோழன், இவையனைத்தையும் அறிந்துகொள்ளும்பொருட்டு தஞ்சைவேம்பன் என்னும் மந்திரியைப்பார்த்து விக்கலனென்னும் அவ்விரட்டனுடைய செய்கைகளை நீர் கூறுவீராக எனக் கூற, அம்மந்திரி இப்போது நாம் சொல்லியபடியே ஆதியோடந்தமாகக்கூறினன். எ - று. மன்-ஓ-அசைகள். (எகூ)

மதிமுதிர்வேம்பனறக்கொடுமைறமேவலுமெனத்தாங்கியமனத்தா
னுநிதரலாதிவகையெலாமுறைப்படுவொள்ளொளிமெல்லருங்குலப்பே

ரகிபனுதனைத்தும்வினைவிவல்விடப்பூடவனியின்முளைத்துமேலோங்கிக்
கதிர்விடாமுன்னம்வேரொடுங்களைதல்கருமமன்றேலிடர்கதிக்கும்.

(இ - ள்.) அறிவின்மேம்பட்ட அத்தஞ்சைவேம்பன், மிகக் கொடிய பாபச்செய்கைகளே வல்லபமெனக் கருதியிருக்கும் மனமுடையவனாகிய அவ்விக்கலன் பிறந்ததுமுதலாகிய முறைமைகளையெல்லாங் கூற, சிறந்த ஒளியையுடைய சூரியனுக்குரிய குலத்திற்பிறந்த சக்ரவர்த்தியாகிய பராந்தகச்சோழன் அவையனைத்தையுங்கேட்டு, வலிய விஷப்பூண்டு பூமியில்முளைத்து மிகவளர்ந்து கிளைவிடுவதற்குமுன்பே வேரோடுபிடுங்குதலே பெருங்காரியமாகும், அவ்வாறு செய்யாவிடின் துயர் அதிகரிக்கும். எ - று. (௮௦)

எனநினையரையனப்பெருங்கொடியவேதிலன்றன்னைவெந்நிடப்போர்
முனையிடங்காண்டனன்றினிநந்தமூரிமால்யானைதேர்புரவி
சினவிலேறுழவாதியதானைத்திரளுடன்போயவற்பொருவா
னினைவகங்கொண்டேனருநீயென்னநீதிநுண்ணணியனிதுபுகலும்.

(இ - ள்.) என்றெண்ணிய பராந்தகச்சோழன், மிகக்கொடோனாயிருக்கின்ற அப்பகைவனை யுத்தகளத்தில் முதுகுகாட்டியோடும்படி செய்வது உத்தமம், இப்போதே நமது வலியுள்ள பெரிய யானை இரதம் குதிரை கோபத்துடன்வளைக்கத்தக்க வில்வித்தையுடைய சைனியக்கூட்டங்களுடன் சென்று, அவனுடன் போர்புரியும்படி எண்ணங்கொண்டேன், ஆதலால் அதற்கு நீர் முயலுமென்றுகூற, நுட்பபுத்தியுள்ள அம்மந்திரி இவ்விதமான நீதிகளைக் கூறுகின்றான், எ - று.

ஈண்டு இனி என்பது இப்போதென்னும் பொருளில்வந்தது. இவ்வாறு வருதல் வழக்காதலை, ‘‘பண்டறியேன்கூற்றென்பதனையினியறிந்தேன் பெண்டகையாற் பேரமர்க்கட்டு.’’ என்னும் திருக்குறளுரையாற்றெளிக. (௮௧)

காரணமின்றிக்காரியநிகழக்கண்டவருண்டுகொல்வல்லான்
றேரநம்பாலும்பகுதியைவினவிற்றினையுமீயேமெனிற்கனலாப்
போரகங்காணப்பெறுவனம்பகையும்புகழ்பெறமுடிக்குதுமென்னச்
சீரெனவிசைந்தானிறையுடன்வல்லான்றிறைபெறச்சூதரைவிடுத்தான்

(இ - ள்) ஓர் காரணமில்லாமல் ஓர் காரியம்விளங்க உலகத்திற் பார்த்தவர்களுண்டோ! ஆதலால் வல்லானென்னும் பட்டப்பெயருள்ள விக்கலன் தெளியும்படியாக, நம்மிடத்தும் பகுதிப்பணம் கேட்பானாகில் தினையளவும் தரோமென்று சொன்னால், உடனே கோபித்துப் போர்க்களத்திற்குவருவான் அப்போது நம்முடைய பகையைக் கீர்த்தியமையும்படி முடிப்போமென்று கூற, அதுகேட்ட பராந்தகச்சோழன் இது சிறப்புத்தானென்று சம்மதித்தான்; உடனே சிலதினங்களில் வல்லான் பகுதிப்பணத்தைப் பெற்றுவரும்படி தூதரையேவினான். எ - று. (௮௨)

நுங்கைதபாலன்றேயிளவரசுரிமைநுண்ணியரொடும்படைத்தனை நீ
முந்திறைதருவாயெனவருந்தூதர்மொழிதரக்கோளரியென்னச்
சிந்தைவெந்திரண்டுபுருவமுநெற்றிசேர்தரவிணைவிழிசிவந்து
தந்திலனும்மையேவினன்பாற்போய்ச்சாற்றுமினென்றிறையிசைத்தான்

(இ - ள்.) விக்கலனேவவந்த தூதர்கள், நீர் உமது தந்தையிடத்தில் அப்போதே மந்திரிமார்களுடனே இளவரசுபட்டங் கட்டிக்கொண்டீர், ஆதலால் உமது பிதாக்காலமுதல் சேரவேண்டிய பகுதிப்பணத்தைக் கொடுப்பீராகவென்றுகூற, அதுகேட்ட பராந்தகச்சோழன் ஆண்சிங்கத்தைப்போலக் கர்ச்சித்து மனக்கொதிப்புற்று, இரண்டு புருவங்களும் நெற்றியிலேற இரண்டு கண்களுஞ் செந்நிறங்கொண்டு, பகுதிப்பணம் கொடுப்பதில்லை, உங்களை அனுப்பினவனிடத்திற் போய்ச் சொல்லுங்களென்று கூறினன். எ - று. (அரு)

கேட்டலும்வெருவிச்சென்றனரிரட்டன்கிளர்மணியிழைத்தபூங்கழற்கான்
மாட்டகங்குறுகிவணங்கினரரசேவளவர்கோமகனைக்கண்டோம்போய்க்
கேட்டனம்பகுதிதருகலனென்னக்கிளத்தினன்மறுக்கினும்பாலே
மீட்டடைதரலின்றில்லெனத்தெளிந்தேம்வெகுளியானனக்குறிகண்டே

(இ - ள்.) இப்படி பராந்தகச்சோழன் கூறிய வார்த்தைகளைக் கேட்டவளவிற் பயந்துபோய் விக்கலனுடைய ஒளியமைந்தஇரத்தினங்களிழைத்த அழகிய வீரகண்டாமணியைத்தரித்த பதங்களுக்கருகிற் கிட்டிப்பணிந்து, அண்ணலே! சோழர்பிரான் அரசவையிற்சென்று பகுதிப்பணங்கேட்டோம், பகுதிப்பணம் தரமாட்டேனென்றுரைத்தார், அப்போது அவருடைய முகத்தில்விளங்கும் சோபக்குறியைப்பார்த்து, இப்போது மறுத்துரைப்போமானால் இன்றைசகு மீட்டும் உம்மிடத்தில் வருவதில்லையெனத் தெளிந்துகொண்டோம், என்றார்கள். எ - று. (அசு)

கொல்லுலையிலைவேல்செவிநுழைத்தென்னக்கூற்றிதுகேட்டலுஞ்சினந்து
வல்லியக்கொடியனொருவனேமறுக்கவல்லவனவன்றிறங்காணச்
செல்லுதுநாளையெனத்துரகதமீச்சென்றணைடைந்தகங்கொதித்துப்
புல்லியனிருந்தான்மற்றவனடுபோர்புரிந்ததுங்கூறந்ததும்புகல்வாம்.

(இ - ள்.) கொல்லனுலையிற்காய்ந்த இலைவடிவமைந்த வேலாயுதம் காதிற்செருகியதுபோன்று இவ்வார்த்தையைக் கேட்டவளவிற் கோபித்து, உலகத்துள்ள அரசர்கட்குள்ளே புலிக்கொடியுடைய இச்சோழனொருவன்மாத்திரமோ நம்முடைய பகுதிப்பணத்தைத் தடுக்கத்தக்கவன், அவனதுவல்லபத்தைக் காண்பதற்கு நாளைக்குப் போவோமென்று குதிரையின்மீ தேறிக்கொண்டு

போய்க் கோட்டைக்குட்பிரவேசித்து, அற்பனாகிய அவ்விக்கலன் மனக்கொதிப்புடனிருந்தான். இனி அவ்விக்கலன் வெல்லத்தக்க யுத்தம்புரிந்ததும் பின் மறைந்ததும் கூறுவோம். எ - று. (அரு)

விக்கலச்சருக்கம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம். கரு௦.

---

## நான்காவது
# போராடற்சருக்கம்.

மாகநகரத்திறைபால்விடங்கரெழுவரைக்கரத்தால்வாங்கிவீர
வாகுமுதனவவீரருடனாரூர்முதற்றலத்தில்வைத்தசீர்த்த
மாகனமாக்குலமகிபாநீலமலர்க்கண்ணனங்கவலியின்பாதி
போகநுகர்ந்தினிதிருந்துஞ்சோழனிடத்துட்சினமேபொங்கினின்றான்

(இ - ள்.) வீரவாகுமுதலிய நவவீரர்களுடன்சென்று தேவலோகத்தலைவனாகிய இந்திரனிடத்திலே சத்தவிடங்கமூர்த்திகளையுந் தியாகமேற்றுத் திருவாரூர்முதலிய சத்தக்ஷேத்திரங்களிலும் வைத்த சிறப்புற்றுவிளங்கும் மிகமேம்பாடான சூரியகுலாதிபனே! அவ்விக்கலன்நீலோற்பலமலர்போலுங் கண்களைப் படைத்த அனங்கவல்லியின் இன்பமுதலாகிய பலவகை இன்பங்களை இனிமையுடன் அனுபவித்துக்கொண்டிருந்தும், மனதில்மாத்திரம் சோழனிடத்திற் கோபம் மிகுதியுமுடையவனாயிருந்தான். எ - று.

தேவேந்திரனை வெல்லவந்த அசுரனைச்சயிக்கும்படி அவ்விந்திரன் முசுகுந்தச்சக்கரவர்த்தியின் உதவியைவேண்ட, அப்போது முசுகுந்தச்சக்கரவர்த்தி வீரவாகுமுதலிய நவவீரர்களுடன்போய்ப் போர்புரிந்து அவ்வசுரனைவென்று திரும்புகையில் இந்திரன் உமக்குவேண்டியதைவினவிற் றருகின்றேனென்ன, எனக்கு மற்றொன்றும்வேண்டாம் நீர்பூசிக்கின்ற தியாகப்பெருமானைத் தரல்வேண்டுமென்றிரக்க, இந்திரனுக்குத் திருமாலாற் கொடுக்கப்பட்ட மூர்த்தியாகலின் அதைக்கொடுக்க மனமில்லாமல் அதையொத்ததாகவே தேவதச்சனைக்கொண்டு சிருட்டித்துக்கொடுக்க, சிவபிரான் திருவருளால் அம்மூர்த்த மல்லவென்று தடுக்கையில் வேறொன்றுகொடுக்க, இவ்வாறு ஆறுமூர்த்தங்கள் செய்துகொடுத்தும் வேண்டாதிருப்பதை நோக்கிக் கடைசியாக ஏழாவதாய்த் தான்பூசிக்கும் மூர்த்தியையே கொடுத்தவுடன் அம்மூர்த்தங்களேழையும்பெற்றுக்கொண்டு பூவுலகிற்சிறந்துள்ள திருவாரூர்முதலாகிய சத்தக்ஷேத்திரங்களில் தாபித்தனராகலின் அத்தகைய முசுகுந்தச்சக்கரவர்த்தியவதரித்த சூரியகுலத்திறைவனே எனக்குறிப்பிப்பான், "மாகநகரத்திறைபால்விடங்கரெழுவரைக் கரத்தால்வாங்கிவீர - வாகுமுதனவவீரருடனாரூர்முதற்றலத்தில்வைத்தசீர்த்த-

மாகனமாங்குலமகிபா.'' என்றனரென்க. இவற்றை, ''கடனாகைநள்ளாறுகாறாயல்கோளிலியூர் - மடனாகமுத்தீனும்வாய்மியூர்மறைக்கான - முட்டறுகுந்தலமாதிலோராறுவடிவுகொண்ட - படநாகமதிவேணிப்பரஞ்சுடரையமர்வித்தான்.'' என்றும்; ''இப்படியேயொருபகலினெழுவரையுந்தாபித்து - மெய்ப்பரிவில்வழிபாடுவிதிமுறையாற்புரிவித்துச் - செப்பரியபுகழாரூர்த்தேவனுக்குவிழாச்செய்வான் - முப்புவனங்களும்போற்றுமுசுகுந்தன்முன்னினனால்.'' என்றும்வரும் கந்தபுராணத் திருவிருத்தங்களானுந்தெளிக. (க)

செற்றமுடனுற்றவவனன்றிரவிநடுயாமஞ்சென்றவ்வூரைப்
பற்றியொளிரணிமாடநெடுவீதியுட்புகுந்துபதிக்கபாடந்
தெற்றியனுவிற்பொடியாச்செய்துமனையுள்ளாரைச்சிரமறுத்து
மற்றவர்கடனமடவாரணிகவராவொருநொடியில்வல்லான்செல்ல.

(இ - ள்.) கோபமுற்றிருந்த விக்கலன் அன்றிரவு நடுச்சாமத்திலே வெளிக்கொண்டு தஞ்சைமாநகரத்தைச்சேர்ந்து, பிரகாசமும் அழகுமமைந்த மாடங்களையுடைய நீண்டவீதிக்குட்சென்று, அம்மாடங்களின் கதவுகளையும் சித்திரகூடங்களையும் பரமாணுப்போன்ற பொடியாகச்செய்து, அவ்வீடுகளிலுள்ளவர்கள் தலையைவெட்டி, அவர்களுடைய திரவியங்கள் மாதர்கள் ஆபரணங்கள் என்னும் இவைகளை அபகரித்து ஓர் நொடிப்போதில் ஓடிப்போக எ - று.

ஊரரவங்கடலொலியோவுருமொலியோவெனப்பொங்குமோதைகேளா
வாரமலர்மாலைபுனையபயன்கண்விழித்தெழுந்துள்ளான்பின்மிக்க
சாரணராலமைச்சனையுந்தஞ்சேனைத்தலைவரையுந்தருவித்திந்த
நேரமதில்விக்கலன்வந்தியற்றியகலாமனைத்துநிகழ்த்தற்பாற்றோ.

(இ - ள்.) இதனால் அவ்வூரிற்றோன்றிய கோஷ்டம் கடல்முழக்கமோ இடியேற்றின்முழக்கமோ என்று சொல்லும்படி விசேடித்த ஓசையைக்கேட்டு ஆத்திமலராலாகியமாலையணிந்துள்ள பராந்தகச்சோழன் கண்விழித்துச் சயனத்தினின்றும் எழுந்து, உள்ளன்பின் மேம்பட்டவர்களாகிய தூதுவர்களால் மந்திரியையும் தனது சேனைத்தலைவரையும் வரவழைத்து, இந்த நடுராத்திரியில் விக்கலன் வந்து செய்த கலகங்களெல்லாம் சொல்லிமுடியுமோ! எ - று. (உ)

ஆதலினால்விடிதன்முனமிவ்வூரெண்டிசைக்கண்ணுமுடனேபெற்ற
கோதிலரட்டர்க்குத்தம்படையோடுங்கடம்பூரைக்குறுகிவல்லான்
பீதிகொளப்போராடிச்சிரங்கொண்டுவருமாறுபிறங்கத்தீட்டி
வீதயொருதிருமுகம்விட்டிவணீவிரிருத்திரென்றான்வேந்தர்வேந்தன்

(இ - ள்.) ஆகையால், பொழுதுவிடிவதற்குமுன்பாக அஷ்டதிசைகளிலும் வலிமைபெற்றிருக்கின்ற குற்றமற்ற சிற்றரசர்கட்குந் தங்கள்தங்கள்சைனியங்களுடனே கடம்பூரைச்சேர்ந்து வல்லானென்னும் விக்கலன் அச்சமுறும்படி போர்புரிந்து அவன்றலைகொணரும்படி விளக்கமாக எழுதி ஒவ்வொருவரு

கரும் ஒவ்வோர் திருமுகமனுப்பி, நீங்கள் இவ்விடத்திலிருக்கவேளன்று அரசர்க்கரசனாகிய பராந்தகச்சோழன் கூறினன். எ - று. (ச)

வேறு.

அட்டதிக்கினுமவ்வாறுகீறிவிடவாதுகண்டுறுமியக்கணம்
பட்டவர்த்தனருமகுடவர்த்தனரும்பாடிகாவலருமெழலுமுட்
கட்டரைப்புளிஞர்மல்லர்மள்ளர்பலகள்ளர்மாமறவர்வன்னியர்
மட்டறக்குறுகவிரதம்யானைபரிமாநிலம்புதையவுற்றவே.

(இ - ள்.) பராந்தகச்சோழன் கட்டளைப்படியே எண்டிசைகளினும் திருமுகமெழுதியனுப்ப, அதனைப்பார்த்துக் கர்ச்சித்து அந்தக்ஷணமே பட்டவர்த்தனராயுள்ளாரும் மகுடவர்த்தனராயுள்ளாரும் அவரவர்களின் மெய்க்காப்பாளர்களும் வெளிக்கொள்ள, அவரவர்களுடனே இருப்புமுட்களை அரையிற்கட்டியுள்ள வேடர்களும் மற்போர்புரிவோரும், குறவர்களும் பல கள்ளர்களும் சிறந்த படைவீரர்களும் வன்னியர்களும் ஆகிய இவர்கள் அளவிறந்தவர்களாகச் சேர்ந்துவர, இரதங்களும் யானைகளும் குதிரைகளும் பெரிய நிலவுலகம் பாதாளத்திலழுந்தும்படி கூடின. எ - று.

சிற்றரசர்கட்குள்ளே பட்டமாத்திரந் தரித்தவர்களென்றும் பட்டத்துடனேமகுடமும் தரித்தவர்களென்றும் இருபகுப்பாருளராகலின், "பட்டவர்த்தனருமகுடவர்த்தனரும்" என்றுகூறினர். கள்ளர் ஓர்வகைச்சாதியார். (ரு)

வாரிபார்கொளநடத்தல்போலவிணின்மண்டுகட்படலம்விஞ்சுறஇச்
சேரவேயறமில்விக்கலன்வெருவுசெறியவேமதிமயங்கவே
பாரெலாமுளமிரங்கவேயுயர்பராந்தகன்படைநடத்தலும்
வீரமோடுயர்கடம்பைகாதமெனவேநிறுத்தினர்கள்வேந்தரே.

(இ - ள்.) கடல் பூமியின்மேல் பிரவாகிப்பதுபோன்றிருக்கவும், ஆகாயத்திலே மண்ணுலாகிய தூளிபடலம் மேம்பட்டுப்போயடையவும், நீதியற்ற விக்கலனென்பவன் பயமடையவும் மதிமயங்கவும், உலகத்திலுள்ளாரனைவரும் மனம்வருந்தவும், மேன்மையமைந்த பராந்தகச்சோழனுடைய சைனியங்கள் செல்லலும்; அவற்றின் தலைவர்கள் வீரத்தன்மையுடனே சிறப்புற்றதாகிய கடம்பூர் என்பது காதவழிதூரத்திலுள்ளபோதே நிறுத்திவிட்டார்கள். எ - று. (௬)

தண்டுவாள்கழுமுள்சூலநீளசுசக்கரங்கணைகொள்சாபம்வேற்
கொண்டுதானைபலகொக்கரித்திடலுமானையுங்குலவுவாசியு
மிண்டிவாய்விடலுமிடிமுழக்கமெனவிருதுபல்வகையவிம்மலுங்
கண்டபோர்கடிதிமேனுடிவிக்கலன்முன்வந்துநின்றிதுகரைப்பரே.

(இ - ள்.) தண்டாயுதம் வாளாயுதம் கழுமுள் சூலாயுதம் நீண்டசத்திகள் சக்கராயுதம் அம்புகளைப் பூட்டிய வில் வேலாயுதம் என்னும் இவைகளைத்

தாங்கிக்கொண்டு பலசைனியங்கள் நெருக்கிக்கொண்டிருக்கவும், யானைகளும் அவைகளுடன் கலந்திருக்கும் குதிரைகளும் ஒன்றுகூடிக் கர்ச்சித்துக் கனைத்துக்கொண்டிருக்கவும், பலவகையான விருதுகள் இடிமுழக்கம்போன்று கோஷித்துக்கொண்டிருக்கவும்பார்த்தவர்கள்; அதிவிரைவிலோடி விக்கலனுக்கு முன்பாகவந்து எதிரிலேநின்று இவ்வாறு கூறுகின்றார்கள். எ - று. (எ)

மன்னர்வெம்படைபடர்ந்துவந்தபடிமண்ணுமெண்டிசையுமண்டுதூளி
யின்னதென்றளவுகூறொணாதெனவிசைத்தலோடுமிகல்விக்கலன்,
முன்னுநம்படைகொடேகிவந்தமர்கொடுன்னலாரைவதைசெய்துபோய்ச்,
சென்னிதன்றலைதுணித்தலொன்றலதுதிறைதரக்கொளுதலொன்றலான்

(இ - ள்.) அரசர்களின் பெருஞ்சைனியங்கள் சேர்ந்துவந்தன. பூமியிலின்றுங் கிளம்பிய தூசுகள் அஷ்டதிசைகளினும் நெருங்கியதை இவ்வளவென்று எல்லையோதவேலாது. என்று கூறியவளவில் வலியுள்ள விக்கலனென்பவன் நெருங்கிய நமது சைனியங்களைக் கூட்டிக்கொண்டு சென்று, இப்போது வந்து போர்புரியத்தொடங்கிய பகைவர்களைக் கொன்று சென்று அச்சோழன் றலையை வெட்டுதலொன்று, அல்லது அவன் பகுதிகட்டப் பெற்றுக்கொள்வதொன்று இவையல்லது, எ - று. (அ)

மீள்வதில்லையெனவார்க்கும்விக்கலனைமிக்கமந்திரிகளடியே
கேளிதென்றுரைசெய்வாரவற்கொருதுகேடிலாதவளமேவசற்கி
நாள்விடுந்திருமுகத்தையாதுகொடுகந்திறைதருதலின்றியே
கோள்விளைத்திடினெதிர்ந்துபோரிடுதல்குணமதாமிதுகுறிக்கொணீ.

(இ - ள்,) திரும்புவதில்லையென்று கர்ச்சிக்கின்ற விக்கலனை மதியின்மிகுந்த மந்திரிகள்பார்த்து, இதனைக்கேட்பீராகவென்று அவனைப்பணிந்துரைக்கின்றார்கள்: பழுதடையாத சோழனுக்கு இன்றையதினம் ஓர் திருமுகத்தையனுப்பும். அத்திருமுகத்தைப் பெற்றுக்கொண்டும் நமது பகுதியைத்தராமல் கலகம்விளைப்பானாகில், அவனை எதிர்த்துப் போர்புரிதல் குணமாகும். இதனை நீர் யோசிப்பீராக. எ - று. (௯)

அல்லதேகிலமர்செய்கவீர்விடியினளவில்வஞ்சனையடுத்திடுங்
கொல்லமீழமலைநாடுகொங்குகுருகொச்சிகோசலம்விராடமுன்
செல்லவாணைதிறைகொண்டுநீடுவளர்செம்பியன்முறைகொடேயனோர்
சொல்லருந்துணைவர்குந்தவீரவர்துட்டரென்றுரைதொகுத்தனர்.

(இ - ள்.) இரவுநீங்கில் போர்புரியமாட்டீர். பொழுதுவிடிந்தால் எண்ணற்ற வஞ்சனைகள்நேரும். கொல்லம் ஈழம் மலைநாடு கொங்கு குரு கொச்சி கோசலம் விராடம் என்னும் இவைமுதலியநாடுகளில் தனதாக்கினை செல்லும்படிக்குப் பகுதிபெற்றுக்கொண்டு பெருவாழ்வடைந்துள்ள அச்சோழன், செங்

கோன்முறைமை வழுவாதரசாளும் பரீக்ஷித்தன். அவனுக்கிருக்கும் ஒப்புரைத்தற்கரிய தலைவர்களோ! செங்குந்தவீரர்கள். அவர்களோமிகச் சொரேர்களென்று கூறி முடித்தார்கள். எ - று. (௧௦)

என்றுரைத்திடுமமைச்சர் தங்களையிரட்டனுங்கடிதிறைஞ்சியே
வென்றிவாய்மைபலவ்பரிமன்னனைவியந்துளிரெனவெகுண்டிடா
நின்றவென்றனதுசேனைகாவலர்நிகழ்த்துமென்றிடனுமிக்கணஞ்
சென்றுசென்னிபடைவென்றுமீளுவதுதீரமென்றனரிதோர்தலும்.

(இ - ள்.) என்று கூறுகின்ற மந்திரிமார்களை விக்கலனென்னும் இரட்டன் வணக்கமாகப்பார்த்து, பலவிதமான வெற்றிப்பாடுகளும் நீதிகளுங்கூறி அச்சோழனைப் புகழ்ந்தீர்களென்றுநினைந்து, எதிரிலே நின்றுகொண்டிருக்கும் என்னுடைய சேனைத்தலைவர்களே! நீங்கள் சொல்லுங்களென்று கூறியவளவில் அவர்கள் இக்கணமே சென்று சோழனுடைய சைனியங்களை வெற்றிகொண்டு திரும்புவது வீரமாமென்றார்கள். இதனை யறிந்தமாத்திரத்தில், எ - று. (௧௧)

சேனையானைபரிமந்திரித்தலைவர்செருநேரினையர்திரண்டெழா
வானமாறுகொடுமேனடத்தலுமவ்வானிலம்புவியின்மட்டுகே
ளானமேதாங்கியிருண்டெனவெங்குந்தவழ்ந்தவப்பொழுதுவிக்கலன்
றானையாவுமடைமையெதிர்த்துவினைதாங்கினரமரினேந்தினர்.

(இ - ள்.) சேனைகளும் யானைகளும் குதிரைகளும் மந்திரிகளிற்றலைமையுற்றவர்களும் போர்புரியவல்ல மற்றையர்களும் ஒன்றுகூடி வெளிப்பட்டு ஆகாயமே வழியாகக்கொண்டு மேலேநடந்தகாலையில், ஆகாயத்திலே நிலவுலகத்தின் தூசிகள் மேலோங்கி இருளைப்பரப்பி எவ்விடத்தும்பரவின. அப்போது விக்கலனுடைய சைனியங்களனைத்தும் கொல்லத்தக்க ஆயுதங்களைக் கையிலேந்திக்கொண்டு யுத்தம்புரிபவர்களாய்ப் போரில் மேம்பட்டார்கள். எ - று. ()

மேலடர்ந்துபொருதுற்றசென்னிதன்மிகுத்தவெம்படைகள்வீழியே
சாலவாளிமழைதூவலும்பரிமேலேறியிடுமன்னருங்
கோலிவல்லியமிசைத்தெதிர்த்தனர்குலாவுதந்தியுறைவார்களு
மாலகாலமெனவத்திராதிகளனந்தம்வீசியெதிரார்த்தனர்.

(இ - ள்.) அதன்பின், நெருக்கிப் போர்புரியவந்த பராந்தகச்சோழனுடைய விசேடித்த பெருஞ்சைனியங்கள் மேற்சென்று, மிகுதியாக அம்புமாரிகளைப் பொழிந்தவுடன், குதிரைமீதேறிவந்த அரசர்களும் வளைத்துக்கொண்டு கடோரவார்த்தைகளைக்கூறி எதிர்த்தார்கள். அங்கு விளங்கிக்கொண்டிருக்கும் யானைமீதேறினோர்களும் ஆலகாலவிஷத்தைப்போன்று அத்திரங்கள் முதலியவற்றை அனந்தமாகச் செலுத்திக் கர்ச்சித்தார்கள். எ - று. (௧௩)

ஆனையானையுடனேயெதிர்ந்துபொரவாடல்வாசியுடன்வாசியும்
மானைமூடும்வகையாயெதிர்ந்துபொரவாளிரும்பயிறண்டேந்தியே

சேனைசேனையுடனேயெதிர்ந்துபொரவேபடைத்தலைவர்சீறிமே
மானமீக்கொடிடசாரியோடுவலசாரிவந்துலவுவார்களே.

(இ - ள்.) ஆனைகள் ஆனைகளுடனெதிர்த்துப் போர்புரியவும், வெற்றியமைந்துள்ள குதிரைகளுடன் குதிரைகளும் ஆகாயத்தைமூடிக்கொள்ளும் விதமாக எதிர்த்துப் போர்புரியவும், வாளாயுதம் முசலாயுதம் வேலாயுதம் தண்டாயுதம் என்னும் ஆயுதங்களை எடுத்துக்கொண்டு சைனியங்கள் சைனியங்களுடனே எதிர்த்துப் போர்புரியவும், சேனாதிபதிகள் சினந்து மானம் மேம்பட்டவர்களாய் இடசாரியாகவும் வலசாரியாகவும் உலாவுவார்கள். எ - று. (௧௪)

அங்கணப்பொழுதுசோதிதந்தருளுமமலர்வேட்கனுசராயினோர்
துங்கமிக்கமுசுமுகமனுக்கொழிவிறாய்குலப்பெயர்பெணீந்தவ
ரெங்குமெச்சுபுகழ்விக்கலன்படையையெள்ளிமட்கிருமியென்னவே
பங்கமுற்றழியவில்லெடுத்துமழைபோலவாளிகள்பரப்பினார்.

(இ - ள்.) அப்போர்க்களத்திலே அத்தருணத்தில் சிவபெருமானருளிய தூய்மையினரும் முருகக்கடவுட்குச் சகோதரராயினோரும், முசுமுகவேந்தனுக்கு அழிவில்லாத சுத்தமாகிய தங்கள் குலப்பெயரையும் தங்கள் குலப்பெண்ணையுங் கொடுத்தவருமாகிய செங்குந்தவீரர்கள்; எவ்விடத்திலும் வியக்கத்தக்க புகழ் படைத்துள்ள விக்கலனுடைய சைனியங்களை மண்ணிற்றோன்றும் புழுக்களென்று அவமதித்து, அச்சைனியங்கள் தோல்வியுற்றழியும்படி தங்கள் கரங்களிலுள்ள வில்லைவளைத்து அதனிடத்திலே அம்புகளைப்பூட்டி மழைபோலச் சொரிந்தார்கள். எ - று.

செங்குந்த வீரர்கள் முசுமுகவேந்தனுக்குத் தங்கள் குலப்பெயரையும் தங்கள் குலப்பெண்ணையும் கொடுத்தார்களென்பதனை "இன்னணம்மவரொழுகுறலுமெம்மிறைபுலகிறைநயைநோக்கா-நின்னுறும்பெயரின்மற்றிவருறும்வேற்பெயர்சிறுவியாண்டுநே - சொன்னயம்பெறமுசுகுந்தவேந்தாகெனச்சொற்றிறற்று-யென்னநின்றன்மறைநன்னினும்பன்னுணவியல்பினின்றன்," எனவும், "அந்தமில்வன்மைசான்றவாடலம்புயத்தோன்புட்ப - கந்தியென்றுரைபெற்றுள்ளகன்னிகைதன்னைவேட்டுச் - சிந்தையின்மகிழ்வாற்சேர்ந்துசித்திரவல்லியென்னும்-பைந்தொடி தன்னையன்பாற்பயந்தனன் பதுமமின்போல்" "அத்தருபொழுதிற்பின்னையனகனேசன்கனென்னும்-புத்திரர்தம்மைநல்கிப்புவனியாண்முசுகுந்தற்குச்-சித்திரவல்லியென்னுஞ்சீர்கெழுபுதல்விதன்னை - மெய்த்தருவதுவைநீரால்விதிமுறைவழாமலீந்தான்." எனவும் வரும் கந்தபுராணத் திருவிருத்தங்களானுந்தெளிக. (௧௫)

ஆளியொத்தவிறலுற்றவீரரரனரியபாதமறவாதவர்
காளியெண்மையுமழப்பிடித்துவிண்கடாவியங்கிமுகற்காய்ந்தவ
ரோளிதச்செயல்கொடேயுழன்றுளவிரட்டர்கோன்படைகளிரியவுந்
தூளியுற்றிடவமர்விளைத்தபடியாவர்வாய்கொடுதொகுப்பரே.

(இ - ள்.) யாளியைப்போன்ற வல்லபமமைந்துள்ள வீரர்களும், சிவபிரானுடைய அருமையாகிய திருவடிகளை மறவாதவர்களும், காளியினுடைய எட்டுக்கைகளை அவள் அழும்படியாகப் பிடித்துக்கொண்டு ஆகாயத்திலெறிந்து அவளையேவிய அக்கினிமுகாசுரனை வெட்டினவர்களுமாகிய செங்குந்தவீரர்கள்; சுத்தவீரர்களால் ஏளனஞ்செய்யத்தக்க செய்கைகளுடையனுயிருந்த இரட்டர்களுக்குத்தலைவனுகிய விக்கலனுடைய சைனியங்கள் முதுகுகாட்டியோடவும் நாசமாய்விடவும் போர்புரிந்தவிதத்தை, எவர்கள்தான் தங்கள்வாயாற் கூறுவார்கள். எ - று.

அக்கினிமுகனுமேவிய காளியை வென்றார்களென்பதனை "நோக்கினன் மொய்ம்பினுளேனைமைபூண்டுளான் - றுக்கணங்காமிவடன்னதாவியை - நீக்குதல்செய்வதுநீர்மைத்தன்றெனுத் - தூக்கினனைவள்வலிதொலைக்கவுன்னுவான்." "இடித்தெனவுரப்பினனெண்கைதன்னையு - மொடித்தனனுமெனவொருகையாலுறப்-பிடித்தனன்மற்றொருபெருங்கையாலுரத் - தடித்தனன்காளிவீழ்ந்தவசமாயினுள்." "கரங்கொடுசேவகன்கல்லென்றெற்றலு - முரங்கிழிவுற்றனளுமிழ்ந்தசோரிநீர் - தரங்கமதெறிகடறன்னைப்போன்றலா - யிரங்கியதவடுயர்யாவர்கூறுவார்." எனவரும் கந்தபுராணத் திருவிருத்தங்களானுந்தெளிக. (௧௬)

ஆதிதன்னருளினுல்விளங்குமவரமரர்மாதர்மணவாளர்நன்
னீதியாலுயர்குலத்துளோர்தருவைநேர்கரத்தர்விறலாண்மையர்
வேதனைச்சிறையிலிட்டுவிட்டவர்வெகுண்டுளங்கடுகடுத்திடா
வாதரானவர்கள்வீழமோதியமராடினுரமரர்பாடினுர்.

(இ - ள்.) சிவபிரான் திருவருளால் விளங்குகின்றவர்களும், தேவமாதர்களுக்கு மணுளர்களும், நல்லநீதியின் மேம்பட்ட குலத்தினரும், கற்பகத்தருவைப்போன்ற கரமுடையவர்களும், வீரமும் ஆண்மையுமுள்ளவர்களும், பிரமனைச் சிறைப்படுத்தி மீண்டும்விட்டவர்களுமாகிய செங்குந்தவீரர்கள்; மனங்கடுகடுத்துக் கோபித்து அறிவில்லாதவர்களாகிய விக்கலனைச்சேர்ந்த பகைவர்களெலலாம் பூமியில் மடிந்துவிழும்படியடித்துப் போர்புரிந்தார்கள். அப்போது தேவர்களும் அவரைத் துதித்தார்கள். எ - று.

தேவமாதர்களுக்கு மணுளர்களென்பதனை, "அன்னதோர்காலந்தன்னிலரம்பையரவனியாளு - மன்னவர்தப்பாற்றேன்றிவளர்தலும்வாகைமொய்ம்பின் - முன்னவன்முதலோர்க்கெல்லாமுசுகுந்தவேந்தனந்தக் - கன்னியர்தம்மைக்கூவிகடிமணமியற்றுவித்தான்." எனவரும் கந்தபுராணத்திருவிருத்தத்தானும், பிரமனைச் சிறைப்படுத்தினரென்பதனை, 'பொதியமால்வரைக்குறுமுனிதேறவும்பொருள்சொன்ன - மதியையாறெனவுடையவோர்மூவிருவதனத்தான் - கதியையாற்றியுங்குணத்தொடுபழகியுங்காணு - விதியைமேவலர்நடுங்கிடத்தளையிடுமிளிர்குந்தம்." எனவரும் ஈட்டியெழுபதென்னும் அற்புதப்பிரபந்தத் திருவிருத்தத்தானுந்தெளிக. விக்கலன் உலகத்திற்செய்யும் கொடுமைகளையழிக்கத் தலைப்பட்டார்களாகலின், "அமரர்பாடினுர்." என்றூர். (௧௭)

வெள்ளமாகியெழுபொன்னியாறுடையவேந்தரோடுறவுபூண்டவர்
தெள்ளிதாயமநுநீதிகற்றுமவர்தீரவீரமுளசெய்கையோர் [டோர்க்
வள்ளியோர்தொடர்பினம்பினோர்க்கினியர்வளைதடிப்படையெடுத்தி
கள்ளர்மாமறவரொன்னலார்தமிருகாலறக்கடிதுவீசினார்.

(இ - ள்.) பிரவாகமாகிப் பெருகுகின்ற காவிரிநதியுடைய சோழவம்சத்தினருடன் சம்பந்தம்பூண்டவர்களும், தெளிவான மநுநீதி கற்றுணர்ந்தவர்களும், தைரியத்துடன் வீரத்தன்மையும்வாய்ந்த செய்கையுடையவர்களும் வள்ளற்றன்மையுடையோரும், நேசத்தால் தம்மைநம்பிச் சரணடைந்தோர்கட்கினியவர்களுமாகிய செங்குந்தவீரர்களும் கள்ளர்களும் வேடர்களும்; பகைவர்களுடைய இரண்டுகால்களுமறும்படி விரைவில் வெட்டினார்கள். எ-று. (௧அ)

எல்லையற்றபுகழ்பூதராசலைமுனீந்தகுந்தமினிதேந்தியே
வல்லபத்தொடமராடிநின்றெதிருமருவலற்குரிமையாயெழூஉம்
பல்வகைப்படைகளெண்டிசாமுகமும்பாறிடாதபடிவீறியே
கொல்லவுஞ்சமரபூமியிற்பெரியகுருதியாறுசுழலிட்டதே.

(இ - ள்:) அளவற்ற புகழுள்ள அச் செங்குந்தவீரர்கள், உமாதேவியார் ஆதிகாலத்தில் தங்களுக்குக் கொடுத்தருளிய கைவேலை இனிமையுடன் தாங்கிக்கொண்டு, மிகுந்த வல்லபத்துடன் போர்புரிந்து எதிர்த்துவந்த பகைவனாகிய விக்கலனுக்குத் துணையாகவருகின்ற பலவிதசைனியங்களும் அஷ்டதிக்குகளினும் ஓடிப்போகாவண்ணம் மேற்சென்றழித்தவளவில், அந்தப்போர்க்களத்தில் மிகப்பெரிதாகிய உதிரநதி சுழன்றோடியது. எ - று.

பார்வதியாராற் கொடுக்கப்பட்ட குந்தமென்பதை, "ஆதிநாளுமையவளளித்தகுந்தமே-சாதிநாலுவப்புடனேந்திக்கொள்குந்தமே-காதிமேலவரையுங்கல்லுங்குந்தமே - கோதினம்பாடலேகொள்ளுங்குந்தமே." என்னும் ஈட்டியெழுபதின் திருவிருத்தத்தானுந்தெளிக. (௧௯)

ஒன்பதோடொருபதானநூற்றுவர்தமுயர்வழிப்புனிதராயினோ
ரன்பர்சூழெழுவிடங்கமாதியவருந்தலாதிபமடைந்துளோ
ரென்புமூனுநிணமும்விழைந்தலகையெண்ணிலாதனதுணங்கையோ
டின்பமேவநரகழுகூளிசேரவமரிட்டநேர்மைசொலவொட்டுமோ.

(இ - ள்.) ஆயிரத்துத் தொளாயிரவர்களுடைய மேலான சந்ததியிற்பிறந்த சுத்தராயினோரும், பத்தர்கள்சூழும் சத்தவிடங்கமுதலாகிய அருமையான சிவாலயங்கட்கெல்லாம் ஆதிபத்தியம் பெற்றவர்களுமாகிய செங்குந்தவீரர்கள்; கணக்கற்றபேய்க்கூட்டங்கள் என்பையும் ஊனையும் நிணத்தையும் இச்சித்துத் துணங்கைக்கூத்தோடு அகமகிழ்வுகொண்டு நெருங்கவும், கழுகுகளும் கூளிகளும் அங்ஙனமடையவும் போர்புரிந்த நேர்த்தி ஒருவராற்கூறும் அளவையுடையதோ. எ - று.

இலக்கத்தொன்பதின்மராகிய வீரவாகுதேவ ராதியர்க்கு ஆயிரத்துத்தொளாயிரவர் புத்திரரென்பதையும், இவ்வாயிரத்துத்தொளாயிரவர் சந்ததியாரே இவ்வுலகின்கணுள்ள செங்குந்தமரபினரென்பதையும், "துங்கமிகுமுசுகுந்தன்றொல்கயிலையடைந்தபின்ன - ரெங்கள்விறன்மொய்ம்பினனுமிலக்கருடனெண்மர்களுந் - தங்கள்சிறூர்தமைவிளித்துத்தத்தமதுசிறப்புநல்கி யங்கிவன் மன்பாலிருந்தியரியதவமாற்றினரே." "மாதவமெண்ணிலவியற்றிமானுடத்தன்மையைநீங்கி-யாதிதனிலடலெய்தியருண்முறையாலனைவர்களு-மேதகுசீர்க்கந்தகிரிவிரைந்தேகிவேற்கடவுள் - பாதமலர்பணிந்தேத்திப்பத்திடைசெய்துற்றனரே." "நூற்றெழுபீராயிரரினுவலுமுவர்ச்சிறூர்மறையோ-ருறெழுமுன்மூவருளராறுதொழிலேற்றறநூலிற்-கூறுநெறிபிறழாக்கைகோளரெனச்சிறந்தனரா-லீறில்சிவன்முகத்துதித்தவிருங்குரவரீட்டம்போல்." எனவருங்கந்தபுராணத் திருவிருத்தங்களானும், நண்ணரிய வோராயிரத்துத்தொளாயிரரென்றூழிமுதற்-பேராணிறைந்தபெருமையரும்." எனவரும் இரட்டைப்புலவர் இனியவாக்கானும், சிவாலயங்கட்கெல்லாம் ஆதிபத்தியம்பெற்றுளோரென்பதை, "விடங்கமேழாதிவீதி விடங்கமாரூர்வெண்காடு - நடங்கொளுந்தில்லைமூதூர்பஞ்சநந்திசாய்க்காடு மிடங்கொண்மாகாணமேழுமிடைமருதூர்வெண்காடுந்- தொடங்கிய தருமவாட்சிச்செங்குந்தர்தொகுதிவாழி." எனவரும் ஈட்டியெழுபதென்னுந்தெய்வீகப்பிரபந்தத்திருவிருத்தத்தானும், 'நெல்லைப்பதிமதுராபுரிகாஞ்சிநெடுங்கழுக்குன்-றெல்லைக்கடங்கருங்காசியையாறெழிடைமருதூ-ரல்லைப்பொருங்கமலாலயங்காழியதிகைமுதற்-றில்லைத்தலந்தொறுமெய்க்காவல்பூண்டவர்செங்குந்தரே எனவும், "பரங்குன்றஞ்சிராலைவாயாவினன்குடிபண்ணவர்க்கு-வரங்குன்றிடாத்திருவேரகஞ்சோலைமலைமருத்தி- னாரங்குன்றகுன்றுதோருடன்முன்னும்பதிக்கோரதிபத்-திறங்குன்றிடாதிருந்தாதிக்கம்பெற்றவர்செங்குந்தரே." எனவும்வரும் செங்குந்தர்மாலைத் திருவிருத்தங்களானுந்தெளிக. துணங்கைகூத்து இருகையு முடக்கிப் புழுப்புடையொத்தி ஆடல். (௨௰)

வேறு.

இப்படியேபகன்முழுதுமிரட்டன்றொடுபொருதா<br>
ரப்படியேமற்றவருமசையாதவீரமுடன்<br>
வெப்பமிகவேமன்னன்விடும்படையைமிறைசெய்தா<br>
ரொப்பில்வளவன்படையோருளநொந்துபதியடைந்தார்.

(இ - ள்.) இவ்வாறாகவே அப்பகன்முழுவதும் அவ்விக்கலனுடைய சைனியங்களுடன் போர்புரிந்தார்கள். அவ்வாறே அவ்விக்கலன் சைனியங்களும் அழிவுபடாத வீரத்தோடு, அரசர் கோபமூண்டு விடுகின்ற சைனியங்களை யழித்துவந்தார்கள். கடைசியாக நிகரற்ற சோழராஜனுடைய சைனியங்கள் மனம் வாடித் தங்கள் நகரத்திற்சேர்ந்தார்கள். எ - று. (௨௧)

வல்லானுந்தன்படையைவாங்கியடைந்தான்றூதர்<br>
சொல்லாடற்கரியபுகழ்ச்சோழர்பெருமான்முன்பு

செல்லாநின்றேறெதாழுதுதிறல்வல்லான்செயலெல்லாம்
பல்லோருமறியமனப்பருவரலிற்பகர்ந்திட்டார்.

(இ - ள்.) வல்லானென்னும் விக்கலனும் தனது சைனியங்களை மீட்டுக்கொண்டு அரண்மனைசேர்ந்தான். தூதர்களாயுள்ளவர்கள் யாவராலும் கூறுதற்கரிய புகழ்வாய்ந்துள்ள சோழர்பிரானுக்கு முன்னேசென்று பணிந்துநின்று, வல்லபமமைந்த வல்லானுடைய செய்கைகளனைத்தையும் பலபேருமறியும்படி மனோதுக்கத்துடனே கூறினார்கள். எ - று. (உஉ)

மந்திரிகளுடன்கேட்டமன்னவனேநெய்சொரிந்த
செந்தழல்போலேமுறுகிச்சீறியிடவேயமைச்சர்
நொந்தொருதூணிடையொதுங்கவளவேசனுவல்கின்றா
னிந்தவினைவல்லானுமெமக்கெதிரோவிங்கென்னா.

(இ - ள்.) இவ்வாறு கூற அருகிருந்த மந்திரிகளோடுங்கேட்ட பராந்தகச்சோழனே நெய்வார்த்த செந்நிறத்தீப்போல விசேடமாகக்கோபித்துக்கொள்ள, அதுகண்ட மந்திரிகள் மனம்வருந்தி ஒருதூணிலே மறைந்துகொண்டிருக்க, அப்போது அந்தச்சோழராஜன் இப்படிப்பட்ட செய்கைகளையுடைய வல்லானென்னும்விக்கலனும் இவ்விடத்தில் எமக்கெதிரோவென்றுகூறுகின்றான்

விக்கலனைத்தலையறுத்துமேதினியிலேமோதிப்
பக்கமுறவேவந்தபரிசனர்முன்படையெல்லாந்
தக்கபுவிமாதுக்குத்தாணிரையிட்டேயுலகி
னிக்கணமேவருவனெனவேயெழுந்தானிப்வேந்தன்.

(இ - ள்.) விக்கலன் என்பவனுடைய தலையைத்துண்டித்துப் பூமியிலேமோதி, அவனுக்குத்துணையாக அவன்பக்கத்தில்வந்த பரிசனர்கள்முதலான சைனியங்களையெல்லாம் தகுதியமையப் பூதேவிக்கு உலகத்தாரறியும்படி பலியாக்கி, இந்தக்ஷணமே திரும்புகின்றேனென்று நற்குண மைந்த பராந்தகச்சோழன் கோபித்தெழுந்தான். எ - று. (உச)

மாமனுவின்குலத்துதித்துமாறுபடாக்கோலோச்சி
யேமவுலகோருமிசையெடுத்தேத்தவாடுகடை
மாமணிநாவசையாமேமன்னுலகாண்மாலேவெவ்
வீமமுறவிருபடையும்வினைபுரிந்தவிதமீதால்.

(இ - ள்.) சிறந்த மனுவின்குலத்திலவதரித்து மாறுபாடற்ற செங்கோலைச்செலுத்தி பொன்னுலகத்தாரும் கீர்த்தியை விரித்துத் துதிக்கும்படி அரண்மனைவாயிலிற்கட்டியுள்ள பெருமைபொருந்தியஆராய்ச்சிமணியின் அசையத்தக்க நாவு அசையாமல் உலகத்தையாளுகின்ற, நிலைபெறுன திருமாலின் அம்சமுடைய குலோத்துங்கனே! கொடிய அச்சம்விளையுமாறு இருவகைச் சைனி

யங்களும் போர்புரிந்ததன்மை இதுவாகும் எனக்கவிச்சக்கரவர்த்தி திருவாய்மலர்ந்தனர். எ - று.

சூரியகுலத்தரசர்கள் மனுவின் பரம்பரையினராகலின், "மாமனுவின்குலத்துதித்து," என்றும், உலகத்தில் யாகாதிகிர்த்தியங்கள் குறைபாடின்றி நிறைவேறித் தேவர்களனைவர்க்கும் அவிசொடுத்துக்கொண்டு வருதலால், "ஏமவுலசோருமிசையெடுத்தேத்த," என்றும், தன்னரசாட்சிக்குட்பட்ட சர்வசீவராசிகளுக்கும் யாதோரிடையூறுமின்றிப் பாதுகாத்தலின், "ஆடுகடைமாமணிகாவசையாமே." என்றும், திருமாலம்சமுடையோர்க்கே அரசுரிமை வாய்க்குமென்பது ஆன்றோர் துணிபாகலின், "உலகாண்மாலே." என்றும், இருவகைச்சைனியங்களும் வல்லபத்திற் குறைந்தனவல்லவாகலின், "வெவ்வீமமுறவிருபடையும்." என்றும் கூறினர். (௨௫)

போராடற்சருக்கம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம். ௧௭௫

ஐந்தாவது

## களவுகாண்சருக்கம்.

---

கவியரசர்நாக்கடொறுங்கலையரசுசெய்யும்வாணிகலசக்கொங்கை நவியநறுந்திருவமுதுதரவருந்திக்கழகமெனுநற்பைங்கூழ்மேற், சவிபெறத்தூவுறுமுகிலிற்றயங்குபெரியோன்றுங்கன்றனைக்கூய்மன்ன, பவிபொருங்கையனிற்பகைகையைப்பராந்தகனேமுடிக்கும்வணம்படர்தலானுன்.

(இ - ள்.) பாவாணர்கள் நாவுகள்தோறும் பனுவலரசாட்சிபுரியும் கலைமகளாரது கலசம்போன்ற தனங்களினின்றொழுகிய புதுமையமைந்த நறுமணமுள்ள திருவமுதைக்கொடுத்தருளவுண்டு, கல்விபயிலிடம் என்னும் பயிர்களின்மீது அழகமையும்படி பொழிகின்ற மேகத்தையொத்துவிளங்கும் மூதுணர்வினராகிய கவிச்சக்கரவர்த்தியார் குலோத்துங்கச்சோழனை விளித்து, அரசனே! இடியேற்றைநிகருங் கொடியனுகிய விக்கலனிடத்துள்ள விரோதத்தை, பராந்தகச்சோழனேசென்று ஒழிக்குமாறு நினைப்பதானுன். எ-று.

கவியரசர்களுடைய நாக்கடோறுங் கலைமகளார் குடியிருத்தலினன்றோ, வாணசுரனுடைய ஆயிரம்புயங்கள் அறுபட்டும் அவன் உயிர்பிழைத்திருந்தான். இதனை, "கலைவாணிநீயுலகிலிருப்பதுவுங்கல்வியுணர்கவிவல்லோரை - நிலையாகப்புரப்பதுவுமவர்நாவில்வாழ்வதுவுநிசமேயன்றே - சிலைவாணனுவிருந்தாயிரம்புயங்கடுணிந்துமுயர்சிவனுற்றன் - றலையாவிகொடுத்திடுஞ்செங்குருந்தருயிர்பெற்றிடநீதயைசெய்வாயே." எனவிக் கவிச்சக்கரவர்த்தியார் திருவாய்மலர்ந்

தருளிய எழுப்பெழுபதின் திருவிருத்தத்தாலும், கலைமகளாரைப் பிரமனும் நாவிற்றடைத்திருத்தலின் பிரமனுக்கும் கவிவாணருக்கும் தாரதம்மியமுண் டோவெனின், உண்டு பிரமனாற்சிருட்டிக்கப்பட்ட பூதவுடம்பு அநித்தியமா யழியும், கவிவாணராற் சிருட்டிக்கப்பட்ட புகழுடம்போ நித்தியமாகவும் அழி வற்றதாகவுமிருக்கும், ஆகலின் பிரமனைப்பார்க்கினும் கவிவாணரே மேலாவா ரென்னும் கருத்தை யுள்ளடக்கி, "கலைமகள்வாழ்க்கைமுகத்ததெனினு - மலர வன்வண்டமிழோர்க்கொவ்வான் - மலரவன்செய்-வெற்றுடம்புமாய்வனபோன் மாயாபுகழ்கொண்டு - மற்றிவர்செய்யுமுடம்பு." எனக் குமரகுருபரசுவாமிகள் திருவாய்மலர்ந்திருக்கும் வெண்பாவானுமுணர்க. அக்கலைமகளார் திருமுலைப் பாலளிக்க உண்டனரென்பதை, "உரைப்பாருரைக்குங்கலைகளெல்லாமெண் ணிலுன்னையன்றித் - தரைப்பாலொருவர்தரவல்லரோதண்டாளமுலை-வரைப் பாலமுதுதந்திங்கெனைவாழ்வித்தமாமயிலே - விரைப்பாசடைமலர்வெண்டாம ரைப்பதிமெல்லியலே." என இக்கவிச்சக்கரவர்த்தியாரருளிய சரஸ்வதியந்தா தியானுமுணர்க. (க)

ஆதுணர்ந்தபேரமைச்சாளடல்வேம்பனபயன்முனிவடங்கப்போற்றித்
தீதுசெயுந்தரியலனைக்கண்டவராரவன்படையைச்சிதைத்தலொன்றுங்
கோதினமர்பெற்றபயன்யாததனுலுளநொந்தார்கோழிமன்னு
வீதலிலவ்விக்கலனைக்கண்டுபொருதடல்கொள்ளாவிகலத்தாலே.

(இ-ள்.) பராந்தகச்சோழன் போர்க்குப் புறப்பட நினைவதறிந்த,வல்லபம் வாய்ந்து பேரமைச்சுரிமைபூண்ட தஞ்சைவேம்பனென்பவர் அவ்வரசனுடைய கோபந்தணியும்படி துதித்து,உறையூரதிபரே! கொடுமைபுரிகின்ற பகைவனைப் பார்த்தவர்கள் எவர்கள்? அவன் சைனியங்களைமாத்திரம் அழித்த ஓர் வெற்றி யினால், குற்றமற்ற நம்மவர்கள்பெற்ற பிரயோசனம் என்னை? அழிவற்றிருக் கின்ற அவ்விக்கலனைப் பார்த்துப் போர்புரிந்து வெற்றிகொள்ளாக் குறைபாட் டால் மனம்வருந்தினார்கள். எ - று. (உ)

மற்றவனேபகன்முழுதுமில்லைவிடானிராமுழுதுமண்ணேயேய்ப்பச்
சற்றேனுமஞ்சாதுசந்தினும்பொந்தினுநுழைந்துதண்டத்தாலு
முற்றதொருவாளாலுமரணுடைத்துப்பொருளொடுயிரொழிக்குமாற்றி
னிற்றல்விடானவற்காண்டனமக்குமரிதல்லினல்லானேரிவேந்தே.

(இ - ள்.) நேரிமலையுடைய அரசரே! மேலும் அவ்விக்கலனே பகற் காலமுழுவதும் வீட்டைவிட்டு வெளிப்படமாட்டான்,இரவுமுழுவதும் ஒழிவி ன்றிபேயைப்போன்று கொஞ்சமேனும் அச்சமில்லாமல் சந்துக்களினும் பொந் துக்களினும் நுழைந்து தான்பெற்றிருக்கும் ஒப்பற்ற தண்டாயுதத்தாலும் வா ளாயுதத்தாலும் காப்பாயுள்ள கபாடமாதிகளையுடைத் துள்புகுந்து அவ்வவ்விட ங்களிலுள்ளார்களுடைய உயிரையும் பொருளையும்போக்கிக்கொண்டுவரும் மா ர்க்கத்திலிருப்பதைக் கைவிடமாட்டான்,இராக்காலத்திலல்லது பகற்காலத்தில் அவனைப்பார்ப்பது நமக்கும் அருமையாகும். எ - று. (ங)

ஆதலினாற்றிருமுகமொன்றடல்வீரனொடுநாராயணன்றனக்கு
நீதமொடும்விடினவர்வந்திக்கொடியோன்செயலனைத்துநீழற்கான
வேதறல்போலொழித்தெல்லாவரையர்க்கும்வெற்றிநிலையவைப்பர்
சோதிவடிவேற்காத்தோயெனவிடுத்துவரப்பெற்றுச்சொற்றான்யாவும்.

(இ - ள்.) ஆகையால் ஒளியுங்கூர்மையுமமைந்தவேலாயுதமேந்தியமன்னவா! வல்லபம்பெற்றுள்ள வீரருக்கும் நாராயணருக்கும் ஓர் திருமுகத்தை வினயத்துடனவிட்டால், அவ்வீரர்கள்வந்து அத்துஷ்டனுடைய செய்கைகள்யாவும் கானலின் நிழல் எனுவாய்த்தோன்றும் சலத்தைப்போல் இல்லாவகைசெய்து, மற்றுள்ள எல்லாமன்னவர்க்கும் உம்மால் ஜெயம்பொருந்தும்படி செய்துவைப்பார்கள். என்றுகூற அரசனவ்வாறே திருமுகம்விடுத்து அவர்களைவரவழைத்து அவர்களுடன் அவன் செயல்களனைத்தையும் கூறினான். எ - று.

கானலின் நிழலே சலப்போற்றோன்றுதலின், "நீழற்கானவேதறல்போல். என்றார். எனவே கானநீர் எவ்வாறு சமீபித்தமாத்திரத்தில் காணாமற்போகின்றதோ அவ்வாறே அவன் துற்கிர்த்தியங்களனைத்தும் அவர்கள் சமீபித்தமாத்திரத்தில் ஒழிந்துபோமென்பது கருத்து. அன்றியும் நீழலுண்டாதற்கேதுவான ஓர் பொருள் இல்லாதொழியுமாயின் உடனேயந்நீழலு மொழிவதுபோலத் துற்கிர்த்தியங்க ளுண்டாதற்கேதுவான ஓர் விக்கலன் இல்லாதொழிவனாயின் உடனே யத்துற்கிர்த்தியங்களுமொழியுமெனினுமாம். (௪)

பழுவைநகராளரவைகேட்டுமிகநக்கிதென்பார்பழித்தற்காளா
யெழுமவனும்பறித்தருந்துங்கள்வனுமோர்காவலனாவிவனுக்கந்தோ
குழுவரையர்திறைதரலுமுண்டுகொலோவுண்டெனின்மற்றவனேகோமா
கழிதருநாமெல்லாமாதுனுந்தேமாபுளிமாவேகாமாலன்னோய்.

(இ - ள்.) திருப்பழுவூரென்னும் க்ஷேத்திரவாசிகளாகிய வீரநாராயணரிருவரும் அவையனைத்தையும் கேட்டு உடல்குலுங்கச்சிரித்து, உலகத்தைக்காக்கின்ற திருமால்போன்ற தோன்றலே! ஈதென்னே? உலகமெங்கும் பழித்தற்காளாயிருப்பவனும் வழிபறித்துப்புசிக்கும் திருடனும் ஓர் அரசனாவனோ? ஐயோ! இவனுக்கு அரசர்கூட்டங்களெல்லாம் பகுதிகட்டுவதுமுண்டோ! அப்படி கட்டுவதுண்டானால் அவனே சிறப்பமைந்த ஓர் ஆண்யானையாகும், அவனாலொதுக்கப்பட்ட நாமனைவரும் அவ்வாண்யானை புசிக்கின்ற தேமா என்னும் விருக்ஷமும் புளிமா என்னும் விருக்ஷமுமேயாகும். எ - று.

பழிப்புடையவனும் கள்வனுமாகிய அவன் அரசனென்றுகருதி மற்றுள்ள அரசர்கள் பகுதிகட்டுவார்களானால் நாமெல்லாம் மரங்களேயொழிய மனிதர்களல்ல என்றபடி. (௫)

மனுமுறையாலுலகோம்பிநாடுநகர்க்குறுகணுறுவண்ணங்காத்து
மினாரினுநன்றுநகரெய்துவான்கருதியயரியற்றநேரிற்

கனமொடுஞ்சென்றடலஞ்சறமிலொன்றப்பொருதுபெறற்கருமங்களாந்
தனமதிற்பொன்பறிப்பவற்கோதளஞ்செலுத்தியமரில்விடத்தக்கதண்ணல்

(இ - ள்.) ஓ அண்ணலே! மனுநீதியின்முறைமைப்படிஉலகத்தைப் பரிபாலித்துத் தங்களுடைய நாட்டிற்கும் நகரத்திற்கும் இடையூறுநேராதபடி அரசாட்சிபுரிகின்ற அரசர்கள், இன்னும் சிறப்புடைய நாட்டையும் நகரத்தையும் அடையவேண்டிய எண்ணங்கொண்டு போர்புரிய நேர்ந்தால், மேன்மையுடன்போயெதிர்த்தல் அஞ்சுதல் சமானமாய்ப் போர்புரிந்துபெற்றுக்கொள்ளுதல் என்னும் இம்மூன்றுமே அரசர்கட்குரிய கருமங்களாம். திருட்டுத்தனத்தாற் திரவியத்தை அபகரிப்பவனுக்கோ நமது சைனியங்களைப்போக்கி யுத்தத்தில் விடத்தக்கது. எ - று.

தம்மின் வலியாரிடத்து மேற்சென்றெதிர்த்தலும் தம்மின் மெலியாரிடத்தெதிர்க்க அஞ்சுதலும் சமமானோரிடத்துச் சமமாய்ப் போர்புரிதலும் ஆகியவிம் மூன்றுமே அரசர்கட் கழகாகுமன்றி, கள்ளனிடத்துச் சைனியங்களை யனுப்பிப் போரிடச் செய்தல் அழகல்ல வென்பது கருத்து. (சு)

நெருனலவன்படைக்காடுநிணக்காடாகுறச்செய்தநேர்மையாலே
வருதலன்றினிவ்விரவுவாரானேலென்றேனும்வருதறிண்ண
மொருவுமவன்களவாடவருங்காறுமிவணுறைதுமொருவாவின்னே
வெருவுமவர்க்கதுபோக்கியவனினைவயின்றேடுநீவிடுத்தியென்றார்.

(இ - ள்.) ஓ ஒப்பற்ற வளவ! அவ்விக்கலனுடைய சைனியங்களை யெல்லாம் நேற்று நிணக்காடாகும்படி செய்ததன்மையால் இனி வராதிருக்கமாட்டான். இன்றையிரவில் வராவிடினும் என்றைக்காவது வருதல் நிச்சயம். இப்போது ஓடிப்போய்விட்ட அவ்விக்கலன் மீண்டும் திருடுதற்கு வரும் வரையில் நாங்கள் இங்கிருக்கின்றோம். ஆதலால் இப்பொழுதே அவனுக்காகப் பயங்கொண் டிருப்பவர்க்கு அப்பயத்தை நிவாரணித்து, தேவரீரும் இன்றோடே அவனினைவை விட்டு விடுவீராக எனக்கூறினார்கள். எ - று. (எ)

என்றலுமப்பராந்தகன்றனிகுளையர்க்குமல்லார்க்குமிமைப்பிற்றூதர், சென்றுசொலவிடுத்தவனுஞ்சித்தசலனந்தீர்ந்தான்செறுநனன்றே, தென்றிசையோனெனவிரவிற்குரகதமீதூர்ந்தெறாழ்வாடிகழப்போந்து. தின்றபொருளினுஞ்சாலத்திருடியெதிர்ந்தோர்ச்செகுத்துச் செல்லாநின்றான்.

(இ-ள்.) இவ்வாறு வீரநாராயணர்கள் கூறியமாத்திரத்தில், அதுகேட்ட பராந்தகச்சோழன் தன்னுடைய சுற்றத்தினர்க்கும் மற்றையர்கட்கும் இமையளவுநேரத்திற்போய்ச்சொல்லும்படி தூதர்களையனுப்பி, அச்சோழனும் அதுவரையிற் கொண்டிருந்த மனக்கலக்கந்தெளிந்தனன். பகைவனாகிய விக்கலன் அன்றையத்தினமே வல்லப மிக்க வாளாயுதம் கையிற் பிரகாசிக்கும்படி இர

வில் மாயக்குதிரைமீதேறி, தென்றிசைக்கதிபனாகிய யமனைப்போலவந்து, இந்நாற்குமுன் திருடிப்புசித்த திரவியங்களினும் விசேடமாகத்திருடி எதிர்த்தவர்களைக் கொன்றுவிட்டுப் போய்க்கொண்டிருந்தான். எ - று. (அ)

சேரலனுன் மெலிந்தகுழாஞ்சீறுதவோதையெனத்தெழித்தல்கேளா
நாரணனும்வீரனுங்கண்விழித்தாதீதெனவோர்ந்துநகுபடைக்கைத்
தாரணராய்வெளிவந்துநெடுமாடத்தெருந்தருமசாலைசோலை
நீரவகழரணுடியொருபுரவியானைநிசிநேடிக்கண்டார்.

(இ - ள்.) பகைவனாகிய அவ்விக்கலனால் வருந்திய கூட்டத்தார் மேககர்ச்சனையைப் போன்று கோஷிப்பதைக் கேட்டு வீரநாராயணர் நித்திரைதெளிந்து அக்கோஷ்டம் இக்காரணத்தினாலென்றுணர்ந்து, தமது கரங்களில் பிரகாசிக்கின்ற ஆயுதங்களைத் தாங்கினவர்களாய் வெளியேவந்து, நீண்ட மாடவீதிகளிலும் தருமசாலைகளிலும் சோலைகளிலும் நீர்நிறைந்த அகழியையுடைய கோட்டையினும் பார்த்துத்தேடி, அன்றிரவிலேயே ஒப்பற்ற மாயக்குதிரைவாய்ந்த அவ்விக்கலனைக் கண்டுபிடித்தார்கள். எ - று. (கூ)

வாயுவினுங்கடிதேகும்வல்லானைநல்லோர்கண்மனதின்வல்லைத்
தாயெதிரேநின்றிவனைத்தண்டமேசெய்வதெனத்தாக்கவாளாற்
றீயவனுமஞ்சாதுகதையாலேயதைமறுத்துத்தீரங்கொண்டு
தூயவர்கடிறல்வியப்பவாள்விதிர்த்துத்தோள்வலிமைதோன்றநின்றான்.

(இ - ள்.) வாயுவேகத்தினும் விரைவாய்ச்செல்லும் வல்லானென்னும் விக்கலனை சுத்தவீரர்களாகிய வீரநாராயண ரிருவரும் மனோவேகத்தினும் விரைவுள்ளவர்களாகப்போய் எதிரேநின்று இவனைத்தண்டித்தலே தகுதியென்று வாளாயுதத்தால் தாக்கியமாத்திரத்தில், கொடியவனாகிய விக்கலனும் அச்சமுறாதவனாய்த் தனது வச்சிரக்கதையாலே அவ்வாளாயுதத்தைத் தடுத்துத் தைரியங்கொண்டவனாகி, பரிசுத்தர்களாகிய அவ்விருவரும் தன் வல்லபத்தை வியக்கும்படி வாளாயுதத்தைவீசித் தனது புஜபலம் விளங்கும்படி யிருந்தான். எ - று.

சினங்கொண்டுவீரனொருவடபாலுநாரணனோர்தென்பானின்று
கனங்கொண்டசெங்குந்தப்படையாலும்வாளாலுங்கைசலிக்க
மனங்கொண்டபடிமோதவவனேறும்புரவிகதிமாறிநின்று
நிணங்கொண்டதில்லையவனுடலங்கிவயிரத்தினேர்மையாலே.

(இ - ள்.) அப்போது கோபம்மூண்டு வீரனென்பவர் வடபக்கத்தினும் நாரணர் தென்பக்கத்தினுமாகநின்று, மேன்மையமைந்துள்ள செந்நிறமமைந்த கைவேலாலும் வாளாலும் தங்கள் மனம் போனபடி கைசலிக்க மோதிய போது, அவனேறிவந்த மாயக்குதிரை கதிமாறியிருந்தும் அவனணிந்திருந்த வச்சிரக்கவசத்தின் தன்மையால் அவன் சரீரம் பிணங்கொள்ளவில்லை. எ-று.

குதிரை நடைகளே கதியெனப்படும்-அவை-மல்லகதி-இடபகதி மயூரகதி

வியாக்கிரகதி-வானரகதி என்பவையாம். அன்றியும் மெல்லியநடைக்குத் தவுரிதகம் என்றும், விரைவுநடைக்கு ஆக்கிரந்திகம் என்றும், இருகாற்றூக்கி யாடிவரும் நடைக்கு வல்கிதம் என்றும், சுற்றியோடு நடைக்கு இரேசிதம் என்றும், முழுவோட்டநடைக்குப் புலிதம் என்றும் இவ்வாறைந்துவிதமாக வடநூலார் கூறுவர். (கக)

இளையாதுபின்னவனும்வயிரவாட்கொண்டிவர்களிருவர்மீதுங்
களையாதவமர்பொருதுவலமோடியிடமோடிக்கதைகவிழ்த்தா
னுளைமாவினடமாடுகரவாளனுயிர்மாளவுரத்தைக்குத்தித்
துளையாதுவிடுவதில்லையெனவீரனிலைவடிவேற்றாக்கிவிட்டான்.

(இ - ள்.) அதன்பின் அவ்விக்கலனும் இளைக்காதவனாய் இவ்வீரநாராயணர்களிருவர்மேலும் வயிரவாளைக்கொண்டு சலிக்காத போர்புரிந்து வலசாரி இடசாரிவந்து கதாயுதத்தை வீசினான். கத்திரித்த மயிர்களையுடைய மாயக்குதிரையி லேறித்திரியும் வஞ்சகனாகிய அவ்விக்கலனுடைய உயிர்மாயும்படி மார்பைக் குத்தித் துவாரமாக்காமல் விடுவதில்லையென்று, வீரனென்பவர் தகட்டுவடிவமமைந்த கூரியவேலையெடுத் தேவினார். எ - று. (கஉ)

காலவுருத்திரனேவுசூலமெனவீரன்விடுசெவ்வேல்வந்த
தாலமெனுங்குணமுடையான்மார்பகத்திற்படவெழுந்தவண்டகோள
மேலிடித்ததெனுமோதைசெவியடைத்ததவனுடலம்வீழ்ந்துருண்டு
காலுதைத்துக்கைவிரித்துமீண்டெழுந்துபுரவிமிசைக்கடிதினின்றான்

(இ - ள்.) வீரனென்பவரேவிய செங்குந்தமானது சங்காரகால உருத்திரனேவிய சூலாயுதம்போன்று வந்தது. அது விடம்போன்ற கொடுங்குணமுடைய விக்கலனது மார்பிற் பட்ட வளவில், அண்டகோளகைக ளொன்றோடொன்று மேலே தாக்கிற்று என்று சொல்லத்தக்க ஓசையானதுண்டாயது. சர்வான்மாக்களுடைய செவிப்புலனையும் அடைத்துவிட்டது. அப்போது அவ்விக்கலனுடைய சரீரம் நிலத்தில் வீழ்ந்ததனா லுருண்டு கால்களை யுதைத்துக்கொண்டும் கைகளை முறித்துக்கொண்டும் அதிவிரைவிலே மீண்டும் எழுந்து அம்மாயக்குதிரைமே லேறிநின்றான். எ - று.

அவன்மார்பில் வயிரக்கவசமணிந்திருந்ததனால் அம்மார்பைத் துளைக்காமல் கணீலென்ற ஓசைமாத்திரங்காட்டியது கொண்டு அவன் மூர்ச்சித்து மீண்டும் தெளிந்தானென்றபடி. (கஙு)

வில்லெடுத்துநாணேற்றிச்சரமாரிபொருநாழிவீரனேவப்
புல்லியனுங்கதையாலேதடுத்துக்கொண்டோடிடவும்போக்குக்காணா
னல்லதிவரொடும்பொருதுசயங்கொள்ளவலியோடிங்கேயங்குமிங்குஞ்
செல்லநினைந்தானறிந்தநாரணனிலகுபாய்ந்துசிகைபிடித்தான்,

(இ - ள்.) வீரனென்பவர் வில்லை வளைத்துக் குணத்தொனிசெய்து அம்பு மாரிகளை ஒருநாழிகை பரியந்தம் விடாமற் பிரயோகிக்க, அற்பஞ்சிய அவ்விக்கலனும் தனது கதாயுதத்தாலே அவைகளைத் தடுத்துக்கொண்டு, ஓடிப்போகவும் வேறிடங்காணுதவனுய் அல்லதிவ் விருவருடனுமெதிர்த்துப் போர்புரிந்து வெற்றிகொள்வதற்கும் வல்லபமிழந்து அங்குமிங்கும் போய் மறையவெண்ணினான். அதையுணர்ந்த நாராயண னென்பவர் இலகுபாய்ந்து அவனுடைய உச்சிமயிரைப் பிடித்துக்கொண்டார், எ - று.

இலகுபாய்தல், சுத்தவீர முடையோர் செய்கைகளிலொன்று. (கச)

இன்றிவனையாகாயமீதெறிந்துவிழுமுனுயிரிறவுதைத்துத்
தென்றிசைக்குப்போமாறுசெய்வனெனவிரைவாகச்செலவெறிந்தா
னன்றிரட்டனேறிவந்தமாமாயவாம்புரவியவன்பின்செல்ல
வென்றியெனவதிலேறியின்றுபுனற்சனனமெனமீண்டுபோனான்.

(இ - ள்.) இன்றைக்கு இவ்விக்கலனை ஆகாயத்தின்மேல் வீசி மறுபடி பூமியில் விழுவதற்கு முன்பாக உயிர் நீங்கும்படி உதைத்து யமபுரத்திற்குச் செல்லும்படி செய்வேனென்று, அவனை அதிவிரைவில் ஆகாயத்திற் போம்படி வீசினார். அத்தினத்தில் அவ்விக்கலன் ஏறிவந்த மகாமாயத்துடன் கூடித் தாவிச்செல்லும் குதிரையும் அவன் பின்னே தொடர்ந்து ஆகாயத்திற் சென்றதால் வெற்றி யுண்டாயிற்றென்று அக்குதிரையி லேறிக்கொண்டு, இன்றைய தினம் நமக்கு மறுஜனனம் வந்ததென்று திரும்பிப் போய்விட்டான். எ - று.

போரி லிறந்தோர்க்கு வீரசொர்க்கப் பிராப்தி நூல்களிற் கூறியிருக்க, யம புரத்திற்குப் போம்படி செய்வேனென்றது முரணன்றோ வெனின்; அன்று, நீதியுள்ள அரசர்களாயிருந்து முறைப்படி போர்புரிந்திறக்கின் மாத்திரம் வீரசொர்க்கமே யன்றி, இத்தகைய துன்மார்க்கனுக்கும் கள்ளனுக்கும் போரி லிறந்தவுடன் வீரசொர்க்கம் கிடைக்கா தாகவின், " தென்றிசைக்குப் போமாறு செய்வன், "என்றார். (கரு)

காயமெறியுண்டவனேபூமிமிசைவந்துவிழக்காணவில்லை
போயதவனெங்கறியோமென்செய்தாய்கைப்பிடியாய்ப்புறஞ்செல்லாது
நீயெனதுமுகநோக்கநானுனதுமுகநோக்கிநிற்பதென்ன
மாயமெனத்தமயனுரைசெய்திடலுமிளவலடிவணங்கிச்சொல்வான்.

(இ - ள்.) சரீரம் வீசப்பட்டவனே பூமியின்மீது மீண்டும் வந்து விழ நாம் பார்க்கவில்லை. அவன் எங்குப்போயினனோ நாமறியோம். கைப்பிடியாகப் பின்னே செல்லாமல் என்ன காரியஞ் செய்தனை? நீ என் முகத்தைப் பார்க்கவும் நானுன் முகத்தைப் பார்த்துக்கொண்டு நிற்கின்றதென்னமாயம்? என்று தனது தமயன்கூறிய மாத்திரத்தில் இளையவராகிய நாராயணர் அவருடைய திருவடிகளில் வணங்கிக் கூறுகின்றனர், எ - று. (கசு)

கரந்ததுநோக்கிக்கலங்கிவருந்துவதின்றாகுங்கருமமென்னை
யரங்கமதுசென்றரசனுடனோதிமதிவேம்பனருளப்பெற்ற
வரம்பரவிச்சென்றவனைவெற்றிபெறலாகுமெனமனந்தெளிந்தான்
கரம்பலவாகியபானுவெளிவந்தானுதயகிரிக்கண்ணினம்மா.

(இ-ள்.) அண்ணலே! அவன்மறைந்ததைப் பார்த்து மனக்கலக்கமுற்றுத் துக்கிப்பதில் இப்போது முடிவாகுங்காரியம்யாது? நாம் அரசவைக்குச்சென்று பராந்தகச் சோழனுடனே இச்செய்தியைக் கூறி அவ்விடத்துள்ள மதிமந்திரியாகிய தஞ்சைவேம்பர் ஆஞ்ஞாபிக்கப்பெற்ற கட்டளையைச் சிரமேற்றாங்கிச் சென்று அவ்விக்கலனைச் சயிக்கலாம் வருவீராக வென்று கூற, அதுகேட்ட மூத்தவராகிய வீரரும் மனத்தெளி வடைந்தனர். பலகோடி கரங்களை யுடையவனாகிய சூரியனும் உதயகிரியின்மீது வெளிக்கொண்டுவந்தனன். எ - று.

சூரியனுக்குப் பலகோடி கிரணங்களுண்டென்பதும், அக்கிரண கோடிகளை அவனுடைய கரங்களெனக் கூறுவதும் ஆன்றோர் வழக்காகலின், " கரம் பலவாகிய பானு." என்றார். அம்மா வியப்பிடைச்சொல். (௧௭)

வடவீதிதனிலொருவன்சிகையலையுங்கோலமுடன்வந்துநின்று
திடமுடையீரெந்தமக்கோரன்னையெனவந்துதவுந்திறலின்மிக்கீர்
நடுநிசியிலொருபூதன்கட்புலனுங்கண்டறியாநடையின்மிக்க
தடலுடையதுரகதமீதிறுமாந்துவாளொருகையவிர்வதாக.

(இ - ள்.) இப்படி பேசிக்கொண்டு வீரநாராயணரிருவரும் வருகையில், வடக்கு வீதியில் ஓர்மனிதன் தலைவிரிகோலமாய் வந்து நின்று கொண்டு, வல்லபமுள்ளவர்களே! எங்களனைவர்க்கும் ஒரு தாயைப் போன்று பரிவுள்ளவர்களாய்த் தருண மறிந்துவந் துதவுகின்ற பராக்கிரமத்தில் மேம்பட்டவர்களே! இன்று நடுச்சாமத்தில் ஓர் பூதன் கண்ணினாற் காண்பதற்கும் அருமையாகிய கடியவேகத்தின் மேம்பட்டதாய் வல்லபமமைந்துள்ள ஓர் குதிரையின்மீதேறி இறுமாப்புடையவனாய், ஓர்கரத்தில் வாளாயுதம் பிரகாசிக்கவும். எ - று (௧௮)

வேறொருகைகதையிலங்கவச்சிரவங்கியைத்தனதுமேனிசேர்த்திச்
சீறுபுலியெனவந்தான்மணிக்கதவங்கதையாலேதிரணமாக்கிச்
சூறையிடவுட்புகுந்தான்கண்டவனைத்தண்டித்தான்றுணிவின்மேலான்
வீறுனைப்பதெவ்வணநாமெனப்படைக்குமஞ்சாதவேடனாகும்.

(இ - ள்.) மற்றொரு கையில் கதாயுதம் விளங்கவும் வச்சிர கவசத்தைத் தன்சரீரத்திற் றரித்துக்கொண்டு கோபமுள்ள புலியையொத்துவந்து, அழகமைந்த வீட்டின் கபாடத்தைத் தன்கையிலிருந்த கதாயுதத்தாற் றூளாக்கி, கொள்ளையிடும்படி உள்ளேபுகுந்தான். அப்போது பார்த்துத் தடுத்தவர்களை வெட்டித் தள்ளினான். துணிவின் மேம்பட்டவன் அவனை எவ்விதஆயுதங்கட்

கும் பயப்படாத தைரியமுடையவனாகும். ஆதலால் நான் அவனுடைய வீரத்தை எவ்வாறு கூறுவது. எ - று. (௧௯)

பொன்னறையினுட்புகுதாவவனுள்ளத்தோங்கியெழும்பொருளினாசை
தன்னளவுக்கேற்றவகைதனகனகவத்துக்கடம்மைவாரி
மின்னதுபோன்மறைந்தனனீதிந்திரசாலத்தவர்கள்வித்தையென்கோ
விந்நகரெலாங்கண்டகனவென்கோவென்னையாளுமிறைவவென்றான்.

(இ - ள்.) என்னையாளும் தலைவரே! அவன் பொன்முதலிய வைத்துள்ள சேமவறைக்குட்புகுந்து, அவன் மனதில் அதிகரித்துத் தோன்றியுள்ள பொருளாசையினளவுக்குத் தக்கபடி தனகனக வஸ்துக்களனைத்தையும் சேர்த்தெடுத்துக்கொண்டு மின்னைப்போன்று மறைந்தான். இதனை இந்திரசாலம் மகேந்திரசாலம் கற்றவர்களுடைய வித்தையென்று சொல்வேனோ? இந்நகரிலுள்ளாரனைவரும் கண்டகனவென்று சொல்வேனோ? எனக்கூறினன். எ - று.

இந்திரசாலமென்பது மாயவித்தையாதலானும் இவன்மறைந்ததும் மாயமாயிருத்தலானும், "இந்திரசாலத்தவர்கள்வித்தையென்கோ." என்றும், இம்மாயம் ஒருவருக்குமாத்திரமே தோன்றாமல் அந்நகருள்ளார் பலர்க்குந்தோன்றினமையானும், இரவினிகழ்ந்த தாகலானும், "இந்நகரெலாங்கண்டகனவென்கோ." என்றும் கூறினன். (௨௦)

அங்கொருபான்முதுமடந்தையையகோவென்னவுரைத்தடியில்வீழ்ந்தா
ளெங்கிரகப்பொருளெல்லாமின்றுடனேசென்றதிவனேவனிந்த
பங்கமதுசெய்தொழிந்தான்பேரறியோமவனிருக்கும்பதியுங்காணேஞ்
சிங்கமனையீரிந்தத்தேயமுளதின்னுமவன்றேரான்போலும்.

(இ - ள்.) அதுகேட்டுச் செல்லுகையில் அங்கொருபுறத்தில் ஓர் கிழவி ஐயோ! என்றுகூறி அவர்கள் பாதத்தில்வீழ்ந்து, எங்கள் வீட்டிலிருந்த திரவியங்களனைத்தும் இன்றோடே பறிபோயின. இப்பாதகன்யார்? இவ்வகையான அழிவுசெய்து மறைந்தான். அவன் பெயரும் அறியமாட்டோம். அவன்வசிக்கும் ஊரையுங்கண்டதில்லை. ஆண்சிங்கத்தை யொத்தவர்களே! நீங்கள் இந்தத்தேசத்தில் வசித்திருப்பதை இன்னும் அவன் அறியவில்லைபோலும் எ-று. (௨௧)

குடிகளிடுமுறையீடுகேட்டார்களவனுடுகொள்ளையெல்லாங்
கடியரணமுன்வாயிலுளதோடிக்காண்மினவன்காயமண்மேற்
பொடிபடயாம்நிற்கின்றோமஞ்சாதுநின்மினெனப்புடையிற்போந்த
படைவயவருடனேகிப்பராந்தகமால்வாழ்கின்றபதியிற்புக்கார்.

(இ - ள்.) இவ்வாறு குடிகள்வந்து கூறிக்கொள்ளும் முறையீட்டைக்கேட்டு, அவ்விக்கலனென்பவன் கொள்ளையடித்த வஸ்துக்களெல்லாம், காவலுடைய நாதராசன் அரண்மனைவாயிற்படியிற் கொட்டியிருக்கின்றன உடனே

ஓடிப்போய்ப்பாருங்கள். இன்னும் அவனுடைய சரீரம் பூமியிற் பொடிப்பொடியாய் விழச்செய்தற் கெத்தனித்திருக்கின்றோம், நீங்களினிப் பயமடையாதிருங்கள். எனக்கூறி தங்களைச் சூழ்ந்துவந்த படைவீரர்களுடன்சென்று பராந்தகச்சோழன் வீற்றிருக்கின்ற அரண்மனையினுட்சென்றார்கள். எ - று.

அன்றிரவில் அவ்விக்கலன்வந்து கொள்ளையடித்துத் திரும்பும்போதே இவ்விருவரும் பிடித்துக்கொண்டு அவன் கைப்பற்றியிருந்த பொருள்களனைத்தையும் பிடுங்கி அரண்மனைக் கனுப்பிவிட்டார்களாகலின், "அவனுடுகொள்ளையெல்லாங்கடியரணமுன்வாயிலுளது." என்றும், இன்னும் சற்றுநேரஞ் செல்லின் அவைகளை உள்ளேகொண்டுபோய்ப் பொக்கிஷசாலையிற்சேர்த்துவிடுவார்கள், அப்போதுங்கட்குக்காணமுடியாதென்பார், "ஓடிக்காண்மின்." என்றும், இம்மாத்திரத்தில் அவனை விடுவதில்லை, முற்றுமுடிக்கவே நாங்களிருக்கின்றோமென்பார், "அவன்காயமண்மேற்பொடிபடயாம்நிற்கின்றோம்." என்றும் கூறினர். (உஉ)

மறமதிகஞ்செய்தவரையிம்மையிலேயதுபடையாய்வாட்டுமென்ன
வறமுணர்ந்தமேதகையோர்முதுமொழிதான்பொய்க்குங்கொலந்தோவல்லான்
றிறலிழந்துகளவாண்டபொருளிழந்துபுகழிழந்துசீவனொன்றே
பெறவெழுந்துதன்னரணஞ்சேர்ந்ததிதாமினிவருமாபேசக்கேண்மோ

(இ - ள்.) கொடுமை விசேடித்துச்செய்தவர்களை இச்சனனத்திற்றனே அக்கொடுமைகளே ஆயுதங்களாகவிருந்து தண்டிக்குமென நீதியைத்தெளிந்த பெரியோர்கள் கூறியுள்ள மூதுரைகள் பொய்த்துப்போகுமோ? ஐயோ! வல்லானென்பவன் தனது வல்லபமும் போக்கிக்கொண்டு, ஆங்காங்கு கொள்ளையடித்த திரவியங்களையும் போக்கிக்கொண்டு, கீர்த்தியையும் போக்கிக்கொண்டு, பிராணவாயு ஒன்றுடனே வெளிக்கொண்டு தனது கோட்டையிற்போய்ச் சேர்ந்தசரித்திர மிதுவாகும். இனிவரும் சரித்திரத்தைச் சொல்லுகின்றேன் கேட்பாயாக, என்று கவிச்சக்கரவர்த்தியார் திருவாய்மலர்ந்தனர். எ - று.

மறமதிகஞ் செய்தாரை யிம்மையிலே யதுபடையாய் வாட்டுமெனப் பெரியோர் கூறியிருப்பதை, "மிகமேவியபுண்ணியபாவமெனும்வினையின்பயன்மேனொருகாலமுறு - திகமேவருமென்பதனுலுளநோயெல்லாமிவனைச்செறவெய்தினவே." என்னும் தத்துவராயசுவாமிகள் திருவாக்கானுந்தெளிக. (உ௩)

களவுகாண்சருக்கம் - முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம். ககூஅ

---

## ஆறாவது

# தேவசாட்சிச்சருக்கம்.



மரன்கொடுக்கும்பூமதுவுண்டளிபாடும்பொழிலுறந்தைமன்னுமுன்னம்
பரன்கொடுக்குங்குகனிறைக்குவரங்கொடுக்கப்புவிவந்தார்பாப்பூண்வேட்டுச்
சிரங்கொடுத்தாரெற்கணியாசனங்கொடுத்தார்குலத்துமுந்நாற்றீரவீரர்
கரங்கொடுத்துமற்றவர்கடேவசாட்சியைப்புரிந்தகாதைசொல்வாம்.

(இ - ள்.) தருக்கள் தருகின்ற மலர்களிலுள்ள தேனைக்குடித்து வண்டுகளிசைபாடிக்கொண்டிருக்கும் பொழில்கள்சூழ்ந்த உறையூரதிபனாகிய குலோத்துங்கனே! ஆதிகாலத்திற் சிவபிரானருளிய குமாரக்கடவுள் முசுகுந்தச் சக்கரவர்த்திக்கு வரப்பிரசாதமாய்க்கொடுக்க நிலவுலகத்திற்கு வந்தவர்களும், பாடலாபரணத்தை விரும்பிச் சிரங்களைச்சேதித்துக் கொடுத்தவர்களும், அச்சிரங்களையே எனக்குச் சிங்காதனமாகக் கொடுத்தவர்களுமாகிய செங்குந்தரது குலத்திலுதித்த பன்னிரண்டு சுத்தவீரர்கள் தங்களுக்குள்ளே கையடித்துக்கொண்டு தேவசாட்சியென்னும் சபதஞ்செய்துகொண்ட சரித்திரத்தைக் கூறுகின்றோம் கேட்பாயாக. எ - று.

முருகக்கடவுளின் கட்டளைப்படி முசுகுந்தச் சக்கரவர்த்திக்காக நிலவுலகில் வந்தவர்களென்பதை, "நோற்றல்கூடியமுசுகுந்தனும்மினுமெம்பா - லேற்றமேதருமன்பினானெழுகடற்புலியும் - போற்றவைகுவானீவிர்களாங்கவன் புடைபோ - யாற்றல்சான்றிடுதுணைவராயமர்திரென்றறைந்தான்." என்னும் கந்தபுராணத்திருவிருத்தத்தானும், பாமாலைக்காகச் சிரச்சிங்காதனமிட்டோரென்பதை, "மெய்யுளுக்காதனன்னாவைப்படைத்தவர்மெய்யிற்சற்று - மையுளுக்காநமற்சோலைவிட்டோர்வெற்றிவாள்கொடுச்சி - கொய்யுளுக்காவணமென்றே கவியொட்டக்கூத்தன்சொன்ன - செய்யுளுக்காச்சிரப்பாவாடையிட்டவர்செங்குந்தரே." என்னும் செங்குந்தர்மாலைத் திருவிருத்தத்தானும் தெளிக. (க)

வேறு,

ஆரணிசடைக்கடவுணீறணிநெறிக்கணகலாதவளவேசனையி
றோரணநிறைந்தநெடுவீதிமணிமாளிகைதுலங்குநிரைநின்றபழூர்
வீரணிவீரர்களொடேகியிறைவற்றொழுதுவிக்கலனெதிர்ந்துபொருத
காரணமுரைத்தவனைவீசியெறிதந்ததுகரந்ததுமுதற்கழறினார்.

(இ - ள்.) ஆத்திமாலை தரித்துள்ள சடைமுடியையுடைய சிவபெருமானுக்குரிய திருவெண்ணீற்றை யணிகின்ற சைவசமய மார்க்கத்தினின்றும் மாறுபடாத பராந்தகச்சோழனுடைய சபையிலே, தோரணங்கணிறைந்துள்ள நீண்ட

வீதிகளும் இரத்தினங்கள் பதித்திருக்கும் மாளிகைகளும் பிரகாசிக்கும்படி வரிசையாய்வாய்ந்த திருப்பழுவூரொன்னும் நகரத்திலுள்ள வீரர்களாகிய வீரநாராயணர்களிருவரும் அழகிய படைவீரர்களுடனேசென்று பராந்தகச் சோழனைப்பட்டணிந்து, விக்கலனென்பவனை எதிர்த்துப் போர்புரிந்த சரிதையைக்கூறி அதன்பின் அவனைச்சேர்த்தெடுத்து ஆகாயத்திலெறிந்ததும் அவன்மறைந்ததும் ஆகிய இவை முதலியவற்றைக் கூறினார்கள். எ - று. (உ)

சோழனதுகேட்டெரியினிற்சுடுவைவேற்றனிருசோத்திரநுழைந்ததெனவே
வாழெனதகத்திதுசெயத்துணிவுகொண்டுவருவல்லவனைவெல்லுபவகையை
யாழுகினையாதவணமேதெனவுயிர்த்துமனமாடுறுகறங்கினிலையாய்
வேழமுண்விளங்கனியெனச்சொலறமோனநிலைமேவினனிருந்தவளவில்

(இ - ள்.) பராந்தகச்சோழன் அவ்வார்த்தையைக் கேட்டு அக்கினியிற் காய்ந்த கூரியவேலாயுதம் தனதிரண்டுசெவிகளினும் நுழைந்ததென்று சொல்லும்படியாகி, வாழ்வடைந்துள்ள எனதரண்மனையில் இக்காரியஞ்செய்வதற்குத் துணிந்துவந்த வல்லானென்பவனை வெற்றிகொள்ளத்தக்க விதத்தைக் கூர்ந்து யோசிக்காதவண்ணம் என்னவென்று பெருமூச்செறிந்து, மனமானது வானிற் சுழல்கின்ற வட்டத்தின்றன்மையுடையதாக, யானையுண்ட விளாங்கனியைப் போன்று அறிவிழந்து வார்த்தையாடாமல் மௌனத்தன்மை யடைந்திருந்த மாத்திரத்தில், எ - று.

வேழம்-ஓர்நோய். அது இளநீர்க்குத்தேரை என்னும் நோய்போன்று விளாங்கனியை உள்ளீடில்லாததாகச்செய்வது. இந்நோய்கொண்ட விளாங்கனியும் உள்ளீடில்லாததாயிருக்கும். இது வேழமென்னும் பெயரொற்றுமையால் யானையுண்ட விளங்கனியெனவும்வரும். இக்காரணத்தினாலேயே விளாங்கனிக்கும் இளநீர்க்கும் யானையுண்ட விளாங்கனி என்றும் தேரைமுகர்ந்த இளநீர் என்றும் பெயர்கூறுவர். இவ்வாறு ஆன்றோர்கள் பிரயோகித்திருப்பதை, "வெருவருவேழமுண்டவெள்ளில்போல்வறியனாகிப் - பருவரலுடனுங்கெய்தும்பாதகன்வரவுநோக்கி - யொருவருமுள்ளத்தாலுமுன்னருங்கொடியபாவி - வருவதுகாண்டியென்னுமாதனைநோக்கிக்கூறும்." என்னும் திருவிளையாடற்புராணத் திருவிருத்தத்தானுந்தெளிக. (ஙு)

வேறு.

அப்போதுபுடைமருவுமாணுக்கேறுயதிறல்
வெப்போறுநாரணனும்வீரனுமேபுன்முறுவற்
செப்போதுமலர்ந்தரசேசென்றவல்லான்றலையறுத்தற்
கெப்போதுன்விடையதற்கைந்தாநாளிலியற்றிணம்.

(இ - ள்.) அப்போது அச்சோழன் பக்கத்திலிருந்த வீரநாராயணர்களிருவரும் புன்முறுவலரும்பிய செவ்வியமலர்போலும் வாய்திறந்து, ஓ மன்னவ!

இப்போது மறைந்தோடிய வல்லான்றலையை யறுப்பதற்கு எப்போது தேவரீர் விடையளிக்கின்றீரோ, அத்தினத்திற் கைந்தாவதுதினத்தில் அவ்வாறே யறுத்தல் நிச்சயம். எ - று.

செம்போது எனற் பாலது எதுகைநோக்கிச் செப்போதெனவலித்தது.(ச)

சிங்கமுனங்கரியெதிராசெருவின மக்கிரிந்தவனு
மங்குதிறலிரட்டையர்கோனுமக்கெதிராமன்னவநீ
யிங்குறைநியாம்போந்தோரிசைதருதுமுனதுமனச்
சங்கைதவிர்ந்தருடியவன்றனைப்பொரவுத்தரமென்றார்.

(இ - ள்.) சிங்கத்திற்கு முன்பாக யானை எதிர்க்காது. போரில் எங்களுக்குப் புறங்காட்டி ஓடினவனாகிய வல்லபமற்ற இரட்டையர் தலைவனென்னும் விக்கலன் தேவரீர்க் கெதிரியாவனோ? ஆதலால்-வேந்தே! தேவரீர் இவ்விடத்திலேயேயிரும். நாங்கள் சென்று ஒப்பற்றபுகழ் உமக்குத் தருகின்றோம். உம்முடைய மனச்சந்தேகத்தை நிவாரணித்து, அவ்விக்கலனுடனெதிர்த்துப் போர் புரிவதற்கு உத்தரவளிப்பீரென்று பிரார்த்தித்தார்கள். எ - று. (ரு)

அந்தவகைகேட்டுமன்னனுழிநெடுந்தேர்புரவி
சிந்துரமுங்காலாளென்சேனையொருநால்வகையுந்
தந்தனமாலுடனேகித்தரியலனைச்செயங்கொண்டு
வந்திடுகவெனவழங்கமாவீரனிதுபுகலும்.

(இ - ள்.) அவ்வார்த்தைகளைப் பராந்தகச்சோழன்வினவி, உருளைகளையுடைய பெரிய இரதங்களும் குதிரைகளும் யானைகளும் காலாள் என்னும் பெயருடைய சைனியங்களும் ஆகிய ஒப்பற்ற நான்குவிதமும் கொடுத்தோம். அவைகளுடன்போய் நமது பகைவனாகிய விக்கலனை வெற்றிகொண்டு வரக்கடவீர்களென்றுகூற, பெருமைமிக்க வீரர் இவ்வாறு கூறுகின்றனர். எ - று. (சூ)

வாயிரையையிழந்துநரிவானோக்குமாறிரட்டன்
சேயநெடுந்தம்பமதைத்தேர்காலாள்கரிபுரவி
போயணைந்தென்வெற்றிகொளும்புண்ணியனேநண்ணரிய
தீபவனைவென்றிடுதந்திரமெமக்கொன்றுளதன்றே.

(இ - ள்.) ஓ தருமசிந்தையுள்ளவரே! ஓர் நரி தனதுவாயிலிருந்த ஊனையுமிழ்ந்து ஆகாயத்தைப்பார்த்த கதைபோல, இரட்டனாகிய விக்கலன் நாட்டியிருக்கும் அதியுன்னதமாகிய தம்பத்தைத் தாங்கள் அனுப்புகின்ற இரதகஜதுரகபதாதிகளென்னும் சதுரங்க சைனியங்களும் சென்று கிட்டி எவ்வாறு வெற்றியடையும்? ஆதலால், ஒருவரும் நெருங்குதற்கரிய கொரேனாகிய அவ்விக்கலனைச்சயிப்பதற்கு எங்களுக் கோர்தந்திர மிருக்கின்றது. எ - று.

அன்று - ஏ - அசைகள். இச்சதுர்வகைச் சைனியங்களும் சமர்க்களத்தில் எதிர்த்துவந்து சமமாய்ப் போர்புரியும் சக்கரவர்த்திகளைச் சயங்கொள்ளுமேயன்றி, தாவக்கூடாத தம்பத்தைநாட்டித் தனியாகக்கரந் திரவிற் சஞ்சரிக்குஞ் சத்துருவைச் சயங்கொள்ளாதென்பார், "இரட்டன்-சேயநெடுந்தப்பமதைத்தேர் காலாள்கபுரவி - போயணைந்தென்வெற்றிகொளும்." என்றார். (எ)

தானையுடன்சென்றமரிற்சயங்கொண்டுமீண்டிடுதன்
மானமிலாவிவற்காமோமன்னவனேயெங்குலத்து
மேன்மையினரையிரண்டுவேந்தர்களுண்டன்னவரோ
டினனிவன்றலையறுப்பலென்றானையிறைநோக்கி.

(இ - ள்.) ஓ மன்னவா! மானமற்றவனாகிய இவ்விக்கலனுக்குச் சைனியங்களுடன்போய்ப் போர்க்களத்தில் வெற்றிகொண்டு திரும்புதல் தகுதியாமோ? எங்கள் குலத்துதித்த பெருமை மிக்கவர்களாகிய அரசர்கள் பதின்மருண்டு. அவர்களுடன்சென்று இவ்வற்பனுடைய தலையை யறுப்பேனென்று கூறிய வீரரைப் பராந்தகச்சோழன் பார்த்து. எ - று.

இராஜபரம்பரையி லுள்ளாரைமாத்திரமே சமர்க்களத்தெதிர்த்துப் போர்புரிந்து வெற்றிகொள்வது நீதியாகும், அவ்வகையான நீதிமார்க்கம் இவனுக்கடாதென்பார், "இவற்காமோ." என்றனர். (அ)

வல்லானைத்தலையறுப்பேமற்றைந்துநாளிலெனச்
சொல்லாணைசெய்யுமகத்துணிவதனைக்கருதின்மதப்
பல்லானைதேர்புரவிபடையொன்றுமின்றிச்சூர்
வெல்வான்முற்செலும்வீரன்மெய்த்துணிபாமெனுமுலகம்.

(இ-ள்.) இதுகேட்ட உலகத்தினரனைவரும், வல்லான்தலையை ஐந்துதினங்களில் வெட்டுகின்றோமென்று ஓர் பிரதிக்கினையாற் சொல்லுகின்ற சபதஞ் செய்துகொண்ட மனத்துணிவை யாலோசிக்கின், மதம்பொழியும்பலயானைகள் தேர்கள் குதிரைகள் காலாள்கள் என்னும் இந்நால்வகையுள் ஒன்றுமில்லாமல் சூரபன்மனை வெல்லும்பொருட்டு முற்பட்டுச்சென்ற வீரவாகுதேவருடைய உண்மையான துணிபாகும் என்றுரைப்பார்கள். எ - று.

சூரபன்மனைவென்று தேவர்களைப் பாதுகாப்பதற்காக எழுந்தருளிய குமாரக்கடவுள் முதலில் வீரவாகுதேவனையனுப்ப, அப்போது அவர் தனியேசென்றனராகலின், "படையொன்றுமின்றிச்சூர் - வெல்வான்முற்செலும்வீரன்மெய்த்துணிபாம்." என்றனரென்க. (கூ)

இருவரளாப்பதின்மருளரெங்காட்டாரெவ்வலத்தா
ரொரானவகையாயுரையென்னவுளங்களிப்பப்பரூநவையர்கோன்

றருவனையகரந்தாங்குந் தஞ்சைவளம்பதியரசே
பொருவரியவீரர்கடந்திறந்தெரிந்தபடி புகல்வேன்.

(இ - ள்.) வீரநாராயணர்களென்னும் நீங்களிருவர் நீங்க இன்னும் உள்ளாரென்று கூறிய பதின்மரும் எந்நாட்டிலிருப்பவர்கள்? அவர்கள் வல்லபம் எவ்வகைப்பட்டது? அவற்றை ஒருவாறு சுருக்கிக்கூறுவீரென்று பராந்தகச் சோழன்கேட்க, அப்போது திருப்பழூர்த்தலைவராகிய வீரனென்பவர், வளப்பம்மிக்க தஞ்சைமாநகரத்தைப் பரிபாலிக்கின்ற கற்பகத்தருவையொத்த கரங்களையுடைய தோன்றலே! சமானரகிதர்களாகிய சுத்தவீரர்கள் பதின்மரின் வல்லபங்களை எனக்குத் தெரிந்தவாயிற் கூறுகின்றேன். எ - று. (௧௦)

எனவறைவானந்தஞ்சையெழில்வேம்பனொடுபதின்மர்
முனையரசரங்கவரின்முத்துயிர்க்குநத்தினங்க
ணனையசரோருகமலர்மேன்கர்ந்தாரவம்மலரிற்
புனையெகினமசைந்தாடும்பூக்கணிறைதடச்சூழல்

(இ - ள்.) என்றுரைத்துச் சொல்லத்தொடங்கினர். அழகுவாய்ந்த தஞ்சைவேம்பர் என்பவருடன், போரிற்சயங்கொள்ளத்தக்க சுத்தவீரர்கள் பத்துப்பெயர்களிருக்கின்றார்கள். அவர்களுக்குள்ளே முத்துக்களை யீனுகின்ற சங்கின்றொகுதிகள் தேனொழுகும் தாமரைமலர்களின் மீதுலாவி நிறைந்திருக்க, அம்மலர்களின்மீது அழகுவாய்ந்த அன்னங்கள் அசைந்தாடுகின்றதும் இன்னும் பல நீர்ப்பூக்கள் மலிந்துள்ளதுமான தடாகங்களிருக்குமிடங்களில். எ - று. (௧௧)

அறுபதமாவொருவிளரியதுபாடப்பசுங்கலபச்
சிறையமயினடமாடச்செழுங்குயில்கள்சுதிகூட்ட
நறவமிகுமெழிற்கனிகணறைநிழனந்தனமுதவிச்
சிறுதுணராற்சிரக்கம்பஞ்செயுங்கச்சிமாநகரில்.

(இ - ள்.) ஆறுகால்களையுடைய வண்டுகள் ஒப்பற்ற விளரியென்னும் இசையைப் பாடவும், பசுநிறம்பொருந்திய கலாபமென்னும் சிறகுகளையுடைய மயில்கள் நிர்த்தனஞ்செய்யவும், செழுமையான குயில்கள் சுதிகூட்டிக்கொண்டிருக்கவும், நந்தனவனங்களெல்லாம் தேன்மிகுத்துள்ள அழகமைந்த கனிவர்க்கங்களையும் பரிமளத்தையும் நிழலையுங்கொடுத்து; சிறியபூங்கொத்துக்களால் சிரக்கம்பஞ்செய்கின்ற சிறப்புற்ற காஞ்சிநகரத்திலே. எ - று.

வண்டுகளே சங்கீதவித்வான்களாகவும், குயில்களே சுதிகூட்டுவோர்களாகவும், மயில்களே நாடகப்பெண்களாகவும், நந்தவனங்களே பரிசளிப்போர்களாகவும், அவற்றிலுள்ள பூங்கொத்துக்களசைதலே சிரக்கம்பஞ்செய்தலாகவும் உவமித்தமை காண்க. விளரி என்பது யாழிசையிலொன்று, அது நெஞ்சாற்பிறப்பது. (௧௨)

நாட்டமொருமூன்றுனோனிலமுந்தருங்காமக்
கோட்டகத்தாள்கரந்தழுவக்குழைந்தானையககமலத்
தோட்டகத்திலிருத்தியகத்தொண்டுபுறத்தொண்டுகலைத்
தேட்டமிகுமதியுடையான்செங்குந்தக்குலதிலகன்.

(இ - ள்.) திரிநேத்திரங்களுடையவரும், நிலவுலகத்தையு மீன்றருளிய காமகோடிபீடத்தலைவியாகும் காமாட்சியம்மையார் தமது திருக்கரங்களால் தழுவக்குழைந்தவருமாகிய ஏகாம்பரநாதனைத் தனது இதயமென்னும் தாமரை மலரின் இதழில் வசிக்கச்செய்து, அகத்தொண்டு புறத்தொண்டு என்னும் இருவகைத்தொண்டுகளினும் சிவாகமத்தேர்ச்சியினும் மேம்பட்ட அறிவுடையவர். செங்குந்த குலத்திற்கோர் திலகம் போன்றவர். எ - று.

சோமசூரியாக்கினி என்னும் முக்கண்களுடையானென்பார், "நாட்டமொருமூன்றுனை." என்றும், விண்ணுலகமேயன்றி மண்ணுலகமு மீன்றருளிய சர்வலோகமாதாவென்பார், "நானிலமுந்தருங்காமக்கோட்டகத்தாள்." என்றும், அவ்வம்மையாரணைத்தகாலையில் அவரது வளைத்தழும்பும் முலைத்தழும்புமேற்றவனென்பார், "தழுவக்குழைந்தானை." என்றும், அப்பெருமான் அடியார்களிதய தாமரையில் வீற்றிருப்பாரென்பார், "அககமலத்தோட்டகத்திலிருத்தி." என்றும், அத்தகைய மெய்யடியார்கட்கு இருவகைத்தொண்டுண்டென்பார், "அகத்தொண்டுபுறத்தொண்டு." என்றும், இவ்வகைத்தொண்டுகள் நூலுணர்ந்த நுண்ணறிவாளர்க்கே யடையுமென்பார், "கலைத்தேட்டமிகுமதியுடையான்." என்றும், ஓர்சரீரத்தின் உத்தமாங்கமாகிய முகத்திலுள்ள நெற்றியிலிருக்கும் திலகம் எவ்வாறுவிளங்குமோ அதுபோன்று செங்குந்தகுலமென்னும் ஓர்சரீரத்தின் நெற்றியிலுள்ள திலகமென்பார், "செங்குந்தக்குலதிலகன்." என்றும் கூறினர். சிவபெருமான் சோமசூரியாக்கினி என்னும் திரிநேத்திரங்களுடைமையை, "கண்களோவொன்றுகாலையிற்காணு - மாலையிலொன்றுவயங்கித்தோன்றும் - பழிப்பிலொன்றுவிழிப்பினெரியும்." என்னும் சிவப்பிரகாசசுவாமிகள் திருவாக்கானும், சர்வலோக மாதாவென்பதை, பங்கயற்கண்ணரியபரம்பரனுருவே தனக்குரியபடிவமாகி - யிங்கயற்கணகனுலகமெண்ணிறந்தசராசரங்களீன்றுந் தாழாக் - கொங்கயற்கண்மலர்க்கூந்தற்குமரிபாண்டியன்மகள்போற்கோலங்கொண்ட - வங்கயற்கணம்மையிருபாதப்போதெப்போதுமகத்துள்வைப்பாம்." என்னும் திருவிளையாடற்புராணத் திருவிருத்தத்தானும், வளைத்தழும்பும் முலைத்தழும்பு மேற்றமையை, "மலைக்குலக்கொடிபரிவுறுடயத்தான்மாவின்மேவிய தேவர்நாயகனை - முலைக்குவட்டொடுவளைக்கையானெருக்கிமுறுகுகாதலாலிறுகிடத்தழுவச் - சிலைத்தனித்திருநுதறிருமுலைக்குஞ்செந்தளிர்க்கரங்களுக்குமெத்தெனவே - கொலைக்களிற்றுரிபுனைந்ததம்மேனிகுழைந்துகாட்டினார்விழைந்தகொள்கையினர்." என்னும் அருண்மொழித்தேவர் அமுதவாக்கானும், அமலன் அடியார்களிதயதாமரையில் வீற்றிருப்பா னென்பதை, "நாட்பட்டகமலமென்னவிதயமேவுநாந்தேனேநன்மார்க்கநாரிபார்கண் - வாட்பட்ட

காயமிந்தக்காயமென்றோவன்கூற்றுமுயிர்பிடிக்கவருமந்நீதி" என்னும் தாயுமானுர் திருவாக்கானும், அகத்தொண்டுபுறத்தொண்டென்னும் இருவகைத் தொண்டுகளுளவென்பதை, "உடம்பெனுமனையகத்தேயுள்ளமேதகளியாக - மடம்படுமுணர்நெய்யட்டியுயிரெனுந்திரிமயக்கி - யிடம்படுஞானத்தீயாலெரிகொளவிருந்துநோக்கிற் - கடம்பன்மாதாளைதாதைகழலடிகாணலாமே." எனவும், "காயமேகோயிலாகக்கடிமனமடிமையாக - வாய்மையேதூய்மையாகமனமணிலிங்கமாக - நேயமேநெய்யும்பாலுநிறையவேயமையவாட்டிப் - பூசைகொளீசனுர்க்குப்பொற்பவிக்காட்டினுமே." எனவும்வரும் ஆளுடையவரசுகளின் அருள்வாக்குகளானும், "புறம்பேயுமரன்கழல்கள்பூசிக்கவேண்டிற்பூமரத்தின்கீழுதிர்ந்தபோதுகளுங்கொண்டு - சிறந்தாருஞ்சீர்ச்சிவனைஞானத்தாலங்குச்சிந்திக்கும்படியிங்குச்சிந்தித்துப்போற்றி - யறம்பாவங்கட்குநாமென்கடவோமெங்குமாண்டவனைக்கண்டக்காலகம்புறமென்றுதே - திறம்பாதேபணிசெய்துநிற்கையன்றோசீரடியார் தம்முடையசெய்திதானே." என்னும் சிவஞானசித்தித் திருவிருத்தத்தானும், நூலுணர்ந்த நுண்ணறிவாளர்க்கே இத்தொண்டுகளமையுமென்பதை, "கற்றதனாலாயபயனென்கொல்வாலறிவனற்றாடொழாஅரெனின்." என்னும் திருக்குறளானுந்தெளிக. (௧௬)

ஓராயிரத்துத்தொள்ளாயிரவருள்ளவருட்
சேராளன்மாகிழற்கீழ்த்தேவசிங்காதனத்திருந்து
பாராளுந்திறலுடையபதுமவணன்சுதன்றனியன்
சீராளனிளவரசுசெயுங்காலைமறுபுலத்தார்.

(இ - ள்.) ஆயிரத்துத் தொளாயிரவரென்னும் கூட்டத்தாருள் ஒருவராய்ச் சேர்ந்திருப்பவரும், மாவிருட்சத்தின் கீழுள்ள தேவசிங்காசனத்தி லிவர்ந்திருந்து செங்கோல்செலுத்தி யுலகாண்டுவரும் வல்லபமுடைய பதுமவண்ணரென்னும் மன்னவன் மைந்தருமாகிய தனியனென்பவர் இளவரசு புரியுங்காலத்தில் மறுபுலத்தரசர்கள். எ - று.

ஓராயிரத்துத் தொளாயிரவரென்போர் தில்லைமூவாயிரவரைப் போன்று சிவபெருமானுக்குத் தொண்டுபுரிவோர். இதனை, "தில்லைமாநகர்வாழவாழ்தவசிந்தையந்தணராறைஞ்ஞூ - றல்லதும்பலமடபதித்தவராசரிக்கையிலுள்ளபே - ரெல்லையில்லவரியாவருங்களிகொளவிளங்கசரீரிவாக் - கொல்லைவந்தெழவனைவருங்காமுச்சிவைத்துளமுருகினர்." என்னும் திருத்தொண்டர் புராணவரலாற்றுத் திருவிருத்தத்துள்ள "பலமடபதித்தவராசரிக்கையிலுள்ளபேர்." என்பதனுனும், இந்நூல் போராடற் சருக்கத்துக்காட்டிய இரட்டையரென்னும் தெய்வீகப் புலவர்கள்பாடிய ஏகாம்பரநாதர் உலாக்கண்ணியானும், அன்றியு மிச்செங்குர்தமரபினர் வசிக்குமிடத்திற்கு மடவளாகமென்பதே பெயரென்பதனை "தம்பதிகுன்றத்தூரின்மடவளாகந்தானுக்கித்திருக்கோயிற்றுபித்தங்கண் - செம்பியர்கோன்றிருநாகேச்சுரம்போலீதுந்திருநாகேச்சுரமெனவே திருப்பேர்சாற்றி - யம்புவியிலங்காங்கவைபவங்கட்கானபரிகலந்திருநாள்பூசை

கற்பித் - திம்பர்புகழ்வளவனரசுரிமைச்செங்கோலிமசேதுபரியந்தமியற்றுநா ளில்.'' எனச்சேக்கிழார் புராணத்தும், ''ஆர்ந்தவகாரமரண்மன்றமாவணகூட மயற் - சேர்ந்தநத்தம்மிவைதற்சூழநாப்பண்செழுமணிபோ - னேர்ந்தவிடந்த மடவளாகம்மெனவேதிறவிச் - சேர்ந்தசுற்றத்தொடும்வைகுவர்காணிந்தச்செ ங்குந்தரே.'' எனச் செங்குந்தர் மாலையினுமுள்ள திருவிருத்தங்களானுந் தெ ளிக. (கச)

பதுமவணன்பின்னிவனேபாலகனும்போரறியா
னிது கருணமெனத்திரண்டாரெம்முகமுங்கொடிநெடுந்தேர்
நதியுருவமெனப்பொலிந்தநதநதிபின்முரண்டொழுகு
மதகயமாமுசலமுடன்மலையனந்தமெனத்திரண்ட.

(இ - ள்.) பதுமவண்ணனென்னும் அரசன்காலத்திற்குப் பின்னுள்ள தனியன என்னும் இவனே சிறுபிள்ளை, உயுத்தவல்லபமில்லாதவன், ஆதலால் இதுதான் நல்ல சமயமென்று எவ்விடங்களினும் பகைவர்கள் கூடினார்கள். அப்போது கொடிகளையுடைய நீண்ட இரதங்கள் நதிகளி னுருவம்போன்று விளங்கின. நதமென்னும் ஆறுகளைப்போல எதிர்த்துச்செல்லும் மதசலமுடை ய யானைகள் உலக்கைகளுடனே அநேக மலைகள் வருவதுபோன்று வந்து கூடின. எ - று.

நதம் என்பது ஆண்யாறும் நதி என்பது பெண்யாறுமாமெனவும் அவை மேற்கோடுவது கிழக்கோடுவதெனவும் பெரியோர்கூறலினுனும், எண்டு நாற் றிசையினுமுள்ள இரதபதி கஜபதி துரகபதி முதலிய அரசர்கள் பலர்நெருங்க லானும், கொடிநெடுந்தேர்களின் வரிசையைக் கிழக்கொடும் பெண்யாறாகவும், யானைகளின் மதசலங்களை மேற்கோடும் ஆண்யாறாகவும் உவமித்து, துதிக்கை யோடுகூடிய யானைகளை உலக்கையேந்திவரும் மலைகளுக் குவமித்தனர். (க௫)

துங்கமுறுங்கொய்யுளையதுரகதமாபடைகுழுமிச்
சங்கமுறுங்கடலலையிற்சங்கவெணிற்றாவுவன
சிங்களரொட்டியர்துளுவர்சீனரவந்தியர்கலிங்கர்
செங்கையிலாயுதராகித்திருக்கச்சிமிசைப்படர்ந்தார்.

(இ - ள்.) அழகமைந்ததாய்க் கத்திரித்துள்ள 'மயிர்களையுடைய சிறந்த குதிரைச்சைனியம் சேர்ந்து, சங்குகள் உம்பத்தியாகும் சமுத்திரத்தில் வீசுகின் ற அலைகளைப்போன்று சங்கமென்னும் கணக்கையுடையனவாய்த் தாவிச்செ ன்றன. சிங்களர் ஒட்டியர் துளுவர் சீனர் அவந்தியர் கலிங்கர் என்னும் மறுபுல த்தார்களனைவரும் பதாதிகளாயமைந்து, சிவந்தகைகளிற் பலவித ஆயுதங்களைத் தாங்கிக்கொண்டு சிறப்புற்ற காஞ்சிமாநகரத்திற்கு வந்தார்கள். எ - று.

சதுரங்கசைனியங்களுள் மேற்செய்யுளில் இரதமுங்கஜமும் கூறினமையி ன், இச்செய்யுளில் துரகமும் பதாதியுங்கூறி முடித்தார். மறுபுலத்தோரென்

போர் தமிழ்வழங்காத மற்றைப் பதினேழு பாஷைகள் வழங்கு நிலத்தோராக லின், "சிங்களரொட்டியர்துளுவர்சினரவந்தியர்கலிங்கர்." என்றார், இதனை, "சிங்களஞ்சோனகஞ்சாவகஞ்சீனந்துளுக்குடகங் - கொங்கணங்கன்னடங்கொல்லந்தெலுங்கங்கலிங்கம்வங்கங் - கங்கமகதங்கடாரங்கவுடங்கடுங்குசலந் - தங்கும்புகழ்த்தமிழ்சூழ்பதினேழ்புவிதாமிவையே." என்னுஞ் செய்யுளானுமறிக.

இனையபெருந்தானைதமக்கிறையவர்கூர்ச்சரவரசு
முனையகுடநாடரசுமுனைநதார்களிருபாலுங்
கனையநறுஞ்சங்கோதைகாகளத்தினெழுமோதை
புனையபெரும்பறையோதைபுரவலன்றன்செவிகேட்ட.

(இ - ள்.) இத்தகைய பெருஞ்சைனியங்கட்குத் தலைவராகக் கூர்ச்சரதேசத்தரசனும், போரில்வல்லவனாகிய குடநாட்டரசனும் இருபக்கத்தினும் முற்பட்டு நின்றார்கள். அப்போது சத்தித்த சிறந்த சங்கநாதமும் எக்காளத்திற்றோன்றும் ஒலியும் அலங்கரித்துள்ள பெரும்பறையின் கோஷ்டமும் தனியரென்னும் அரசன் செவியிற் கேட்டன. எ - று.

கூர்ச்சரம் குடம் என்னுமிரண்டுநாட்டரசர்களே எதிர்த்தார்களென்க. ()

சும்மையறிவான்கருதித்தோன்றலெழுந்தான்புரத்தார்
தம்மனையுட்காவலருந்தானையதிபரும்விரைந்தே
செம்மைமிகும்பதுவணன்றிருமகனேபுரவலனே
யம்மவணிமதிற்புறஞ்சூழ்ந்தார்க்கின்றதானையென்றார்.

(இ - ள்.) அக்கோஷ்டங்கள் இன்னதென் றறியும்வண்ணமெண்ணித் தனியனென்னும் அரசர் புறப்பட்டனர். அப்போது அந்நகரத்தார்களும் தனது அரண்மனையிலுள்ள காவலாளர்களும் சேனாதிபதிகளும் அதிவிரைவாயோடிவந்து,சிறப்புமிக்க பதுமவண்ணரீன்ற அழகிய குமாரரே! எங்களுக் கிறையவரே! நமது கோட்டையின் அழகமைந்த மதிற்புறத்தைச் சைனியங்கள் புடைசூழ்ந்து ஆரவாரிக்கின்றன என்றுரைத்தார்கள். எ - று. (௧அ)

மற்றதறிந்தரசிளங்கோவாகுமலையெனவீங்கப்
பொற்றமணிமுடிதுளக்கிப்பொறிபறக்கக்கண்சிவப்பக்
கொற்றபெருஞ்சிங்கமெனக்கொடிநெடுந்தேர்மிசைப்பாய்ந்து
சொற்றபடையெல்லாங்கைதூக்கிவிவுளியுந்தூண்டி.

(இ - ள்.) அரசிளங்குமரரான தனியர் அச்செய்தியையுணர்ந்து, உடனே புயங்கள் மலைபோலப்பருக்க, பொன்மயமான இரத்தின கிரீடமணிந்துள்ள தலையை அசைத்து, நெருப்புப்பொறிகள் பறக்கும்படி கண்கள் சிவக்க வெற்றிகொண்ட பெரிய சிங்கத்தையொத்துக் கொடிகள்கட்டியுள்ள இரதத்தின்மீதேறி, யுத்தத்திற்குரிய ஆயுதங்களனைத்தையுங் கரத்திற்றாங்கி, அவ்விரதத்திலுள்ள குதிரையையுஞ்செலுத்தி. எ - று.

கோபாவேசத்தாற் றேர்ப்பாகனையுந்தேடாது தானே செலுத்திச் சென்றனரென்க. (கக)

பதுமவணனிளங்குமரன்படர்தாலுந்தன்றனை
கதுமெனவேயணியணியாக்களஞ்சேர்ந்துகருதலரைக்
குதையமைநெடுஞ்சிலைவாங்கிக்கூரிலையம்பேவுநரும்
புதுமணிவேலெறிகுநருமாயெதிர்த்தார்போர்முகத்தில்.

(இ - ள்.) பதுமவன்னரின் அரசிளங் குமாரராகிய தனியர் யுத்தத்திற்குப்புறப்பட்டவுடனே, அவருடைய சைனியங்களானவை வரிசைவரிசையாகப் போர்க்களத்திற் புகுந்து, பகைவர்களாகிய மறுபுலத்தவர்களை, குதையமைந்து நீண்ட வில்லைவளைத்து அதிற் கூரிய இலைவடிவாயுள்ள அம்புகளைப் பிரயோகிப்பவர்களும், அற்புதமான இரத்தினங்கள் பதித்துளள வேலாயுதத்தை ஏவுவோர்களுமாய் முனைமுகத்திலே எதிர்த்தார்கள். எ - று. (உ0)

காலணியைப்பதாதியணிகைகலந்துகதைவிதிர்த்த
கோலமிகும்பரியணியைக்குதிரையணிவாளெறிந்த
தூலமதகரியணியைத்தும்பியணிமுசலம்விட்ட
வாலநெடுந்தேரணியையையவணிகணைசொரிந்த.

(இ - ள்.) காலாட்படைகளின் வரிசையைக் காலாட்படைகளின் வரிசையே கலந்து கதாயுதத்தை வீசின. அழகுமிக்க குதிரைப்படைகளின் வரிசையைக் குதிரைப்படைகளின் வரிசையே தாங்கள் தாங்கியுள்ள வாளாலெறிந்தன. மதம்பொழியும் பருத்தயானைப்படைகளின் வரிசையை யானைப்படை களின் வரிசையே முசலப்படையாற்றுக்கின. மிகுதியாயுள்ள நீண்ட இரதங்களின் வரிசையை இரதங்களின் வரிசையே அம்புகளைப்பெய்தன. எ - று. (உக)

இருபடையும்பொருதுசமரிவ்வண்ணஞ்செயுங்காலை
வருபடையேக்கறமுனையமாவடிக்கீழிருந்தரசு
புரியும்விறற்றனிச்சிங்கம்பூத்தவிழிபார்த்தெழலுஞ்
சுரரிவனேயூழியுருத்திரனென்றேசொலத்துணிந்தார்.

(இ - ள்.) இரண்டு சைனியங்களும் எதிர்த்து இவ்வாறு போர்புரியும் போது, பகைவர்களின் சைனியம் தமதுசைனியங்கள் வருத்தமுறப்போர்புரிய அதை மாவிருட்சத்தின்கீழுள்ள தேவசிங்காதனத்திருந்தரசாளும் வெற்றியமைந்த ஆண்சிங்கம்போன்ற தனியரென்பவர் கண்களிமையாது பார்த்துக்கொண்டிருந்து புறப்பட்டவளவில், ஆகாயவாசிகளாகிய தேவர்களனைவரும் இவரே பிரளயகால உருத்திர மூர்த்தியென்று சொல்வதற்கு நிச்சயித்தார்கள். எ - று

இவ்வரசிளங்குமரரின் கோபாவேசம் அவ்வளவு மிகுதியா யிருந்ததென்று விளக்கியவாறு. (உஉ)

வேறு.

இரதங்களத்தினடுவந்திருந்ததிகலோர்க்கிருந்தவணியின்
பரதந்துரங்கடமாடவேவுபடையுங்கலேந்தவணியே
விரதங்கலேந்தகளநின்றவீரர்வெலவென்றதுற்றசினமே
வரவங்கரத்தின்முனிநாணொலித்துவரிவாளியேவுமிறையே.

(இ - ள்) தனியரென்னும் அரசிளங்குமாரரின் இரதம் போர்க்களத்தின் மத்தியில் வந்திருந்தது. அப்போது பகைவர்க்கிருந்த படைகளுக்குள்ளே பரதநாட்டிய மாடக்கற்றனவா யேவப்பட்ட குதிரைப்படைகளும் ஓடியது. அப்போர்க்களத்திலிருந்த வீரர்கள் எப்படியும் வெல்வோமென்று கொண்டிருந்த விரதமழிந்தது. தனியருக்குப்பொருந்திய கோபம் அதிகரிக்க, தனது கரத்திலேந்திய வில்லிற் குணத்தொனிகாட்டி வரிகளையுள்ள அம்புகளைப் பிரயோகித்தனர். எ - று.

இவ்வரசிளங்குமாரரூர்ந்த தேரிற்பூட்டியுள்ள குதிரைகளைக்கண்டவுடனே பரதநாட்டியமாடிக்கொண்டே போர்புரியக்கற்றிருந்த பகைவர்களின் குதிரைகளெல்லாம் ஓடிற்றென்பதும், இவரைப் பார்த்தவுடனே சுத்தவீரர்கள் வெல்வதற்குக்கொண்டிருந்த சபதமழிந்தவர்களாய் ஓட்டெடுத்தார்களென்பதும் கருத்து. (உ௩)

இருளென்றிருந்தகளமிந்தசேந்தனிளையன்குலக்குருமணியாந்
தெருளங்கிலங்கவெளிகொண்டவிண்டதிசையெங்குமன்னர்படையே
யுருளுஞ்சகட்டமணிதேரொடிந்தவுடனும்பனைந்தமனதின்
மருளொன்றினார்குடகுகூர்ச்சரத்துமறமுற்றமன்னரவணே.

(இ - ள்.) இருண்டிருந்த போர்க்களமானது, முருகக்கடவுளின் துணைவரான வீரவாகுதேவரின் குலத்திற்கு மணிபோன்று விளங்கும் தனியரென்னும் இச்சூரியன் பிரகாசித்தவளவில் வெளிச்சமாகியது. அக்கால் வேற்றரசரின் சைனியங்களெல்லாம் திசையனைத்திலும் ஓட்டெடுத்தன. உருளுஞ் சக்கரங்களையுடைய அழகிய இரதங்கள் ஒடிந்தன. உடனே யானைகளும் மடிந்தன. இதைப்பார்த்த குடகு கூர்ச்சரம் என்னும் இருதேயத்திலுள்ளவர்களும் கொரேமமைந்தவர்களுமாகிய அரசர்களிருவரும் தங்கள் மனதில் மயக்கமுற்றார்கள். எ - று. (உ௪)

கண்டந்தவேலேகுந்தங்கொள்கையன்கணைகொண்டுகொண்டுசொரிய
முண்டந்திரிந்தசிரமேலெழுந்தமுனையுங்குலேந்தகணையே
மண்டுங்களத்துவயவீரர்யாருமதியெங்கிருந்ததறியார்
புண்டங்குடம்பினெடுநெஞ்சினோடுபொறையன்புழுங்கவடுமே.

(இ - ள்.) அத்தருணத்தைத் தனியரென்னும் வேலேந்திய கரத்தினர் பார்த்து, விடாமல் வேறுவேறம்புகளைத் தொடுத்துப் பிரயோகிக்க, முண்டங்

களாக வேறுபட்ட தலைகளெல்லாம் மேலே கிளம்பின. போரும் அழிந்தது. அம்புகளை நெருங்கியுள்ள போர்க்களத்திலிருந்த வெற்றியமைந்த வீரர்களெல்லாம் தங்கள் அறிவு எங்குச்சென்றிருந்ததோ அதை அறியாதவர்களானார்கள். அப்போது தனியரென்பவர், குடகாட்டரசன் அம்புகளாற் புண்பட்டுள்ள சரீரத்தோடு மனமும் வருந்தும்படி அவனோடு போர்புரிவாராயினர். எ - று.

எனவே தனியரேவிய அம்புகளால் அறுபட்டு முண்டங்களான தலைகள் மேற்கிளம்பினவென்றும், அதைப் பார்த்தவுடனே வீரர்கள் அச்சுற்றுப் போர் புரிவதற் காற்றலற்றோராய் மயங்கினார்களென்றும், அந்துடன் தனியர் சைனியங்களுடன் போர்புரிவதைவிட்டு நேரே குடகாட்டரசனுடன் போர்புரியத் தொடங்கினரென்றும் விளக்கியபடி. (௨௫)

கையுந்துணிந்துவாளுந்துணிந்துகதையுந்துணிந்துகவச
மெய்யுந்துணிந்துவிறலுந்துணிந்துவில்லுந்துணிந்துமழவே
ளெய்யுங்கணைக்காற்றாதவீயவிகலோரலாதபகுதி
பொய்யென்கரந்ததுவைக்குமுன்னரொளிதீபநிற்றலுளதோ.

(இ - ள்) அப்போது குடகாட்டரசனுடைய கைகளும் அறுபட்டு வாளாயுதமும் ஒடிந்து கதாயுதமும் பிளந்து, அவன் சரீரத்தணிந்திருந்த கவசத்துடனே சரீரமும் துணிபட்டு வல்லபமும் ஒழிந்து வில்லும் முறிந்து, இளமையமைந்த மன்மதன்போன்ற தனியரேவுகின்ற அம்புகட்குச் சகியாதவனாய் அவனிறக்க; உடனே பகைவராயுள்ளவர்களும் அவ்வா றல்லாத மற்றையர்களும் மறைந்தார்கள். பெருங்காற்றிற்கு முன் பிரகாசிக்கின்ற தீபம் நிற்பதுண்டோ? எ - று. (௨௬)

இனிவெம்முனைக்கணெதிர்வார்களெவரெனவெங்களத்திலுலவாத்
தனியங்கிருந்துசயசங்கமூதுசதுராலெவர்க்குமுதியோர்
பணிவந்தநாக்களினியித்தநாடுபரிபாலனஞ்செயரசன்
றனியன்னெனுஞ்சொலுரைதந்தவேந்தறகைபெற்குரைத்தறமோ.

(இ - ள்.) இனிக் கொடும்போர்புரிந்து என்னை எதிர்க்கத்தக்கவர்கள் எவர்களென்று பெரியபோர்க்களத்தில் திரிந்து அவ்விடத்திற்றனியாகவிருந்து வெற்றிச்சங்கமூதிய மேன்மையால்; அங்கிருந்தவர்களனைவர்க்கும் பெரியோர்களாயுள்ளவர்களுடைய குளிர்ந்த நாக்களினிடத்தில், இன்றுமுதல் இந்நாட்டைப் பரிபாலனஞ்செய்யும் மன்னவன் தனியன்றானென்னும் ஓர் வார்த்தையையே கூறின. ஆதலால் அம்மன்னவன்றன்மை அடியேனுக்குக் கூறுதல் சாத்தியமோ?

தனியன் என்பது இதுவரையில் இயற்பெயராயிருக்கினும், இப்போதெதிர்ந்த அரசர்களைவென்று இனி எதிர்ப்போரின்றிச் சயசங்கமூதியதால், அப்பெயரே காரணப்பெயராயிற்றென்பது கருத்து. இவர் இவ்வாறு வல்லபமுடையாரென்பதை, "இனியாங்கிலத்திற்கண்டதில்லைகேட்டேயிருத்தலன்றியிரும்-டனி

மால்வரையுமைநாகமுன்பின்படைதானெடுத்தானு - முனிமாறுண்டோநடுநின்றுமுடிப்பான்கச்சித்தனியன்வட்டத் - தனிமாநிழற்கீழ்ச்செங்குந்தஞ்சரணகதிக்குவைகுந்தம்.'' என்னும் ஈட்டியெழுபதின் திருவிருத்தத்தானுந்தெளிக. ()

மருவுற்றலர்ந்கவலர்வெள்ளைநாகமாமெற்றிருந்தபனைநீ
டருவுற்றிருந்தமடல்வெண்குருந்துதவளஞ்செய்தாழைமலரார்
குருவொத்திருப்பமுத்தங்கொழிக்குரவைத்தரங்கவியமார்
திருவொற்றியூரனுயர்வீரவாகுதேவன்குலத்துநிதியே.

(இ - ள்.) மணமுடைத்தாய் விகசித்திருக்கும் மலராகிய வெண்ணிறமுடைய புன்னைப்புஷ்பங்களும் பக்கத்திலுள்ள நீண்ட பனைவிருக்ஷத்திலுள்ள மடல்களின் வெண்ணிறக்குருந்துகளும் தாவள்யமாகிய தாழைமலர்களுமுடைத்தாயிருக்கின்ற நிறத்தைப்போன்று, முத்துக்களைக் கரையிற்சேர்க்கின்ற அலைகளின் ஒலியாகிய வாத்தியம் கோஷிக்கின்ற திருவொற்றியூர்க்கதிபரும், மேன்மையமைந்துள்ள வீரவாகு தேவருடைய குலத்தின் நிதியொத்தவரும். எ-று.

கடற்கரையிலுள்ளது திருவொற்றியூராகலின் இவ்வாறு கூறினதென்க.

மடலங்கடப்பவணியற்சுதாகமகிபன்றவக்குமரனே
படனம்புரிந்தமறையாகமத்தினெறிநின்றபண்பனிறையன்
புடலன்பரந்தவுலகேழுயிர்த்தவுமையெங்களன்னையொருபால்
வடிவஞ்சிறந்தபரமன்றியாகமாணிக்கமுள்ளமதியான்.

(இ - ள்.) இதழ்கள்வாய்ந்த அழகிய கடப்பமலர்மாலையணிந்துள்ள சுதாகனென்னும் அரசன் தவத்தாலீன்ற குமாரரும், தான்ஓதியுணர்ந்துள்ள வேதாகமங்களின் முறைமைப்படி யொழுகுகின்ற சற்குணசிகாமணியும், சிவபிரானிடத்தில் நிறைந்த அன்பே ஓர் வடிவமாயமைந்தவரும், விரிந்திருக்கும் சத்தலோகங்களையும் பெற்றருளிய உமாதேவியாரும் எங்கள்மாதாவுமாகிய வடிவாம்பிகையாரைத் தமது திருமேனியின் ஓர் பாகத்திற் சேர்த்திருக்கும் மாணிக்கத்தியாகரென்னும் பெருமானைப் பதித்த சித்தமுடையவரும். எ - று. (உக)

வெண்ணீறுமக்கமணியும்புனைந்தவியனிலங்குமுருவன்
மண்ணீரதாமபொறையன்றிரிந்தமனநின்றிருந்தநினைவின்
கண்ணீர்சொரிந்ததுதியாலிந்துகதியேவிரும்புமுதியோன்
புண்ணீரிருந்துமிளிர்குந்தமென்றுபுகழ்வேலிருந்தகரனே.

(இ - ள்.) திருவெண்ணீற்றையும் உருத்திராக்கமணியையும் தரித்துள்ள அழகுவிளங்கும் திருமேனியுடையவரும், பூமியைப்போன்ற பொறுமையுடையவரும், அலைவுற்றிருக்கு மனம் நிலைத்துள்ள தியானத்துடனே ஆனந்தக்கண்ணீர்சொரிந்து துதிக்கின்ற தோத்திரத்தால் உளமுருகி முத்தியின்பத்தையே விருப்புற்ற பெரியோனும், உதிரநீர்தங்கிப் பிரகாசிக்கின்ற செங்குந்தமென்றுபுகழ் பெற்ற வேற்படைதாங்கிய திருக்கரமுடையவரும் ஆகிய இவர். எ - று.

பொறுமைக்குப் பூமியை யுவமானித்தலை, "அகழ்வாரைத்தாங்குநிலம்போலத்தம்மை - யிகழ்வார்ப்பொறுத்தறலை." என்னும் திருக்குறளானுந் தெளிக. (ரு0)

பங்கேருகங்களலர்பொய்கைவாய்ப்படிகித்திலங்களுந்தவுஞ்
சங்கேறித்தூநிரைநிரையொன்றநன்குசமையப்பாவிளங்குகரைமேற்
கொங்கேறுதாதுசிதறுவிளங்குசுமம்பிறங்குமடவிச்
சிங்காரச்சீர்மையபவைமேவுமாறுசெய்தான்சிறந்தபணியே.

(இ - ள்.) தாமரைகள் மலர்ந்துள்ள ஓர் தடாகத்தை, முத்துக்களையீனுஞ் சங்குகள் அதன்கண்பொருந்தியபடிகளில் ஏறியுலாவும் அழகமைய நன்றாய் நிருமித்து, அத்தடாகத்தின் விளக்கமுற்ற கரையின்மீது, மணம்வீசுகின்ற மகரந்த[illegible]ச் சிதறிக்கொண்டிலகுகின்ற மலர்கள் விகசிக்கும் ஓர் பூஞ்சோலையை, அதற்குரிய விசித்திரத்தன்மைகள் யாவும் அமையும்வண்ணம் சிறப்புற்ற திருப்பணியாகச் செய்தனர். எ - று.

முத்துக்கள் பதின்மூன்றிடங்களில் உற்பத்தியாமெனவும் அப்பதின்மூன்றும் தலசம் சலசம்என்னும் இருவகைக்குளடங்குமெனவும் அப்பதின்மூன்றிடங்களிற் சங்கும் ஒன்றெனவும் பெரியோர் கூறலின், ஈண்டு சலசம் ஆகிய முத்து சங்கினிடத்துற்பத்தியாமென்பதை யுணர்த்துவான், "படிமுத்திலங்களுந்தவுஞ் சங்கேறித்தூ." என்றனர். இவற்றை, "தக்கமுத்திரண்டுவேறுதலசமேசலசமென்ன - விக்கதிர்முத்தந்தோன்றுமிடன்பதின்மூன்றுசங்க- மைக்கருமுகில்வேய் பாம்பின்மத்தகம்பன்றிக்கோடு -மிக்கவெண்சாலியிப்பிமீன்றலைவேழக்கன்னல்" எனவும், "கரிமருப்பைவாய்மான்கைகற்புடைமடவார்கண்டம் -மிருசிறைக்கொக்கின்கண்டமெனக்கடைகிடந்தமூன்று - மரியனவாதிப்பத்துநிறங்களு மணங்குந்தங்கட் -குரியனநிறுத்தவாறேயெனவுமுரைப்பக்கேண்மின்." எனவரூஉம் திருவிளையாடற்புராணத் திருவிருத்தங்களானுந்தெளிக. முத்தந்தோன்றுமிடம் இருபதெனக் கூறுவதும் உண்டு. இதனை, நூல்வரலாற்றுச் சருக்கத்தின் முதற் கவிக்குக்காட்டிய உதாரணச் செய்யுளாற்றெளிக. இவ்விருபதிடங்களுள் சங்கு முகில் இப்பி மீன் என்னும் நான்கிடங்களிற் பிறப்பன சலசமாகவும் ஏனையவை தலசமாகவும் கூறுவர். (ருக)

ஒற்றித்தியாகர்நாமஞ்சகத்ரமோதிக்கனிந்துசரண்மேற்
குற்றத்துறுதமலர்பல்லவாய்ந்துகுளிரச்சொரிந்துபரவு
மற்றத்திலாடலுளஞ்மரக்கனறமேகெடுக்குமனலன்
சுற்றிச்சகங்களடர்கந்நீடுசோலைக்கண்வந்துசுழலும்.

(இ - ள்.) அன்றியும் அவர் திருவொற்றியூரில் எழுந்தருளியுள்ள மாணிக்கத்தியாகருடைய சகஸ்திரநாமங்களையுங்கூறி மனக்கனிவுடையராய் அவரது திருவடிகளின்மேல், குற்றமற்ற பலவித மலர்களை ஆய்ந்தெடுத்துக் குளிர்ச்சியுறும்படி அருச்சித்துத் துதித்துக்கொண்டிருக்கும் நாள்களில், வெற்றியுள்ளவ

னாய்த் தருமத்தைக் கெடுக்கின்ற குணமுடைய அனலன் என்னும் ஓரசுரன் உலகெங்கும் திரிந்து கடைசியாய், அத்திருவொற்றியூரில் இவரமைத்துள்ள பரிமளம் மிக்க மலர்ச்சோலைக்குள்வந்து திரிந்துகொண்டிருந்தான். எ - று.

குற்றமுள்ள மலர்களாவன:—பறித்தபிறகு மலர்ந்தவை.-நேற்றுமலர்ந்தவை·எருக்கிலையினும் ஆமணக்கிலையினும் வைத்தவை-வஸ்திரத்திலுங்கையிலும் வைத்திருந்தவை கீழுதிர்ந்திருந்தவை-அரைக்குக்கீழாகத்தொங்கவைத்திருந்தவை - புழுக்கடித்தவை - எச்சமிருந்தவை-சிலந்தியிருந்தவை·மயிரிருந்தவை - கையில்வைத்துக்கொண்டுமுடிந்தவை - இரவிலெடுத்தவை - நீரிலூறவைத்தவை சுடுகாட்டிலிருந்தவை - எச்சில்பட்டவை - ஸ்நானஞ்செய்யாதெடுத்தவை என்னும் இவைகளாம். இதனை, "எடுத்தவைத்தேயலர்ந்தமலர்பழம் பூச்சகண் மற்ற வெருக்கிலையாமணக்கிலையினிற்பொதித்தபூக்க - ளுடுத்தபுடைவையிற்க ரத்தினைத்தநறும்பூக்களுதிர்ந்திடுபூவரையின் கீழ்ற்றவிரைப்பூக்க - ளடுத்த புழுக்கடியெச்சஞ்சிலந்திமயிருறுதலங்கையில்வைத்தங்கைகளுவித்திடுரல்கங்குற னிலே - யெடுத்தமலர்நீரமிழ்ந்தல்புறங்காட்டிலெய்தலெச்சில்குளியாதெடுத்த விழிவெனுமாகமமே." என்னும் புட்பவிதித் திருவிருத்தத்தானுந்தெளிக. ()

தலையாயவைந்துபாவமேபுரிந்துதனியேபுழன்றுபலவாம்
புலையேவிருப்பிநிசியாலெதிர்ந்துபுறநாடகன்றுபொழிலே
யுலவாவிருந்தநராவியுண்டவுணவான்மகிழ்ந்தகயவ
னொலியாறுகாவிபுடைசூழ்பொழிற்கணுலவிக்களித்துமகிழ்வான்.

(இ - ள்,) அவ்வரக்கன் பாவங்களிற்றலைமைபெற்ற ஐம்பெரும் பாதகங்களைப்புரிந்து, ஒன்றியாகவே சஞ்சரித்து; பலவிதமான புலால்களையே இச்சித்து; இராக்காலங்களில் வெளிக்கொண்டு பக்கத்திலுள்ள நாடுகட்குப்போய், அவ்விடங்களிலுள்ள சோலைகளில் உலாவிக்கொண்டிருக்கும் மனிதர்களுயிரைப் போக்கி, அம்மாமிச வுணவினாற் களிப்புற்ற குரூரன்; ஒலிக்கின்ற வண்டுகள் தேனைக்குடித்துலாவும் இச்சோலையிலும் வந்துலாவிக் களிப்புற்று மகிழ்ந்திருந்தான். எ - று.

களித்தலும் மகிழ்தலும் ஒருபொருள் பயக்குஞ் சொற்களேயாகவும் அவ்விரண்டையும் ஒருங்குசேர்த்துக்கூறிய தென்னையெனின், அவ்விருசொற்களும் ஒருபொருள் பயப்பதேனும், அக்களிப்பின் ஏற்றக்குறைவை விளக்கலின் இரண்டாகவே பெரியோர்கொண்டுள்ளார். அஃதென்னெனின், களித்தல் - உணர்வழியாவுவகை, மகிழ்தல் - உணர்வழிந்தவுவகை என்பதாம். இதனை, "உள்ளக்களித்தலுங்காணமகிழ்தலுங் - கள்ளுக்கில்காமத்திற்குண்டு." என்னும் திருக்குறளுரையானுந் தெளிக. (௫௬)

ஆமத்தினத்தினளிவீழுமுன்னமதிபோதெழுந்துபரம
னேமத்தரோடுதிருவொற்றியூரினிலவுத்தியாகர்வனமே

போமக்கணத்திஞெருகாதகாறுபொற்பூத்தடத்தின்விதியே
பரமச்சுபோதநெறிமுழ்கியெங்கள்பரனீறணிந்துநடவா.

(இ - ள்) அந்தினத்திலே வண்டுகள்வந்து மலர்களில்வீழ்வதற்கு முன்னமே பிராதக்காலத்தில் வெளிக்கொண்டு, சிவனடியார்களுடனே அந்தத் திருவொற்றியூரில் வீற்றிருந்தருளும் மாணிக்கத்தியாகருடைய திருநந்தனவனத்திற் போகின்ற அப்போதே, ஓர் காததூரம் வரையில் நறுமணங்கமழும் அழகிய மலர்கள் விகசித்துள்ள பொய்கையில், முறைமையமைந்துள்ள சிவாகமங்களின் விதிப்படியே நீராடி எமது சிவபெருமானுக்குரிய திருவெண்ணீற்றையணிந்துகொண்டு சென்று. எ - று.

நேமம்-நியமம் என்பதன்றிரிபு. வண்டுகள் புகுதாமுன்னர் அதிகாலையிலெழுந்திருந்து மலர்பறிக்க வேண்டுமென்பது விதியாதலின், "அளிவீழுமுன்னமதிபோதெழுந்து." என்றனர். இதனை, "சிறையளிபுகுதாமுன்னஞ்சிறுகாலையெழுந்திருந்து - பொறைமரம்வழுக்காதேறப்புலிநகம்பெற்றமர்ந்த - நறைமலர்ப்பழுதுடார்க்கநகந்தொறுங்கண்படைத்துங் - குறைவறப்புரிந்தான் பூசைகுயவரிப்பதத்தினுனே." என்னும் புட்பவிதித்திருவிருத்தத்தானுந் தெளிக. (௬௪)

வேறு.

மட்டொழுகக்கட்டுடைந்துசுகந்தநாவிமரக்கோடுகொடிநிலநீர்மலரும்பூக்க, வொட்டரியபூக்கூடையொருகையேந்திச்சுடரொளியைத்துதித்துக்கொய்திடுதனோக்கித், துட்டனிதுநல்லுணவென்றிருகைகொட்டித்திரிதருமுடன்பெருந்தொனிகொண்டுரப்பிக்கிட்டி, முட்டவருகின்றதைச்செங்குந்தனுங்கான் முளைவிரைவிற்கண்டிதனைமுன்னுகின்றான்.

(இ - ள்) தேனொழுகும்படி இதழ் விண்டு நறுமணம்வீசி மரத்தின்கொம்புகளினும் கொடிகளினும் நிலத்தினும் நீரினும் விகசிக்கும் மலர்களைப்பறிக்கத்தொடங்கி, அருமையான மலர்க்கூடையை ஒருகரத்திலேந்திக்கொண்டு சிவபிரானைத் துதித்துக்கொண்டே பறித்துக்கொண்டிருப்பதைப்பார்த்து, அனலன் என்னும் அசுரனான அத்துஷ்டன் இது இன்றைக்கு நல்ல ஆகாரம் என்று நினைத்துத் தனதிரண்டு கைகளையுங் கொட்டிக்கொண்டு அதிவிரைவிலேபெருங்குரல்காட்டி அதட்டிச்சமீபித்து அடிக்கவருகின்றதை, செங்குந்தமரபினராகிய அவ்வரசிளங்குமரர்பார்த்து இவ்வாறெண்ணுகின்றார். எ - று.

மலர்கள் கோட்டுப்பூ-கொடிப்பூ-நீர்ப்பூ-நிலப்பூ என நால்வகைப் படுமாதலின், "மரக்கோடுகொடிநிலநீர்மலரும்பூக்கள்." என்றார் மலர்கள் நால்வகைப்படுமென்பதை, "கோட்டுமலருநிலமலருங்குளிர்நீர்மலருநகொழுங்கொடியின் - மோட்டுமலருமாமலருஞ்சுருதியலருந்திருவாயிற் - காட்டுமுறுவனிலவலாக்கனகவரையிற்பன்னகாஞ் - பூட்டுமொருவர்திருமுடிமேற்புனைய

லாகுமலர்தெரிந்து." என்னும் அருண்மொழித்தேவர் அமுதவாக்கானுந்தெளிக. இவைகளிவையிவை யென்பதை, "வன்னிபலாவெலுமிச்சைநாரத்தைதேமாங் குமர்நாரையூமத்தைமாவிலிங்கைநொச்சி - பன்னியகில்சந்தமகிழ்மாதுளைமாவ சோகுபாதிரிவெள்ளெருக்கிலந்தைபலாசுநுணாநறவம்-புன்னைவிளாமருதுங்கொன் றைநெல்லிதுராச்செருந்திபொன்னிறுவிரைசிறுவைகுருந்துவல்லொரவன் - ம ன்னுதாதகிகுளஞ்சியலரிவெட்சிபவளமல்லிகைசண்பகஞாழல்கோட்டுப்பூவகை யே." எனவும்; "மருவாருங்காந்தள்காட்டுமல்லிகைமுல்லைமௌவல் - கருவார் வெற்றிலையேதாளிசுருமுகைகருங்காக்கொன்றை - முருகாருட்வெண்காக்கொன் றைகுருக்கத்திமுதலாவுள்ள-விருவாட்சிகொகுடிபிச்சியிவையெலாங்கொடிப்பூ வாமே." எனவும், 'செய்யதாமரைசேர்ந்தபொற்றாமரை-துய்யதாமரைசொ ல்லிரண்டற்பல- மையசெம்மையவெண்மையவாகிய-நெய்தன்மற்றிவைநீரின்ம லர்களே." எனவும், "பட்டிநாயுருவிபூளைபச்சைசெவ்வந்திதும்பை - வெட்டி வேர்மருக்கொழுந்துகரந்தையேவிஷ்ணுகாந்தி-மட்டவிழ்துழாய்செங்கீரைமத் தைசெம்பரத்தைவங்க மிட்டகொக்கிறகனிச்சம்வலம்புரியிவைநிலப்பூ." என வும்வரும்புட்பவிதித்திருவிருத்தங்களானுந்தெளிக. மலர்பறிக்கையில் மனவொ ற்றுமையுடன் பறிக்கவேண்டுமென்பதை, "பெருக்கமாமலர்களேனும்பிறருக ண்பிரியங்கூரான்-சுருக்கமேயெனினுமையாதூய்மையேயணையுங்கண்டீ - ருருக் கமுமின்றிப்பூவுமுதகமும்பழுதேயாகு- லருட்கணுமுளவோகன்னிலருவருத்தி டுவனையன்." என்னும் புட்பவிதித் திருவிருத்தத்தாற்றெளிக. (௩௫)

வேறு.

காத்திரமலையின்வீங்கிக்கைகளைத்தூண்போல்வீசிச்
சோத்திரம்புதைக்குமாறுசொன்னவனரக்கனென்ன
நேத்திரங்கனலநோக்கிநின்வரவேதுநீயார்
பாத்திரமறியாவஞ்சப்பாவிசொல்லென்னவன்றோன்.

(இ - ள்.) சரீரம் மலைபோற் பருத்து இரண்டு கைகளையும் எஃகுத்தம்ப த்தைப்போல் வீசிக்கொண்டு செவிகள் செவிடுபடும்படி கூறியவன் அரக்க னேயென்று நிச்சயித்து, கண்களில் நெருப்புப்பொறிபறக்கப்பார்த்து பாத்தி ராபாத்திரம் அறியாத வஞ்சகமுடைய பாவியே! நீயார்? நீவந்தகாரணமெ ன்னை? அதைச் சொல்லவேண்டுமென்று கேட்க, அதுகேட்ட அவ்வரக்கன்.

சுரோத்ரம் என்னும் வடமொழி தென்மொழியாற் சோத்திரமெனத் திரிந்தது. (௩௬)

அனலனென்றுலகமஞ்சுமரக்கனைகட்டுட்காந்து
கனலவித்திடவிக்கானம்வந்தனன்கண்டேனுங்க
ளினமெனவஞ்சுவான்போலிடைந்துருத்திரனோர்பொங்கித்
தனதுகைவேலாலோடித்தாக்கினனரக்கன்வீழ்ந்தான்.

(இ - ள்.) நான் உலகத்துள்ளார் அச்சமுறத்தக்க அனலனென்னும் பெயருடைய அரக்கன். என் வயிற்றி லெரிகின்ற பசித்தீயைத் தணிப்பதற்காக இச்சோலைக்கு வந்தேன். இவ்விடத்தில் உங்கள் கூட்டத்தைப் பார்த்தேனென்றுகூற, அதுகேட்ட ஒற்றியூரதிபர் அஞ்சுறுவாரைப்போன்று பின்வாங்கிக் காலாக்கினி உருத்திரரைப்போற் கோபித்தோடி, தனது காத்திற் றாங்கியுள்ள வேற் படையாற் குத்தினர். உடனே அவ்வரக்கன் உயிரிழந்து கீழே வீழ்ந்தனன். எ - று.

கானம் ஈண்டு சோலை. உருத்திரனேர் பொங்கியோடிக் கைவேலாற்றாக்கினன் எனக் கூட்டுக. (கஎ)

பாதகன்றன்னுலீசன்பணிசெயுமடியார்க்காய
தீதுறல்காணவஞ்சித்திருவிழிபுதைத்தான்குந்த
மேதகுவேலாலன்னுன்வீழ்ந்தனனென்னக்கேட்டா
னுதல்ற்கண்விழித்தானுதவனெனவுதித்தான்.

(இ - ள்.) சூரியனானவன் மாபாவியாகிய இவ்வரக்கனால் மலர்பறிக்க வந்துள்ள சிவனடித் தொண்டியற்றும் மெய்யன்பர்கட்கு நேர்ந்த தீமையைப்பார்க்க வெருக்கொண்டு தனதிருவிழிகளையும் மூடிக்கொண்டிருந்தான். குந்தமென்னும் மேன்மை யமைந்த வேற்படையால் அவ்வரக்கன் இறந்தானென்று கேள்வியுற்றமையால் மீண்டும் தன்கண்களை விழித்தானென்னும்படி உதயமாயினன்.

இவர்கள் மலர் கொய்யச்சென்றது விடியற்காலமேயாகலின், அதுவரையில் அங்குலாவிக்கொண்டு சிவனடியார்க் கிடுக்கண்புரியவெண்ணிக் காத்திருந்த அவ்வரக்கனைப் பார்க்கப் பயங்கொண்டே உதயமாகாம லிருந்தானென்றும், அவனிறந்தவுடனே அச்சந் தெளிந்தமையின் உதயமாயினனெனவுங் கற்பித்தமை காண்க. (கஅ)

கண்டகவனலன்றன்னைக்கட்டினன்பாசம்வீசிச்
சண்டனந்தரத்திற்றன்பாற்சார்ந்தனன்விழுந்துருண்ட
முண்டமாமலையினைய்த்தோர்மூரிச்செவ்வருவிபாய்ந்து
மிண்டியமலைப்பாம்பென்னவெங்குடலத்திற்புரண்ட.

(இ - ள்) மிகக்கொடுரனாகிய அனலனென்னும் அசுரனை, உடனே யமன் தனது பாசக்கயிற்றைவீசிக் கட்டிக்கொண்டு ஆகாயமார்க்கமாய்த் தனது யமபுரத்திற் கிழுத்துப்போயினன். வேற்படையாற் றுண்டிக்கப்பட்டுவிழுந்துருண்டுகொண்டிருந்த அவ்வரக்கனுடைய உடற்குறையாகிய மலையிலே உதிரமென்னும் விசேடித்த செந்நிறவருவியொழுகி, அவ்வருவியில் வலியுள்ள மலைப்பாம்பைப் போன்று அவனது பெருங்குடர்கள் புரண்டுகொண்டிருந்தன எ-று

எத்தனைகொன்றுதின்றுனிவனுடற்சோரிவாரி
யத்தனைக்கதிகம்பாறுமலகையுமாரவுண்டு

கத்தனு மொற்றியூரின்காவலன் றிருக்கரத்து
வைத்தசெங்குந்தமென்றும்வாழ்கவென்றுடியார்த்த.

(இ - ள்) இவ்வரக்கன் எத்தனை உயிர்களை வதைத்துப்புசித்தானோ அத்தனைக்கு மேற்பட்டு, பருந்துகளும் பேய்களும் இவனது சரீரத்திற்பெருகிய உதிரப்பிரவாகத்தை வயிறாரப்புசித்து, எங்கள் தலைவராகிய ஒற்றியூரதிபர் தனது திருக்கரத்திற்றாங்கியுள்ள செங்குந்தமென்னும் வேற்படையானது எக்காலத்திலும் வாழக்கடவதென்று வாழ்த்தி ஆனந்தக்கூத்தாடி யாரவாரித்தன.

சீவர்கள் தாங்கள் வதைத்துண்ணும் உயிர்களொவ்வொன்றாலும் தாங்களும் வதைபட்டுண்ணப்படுவார்களென்பது நூற்றுணிபாகலின், "எத்தனைகொன்றுதின்றனிவனுடற்சோரிவாரி - யத்தனைக்கதிகம்பாறுபலகையுமாரவுண்டு" என்றனர். இதனை, 'கொன்றனைத்துமனைத்துமெனைக்கொன்றன - தின்றனைத்துமனைத்துமெனைத்தின்றன.'' என்னும் வெண்காட்டடிகளின் வியன்வாக்கானுமறிக. தங்கள் பசியாற வுண்ணும்படி மாமிசாதியுணவுகளை இப்போதுதவியது வேற்படையாகலின், பருந்து அலகை முதலியவைகள் அவ்வேற்படையை வாழ்த்திற்றென்க. (சுo)

பின்னைமார்பிற்சுமந்தபெற்றமூரத்தர்க்கன்பு
சொன்னவாறியற்றுகின்றதோன்றறன்பெருமையென்றாற்
பன்னவாமோபன்னாக்கொள்பாந்தள்வேந்தொருக்கானெஞ்சி
னுன்னிடினொருவாறாகவுரைக்கலாந்தஞ்சைமன்னா.

(இ - ள்.) ஓ தஞ்சைவேந்த! திருமகளை மார்பில் வைத்துக்கொண்டிருக்கும் திருமாலாகிய இடபத்தை வாகனமாகக் கொண்டருளும் சிவபிரானுக்கு ஆகமங்களிற் கூறிய வண்ணம் தொண்டுபுரிகின்ற அவ்வொற்றியூரதிபதியின் பெருமை என்னாற் சொல்லவேலுமோ? பல நாக்களைப்படைத்த ஆதிசேடன் ஒருவேளை சொல்லவேண்டுமென்று மனதிற் சிந்தித்தால் ஒருவாறாகக் கூறி முடிக்கலாம். எ - று.

திருமாலே இடபமாயினரென்பதை, "கடகரியும்பரிமாவுந்தேருமுகந்தேறாதே - யிடபமுகந்தேறியவாறெனக்கறியவியம்பேடி - தடமதில்களவைமூன்றுந்தழலெரித்தவந்நாளி - லிடபமதாய்த்தாங்கினான்றிருமால்காண்சாழலோ.'' என்னும் மணிவாசகப்பிரான் மலர்வாக்கானுமறிக. ஒற்றியூரதிபர் இவ்விதமேன்மை யுடையா ரென்பதை 'உடலமண்மேலுயிர்விண்மேலொல்லாரோடிங் கவுதிரமொடு - குடருங்கொழுவுங்கழுகோடுங்கொள்ளைகொள்ளப்பரிந்தூட்டு - மடல்வெண்டாழைமுகமலரவாரிவாரித்திரைக்கரத்தாற் - கடல்வெண்டரளமேயெறியுமொற்றியூரன்கைக்குந்தம்." என்னும் ஈட்டியெழுபதின் திருவிருத்தத்தானறிக. (சுக)

புலியடிக்காய்க்காக்கிள்ளைபூத்ததுபசுந்தேன்வாக்கிச்
சலிதருமலர்மேல்வண்டுகலித்ததுசாலியோங்கிப்

பொலிதருவயலினீத்தம்பொங்கியதுளங்கூரன்பு
மலிதருகளத்தூரென்னுமாநகர்புரக்குநீரான்.

(இ - ள்.) புலியடியையொத்த பசுங்காய்களைப்படைத்த வாழைச்சோலைகளில் கிளிகள் விசேடித்துள்ளதும், பசுந்தேனையொழுக்கி அசைந்துகொண்டிருக்கும் மலர்களின்மிது வண்டுகளொலித்துக்கொண்டிருப்பதும், நெற்பயிர் வளர்ந்தோங்கிய வயல்களில் வெள்ளம்பெருகியுள்ளதும், இத்தன்மைகளால் யாவருடைய மனத்தின்கண்ணும் பேராவலதிகரிக்கச்செய்வதாகிய களத்தூரென்னும் சிறந்த நகரத்தை அரசாளும் மேன்மையுடையவர். எ - று. ()

நவமணிவிரவேந்தர்தங்குலமுடையானென்றுஞ்
சிவமணியணிமேயென்னத்தேர்ந்தவன்மதிமான்பெற்ற
தவமணிகளமூர்தஞ்சச்சங்கரன்சரவணத்துற்
பவமணியளித்தகூத்தன்பதமுடியெனக்கொள்பண்பன்.

(இ - ள்.) நவமணிகளிற்றோன்றிய சத்திகளின் குமாரர்களாகிய நவவீரரென்னும் மன்னவர்களின் சிறந்த குலமுடையவர். எக்காலத்தும் ஆபரணமாயுள்ளது உருத்திராக்கமணியேயென்று தெளிந்துள்ளவர். மதிமானென்னும் மன்னவன் அரிய தவத்தாலீன்ற புத்திரரத்தினம். விடந்தங்கிய கண்டமுடைய சங்கரமூர்த்தியும் சரவணத்தடாகத்திற் குழவியுருவாயவதரித்த சுப்பிரமணியக்கடவுளைப் பயந்த பரமனுமாகிய எமது நடராஜன் திருவடிகளை முடியாகப்பெற்ற தகைமையர். எ - று.

இக்களத்தூரதிபர் திருத்தொண்டாறுபத்துமூவருளொருவரான கூற்றுவநாயனார் சந்ததியாரெனக்கூறுப. இதனை "ஆர்கொண்டவேற்கூற்றன்களந்தைக்கோனடியேன்." என்னும் ஆளுடையநம்பிகளருட்பனுவலாலும், "நாதன்றிருவடியேமுடியாகக்கவித்துநல்ல - போதக்கருத்திற்பொறித்தமையாலது கைகொடுப்ப-மேவாநரக்குழுவியனாலமெல்லாமொருங்கோலின்வைத்தான்-கோதைநெடுவேற்களப்பாளனுகியகூற்றுவனே," என்னும் நம்பியாண்டார் நம்பிகளருளிய திருவிருத்தத்தானும் தெளிக. (சுக)

கலையெலாமொருங்குணர்ந்தகாளைதன்வடிவாற்கன்னற்
சிலைவலான்மீண்டொருக்காற்றேகியாய்வரினுமீண்டு
நிலைநிலாதுன்முன்போனெருப்பதாயெரிபவேண்டிச்
செலவினுற்காற்றிலேறித்திருக்கயிலாயஞ்சேர்வான்.

(இ - ள்.) கலைகளனைத்தையும் முற்றுந்தெளிந்த அம்மன்னவரது பேரழகால், கரும்புவில்லேந்திய மன்மதன் மறுபடியும் சரீரியாக வந்தாலும் வெட்கத்தால் இவ்விடத்தில் நிலையாயிராமல் முன்போலவே நெருப்பாக எரிந்துபோகவிரும்பி, அதிவேகமாக தென்றற்றேரிலூர்ந்து திருக்கைலாயத்திற்போய்ச் சேர்வான். எ - று.

நெற்றிக்கண்ணு லெரிந்த மன்மதன் அசரீரியாய் அனேககாலமிருந்து மீண்டும் சிவபெருமான் அனுக்கிரகத்தாற் சரீரியாக விளங்கினனென்பது புராணசரிதையாகலின், "மீண்டொருக்காற்றேகியாய்வரினும்." என்றார். (சச)

அனையவன்வெட்சிராசனுமெனுமபிதானத்தான்
முனைவனைப்பெற்றதாதைமுழுமணிமகுடமின்னே
புனைதரவெண்ணியோலைபோக்கினன்மற்றவ்வேந்த
ரனைவருங்கண்டார்வந்தாரசனைப்பணிந்துநின்றார்.

(இ - ள்.) அம்மன்னவர் வெட்சிராசன் என்றுகூறும் திருநாமமுடையவர். அந்தகைய முதன்மையுடையவரை யீன்ற பிதாவாகிய மதிமானென்னும் வேந்தர், சிறந்த அரதனங்கள் பதித்துள்ள மகுடத்தை இப்போதே தரிக்கவேண்டுமெனச் சிந்தித்து, அரசர்கட்கெல்லாம் திருமுகமனுப்பினர். அவ்வரசர்களெல்லாம் அத்திருமுகத்தைப் பார்த்தவர்களாய் வந்து மதிமானென்னும் வேந்தனை வணங்கி நின்றார்கள். (சரு)

மதியிலாக்குறும்பன்காட்டோர்மன்னவன்பிறர்வாழ்க்கைக்க
ணதியழுக்காறுண்மேலானன்னவன்வராமனின்று
விதிவழிமதிசென்றோலைமுரண்பெறவிடுத்தானந்தப்
பதியினைக்கொல்லச்சிங்கம்பாய்ந்தெனப்படர்ந்தானங்கே.

(இ - ள்.) அப்போது அறிவற்ற குறுநிலத்தவனும் காட்டோர் வேந்தனும் பிறர் செல்வத்தில் மிக்க பொறாமைகொள்வதில் மேலானவனுமாகிய ஒருவன் திருமுகத்தின்படி பட்டாபிஷேகத்திற்கு வாராமல் நின்றதுமல்லாமல், அவன் விதிவசப்படியே புத்தியும் சென்று எதிரான ஓர் திருமுகமும் அனுப்பினான். அத்தகைய அரசனைக் கொல்லும்படி சிங்கம் பாய்ந்ததுபோல அவ்விடத்திற் சேர்ந்தார். எ - று.

அவ்வரசனது செல்வமழியுங்காலம் நேர்ந்தமையின் அழுக்காறென்னும் ஓர் குணம் அவனுக்கு வாய்த்ததென்று விளக்குவான், "விதிவழிமதிசென்று" என்றனர். பொறாமையெனபது ஒருவனுடைய செல்வத்தை யழிக்கநேருங் குணமென்பதையும், விதிவழியே மதிசெல்லுமென்பதையும், "அழுக்காறெனு மொருபாவிதிருச்செற்றுத்-தீயுழியுய்த்துவிடும்."என்னும்திருக்குறளானாலும், "குலனுமோர்கிலன்கோத்திரமோர்கிலன்குடிமை - நலனுமோர்கிலனொழுக்கமுங்கல்வியுநண்ணுர் - தலனுமோர்கிலன்கன்னியைத்தந்துசெய்தானெனப்-புலனுமோர்ந்தவன்விதிவழிமதியெனப்புலந்தார்." என்னும் திருவிளையாடற்புராணத் திருவிருத்தத்தானுந் தெளிக. (சசு)

பகைநினைகொள்க்களத்தூர்ப்பாசிலைக்குருந்தவைவே
னகுகான்வெட்சிவேய்ந்துநாட்பினுண்முனைந்துவந்த
வகிதனுமதமாவீழவரிக்கொடியமர்ந்திருக்கச்
சகமதிற்கொன்றுவெற்றிச்சங்கநின்றார்த்தானன்றே.

(இ - ள்.) பகைவர்களுடைய படைகளைத் தனக்கு அடக்கமாக்கிக் கொள்ளும்பொருட்டு, களத்தூர் என்னும் ஊரிலுள்ள பச்சிலைவடிவாயிருக்கும் குந்தம் என்னும் கூரியவேல் பிரகாசிக்கும் வெட்சியரசர் வெட்சிமாலை யணிந்து, போர்க்களத்தில் எதிர்த்துவந்த கொரேனுகிய யானையானது உயிரிழந்து வீழும்படிக்குந் தன்னுடைய புலிக்கொடியே இவ்வுலகத்தில் எக்காலத்தும் நிலைநிற்குமாறுங்கொன்று, அக்களத்திலிருந்து ஜயசங்க மூதினர். எ - று.

அன்று - ஏ - அசைகள். முன்னமே அநேக பகைவர்களை முதுகுகாட்டியோடச்செய்து வெட்சிமாலையணிந்து, அக்காரணத்தால் வெட்சியரசர் எனப்பெயர்கொண்ட மன்னர் இப்போதும் இக்குறும்பரசனை வெல்லுவான் வெட்சிமாலை யணிந்தனரென்க. அவ்வரசனையும் ஏனைய அரசர்களையும் வெற்றிகொண்டாரென்பான், "வரிக்கொடியமர்ந்திருக்கச்சகமதில்." என்றார். (சஎ)

பற்றலனிரைகவர்ந்துபடையுடன்றன்னூர்புக்கக்
கொற்றவன்புண்டரீகக்கொடியரணிரீஇப்புரங்கண்
முற்றவுங்கமுகாற்றெங்கான்முத்தினுன்மலராற்பந்தர்
சுற்றினுமமைத்துநூலாற்சுடர்மணிமுடிபுனைந்தான்.

(இ - ள்.) இவ்வாறானபின் பகைவனுகிய அவ்வரசனது பசுநிரைகளைக் கவர்ந்துகொண்டு தன்னுடைய சைனியங்களோடும் தனது நகரத்திற்கு வர, மதிமான் என்னுந் தனது பிதாவானவர் புலிக்கொடியைக் கோட்டையில்நாட்டி அந்நகரமுழுமையும் கமுகமரங்களாலும் தென்னைமரங்களாலும் முத்துக்களாலும் மலர்களாலும் நாற்புறங்களினும் பந்தரிட்டு, சாத்திரவிதிப்படி பிரகாசமுள்ள இரத்தினமகுடமணிந்தார். எ - று.

பகைவர்களை வெற்றிகொண்டோர் அவ்வூரிலுள்ள பசுநிரைகளைக் கவர்தலியல்பென்பதை விளக்கியவாறறிக. நகரமெங்கும் கமுகஞ்சோலைகளுந் தென்னஞ்சோலைகளுநாட்டி முத்துக்களாலும் மலர்களாலும் பந்தரலங்கரித்தாரென்பது கருத்து. (சஅ)

வேதியராசிகூறவேந்தர்கள்வணங்கப்பெற்ற
தாதைகண்களிக்கமாதர்சாமரையிருபால்வீசப்
பேதையராதிமின்னார்பெரும்புகழ்பரிந்துரைக்க
நீதிபன்வருமுலாவினிகழ்ந்தமைமகிழ்ந்துகேண்மோ.

(இ - ள்.) மறையவர்கள் ஆசீர்வதித்துவரவும், அரசர்களனைவரும் பணியத்தக்க பெருமைவாய்ந்த இவரது பிதாவாகிய மதிமானென்பவர் பார்த்து நேத்திரோற்சவ மடையவும், பெண்கள் இருபக்கங்களினும் வெண்சாமரை வீசிவரவும், பேதை முதலாகச் சொல்லப்படும் ஏழ்வகைப்பருவமுடைய மகளிர்களும் அவ்வரசிளங்குமரனுடைய கீர்த்தியை அன்புடன் புகழ்ந்துவரவும், நீதிமுறைமை வழுவாதவராகிய வெட்சியரசர் உலாவருகையில் நடந்தவற்றைக் களித்துக் கேட்பீராக, எ - று.

பேதைமுதலிய ஏழ்பருவங்களாவன:— பேதை - பெதும்பை - மங்கை - மடந்தை - அரிவை - தெரிவை - பேரிளம்பெண் என்பன. இவர்க்கு முறையே வயதெல்லையாவன:— ஐந்துமுத லேழளவும்பேதை - எட்டுமுதற் பதினொன்றளவும் பெதும்பை - பன்னிரண்டுமுதற் பதின்மூன்றளவும் மங்கை - பதினான்குமுதற் பத்தொன்ப தளவும் மடந்தை - இருபதுமுதல் இருபத்தைந் தளவும் அரிவை - இருபத்தாறுமுதல் முப்பத்தொன்றளவுந் தெரிவை - முப்பத்திரண்டுமுதல் நாற்பதளவும் பேரிளம் பெண். (சுகூ)

வேற்கரங்கொளலானந்தம்விசாகனும்பெருமாளென்பார்
பாற்கரன்குலத்துமன்னேபாய்புலிக்கொடிகாணென்பார்
காற்கடுவேகவையக்காமனன் றிறந்தானென்று
நூற்கடனுவலலாலேநூதனமதனனென்பார்.

(இ - ள்.) இவ்வரசிளங்குமரர் கையில் வேலேந்தி யிருப்பதால் நம்மை யடிமையாகவுடைய விசாகப் பெருமாள்தாமென்று சில மகளிர்கள் கூறுவார்கள். அல்ல அல்ல சூரியகுலத்தரசனே இவர், அதற்குதாரணமாகப் பாய்கின்ற புலிக்கொடி யிருப்பதைப் பார்ப்பீராகவென்று சில மகளிர்கள் கூறுவார்கள். அதிவேகமுடைய தென்றற்றேரினனான மன்மதன் சிவபிரான் நெற்றிக்கண்ணாலன்று தகிக்கப்பட்டானென்று சாத்திரக்கடல்கள் கோஷித்தலாலே இவர் நவீன மன்மதனென்று சில மகளிர்கள் கூறுவார்கள். எ - று. (ஞ0)

கரையழிந்துடையுஞ்சங்குங்கழன்றனநமக்குவீணே
புரையிலாவிவன்றோள்புல்லப்புண்ணியமில்லையென்பார்
தரையிலேயுலவுமாறுசனித்தகந்தருவனென்பார்
பரையினூபுரக்கால்வந்தபார்த்திபன்காணுமென்பார்.

(இ - ள்.) நமக்குக் கற்பென்னும் வரம்புங்கெட்டு வஸ்திரமும் வளையலும் வீணே கழன்றுவிட்டன, குற்றமற்ற இவரது புயங்களைத் தழுவத்தக்க புண்ணியமோ இல்லையென்று சில மகளிர்கள் கூறுவார்கள். இவர் நிலவுலகத்திற் சஞ்சரிக்குமா றவதரித்த கந்தருவராகுமென்று சில மகளிர்கள் கூறுவார்கள். அல்ல அல்ல இவர் உமாதேவியின் பாதச்சிலம்பிற்றோன்றிய நவசத்திமார்களின் புத்திரர் மரபிலே யவதரித்த மன்னவரென்று சில மகளிர்கள் கூறுவார்கள். எ - று. (ஞக)

பார்த்திதுபேசியேழுபருவமங்கையர்மயங்கக்
கார்த்திரளென்னக்கையாற்கனகமாரிகள்வழங்கு
சீர்த்திபொன்மேருவொத்துத்திகழரியணைமீதூர்ந்த
மூர்த்திதன்பெருமைபேசமுடியுமோசென்னிமன்னா.

(இ - ள்.) அவ்வுலாவைக்கண்டு ஏழுவகைப் பருவங்களுடைய மகளிர்கள் இவ்வாறுகூறி மயங்கும்படி, மேகக்கூட்டங்களைப் போன்று தனது காத்

தாற் சொர்ணமாரிபொழிந்த புகழையும், பொன்மயமான மேருவரையையொத்து அதியுன்னதமாக விளங்கும் சிங்காதனத்திலேறிய தெய்வீகமுடைய அவ்வரசரின் பெருமையையும், சோழமன்னனே! என்றாற் சொல்லமுடியுமோ.

இவ்வரசர் இத்தகையபெருமையுடையாரென்பதை, "தளர்ந்தவருக்கோர்திருவுருவந்தன்னையுடையார்க்கொருசிங்க - மிளந்தையவர்க்குச்சிலைவேணல்விசையாற்பொற்பூதரமேயாம் - வளர்ந்தசாலிவரம்பினில்வால்வளைகண்முத்தந்தரும்வளங்கூர் - களந்தையாதிநகரரசன்கைக்குந்தம்போற்காணுமே." என்னும் ஈட்டியெழுபதின் திருவிருத்தத்தானுந் தெளிக. (ருஉ)

சினையுடைவாளைவன்மீன்றீண்டமீண்டெழுந்துபாய்ந்த
வினையினால்வேனின்மேகம்விடாமழைசொரியவாங்கே
கனையகார்க்காலமாக்குங்கருங்கடலனையநீரம்
புனைதருகமலையென்னும்பூந்தடத்திருவாரூரில்.

(இ - ள்.) வலிமையமைந்து சூற்கொண்ட வாளைமீன்கள் முதலை நீண்டுதல் காரணமாக மேகமண்டலத்தை யளாவும்படி மேலோங்கிப்பாய்ந்த செய்கையால், வேனிற்காலத்தில் மேகங்களானவை விடாமழைபொழிந்து அப்பதியில் ஒலிக்கும் கார்காலமாகச் செய்யத்தக்கதாகி, கரிய கடல்நீரைப்போன்று விசேடித்த நீர் நிறைந்துள்ளதாகிய கமலை என்னும் திருநாமமுடைய அழகிய திருக்குளமமைந்த திருவாரூர் என்னும் க்ஷேத்திரத்தில். எ - று.

திருவாரூர் இத்தகைய வளப்பமுடையதென்பதை, "நிலமகட்கழகார்தருநீணுதற் - றிலகமொப்பதுசெம்பியர்வாழ்பதி - மலர்மகட்குவண்டாமரைபோன்மலர்ந் - தலகில்சீர்த்திருவாரூர்விளங்குமால்." என்னும் அருண்மொழித்தேவரமுதவாக்கானுந் தெளிக. (ருங)

கடங்கலுழ்வெண்மாதங்கக்காவலன்றிடுக்கணீக்கு
மடங்கலேறனையகுந்தமன்னவர்மன்னால்வந்த
விடங்கனாவன்மீகப்பேர்விமலனாச்சாய்ந்துசாய்ந்து
நடம்பயில்வானைநெஞ்சினுடியவீரவேந்தன்.

(இ - ள்.) மதத்தைப் பொழிகின்ற வெள்ளையானையையுடைய இந்திரனுக்கு நேர்ந்த துயரத்தை நிவாரணித்த, ஆண்சிங்கத்தையொத்த செங்குந்தவேந்தர் வேந்தாகிய முசுகுந்தச் சக்கரவர்த்தியால் நிலவுலகத்திற் கெழுந்தருளிய வீதிவிடங்கப் பெருமானும், வன்மீகநாதனென்னும் திருநாமமுடைய நின்மலரும், ஒவ்வோர் பக்கமாகச் சாய்ந்துசாய்ந்து நடனம் செய்வாருமாகிய தியாகராஜப் பெருமானைச் சதா இதயத்தில் தியானித்துக்கொண் டிருக்கும் வீரத்தன்மைவாய்ந்த ஓரரசர். எ - று.

முசுகுந்தச் சக்கரவர்த்தி இந்திரன் துயர்தீர்த்தனனென்பதை, "காய்ந்தமாற்றலர்தம்வலிகடந்தெனைக்ககன - வேந்தனுக்கினிவீரமுமேதகுபுகழு-மீந்தென

க்குநற்றுணைவனுமாயினையிதனு-லாந்தரங்கமாஞ்சுற்றநீயல்லையோவென்ருன்.'' என்றும், அவர் செங்குந்தமரபினரான வீரவாகு தேவரின் புதல்வியாகிய சித்திரவல்லியைத் திருமணமுடித்தாரென்பதை, இந்நூல் போராடற் சருக்கத்துப் பதினேந்தாஞ் செய்யுளுக்குக்காட்டிய உதாரணச்செய்யுள்களில் "அந்தமில்வன்மைசான்ற'' என்றும், "அத்தகுபொழுதிற்பின்னை.'' என்றும், அவராலேயே வீதிவிடங்கப் பெருமான் திருவாரூர்க்கெழுந்தருளினரென்பதை, "நன்றெனவேவிடைகொண்டுநானிலத்தினிடையிழிந்து - தென்றிசையாரூர் தன்னிற்சிவனுறைபூங்கோயில்புக்கு - மன்றல்கமழ்தண்டுளவோன்வழிபடவீற்றிருந்தோனை - வென்றியரியணைமீதில்விதிமுறையாற்புரிந்தான்.'' என்றும் வரும் கந்தபுராணத் திருவிருத்தங்களாற்றெளிக. (நிச)

தந்தைபுற்றிடங்கொண்டான்முதாதைபுற்றிடங்கொண்டானிம்
மைந்தன்புற்றிடங்கொண்டானெனவழங்குதலன்பின்பாற்றே
வெந்தநீறக்கமாலைவிதிவழாநெறியிற்பூண்டு
சிந்தையுஞ்செயலுமீசன்றிருவடிக்காற்றுநீரான்.

(இ - ள்.) இவரது பிதாவின்பெயரும் புற்றிடங்கொண்டா ரென்பதே. பாட்டனார் பெயரும் புற்றிடங்கொண்டா ரென்பதே. இவர் பெயரும் புற்றிடங்கொண்டாரென்பதே. இவ்வாறு வழங்குதற்குக் காரணமென்னெனின், அம்மரபினர்க்கப் பெருமானிடத்திருந்த அன்பின் தன்மையே. இவர்திருவெண்ணீறு உருத்திராக்கமணிமாலை ஆகமவிதிதவருதமுறைமையிற் றரித்துக்கொண்டு, தன்னுடைய எண்ணமும் அவ்வெண்ணத்தாற் புரியும் செய்கைகளும் அவ்வீதி விடங்கப்பெருமான் திருவடிக்கே யுரித்தாகப் புரிகின்ற தன்மையுடையவர்.

மனமொன்றெண்ணக் கையொன்று செய்யக் கண்ணொன்றுபார்க்கச் செய்கின்றது பூசையாகாதென்பது நூற்றுணிபாகலின், இவ்வரசன் அவ்வாறின்றி மனத்தினெண்ணமும் செய்கையும் ஒத்திருக்கும்படி புரிந்தாரென விளக்குவான், சிந்தையுஞ்செயலுமீசன்றிருவடிக்காற்றுநீரான்.'' என்றனர். இவ்வாறொருப்பட்டுச் செய்யார் பூசை பூசையாகாதென்பதை, "கையொன்றுசெய்யவிழியொன்றுநாடக்கருத்தொன்றெண்ணப் - பொய்யொன்றுவஞ்சகநாவொன்றுபேசப்புலால்கமழு - மெய்யொன்றுசாரச்செவியொன்றுகேட்கவிரும்புமியான் - செய்கின்ற பூசையெவ்வாறுகொள்வாய்வினைதீர்த்தவனே.'' என்னும் வெண்காட்டடிகளின் வியன்வாக்கானுமறிக. (நிடு)

இனிதினிதென்னக்கேட்டானெம்மிறைசென்றுபொன்னிப்
பனிதருதென்னுடுள்ளபான்மையதென்றேகற்றோர்
கனியெனநுகர்வரென்றேகமலைபொன்றந்ததென்றே
புனிதவண்டமிழிற்சான்றபுலமையினிவந்தான்மன்னே.

(இ - ள்.) ... லைவராகிய சிவபிரான் தமது குடும்பசமேதராய் எழுந்தருளி இத்தமிழ் இனிமையுடை... த்து இனிமையுடைத்து என்றுகேட்டருளி

ரென்றோ? அல்லது காவிரி நதியின் நீர்ப்பெருக்கால் குளிர்ச்சியுற்றுள்ள தனது சுயநாடாகிய தென்னாட்டில் வழங்கியுள்ள தன்மையுடைய தென்றோ? அல்லது அறிஞர்களனைவரும் கனியைப்போன்று செவிவாயாற்புசிப்பரென்றோ? அல்லது இவ்வூரிலுள்ள கமலாலயம் என்னும் திருக்குளம் ஆளுடைய நம்பிகளருளிய தமிழ்த்திருப் பதிகத்திற்காகப் பொன்னளித்ததென்றோ? இவர் யாது கருதியோ தூய்மையமைந்து வளப்பமிக்க தமிழ்ப்பாஷையில் விசேடித்த புலமையுடன் மேற்பட்டவராயினர்; எ - று.

மன்-ஓ-அசைகள். சிவபெருமான் தமிழினினிமைக்காகவே தென்னாட்டிற் கெழுந்தருளினரென்பதை, "தமரநீர்ப்புவனமுழுதொருங்கீன்றாடோகாதேவியென்றொருபேர்-தரிக்கவந்ததுவுந்தனிமுதலொருசீசவுந்தரமாறனானதுவும் - குமரவேள்வழுதியுக்கிரனெனப்பேர்கொண்டதுந்தண்டமிழ்மதுரம் - கூட்டுணவெழுந்தவேட்கையாலெனிலிக்கொழிதமிழ்ப்பெருமையாரறிவார் - பமரம்யாழ்மிழற்றநறவுகொப்பளிக்கும்பனிமலர்க்குழலியர்பளிக்குப் - பானிலாமுன்றிற்றூனிலாமுத்தின்பந்தரிற்கண்ணிமையாடா-தமரர்நாடியரோடம்மனையாடவையநுண்ணுசுப்பளவலவென் - றமரருமருளுந்தெளிதமிழ்க்கூடலடலராவலங்கல்வேணியனே" என்னும் குமரகுருபரசுவாமிகள் திருவாக்கானும், "கடுக்கவின்பெறுகண்டனுந்தென்றிசைநோக்கி-யடுக்கவந்துவந்தாடுவொனாடலினிளைப்பு - விடுக்கவாரமென்காறிருமுகத்திடைவீசி - மடுக்கவுந்தமிழ்திருச்செவிமாந்தவுமன்றோ." என்னும் திருவிளையாடற்புராணத் திருவிருத்தத்தானும், திருவாரூர்க்குளம் பொன்றந்ததென்பதை, "கொந்தவிழ்பூங்கொன்றைமுடிக்கூத்தனார் திருவருளால் - வந்தெழுபொன்றிரளெடுத்துவன்முறையாற்கரையேற்ற - வந்தரத்து மலர்மாரிபொழிந்திழிந்ததவனியுள்ளோ - ரிந்தவதிசயமென்னேயார்பெறுவாரெனத்தொழுதார்." என்னும் அருண்மொழித்தேவர் அமுதவாக்கானுந் தெளிக. (௫௬)

புகழுறச்செங்கோலோச்சும்புரவலன்கவிகள்வந்து
திகழவைதன்னைக்கண்டாற்செல்வர்களாகக்காணு
மகனரசங்கமாகியருங்கவிபாடப்பெற்று
மகிழுறவிருந்தானந்தமாண்பறிந்தங்கவேந்தன்.

(இ - ள்.) இவ்வண்ணம் கீர்த்தியமையும்படி செங்கோல்செலுத்தும் புற்றிடங் கொண்டானென்னும் மன்னவர், விளக்கமுற்ற தமது சபையிற் புலவர்கள்வந்து தன்னைக்காண்பார்களாயின், அவர்கள் உடனே ஐஸ்வரியவான்களாகும்படி செய்ய என்னுகின்ற மனமுடையார். தனது இராஜரீகத்திற்குரிய அங்கங்களமைந்துள்ள அருமையான பாடல்கள் புலவர்களாற் பாடப்பெற்று மனக்களிப்புடன் அரசாட்சிபுரிந்திருந்தனர். அங்கதேசத்தரசன் அச்செய்தியையுணர்ந்து. எ - று.

அரசர்களாயுள்ளவர்கள் வித்வஜ்ஜனர்களை யாதரித் துபகரித்து அவர்களாற் பாடல்பெறவேண்டுவ தியல்பென்பதை, "பாடல்பெறுனேபலர்மெச்ச

வாழானே - நாடறியநன்மணங்கணுடானே - சேட - னிருங்கடல்சூழ்வையத் திவன்வாழும்வாழ்க்கை - கவிழ்ந்தென்மலர்ந்தென்னகாண்.'' என்னும் ஔவைப்பிராட்டியார் அமுதவாக்கானுந் தெளிக. (௩எ)

தென்றிருவாரூர்வந்துசேர்ந்துசெங்குந்தமன்னன்
றன்றிருச்சபையைநோக்கச்சார்தலுமனதையந்நாள்
கன்றிடச்செய்ததுன்பங்கலைந்ததுமிக்கோர்நேச
மொன்றிடினலமுண்டாமென்றுரைக்கவும்வேண்டுங்கொல்லோ

(இ - ள்.) அவ்வரசன் அழகிய திருவாரூருக்குவந்து சேர்ந்து செங்குந்தமன்னவராகிய புற்றிடங்கொண்டாருடைய சிறந்த சபையைப் பார்த்துக் கிட்டினவுடனே, அவ்வரசனது மனத்தை அன்றையவரையில்வருந்தச்செய்து கொண்டிருந்த துயரம் நீங்கியது. ஆதலால் பெரியோர்கள் சகவாசம் கிடைக்குமானல் நன்மைகள் விளையுமென்று கூறவும் வேண்டுமோ? எ - று.

பெரியோர்நட்பு நன்மைவிளைவிக்கும் என்பதை, "நவிறொறுநூநயம்போலும்பயிறொறும் - பண்புடையாளர்தொடர்பு." என்னும் திருக்குறளுனாயானும், "கூஉய்க்கொடுப்பதொன்றில்லெனினுஞ்சார்ந்தார்க்குத் - தூஉப்பயின்றோதுன்பந்துடைக்கிற்பார் - வாய்ப்பத்தான்வாடியக்கண்ணும்பெருங்குதிரை - யாப்புள்வேறாகிவிடும்." என்னும் பழமொழி வெண்பாவானுந் தெளிக. (௩அ)

குந்தவேற்படையோன்முன்னங்குறுகினனிருகையேற்றி
வந்தனைதந்தானெங்கண்மன்னனேயடுத்தோர்தம்மை
முந்தைநாடொடங்கிக்காக்குமுதுகுலத்தவனேயானே
நொந்தனன்கலிங்கமன்னனாழில்வெம்படையால்வாட்ட.

(இ - ள்.) அவன் செங்குந்தமென்னும் வேற்படையேந்திய புற்றிடங்கொண்டாரென்னும் அரசருக்கெதிரில்வந்து தனதிரண்டுகரங்களையுஞ் சிரமேற்குவித்து நமஸ்கரித்தவனாய், எங்களுக்கெல்லாம் இறைவரே! பூர்வகாலந்தொட்டு அடுத்தவர்களை யாதரிக்கின்ற பெருமைமிக்க செங்குந்தகுலத்துதித்தவரே! கலிங்கதேசத் தரசன் கொலைத்தன்மை வாய்ந்த கொரேப்படைகளால் என்னை வருத்த நானே வருந்தி யுள்ளேன். எ - று. (௩௯)

காரணமின்றிவெம்போர்கண்டனனரணமாதி
வீரமுங்கவர்ந்தான்மற்றுமீட்டெனக்கருடியென்னப்
பாரநன்மதியாலீரம்படைத்தவனவ்வுரைக்கு
நேர்வையங்கனுக்களித்தானீதிபனிதுசெய்வானல்.

(இ - ள்.) அக்கலிங்கதேசத்தரசன் யாதோர் நிமித்தமில்லாமல் என்னுடன் பெரும்போர்புரிந்து என்னுடைய கோட்டைமுதலிய சகலவலிமையையும் அபகரித்துக்கொண்டான். ஆதலால் அவற்றை அவனிடத்தினின்றும் பிடு

ங்கி எனக்குக் கொடுக்கவேண்டுமென்று விண்ணப்பிக்க, மதியூகத்தாலன்பமைந்த புத்திடங்கொண்டாரென்னும் தோன்றல், அவ்வங்கதேசத்தரசன் விண்ணப்பத்திற்குச் சம்மதப்பட்டு அவனுக் குத்தரவளித்து, நீதிமார்க்கத்திற் றேர்ந்தவராகிய தான் இவ்வாறு புரியலாயினர் எ - று. (௬0)

தளமணிந்தெகுமுன்னந்தனையடைந்தவன்பின்னாக
வளம்பெறுமாரூர்நின்றுமாற்றலன்புரம்போய்வெம்போர்க்
களமிருந்திசையானென்கைகண்டவன்கொடித்தேரானை
யிளம்பரியாட்களாதியேவையுமுடுகியார்த்தான்.

(இ - ள்.) தனது சைனியங்கள் போர்க்கோலங்கொண்டு வெளிப்படுவதன் முன்பாகவே தன்னை அடைக்கலம்புகுந்த அங்கதேசத்தரசனுக்குப் பின்னாக வளப்பம்பொருந்திய திருவாரூரினின்றும் பகைவனாகிய கலிங்கதேசத்தரசனூர்க்குச்சென்று, கொடிய யுத்தகளத்தில் நின்றுகொண்டு சமாதானத்திற்காளனுப்பி அவன் சம்மதியானென்பதை யுணர்ந்து, அவ்வரசனுடைய கொடிகட்டிய தேர் யானை இளமையமைந்த குதிரை பதாதியென்னும் சதுரங்கசைனியங்க ளெவற்றையும் எதிர்த் தாரவாரித்தனர். எ - று,

போர்க்குச் செல்வோர் முதலிற் சமாதானத்திற் கழைத்த லியல்பாகலின், அவ்வாறியற்றினரென்க. (௬க)

கடைக்கனலுடன்கடைக்கால்கலந்ததுமானவம்பு
விடுத்தொருக்ஷணத்திற்சேனைவெள்ளநின்றுற்றதாகக்
கிடத்தினன்பிணக்காடாகக்கிரிப்புயவலியாற்சண்டை
யுடற்றினனுடைந்தானையொன்னலனஞ்சிப்போனான்.

(இ - ள்.) வடவானலமும் பிரசண்டமாருதமும் கலந்ததுபோல ஒருக்ஷணநேரத்திற்குள்ளாக அம்புகளைப்பிரயோகித்து மலைபோலும் தனது புஜபலத்தாற் போர்புரிந்து, அவ்வரசனுடைய சேனாசமுத்திரங்களெல்லாம் எதிர்த்துப் போர்புரியச் சக்தியற்றவைகளாகும்படி பிணக்காடாக வெட்டினர். அப்போது அப்பகைவனுடைய சைனியங்கள் ஒட்டெடுத்தன. அவனும் வெருக்கொண்டோடினான். எ - று.

அஸ்திரசஸ்திரங்க ளென்னும் இருவகையாலும், போர்புரிந்தனரென்க ()

இணங்கிலாக்கலிங்கன்குந்தத்திரிந்திடவாட்டிமீண்டு
வணங்கியநரபதிக்கேமற்றவனங்கநாட்டை
யணங்கறவரசுசெய்யவளித்தெழிலாரூர்வந்தான்
குணம்புகழென்னாற்சொல்லக்கூடுமோகொற்றவேந்தே.

(இ - ள்.) சமாதானத்திற்கு வாராத கலிங்கதேசத்தரசன் தனதுகுந்தப்படையால் ஒட்டெடுக்க மெலிவித்துவந்து தன்னையடுத்துச்சரண்புகுந்த அவ்வரசனுக்கே அவனுடைய அங்கநாட்டைத் துன்பம்நீங்க அரசுபுரியும்படி கொ

டுத்து அழகிய திருவாரூரைச்சேர்ந்தார். ஓ வெற்றியமைந்த மன்னவ! அவ்வேந்தருடைய சற்குணங்களையும் கீர்த்தியையும் என்னாற் சொல்லவேலுமோ? எ-று.

இவ்வேந்தர் இத்தன்மையுடையாரென்பதை, "கற்றிடங்கொண்டவர்கவின்சொற்கொள்ளுமே - யுற்றிடங்கொண்டபேர்க்குவகைநல்குமே - வெற்றிடங்கொண்டமேவலரைவீட்டுமே - புற்றிடங்கொண்டவன்பொலிகைக்குந்தமே." என்னும் ஈட்டியெழுபதின் திருவிருத்தத்தானுந் தெளிக. (கூங)

வேறு.

பிடிகள்வெங்களிறினங்கருங்கொண்டல்கள்பிளிற
விடிகடஞ்சொரிதரன்மழைசொரிதரலெறும்பி
யடிமடங்கியவெரிமரம்படர்ந்திணரடர்ந்த
கொடியசைந்திடன்மின்னெனப்பொலிகொடுங்குன்றூர்.

(இ - ள்.) பெண்யானைகளும் ஆண்யானைகளுமே மேகங்களாகவும், அவை யிரண்டும் கர்ச்சித்தலே இடியோசையாகவும், அவை மதம்பொழிதலே மழைபொழிதலாகவும், அவைகளுடைய கால்களிற் சிக்குண்டு சோதிவிருட்சத்திற்றாவிப் பூங்கொத்துக்கள் நெருங்கியுள்ள கொடிகள் அசைதலே மின் வீசலாகவும் விளங்கும் கொடுங்குன்றம் என்னும் க்ஷேத்திரத்தநிபரும். எ - று.

யானைகளை மேகமென் றுவமித்தமையின், அவைக்குரிய இடி மழை மின் என்னும் இவைகட்கு அந்தயானைகளின் கர்ச்சனை மதசலவொழுக்கு சோதிமரத்திற் படர்ந்து அவைகள் காலிற் சிக்குண்ட கொடி என்னு மிவற்றை யுவமித்தனர். (கூச)

அல்லிருந்தகாரளகமென்மொழியினளமுத
வல்லிநாயகன்குன்றெலாமர்டவோர்மதலை
பல்லிடத்திருந்திடுமுணவருந்தவோர்பால
னல்லியற்பெறத்தந்தவன்றனை நினைஞானி.

(இ - ள்.) இருள் குடிகொண்டது போன்று கருநிறங்கொண்ட கூந்தலும் மிருதுவான வசனங்களையு முடையவராகிய அமுதவல்லியென்னும் பார்வதியாருக்குத் தலைவரும், மலைகள்தோறும் திருவிளையாடல் புரிவதற்காக ஓர் குமாரனையும் பலவிடங்களினு மிருந்து அன்பர்கள் ஆங்காங்கு நிவேதிக்கும் பல நிவேதனங்களையும் திருவமுது கொள்வதற்காக ஓர் குமாரனையும் மேன்மைத்தன்மை யமையும்படி ஈன்றருளியவருமாகிய சிவபெருமானைச் சதா தியானிக்கின்ற ஞானவானும். எ - று. (கூரு)

நிலைபெறுஞ்சிவமிதுவெனுமுணர்விஞனேடுங்
கலையெலாமொருங்குணர்ந்தவனம்புவிகாப்போன்
சிலையருங்கனவேதநூலொழுங்கினிற்றெளிந்தோன்
மலையினோங்கியபுயமுடைவென்றிவேன்மன்னன்.

இ - ள்.) நித்தியமாயுள்ள சிவமெனும் பொருள் இதுவென்றுணர்ந்த அறிவினரும், யாவரும் தேடுதற்குரிய நூல்களனைத்தும் முற்றுமுணர்ந்துள்ளவரும், உலகத்தைப் பரிபாலிப்பவரும், வில்வித்தையை அருமையும் பெருமையுமமைந்த தனுர் வேதத்தின் முறைமைப்படி தெளிந்துள்ளவரும், மலைபோற் பாரித்துள்ள தோள்களுடைய வெற்றிவேலேந்தும் அரசரும். எ - று.

மேற்செய்யுளிற் சிவபிரானைத் தியானிக்கும் சித்தமமைந்தஞானி எனக்கூறி, இச்செய்யுளில் "நிலைபெறுஞ்சிவமிதுவெனுமுணர்வினன்" எனக்கூறியதெற்றுக்கெனின். அச்சிவத்தின்சகுணபாவனையையும் நிர்க்குணபாவனையையுங் கூறுவானென்க. அன்றியுமச்செய்யுளின் பொழிப்புரையில் "பார்வதியாருக்குத்தலைவரும்" என்றதை பார்வதியாருக்குத்தலைவராயெனவும், "ஈன்றருளியவருமாகிய" என்றதை ஈன்றருளியவராகிய யெனவும் வாசித்துக்கொள்க. (சுசு)

பானலங்குதலைக்கிளவிச்சிறுபாலன்
மானவேவருநேயமேசெயத்தகுமதியான்
வானமாதியபூதமுநாதமும்வயங்குந்
தானமோர்ந்தகோளாந்தகனெனுமபிதானன்.

(இ - ள்.) பால்போலும் இனிமையமைந்த மழலைச்சொற்களையுடைய இளங்குழந்தையைப்போன்று எவர்களும் அன்புகூரத்தக்க அறிவுடையவரும், ஆகாயமுதலிய ஐம்பெரும் பூதங்களும் அவற்றிற் கலந்துள்ள நாததத்துவமும் விளங்குகின்ற நிலைமையுணர்ந்த கோளாந்தகனென்னும் பெயருடையவரும். எ-று.

ஐம்பெரும் பூதங்களும் அவற்றுள் விளங்கும் நாதமும் நிலைபெற்றுள்ள சிவமென் றுணர்ந்தாரென்பதை விளக்கியவாறறிக. (சுஎ)

நனையரும்புபூந்தொடையணிதோண்மதிநாதன்
றனையனென்றுசெங்குந்தனற்குடிப்பெயர்தரித்தோ
னினையகோமகன்புயவலிகாணவெ!ன்றிகலி
முனையுணங்கனித்தெக்கணம்போந்தனன்முடிய.

(இ - ள்.) அரும்புகளா யலர்கின்ற மலர்மாலையணிந்த தோள்களையுடைய மதிநாதரென்னும் வேந்தன் புத்திரனுகுமென்று சொல்லும்படி செங்குந்தமென்னும் நற்குடிப்பெயர் தரித்துள்ளாருமாகிய இவ்வரசிளங்குமரருடைய புஜபலபராக்கிரமத்தைப் பார்க்கவேண்டுமென்று பகைத்து, போரில்வல்லவனாகிய உணங்கனென்பவன் அழியும்படி இத்தென்னாட்டிற்குவந்தான். எ - று.

செங்குந்தமரபினராகிய மதிநாதரென்னும் வேந்தர்க்குப் புத்திரராயுதித்தனரென்க. (சுஅ)

மதகரிப்பலமுள்ளவனுனையுமற்போர்
கதுமெனச்செயவலித்தமராற்செயங்கண்டண்

டுதவெனக்குநூற்றெருபொனென்றேற்றகமுகப்பா
ளிதமுமிவ்வணம்புரிபவனிப்புரநேர்ந்தான்.

(இ - ள்.) அவ்வுணங்கனென்பவனே மதமுள்ள யானையின் வலுவுள்ளவன். எவர்களையும் மல்யுத்தத்தை அதிவிரைவிற் செய்யும்படி வலியவழைத்து, அம்மல்யுத்தத்தில் தான் வெற்றியடைந்து, இவ்விடத்தில் எனக்கு நூற்றெரு பொன்கொடு என்று வாங்கிக்கொண்டு மனங்களிப்பான். தினந்தோறும் இவ்வாறு பொருள் தேடுவோன் இக்கொடுங்குன்றத்திற்கு வந்தான். எ - று. ()

துங்கமன்னவனுலவியலாவணந்துன்னிச்
சிங்கவேற்றணையிருந்திகங்காத்தனேமதவ்வ
ரெங்குமில்லெனத்சருக்கினைசெயங்கொள்வாயெனைநீ
பொங்குறுங்கொடுங்குன்றாசில்றெனபுகன்றுன்.

(இ - ள்.) பரிசுத்தராகிய கோளாந்தகரென்னும் அம்மன்னவர் உலாவருகின்ற மேன்மையமைந்த வீதியிற்சேர்ந்து, வளப்பமிக்க கொடுங்குன்றென்னும் நகரதிபனே! சிங்காதனத்தில் வீற்றிருந்து இவ்வுலகத்தைப் பரிபாலித்தாய்,எவ்விடத்தும் பகைவர்களில்லையெனக் கருவித்தாய்,இத்தினத்திலே என்னுடனெதிர்த்து நீ வெற்றிகொள்வாயாக எனக்கூறினன். எ - று. (எ0)

உரைத்தவாசகஞ்செவிபுகத்தாரகையுதிரத்
திரைக்கருப்பெருங்கடல்வடவாமுகஞ்சிறுக
நரைத்தமூரியேற்றேறிமும்மதிற்படநகைத்த
வுருத்திரர்ப்பொரச்சினந்தனன்சட்கனலோங்க.

(இ - ள்.) அவ்வுணங்கன் கூறிய வார்த்தைகள் செவித்துளைகளில் நுழைந்தவளவில், நட்சத்திரங்களுதிரவும் அலைகளோடுகூடிய கருநிறங்கொண்ட கடலின்கணுள்ள வடவானலம் சிறுமையுறவும் கண்களில் நெருப்புப்பொறி பறக்கும்படி வெண்ணிறமுடைய பருத்த இடபத்தின்மீதூர்ந்து திரிபுரங்கள் தீயெழப் புன்முறுவல் செய்தருளிய சிவபிரானையொக்கக் கோபித்தனர். எ-று

மற்பொரக்கருத்துடையையேல்வாவெனவடநா
டுற்பவித்தவன்மண்டியிட்டிடம்வலத்துறுத்து
நிற்பவோர்ந்துமுன்னிலகுபாய்ந்தங்கரநீட்டி
யற்பனைக்கரமபற்றிக்காலெனச்சுழன்றூர்த்தான்

(இ - ள்.) வடநாட்டுதித்த உணங்கனென்பவன் என்னேடு மற்போர்புரியக்கருத்துண்டாயின் நீ வரக்கடவாயென்று மண்டிபோட்டு இடமாகவும் வலமாகவும் கர்ச்சித்துக்கொண்டிருக்க, கோளாந்தகர் இதனை யறிந்து உடனே லகுபாய்ந்து தனது அழகிய கைகளைநீட்டி மிகவும் ஈனனுகிய அவ்வுணங்கனைக் கரத்தாற்பிடித்துக் காற்றைப்போலச்சுழற்றி ஆர்ப்பரித்தனர். எ - று,

லகுபாய்தல் மெல்லவருவதைப்போற் காட்டித் திடீரென்றுபாய்தல். ()

விட்டெறிந்தனன்மூன்றுயோசனைவழிவிண்போய்ப்
பொட்டெனப்புவிவீழ்ந்தெழுந்தரசனைப்பொரவே
வட்டமிட்டவன்றுவுகாலிரண்டையும்வாரி
நட்டமிட்டுசெற்றுளெனவறைந்தவணகைத்தான்.

(இ - ள்.) இவ்வாறு சுழற்றியபிறகு ஆகாயத்தில் வீசியெறிந்தார். அப்போது அவன் ஆகாயமார்க்கமாகவே மூன்றுயோசனைதூரம் போய்த் திடீரென்று பூமியில் விழுந்து மீண்டும் எழுந்து கோளாந்தகரை யெதிர்க்கவே, அது கண்ட அவர் வலசாரி இடசாரியாகவந்து அவ்வுணங்கனுடைய பாய்கின்ற கால்களிரண்டையும் சேர்ந்துவாரிக் கூத்தாடி நெற்பயிர்களின் தாள்களைப்போலப் பூமியிலடித்து அவ்விடத்தில் அட்டகாசஞ்செய்தனர். எ - று. (எரு)

பூசலிட்டிகலுணங்கனைவென்றவற்பொருத
வாசில்வெஞ்சினமேலெழமேலெழவட்ட
காசஞ்செய்தனனேவரும்வாழ்த்தினர்களிப்பா
லீசனேசராயிருப்பவர்பெருமையாரிசைப்பார்.

(இ - ள்) பேரொலிசெய்து பகைத்த உணங்கனைப் போர்புரிந்து வெற்றிகொண்டு, அவனோடெதிர்த்த குற்றமற்ற கடுங்கோபம் மேன்மேலோங்கலால் அட்டகாசஞ்செய்தனர். அங்குள்ளாரனைவரும் மகிழ்ச்சியாற் கோளாந்தகரை வாழ்த்தினார்கள் சிவபிரானுக் கன்புடையராயுள்ள அம்மன்னவர் சிறப்பை யாவர்தான் கூறுவார்கள். எ - று.

கோபமென்பது முக்குற்றத்தொன்றாயிருக்க, அத்தகையகோபத்தை "ஆசில்வெஞ்சினம்." என்றதென்னெனின், கிரோதுவாகக் கோபித்தலும் தம்மினுந்தாழ்ந்தோரைச் சினந்தழித்தலும் கொடுமையேயன்றி வலிய எதிர்த்த பகைவனுடன் சினந்து போர்புரிதல் அரசர்க்குரிய நீதியாகலின், அத்தன்மையைவிளக்குவான், "ஆசில்வெஞ்சினம்" என்றனரென்க. அட்டகாசஞ்செய்தல் பெருநகைகொள்ளல். இதனையே கோபச்சிரிப்பென்றும் அவமதிப்புச் சிரிப்பென்றும் கூறுவர். கோளாந்தகரென்னும் வேந்தர் இத்தன்மையரென்பதை, "மூளாவடவைச்சிகரகிரிமுடிகம்பிக்குமாறுதஞ்செசந் தாளான்மடங்கவொருகூற்றந்தனிமும்மடிக்காய்சிறுஅரல் - வேளாருயிரைப்பேர்க்கவனற்கண்ணும்விளங்குமுருத்திரனோர் - கோளாந்தகனெண்டோளான்கைக்குந்தப் வாகைக்குந்தமே." என்னும் ஈட்டியெழுபதின் திருவிருத்தத்தானுந்தெளிக. சிவபிரானடியாரை வெல்ல ஒருவராலும் முடியாதென்பதை விளக்கியவாறறிக. (எசு)

அன்றலர்ந்தபூமரந்தரக்கனிதரவரம்பை
குன்றடர்ந்தவீத்தேன்றரப்பாற்றரக்கோக்க
ளொன்றுமன்பினித்தகந்தரவடியவருணர்வாய்
மன்றுளாடிதன்னடிதருஞ்சிதம்பரமாதோ.

(இ - ள்.) விருட்சங்களனைத்தும் அன்றலர்ந்த மலர்களைக்கொடுக்கவும், வாழைகள் கனிகளைக்கொடுக்கவும், மலைகளில் நெருங்கியுள்ள தேனீக்கள் தேனைக்கொடுக்கவும், பசுக்கள் பாலைக்கொடுக்கவும், மெய்யடியார்கள் ஒருப்பட்ட அன்பினாற்கனிந்து தங்கள்மனத்தைக்கொடுக்கவும், அவ்வடியார்களின் அறிவுமயமாய்விளங்கும் பொன்னம்பலத்தில் ஆனந்தத்தாண்டவம்புரியும் நடராஜப்பெருமான் தமது குஞ்சிதபாதத்தைக்கொடுத்தருளவும் விளக்கமுறுவது சிதம்பரம் என்னும் க்ஷேத்திரம். எ - று.

மாது-ஓ-அசைகள். மனோலயமே சிவபிரான்றிருவடிகளைக் காண்பதற்குரிய சாதனமாகலின், "ஒன்றுமன்பினித்தகந்தரவடியவருணர்வாய் - மன்றுளாடிதன்பதந்தருஞ்சிதம்பரம்" என்றார். இதனை, "தந்ததுன்றன்னைக்கொண்டதென்றன்னைச்சங்கராவார்கொலோசதுர்த்த - ரந்தமொன்றில்லாவானந்தம்பெற்றேன்யாதுநீபெற்றதொன்றென்பாற் - சிந்தையேகோயில்கொண்டவெம்பெருமான்றிருப்பெருந்துறையுறைசிவனே - யெந்தையேயீசாவுடலிடங்கொண்டாயானிதற்கிலனோர்கைம்மாறே." என்னும் மணிவாசகப்பிரான் மலர்வாக்கானும், "கண்டவைம்புலக்காட்சிபோய்ச்சாட்சியாற்கலந்தவாதனையாவும் - விண்டுகூடமற்றலையிலாக்கடலெனவிளங்கினையெனினெஞ்சே- யுண்டுகொன்னமக்குறுதுயராங்குவீடுளங்கையிற்கனியேயாம் - பண்டைமேவியபயமெலாமறுங்குருபதத்தினும்புகலாமே." என்னும் சாந்தலிங்கசுவாமிகள் திருவாக்கானுந்தெளிக. (எரு)

காயமாயமென்றன்பர்கள்காணுறத்தகரா
காயநாட்டருணடஞ்செயுந்தில்லையங்கான்
மேயமாநகர்த்தனியரசாள்பவன்விடங்க
னாயமன்னவனொருமகனாயவதரித்தோன்.

(இ - ள்.) சரீரம் மாயாசம்பந்தமுடையதென்று அன்பர்கள் காணும்படி தகராகாயம் என்னும் நாட்டின்கண் அருணடனம்புரியும் தில்லைவனத்திற்பொருந்திய சிறந்தநகரத்தைப் பொதுவரசாள்கின்ற விடங்கனென்னும் பெயருடைய மன்னவருக்கு ஒரேபுத்திரராய் அவதரித்தவர். எ - று.

தகராகாயமென்பது சிதாகாயம் - சிதம்பரம் எனினும் இப்பொருளே பயக்கும் என்றறிக. (எசு)

வள்ளியோரெனப்பரைச்சிலம்புதித்திதுவரைக்குந்
தெள்ளுசீர்ப்பெருங்குலத்தொருதிலகமாவுதித்தோன்
புள்ளிமஞ்ஞைவேறுணையெனும்புந்தியான்புலியூர்ப்
பள்ளிகொண்டவனெனும்பெயரேந்தியபண்பன்.

(இ - ள்.) எவரும் வள்ளற்றன்மை யுடையோரென்று கூற பார்வதியார் பாசச்சிலம்பில் அவதரித்து இன்றையவரையில் தெளிவமைந்துள்ள சிறப்பு

டைய மேலான குலத்திலே ஓர் திலகம்போன்றவதரித்தவர். புள்ளிகளையுடைய சிறகுகளைப்படைத்த மயிலும் வேலும் நமக்குத் துணையாயுள்ளவையென்று தியானிக்கும் அறிவுடையவர். புலியூர்ப் பள்ளிகொண்டானென்னும் நாமம்புனைந்த சற்குணசீலர். எ - று.

விந்து நாதங்களென்னும் இருதத்துவங்களின் சொரூபமாயுள்ள மயிலும் வேலும் துணையாகத் தியானிப்பதைக் கடைப்பிடியாகக் கொண்டனரென்க.

திருவனந்தலாதியசெயல்புரிவதுதிறம்பான்
பொருவிலந்தணர்களிப்புறவாழ்பவன்புண்ய
கருமமல்லதுசெய்கலாமேதகுகருத்தார்
நிருபனித்திரைகாணவென்றெழுந்தனனிமலன்.

(இ - ள்.) நடராஜாவுக்குத் திருவனந்தல் காலைசந்திமுதலிய கட்டளைகளாகிய தொண்டுபுரிவதில் மாறுபடாதவரும் ஒப்பற்ற தில்லைமூவாயிரவர் மனங்களிகூர வாழ்கின்றவருமாகிய தருமகாரியங்களையல்லது வேறொருசெய்கையும்புரியாத மேன்மையுற்ற கருத்துள்ள புலியூர்ப்பள்ளிகொண்டாரென்னும் அவ்வேந்தனது நித்திரையில், நிர்மலராகிய நடராஜமூர்த்தி அவர் தரிசிக்கும்படி எழுந்தருளினர். எ - று.

திருவனந்தல் என்பது அர்த்த ஜாம பூஜைக்குப்பின் பள்ளியறைக்கெழுந்தருளுவித்தல். காலைசந்தி - என்பது பிராதக்காலத்திற் பள்ளியறையினின்று சபைக் கெழுந்தருளுவித்தல். இவ்விரண்டனுள் ஏனைய திருப்பணிகள் யாவும் அடங்குமாறறிக. (எஅ)

தில்லையந்தணர்வடிவொடும்வந்துநந்தேசத்
தெல்லைசித்திரத்தாமனென்னுந்திரணிகலித்
தொல்லைவெம்படைதானையுங்கொண்டெயிற்சூழ்ந்தான்
வல்லையேகுதிமன்னவென்றறைந்தனன்மறைந்தான்.

(இ - ள்.) அவ்வாறெழுந்தருளிய நடராஜமூர்த்தி தில்லைமூவாயிரவருள் ஒருவர்போன்று திருவுருக்கொண்டுவந்து, ஓ மன்னனே! நம்முடைய நகரத்தினெல்லையிலே ஆர்திரதேயத்தானாகிய சித்திரத்தாமன் என்பவன் பகைகொண்டு புராதனமான படைகளையும் சைனியங்களையும் சேகரித்தவனாய் நகரத்தின் மதிலைச் சுற்றிக்கொண்டனன். ஆதலால்-அதிவிரைவிற் செல்லக்கடவாயென்று திருவாய்மலர்ந்து கரந்தருளினர். (எகூ)

விழித்துமன்னவனரனருளுடைகம்வியந்து
தழுத்தழுத்தகமுடைந்துமெய்விதிர்த்துக்கண்டண்ணீர்
முழுத்ததேகியாய்த்தெளிந்தறிவில்லனைமுன்னி
யெழத்தகுங்கொலோவெம்பிரானெனத்தொழுதேத்தி.

(இ - ள்.) உடனே துயிலுணர்ந்த புலியூர்ப்பள்ளிகொண்டாரென்னும் வேந்தர் சிவபிரான் திருவருட்கூத்தை அதிசயித்து, நாத் தழுதழுப்படைய மனமுருகிச் சரீரம் நடுக்குற்றுக் கண்களில்சொரியும் ஆனந்தபாஷ்பங்களால் நனைந்த சரீரமுடையராய்த் தெளிவடைந்து அறிவற்றநாயேனை ஓர்பொருளாகத் திருவுள்ளங்கொண்டு எம்பெருமானே! தேவரீர் எழுந்தருளத்தகுமோ? எனப்பணிந்து துதித்து. எ - று.

தழுதழுத்து என்பது எதுகைக்கிணங்கத் தழூத்தழுத்தெனநின்றது. மெய்யன்புடையார்க்கு இத்தகைய குணங்களேயுமென்பதை, "மெய்தானரும்பி விதிர்விதிர்த்துன்விரையார்கழற்கென் - கைதான்றலைவைத்துக்கண்ணீர்ததும்பிவெதும்பியுள்ளம் - பொய்தான்றவிர்ந்துன்னைப்போற்றிசயசயபோற்றியென்னுங்-கைதானெகிழவிடேனுடையாயெனைக்கண்டுகொள்ளே." என்னும் மணிவாசகப்பிரான் மலர்வாக்கானுந்தெளிக. (அ0)

தளங்கண்முன்னெழூந்தணிபணியாச்செலச்சபையில்
விளங்குமீசனை நினைத்தமர்பொரவெட்சிவேய்ந்து
துளங்குகுந்தவேற்படைமுதற்படைபல துலங்க
விளம்பரிப்பிணிகொடிஞ்சியந்தேர்மிசையிவர்ந்தான்.

(இ - ள்.) தனதுசைனியங்கள் முன்னே வெளிக்கொண்டு வரிசைவசையாகட்போக, சிற்சபையில் வீற்றிருக்கும் நடராஜப்பெருமானைத் தியானித்துக்கொண்டு யுத்தத்தில் எதிர்க்க வெட்சிமாலைதரித்து, விளக்கமுற்ற குந்தமென்னும் வேற்படைமுதல் பலவிதப்படைகளும் பிரகாசிக்கும்படி, இளம்பருவமுடைய குதிரைகள்பூட்டி மொட்டோடுகூடி அழகுடைய இரதத்தின்மீதேறினர். எ - று. (அக)

ஒருகணத்தொருகாவதக்கவனமாத்தேரில்
வருகலிப்பறிந்தமர்செயவெனவருமாறு
னருகிருந்ததன்றூனையைத்தூண்டினனடர்த்தா
ரிருபடைச்சமர்விளைத்தனர்களைத்தனரன்றே.

(இ - ள் ) ஓர் க்ஷணநேரத்தில் ஓர்காதம் செல்லத்தக்க வேகமுடைய குதிரைபூட்டிய இரதத்திலேறிவருகின்ற ஓசையையுணர்ந்து, போர்புரிவதற்காக வந்திருந்த பகைவனாகிய ஆந்திரன் தன்பக்கத்திருந்த தனதுசைனியங்களை ஏவினான். உடனே எதிர்த்தவர்களாய் இருவகைச்சைனியங்களும் போர்புரிந்து இளைத்துக் களைத்தார்கள். எ - று.

இளைத்துக் களைத்தலாவது - சோர்வுற்று மூர்ச்சையாதல் - அன்று - ஏ - அசைகள். (அஉ)

கைதவம்புரிகருதலன்களங்கண்டுவெருவ
மெய்தவப்புலியூராசுணர்ந்துதன்வில்லி

லெப்தவெங்கணையொன்றிரண்டனந்தமாவெய்தி
யுய்தலின்றெனக்கண்விழித்துன்னிடச்செய்த.

(இ - ள்.) வஞ்சகம்புரிந்த பகைவனுகிய ஆந்திரன் அப்போது யுந்தகள த்தைப்பார்த்து அச்சமுறுதலும், உண்மைத்தவமுடையவராகிய புலியூர்ப்பள்ளி கொண்டாரென்னும் மன்னவர் இச்செய்தியையறிந்து, தனதுவில்லிற் பிரயோ கித்த கொடிய அம்புகள் ஒன்றிரண்டே அனந்தகோடிகளாய் விரிந்துபாய்ந்து, நாம் இனிபிழைக்கும் வகையில்லையென்று ஆந்திரன் தன்கண்களையிமைக்காது பார்த்துப் பிரமித்து யோசிக்கும்படி செய்தன. எ - று. (அரு)

கட்டுவித்தனகையொடுமெய்யெலாங்கதித்து
முட்டுவித்தனதுளைவழிமூரிசெய்யருவி
யட்டுவித்தனலாற்றெறுத்துன்பொடுமூர்ச்சை
யெட்டுவித்தனவிரிஞனையுயர்நிலையிருக்க.

(இ - ள்.) அவ்வம்புகளே யொலித்து அப்பகைவனுடைய கைகளையும் சரீரத்தையும் ஒன்றாகக்கட்டுவித்தன. சரீரத்துள்ள துவாரங்கடோறும் உதிர மென்னும் அருவியொழுகும்படிச் செய்வித்தன. சகிக்கவொலாத உபத்திரவங்க ளையும் மூர்ச்சையையும் சேர்ப்பித்தன. பகைவனுகிய ஆந்திரனைக் கடைசியாக உயர்வுற்ற வீரசொர்க்கத்தி லிருக்கும்படி கொண்டுபோய் விட்டன. எ-று. ()

கூளியாடச்செங்குருதிகளோடவெங்களத்தி
லாளியென்னநின்றுன்செயச்சுரிவளையார்த்தான்
மீளிவெம்புலியூரகத்தேவரும்வியப்ப
வாளுகின்றவன்றிறஞ்சொலயார்தரமம்மா.

(இ - ள்.) பேய்கள்கூத்தாடவும் உதிரப்பிரவாகம் ஓடவும் பெரியபோ ர்க்களந்தில் ஆளியைப்போன்றிருந்த அம்மன்னவர் உடனே ஜெயசங்கமூதி னூர். இவ்வித வெற்றியுடையாராய்ச் சிறந்தபுலியூரென்னும் நகரத்தாரனை வரும் அதிசயிக்கும்படி அரசாண்டிருக்கும் அவர்வல்லபத்தைப்புகல யார்தரம்?

இம்மன்னவர் இத்தகைய வல்லபமுடையாரென்பதை, "புண்டரீகமேருவ ளையேதளவமேபூமாவே - பிண்டியேபெறுஞ்சித்தசன்றன்குணம்பிழையா வேன் - கண்டவீரகண்டன்புலியூர்த்தனிகாத்தேசீர் - கொண்டபள்ளிகொண் டான்கரதலத்திடைக்கொளுங்குந்தம்." என்னும் ஈட்டியெழுபதின் திருவிருத் தத்தானுந்தெளிக. (அகு)

வேறு.

போதற்சாயையெனச்சிகிபின்போகாநிற்பவரிநயனஞ்
சீதக்குவளையெனவளிகள்செல்லாநிற்பக்கோகிலமெய்

சூதத்தளிரென்றின்னுரையேசொல்லாநிற்பக்கமலமலர்ப்
பாதத்தாயநடமாடும்பைங்காக்கடம்பைப்பதியாள்வோன்.

(இ - ள்.) பெண்கள் கூட்டங்கள் போதலைத் தங்கள் சாயலென்றெண்ணி மயில்கள் பின்னே தொடரவும், செவ்வரிபடர்ந்த அவர்கள்கண்களைக் குளிர்ச்சியுற்ற நீலோற்பலமலரென்று கருதி வண்டுகள் பின்செல்லவும், அவர்கள் மேனியின் நிறத்தை மாந்தளிரென்று நினைத்துக் குயிற்கூட்டங்கள் இனிமையான வசனங்களைச் சொல்லிக்கொண்டிருக்கவும், தாமரைமலரையொத்த பாதங்களையுடைய அம்மகளிர்கள் நாட்டியஞ்செய்கின்ற பசியசோலைசூழ்ந்த கடம்பூர் என்னும் நகரத்தை யரசாள்பவர். எ - று.

நந்தாவிசையாழதுபயிலுநன்னாரதனுன்முன்னேம்புஞ்
செந்திக்கொடுத்தவொருதகர்மாத்திரமடங்கக்கைப்பற்றிக்
கந்தாமுருகாவீதூர்ந்துகாவாயுலகமெனக்கொடுத்த
சிந்தாவென்றிவீரர்குலச்செல்வயாகத்திகழ்கின்றோன்.

(இ - ள்.) குறைவுபடாத புகழுற்ற மகரயாழ்வாசிக்கும் சிறப்பமைந்த நாரதமுனிவரால் பூர்வகாலத்தியற்றப்பட்ட மேன்மையான யாகத்திற்றோன்றிய ஒப்பற்ற ஆட்டுக்கடாவின் விசேடித்த தைரியம் அழியும்படி கையினாற்பிடித்துக்கொண்டுவந்து, கந்தசுவாமியே! முருகக்கடவுளே! இதனை வாகனமாகக்கொண்டு உலகத்தைக் காத்தருள்வீராக என்று விண்ணப்பித்துத் தந்த அழியாத வெற்றியுடைய வீரவாகுதேவரின் குலத்திற்கு ஓர்நிதியம்போல் விளங்குகின்றவர். எ - று,

தருமக்கதம்பனெனுமரசன்றனயனெங்குமொருபடித்தாம்
பரிபூரணனேயமுதகடோற்பவனேசோதிமின்னமை
யொருபங்காளாவெனையாள்வாயென்றேயுள்ளநனியுருகு
நிருபன்றன்னதுயிர்போலவுலகங்காணுநினைவுடையான்.

(இ - ள்.) தருமநெறிதவறுத கதம்பனென்னும் வேந்தனீன்ற புத்திரர். எவ்விடத்தும் ஒரேதன்மையாய் நிறைந்துள்ள பரிபூரணசொரூபரே! அமுதகடத்திலுதித்தவரோ! பிரகாசமுள்ள மின்னன்மையாரென்னும் உமாதேவியாரை ஓர் பாகத்திலுடையவரோ! அடியேனை யாட்கொண்டருளவேண்டும் என்று மனமிகவுருகுகின்ற மன்னவர். தனதின்னுயிர்போல உலகத்துள்ள மன்னுயிர்களைப் பார்க்கும் சிந்தையுடையவர். எ - று. (அஅ)

சாலவேதப்பொருளுணர்வாற்றண்டாதோமம்புரிவிப்போன்
காலமாரிபெயலொழியாக்கதியால்வளமேமிகுநகரோன்
சீலமுடையான்திருவுடையான்சிங்கவேற்றின்முன்னெறும்பி
போலப்பகைஞருள்ளுடையப்பொங்கும்பிணவலெனுநாமன்.

(இ - ள்.) மேன்மைமிக்க வேதப்பொருளைத்தெளிந்த அறிவால், தடைபடாது யாகாதிகிர்த்தியங்களைச் செய்விப்பவர். காலத்திற்குத்தக்க மழைபொழிதல் நீங்காத்தன்மையால் வளப்பம் மிகுந்த நகரமுடையவர். தூய்மையுடையவர். செல்வமுடையவர். ஆண்சிங்கத்தின்முன் யானையைப்போன்று தனக்கு முன்பாகத் தனதுபகைவர்கள் மனம் நையும்படி மேன்மைபெற்ற பிணவர் என்னும் பெயருடையவர். எ - று.

யாகாதிகிர்த்தியங்களால் அவிப்பாகம்பெற்ற இந்திரன் மேகங்கட்குக் கட்டளையிட்டு மழை பெய்விப்ப னென்பது நூற்றுணிபாகலின், "தண்டாதோமம்புரிவிப்போன்." எனவும், "காலமாரிபெயலொழியாக்கதியால்வளமேமிகுநகரோன்." எனவும் கூறினர். இதனை, மல்குகவேதவேள்விவழங்குகசுரந்துவானம் - பல்குகவளங்களெங்கும்பரவுகவறங்களின்ப - நல்குகவுயிர்கட்கெல்லாநான்மறைச்சைவமோங்கிப் - புல்குகவுலகமெல்லாம்புரவலன்செங்கோல்வாழ்க" என்னும் திருவிளையாடற் புராணத் திருவிருத்தத்தானுந் தெளிக. மழைபெய்யத்தக்க காலங்களிற் பெய்யாமையும் விசேடமழைபெய்தலும் அறவேமழை யில்லாமையும் ஆகிய இத்தகைய விபரீதங்களின்றிப் பெய்துவந்தமையின் வளப்பங்கள் குறையாதிருந்தன வென்பார், "காலமாரிபெயலொழியாக்கதியால்வளமேமிகுநகரோன்." என்றார். இவ்விதமழைக்குத்தான் அகாலவிருஷ்டி-அதிவிருஷ்டி-அநாவிருஷ்டி எனவடநூலார் கூறுவர். யாகாதிகிர்த்தியங்களியற்றினும் மனத்தூய்மையும் ஐஸ்வரியமும் பராக்கிரமமும் வேண்டுமென்பார், "சீலமுடையான்றிருவுடையான்சிங்கவேற்றின்முன்னெறும்பி- போலப்பகைஞருள்ளுடையப்பொங்கும்பிணவனெனுநாமன்." என்றனர். எனவே வேதப்பொருளுணர்ச்சியும் யாகாதிகிர்த்திய விருப்பும் மனத்தூய்மையும் ஐஸ்வரியமும் பராக்கிரமமும் உடைமையே மன்னவர்க் கியல்பென்பதை விளக்கியவாறும். (அகூ)

ஒருநாள்கானவளங்காண வுன்னித்தாவும்பரியேறிக்
கரமோர்துந்நப்படைவில்லுங்கரணங்கொண்டுபுறம்போந்து
விரைவிற்றாண்டமனம்போலும்வேகங்கொண்டுகந்தருவ
மருவார்தாருவடர்கானம்வந்ததனந்தங்காவதமே.

(இ - ள்.) ஓர்தினம் மலர்ச்சோலையின் வளப்பங்களைப்பார்க்கச் சிந்தித்து தாவிச்செல்லும் குதிரைமீதிலேறிக்கொண்டு, தனதோர்கரத்தில் வேற்படையும் வில்லும் மற்றும்வேண்டிய உபகரணங்களையுந்தாங்கி வெளிப்பட்டு அக்குதிரையைத் துரிதமாய்ச்செலுத்த, அனந்தங்காத தூரத்திற் கப்புறத்துள்ள மணங்கமழும் விருட்சங்களடர்ந்த அச்சோலைக்குவந்தது. எ - று. (கூ0)

தென்றல்வீசமலர்விண்டுதேனுநன்னீரவைசிந்தச்
சென்றவளியான்மகரந்தஞ்சிதறப்பிரசம்பண்பாட
வன்றுவந்தவிளவேனிலரியவசந்தமிகநாறத்
தூன்றும்புந்திகளிதூங்கச்சோலையாகன்றனியுலவும்,

(இ - ள்.) அப்போது தென்றற்காற்றுனது வீசுதலால் அச்சோலையி லுள்ள மலர்கள் விகசித்துத் தேனுகிய மதுரமமைந்த நீரை அம்மலர்கள்தெளி க்கவும், அம்மலர்களில்நிரம்பிய வண்டுகளால் மகரந்தப்பொடிகள்சிதறவும் அவ் வண்டுகளெல்லாம் ரீங்காரம்பாடவும், புதிதாகிய அவ்விளவேனிற்பருவத்தில் வீசிய அத்தென்றலானது மேற்பட்ட நறுமணங்கமழவும், தனக்குப்பொருந்திய மனங் களிகூரவும், அப்பூஞ்சோலையினிடத்து பிணவர் என்னும் வேந்தர் தனியாக உலாவுவார். எ - று.

இளவேனிற் காலத்திற் பொய்கையுடைத்தாய் மலர்களலர்ந்து நறுமணங் கமழ்ந்துள்ள சோலையில் மாலைக்காலத்தின் நிலவிலே தென்றற்காற்றுவீச வண் டுகள் ரீங்காரஞ்செய்தலை நோக்கின் எத்தகையோர்க்கும் சித்த மகிழ்கூருமாக லின், "துன்றும்புர்திகளிதூங்க." என்ருர். இதனை, "மாசில்வீணையுமாலைம தியமும் - வீசுதென்றலும்வீங்கிளவேனிலு - மூசுவண்டறைபொய்கையும்போ ன்றதே - யீசனெந்தையிணையடிநீழலே." என்னும் ஆளுடையவரசுகளின் அ ருள்வாக்கானுமறிக, தென்றல் வீசுதலாலேயே மாலைக்காலத்துமலரும் மலர்கள் விகசித்தலாலும், அம்மலர்களிற் படிந்ததனுலேயே தென்றல் நறுமணங்கமழ்த லானும், "தென்றல்வீசமலர்விண்டு." என்றும், "அரியவசந்தமிகநாற." என் றும் கூறினர். (கூக)

ஆங்குக்குன்றத்துறுபுளிஞுவரசன்றளமோடொருமுயலை
யோங்குந்தண்டங்கதைவாள்கொண்டோடித்தொடரவதுவெருவித்
தேங்குங்கருணுநிதிபிணவன்றிருமுன்வந்துவீழ்ந்திடலுந்
தீங்கிற்குரியாரதுகேட்பச்சினமீக்கொண்டுபுகல்கின்றுன்.

(இ - ள்.) அங்குள்ள மலையிலிருக்கும் வேடராஜன் தன்னுடைய சைனி யங்களுடன் பெரிய தண்டாயுதம் கதாயுதம் வாளாயுதம் என்னும் ஆயுதங்களை யெடுத்துக்கொண்டு ஒருமுயலைப்பிடித்துக் கொல்லும்படி ஓடிப் பின்தொடர்ந் துவர, அஃமுயல்பயங்கொண்டு மேன்மையமைந்த தயாநிதியாகிய பிணவரென் னும் இவ்வேந்தர்க்கு முன்பாகவந்து விழுந்தவுடனே, கொலைத்தன்மைக்குரிய வர்களாகிய அவ்வேடர்கள் முயலைவிடும்படி பிரார்த்திக்க, அப்போது அவ்வர சர் கோபம் மிகுத்துக் கூறுகின்றுர். எ - று. (கூஉ)

என்பாலபயமெனவீழ்ந்தசசநான்கொடுக்கவிசைவதிலை
வன்பாவியநெஞ்சுடைமறவீர்சென்மினென்னமற்றவரு
முன்பாற்றீயமொழியாடிமொய்த்தோர்புரவிமீதிருக்கு
மன்பாரென்னச்சில்படைகள்வாரிவாரிச்சொரிகின்றுர்.

(இ - ள்.) எம்மிடத்தில் அடைக்கலமாகப் புகுந்த முயலை நாம் கொடுக் கச் சம்மதியோம். கொடுமைபரவியுள்ள மனமுடையவேடர்களே! நீங்கள் செ ல்லக்கடவீர்கள் என்றுரைக்க; அவ்வேடர்களனைவரும் அவ்வேந்தருக்கெதிரிற் கொடூரவார்த்தைகள் கூறி ஒருங்குசேர்ந்து, ஓர் குதிரையின்மீதூர்ந்திருக்கும்

அரசனே பார்ப்பாயாகவென்று சில ஆயுதங்களை எடுத்தெடுத்துப் பிரயோகிக்கிருர்கள். எ - று. (கங)

எண்ணில்வேடர்வின்ஞணியேற்றிக்கணைகளெறிந்திடமன்
கண்ணிற்கண்டாஞெருசிங்கங்கைம்மாத்திரளினுட்புக்குப்
புண்ணீரோடமத்தகமேற்புடைக்குமாறுபலபாணம்
விண்ணைமூடும்பந்தரினெர்விட்டான்சலியாதொருகடிகை.

(இ - ள்.) மீண்டும் அளவிறந்த வேடர்கள் ஒருங்குகூடி வில்லில் குணத்தொனிகாட்டி அம்புகளைப் பிரயோகிக்க, பிணவர் என்னும் மன்னவர் அதைத்தனது கண்களாற் பார்த்து, ஓர் சிங்கமானது யானைகளின் கூட்டத்திற் புகுந்து உதிரம் பிரவாகிக்கும்படி அவற்றின் மத்தகத்தின்மீது அடிப்பதுபோல, ஓர் நாழிகையளவும் பல அம்புகளை ஆகாயத்தை மறைக்கப் பந்தரிட்டதுபோலப் பிரயோகித்தனர். எ - று. (கச)

முற்றியூகங்கொடுமோதுமுருடர்தம்மைநேமியினெர்
சுற்றிக்குந்தங்கையேந்திச்சோரிகாலப்புலைவாயில்
பற்றியனந்தந்தலையறுத்தான்பாறுகவந்தம்பேய்கூளி
வெற்றிகூறிநிணமாரமென்றுதின்றுவிளையாட.

(இ - ள்.) பகைமுற்றிப் படைவகுத்துக்கொண்டு எதிர்க்கின்ற கொரேர்களாகிய அவ்வேடர்களைச் சக்கரத்தைப்போன்று சுழற்றிக் கையில் வேற்படையைத்தாங்கிப் புலால்புசிக்கும் வாயினின்றும் உதிரமொழுகும்படி அனந்தந்தலைகளை யறுத்துத்தள்ளினுர். அப்போது பருந்துகள் உடற்குறைகள் பேய்கள் பெருங்கழுகுகள் என்னும் இவைகள் அவ்வேந்தரின் வெற்றிப்பாட்டைப்புகழ்ந்து தசைகளைமென்று வயிருரப்புசித்து விளையாடிக்கொண்டிருக்க. எ - று. (கரு)

பட்டாரமரிலெனக்கண்டபாவகாரிகட்கிறைவன்
கெட்டேனந்தோவென்செய்கேன்கிளையுமாண்டவின்னுமதின்
மட்டோயானுமமராடின்மாள்வேன்மீளும்வகைவீரம்
விட்டானலனுமெனப்பிணவவீரன்றன்னைத்துதிக்கின்ருன்.

(இ - ள்.) இவ்வாறு தனது சைனியங்களாயுள்ளாரனைவரும் மடிந்தாரென்பதை யுணர்ந்த பாவகாரிகளாகிய அவ்வேடர்கட்குத் தலைவன், ஐயோ! கெட்டேன்: இனி என்புரிவேன்? எனது சுற்றத்தராயுள்ள சைனியங்களெல்லாம் மடிந்தன. அவ்வளவில்விட்டதோ? இன்னும் போர்புரியின் நானும் மடிவேன். நான் உயிர் தப்பித்துக்கொள்வதற்காக நமது வைராக்கியத்தை விட்டாலே நன்மையாகும் எனத் தீர்மானித்து, பிணவனென்னும் சுத்தவீரராகிய அவ்வேந்தனைத் தோத்திரஞ்செய்கின்றனன். எ - று.

கெட்டேன்என்பது முன்யோசனை யின்மையைக்குறித் திரங்கும் ஓரிரக்கச்சொல். (கசு)

அயிலார்செங்கைமயிலூருமறுமாமுகனேர்பெருமானே
பயிலாதிருக்கவமரென்னப்பாதந்தொழுதான்வனவேடன்
முயலாதொழிந்துவெங்கொடுத்துமறியக்கண்டுகடம்பேசன்
செயலாலவென்றிகொண்டிருபபோன்சீரையெவரேதெரிந்துரைப்பார்

(இ - ள்.) வேலாயுதமேந்திய சிவந்த திருக்கரத்துடனே மயில்வாகனத்திலூர்ந்தருளும் சண்முகக்கடவுளையொத்த தலைவரே! இனி யுத்தஞ்செய்யாதிருக்கவேண்டும் எனப் பிரார்த்தித்து அவ்வேந்தருடைய திருவடிகளைப்பணிந்தான். இப்படியவ்வேடராஜன் போர்புரியாமல் மனம்வருந்தி முதுகுகாட்டியோடப்பார்த்து கடம்பேசருடைய திருவருட்செயலால் வெற்றிப்பாடுற்றிருப்போராகிய பிணவமன்னவரின் சிறப்பை முழுவதுமுணர்ந்தோதவல்லவர்கள் யாவர்?. எ - று.

இவ்வரசர் இத்தகைய பெருமையுடையரென்பதை, "குணமார்தருமத்தெவ்வேந்தர்குலக்கோளரியேகுலத்தருவே - தணவாவன்மைச்சகப்பேசச்சகமேதாங்கும்பூதரமே-பிணவாவென்றுபகரார்வாய்நிளங்குசேரிப்பெரும்பூதக் - கணம்வாய்நிரப்புங்குந்தம்போற்காணேங்கேளோங்கற்றோரே." என்னும் ஈட்டியெழுபதின் திருவிருத்தத்தானுந்தெளிக. (கஎ)

செங்காலன்னவிறைகேளிங்கேயம்போந்திக்கடைஞரெலாம்
பொங்காப்படையாலலமுகமாம்பொருவிற்படையாற்சலங்கொண்டு
பங்கஞ்செய்தாரெனவாங்குப்பணிலங்குழுமிப்பெரிதார்த்துக்
கங்கிலூர்ந்தங்குலவுதிருக்கண்டியூரையாள்வோனே.

(இ - ள்.) சிவந்த கால்களைப்படைத்த அன்னமென்னும் அரசனே! கேட்பாயாக: இங்குள்ள உழவர்களனைவரும் எம்முடைய இடத்திற்குவந்து, விசேடித்த எருதுகளென்னும் படைகளாலும் கலப்பையென்னும் சிறந்த படைகளாலும் உழுது நீரைக்கொண்டு சேறுசெய்தார்கள் என்று சங்குகள் ஒருங்குகூடி மிகவும் ஒலித்து வரம்புகளிலூர்ந்துலாவுகின்ற கழனிகளையுடைய திருக்கண்டியூரென்னும் நகரையரசாள்பவர். எ - று.

இன்னும் சிலேடைவகையால் இழிந்தோர்கள் பலர் எம்தேயத்தை யடுத்துவிரோத மேற்கொண்டு சில அற்பப்படைகளாலும், யுத்தம் புரிதலில்லாமல் மறைந்திருக்கும் சைனியங்களாலும் அவமானப்படுத்தினார்கள் எனப் பொருளாதலும் காண்க. அக்கால் கடைஞர் என்பதற்கு இழிந்தோரென்றும், பொங்கா என்பதற்கு மேன்மையுறாத என்றும், அலமுகமாம் என்பதற்கு மறைந்திருக்குமென்றும், பொருவில் என்பதற்கு யுத்தஞ்புரியும் சக்தியற்ற என்றும், சலம் என்பதற்கு விரோதமென்றும், பங்கம் என்பதற்கு அவமானமென்றும் பொருள் கொள்க. எனவே கழனிகளில் உழுது சேறாக்கியபோது வெளிவந்த சங்குகள் அவைக்கடுத்துள்ள தடாகங்களிலிருக்கும் அன்னங்களைப்பார்த்துக் கூறினவென்பது கருத்து. (கஅ)

முஞ்சிகேசன் கார்க்கோடனென்னு முனிவர்கண்காண
நஞ்சுகாலுங்கூரெயிற்றுநாகஞ்சூடியோடாடி
யஞ்சுங்காளிகைத்தாளமாலங்காட்டின்முன்பறித்த
விஞ்சுஞ்சீர்த்திக்கைக்கோளன்விபுலமன்னன்மகனென்பான்.

(இ - ள்.) திருவாலங்காடென்னும் தலத்தில் முஞ்சிகேசர் கார்க்கோடர் என்னும் முனிவர்களுடைய கண்கள் கண்டுகளிக்கும்படி விடத்தைச்சொரிகின்ற கூரியபற்களையுடைய சர்ப்பங்களைத்தரித்த சிவபிரானுடன் வாதிட்டுக்கூத்தாடி அச்சமுற்ற காளியின் கரத்திருந்த தாளத்தைப் பூர்வத்தில் பறித்தவரென்னும் விசேஷித்த கீர்த்தியையுடைய கைக்கோளர். விபுலர் என்னும் வேந்தரின் புத்திரரென் றுரைக்கப்படுபவர். எ - று.

காளியின் கைத்தாளம்பறித்தவர் செங்குந்தரென்பதை, இந்நூற் சிறப்புப் பாயிரத்தின் இருபதாவது செய்யுளுக் குதாரணமாகக்காட்டிய ஈட்டியெழுப தின் திருவிருத்தத்தானுந்தெளிக. (௬௬)

சிவனேயாவுமெனத்தெளியாத்திருமான்மகன்றனடுச்சிரங்கொய்
தவனேவீரட்டேசுரனேயரனேயென்னுந்துதியுடையான்
புவனந்தாங்கும்பொறையுடையான்போதங்கொண்டுபூரணத்தை
மவுனத்தகமேநிலையுடையமதுகைநாமமன்னவனே.

(இ - ள்.) சிவபெருமானே சர்வமுமாயிருக்கின்றாரென்பதைத் தேர்ந்து, திருமாலின் புத்திரனாகிய பிரமனுடைய நடுத்தலையைக் கொய்தவரே! வீரட்டேசுரரென்னுந் திருநாமமுடையவரே! சிவபிரானே! என்று தோத்திரஞ்செய்பவர். பூமி படைத்துள்ள பொறுமையுடையவர், மெய்ஞ்ஞானமடைந்து பரிபூரணவஸ்துவை மோனநிலைமையுற்ற சித்தத்தில் நிலைபெறுகச்செய்துள்ள மதுகையார் என்னும் நாமமுடையவர். எ - று.

சிவபிரானே சர்வமுமென்பதை, "எங்குஞ்சிவமொழியவில்லையவன்றன்னணை - யங்கந்திரள்கருவியாணவமாம் - பொங்குமல - மைசெய்தமாமாயை மாயைவினைமற்றனைத்தும்-பொய்பொய்பொய்பொய்பொய்பொய்." என்னும் சிவஞானவள்ளலார் திருவாக்கானும், பிரமன் நடுத்தலைகொய்ததை, "திகழ்ந்தநஞ்சிறுவனுஞ்செங்கமலத்தோன்சென்னி - யிகழ்ந்ததுநம்மையுச்சியிருந்ததேயதனைவல்லே - யகழ்ந்தனைகரத்திலேந்தியவனுயிர்நல்கித்தம்மைப் - புகழ்ந்திடுமுனிவர்தேவர்புரந்தொறுஞ்சேறியன்றே." என்னும் கந்தபுராணத்திருவிருத்தத்தானும், அச்சிரங்கொய்தது அஷ்டவீரட்டத்தலத்து ளொன்றாகிய கண்டியூரென்பதை இந்நூற் சிறப்புப்பாயிரத் தேழாவதுசெய்யுளுக்குக்காட்டிய உதாரணத் திருவிருத்தத்தானும், மவுனநிலைமையுடையோரே மெய்ஞ்ஞானத்தாற் பூரணத்தைக் காண்பாரென்பதை, "மோனமென்பதுஞானவரம்பு." என்னும் ஔவைப்பிராட்டியார் அமுதவாக்கானும் தெளிக. மதுகை என்பது வெற்றி என்னும் பொருட்டாதலின் அஞ்ஞானத்தைவென்று மெய்ஞ்ஞானமுற்றுப் பூர

ணவஸ்துவைத் தரிசித்தோனென்னும் பொருள்பயக்குங் காரணப்பெயராய் இவர்க்கு மதுகையாரென்னும் பெயர் வழங்கியதெனக் கூறலுமுண்டு. (கா௦௦)

அவ்வூர்வடபாலுள்ளமரனடருங்கானம்பன்னாளச்
செவ்வாய்ப்பிரமராக்கதனென்றீபனிருந்தானன்னவனே
வெவ்வாக்கொடுமைபலசெய்தேமொழியாதுறைதலாலவனந்
தெவ்வூராகவெண்ணுவதேதிடமென்றுள்ளாருருள்ளார்.

(இ - ள்.) அவ்வூருக்கு வடதிசையிலிருக்கின்ற விருட்சங்களடர்ந்த ஓர் சோலையில் வெகுநாளாகச் சிவந்தவாயையுடைய பிரமராக்கதனென்னும் ஓர் கொடியவனிருந்தான். அப்பிரமராக்கதனேவென்றால், யாவர்க்கும் சகிக்கவொலாத பலவித துயரங்களை விளைவித்துக்கொண்டு அச்சோலையைவிட்டு நீங்காது சதாவசித்திருந்தலால், அச்சோலையை அவ்வூரிலுள்ள ரனைவரும் பகைவர்கள் நகரமாகநினைப்பதே நிச்சயமென்றெண்ணி யிருந்தார்கள். எ - று. (கா௦க)

நிற்கவறியாதிரவுபகனேமியென்னத்திரிதருமொண்
ணுற்கமென்னக்கண்விழிக்குமோடும்பாடும்வெய்துயிர்க்கும்
வெற்பிலேறுஞ்சென்றவழிமீளுங்கண்டசீவர்தமை
யற்பமாகக்கருதிமிதித்தாவியோக்குமிவ்வரக்கன்.

(இ - ள்.) பிரமராக்கதனென்னும் இவ்வரக்கனவன் இரவினும் பகலினும் ஓரிடத்தில் நிலையாயிருக்கத் தெரியாதவனாய், சக்கராயுதத்தைப்போன்று சுழலுவான். பிரகாசமுள்ள விண்வீழ் கொள்ளியைப்போன்று கண்களைத்திறந்துபார்ப்பான். ஓடுவான். பாடுவான். பெருமூச்செறிவான். மலைமீதேறுவான். தான் ஏறியவழியே இறங்குவான். எதிரில்வரப்பார்த்த உயிர்களை மிகவும் இழிவாகமதித்துக் கால்களாற் றுவைத்து உயிரிழப்பிப்பான். எ - று.

பிரமராக்கதன்செய்கை இத்தன்மைத்தென்பதை, "ஆறவென்னுமமுஞ்சிவதாவெனும் - பாவம்பாவம்பழியிதுவோவைய - கோவெனுங்கைகுலைத்தெறியுங்கிழற் - பாவைபோலவிடாதுமுன்பற்றுமால்." எனவும், "நல்லநீர்த்தஞ்சிவதலநலோர்பக்கமுஞ் - செல்லவொட்டாதரன்சீர்த்திநாமஞ்செவிப் - புல்லவொட்டாதுளம்புகுதவொட்டாதுநாச் - செல்லவொட்டாதகண்டுயிலவொட்டாதரோ." எனவும், "எங்கும்பெருமூச்செறியுங்கையெறியுங்குன்றி - ஞேங்குஞ்சிறுகுமுடன்றூர்த்திடுமுன்னும்பின்னும் - பாங்குந்தொடருஞ்சிரிக்கும்பருவாயைமெல்லு - நீங்குங்குறுகும்பழிதாவெனநேர்ந்துபற்றும்." எனவும்வரும் திருவிளையாடற்புராணத் திருவிருத்தங்களானுந்தெளிக. (கா௦உ)

பளகாரிவனுல்வளையினிடம்படுமோர்பொருட்குணலனுடைய
மிளகுமேகோட்டந்தக்கோலம்விளையாரகினற்குங்குமப்பூ
வுளதிலொன்றுங்கிடையாமலூராரெவருமின்னனவைக்
களநின்றேத்திவந்தவகைகழறவுணர்ந்தான்காவலனே.

(இ - ள்.) கொடுமையமைந்த இப்பிரமராக்கதனால் மலைபடுதிரவியங்களாகிய ஒப்பற்ற திரவியங்கட்குள்ளே, நன்மைமிக்க மிளகு கோஷ்டம் தக்கோலம் மணங்கமழும் அகில் சிறந்தகுங்குமப்பூ என்றுள்ளவற்றுள் ஓர் வஸ்துவுங் கிடைக்கப் பெறுதவர்களாய், அவ்வூராரனைவரும் அவ்வேந்தருடைய சபைக்குட்சென்று அவர்க்கெதிரிலிருந்து துதித்து, தாங்கள் வந்த செய்தியைக்கூற மன்னவரறிந்தனர். எ - று.

உலகத்துள்ள சிறந்த வஸ்துக்களனைத்தும் நாடுபடுதிரவியம் நகர்படுதிரவியம் கடல்படுதிரவியம் கான்படுதிரவியம் வரைபடுதிரவியம் என்பவற்றுளடக்கிப் பெரியோர்கூறியுள்ளாராகலின், ஈண்டு மேற்கூறிய பொருள்களெல்லாம் வரைபடுதிரவியமென்றுணர்த்துவான், "வரையினிடம்படுமோர்பொருட்குள்." என்றார். இவற்றுள் நாடுபடுதிரவியமாவன:— செந்நெல் சிறுபயறு கரும்பு வாழை செவ்விளநீர் என்பவைகளாம். நகர்படுதிரவியமாவன:—அரசன் கண்ணுடி பித்தன் மந்தி யானை என்பவைகளாம். கடல்படுதிரவியமாவன:— உப்பு முத்து பவளம் சங்கு ஒக்கோலை என்பவைகளாம். கான்படுதிரவியமாவன:— அரக்கு கருந்தினை தேன் நாவி மயிற்பீலி என்பவைகளாம். வரைபடுதிரவியமாவன:— மிளகு கோட்டம் அகில் தக்கோலம் குங்குமப்பூ என்பவைகளாம். (௪0௩)

தீயவரக்கனுமாளுந்தேயமிருந்திக்கொடுமைசெயச்
சீயவணைபிலரசிருந்துசெங்கோல்செலுத்தனன்றென்னுப்
பாயப்புலிபோற்செங்குந்தப்படைகைக்கொண்டுதனியாகப்
போயக்கானத்தோராலந்தாருநீழற்புடைநின்றான்.

(இ - ள்.) கொடுமைமிக்க பிரமராக்கதன் என்னும் அரக்கன் நாம் அரசாளும் தேசத்திலிருந்து இவ்விதக்கொடுமைகளியற்றிக்கொண்டிருக்க, நாம் சிங்காதனத்திலிருந்து செங்கோல் செலுத்திவருவது நன்றாயிருக்கின்றதென்று பாய்கின்ற சிறந்த புலியையொத்து செங்குந்தம் என்னும் வேற்படையைக் கையிலேந்திக்கொண்டு தான் தனியாகச்சென்று, அவ்வனத்திலுள்ள ஓர் ஆலவிருட்சத்தின் நிழற்கருகில் நின்றார். எ - று. (௪0௪)

கனமொண்பறவைமிருகவகைகாணுமல்லான்மக்கடம
தினநாங்காணவில்லையிவனெங்குள்ளானென்றேதுணியு
மனமுந்தோளுமலையன்னமதுகையாமென்மன்னிந்தத்
தினமேவென்றிகொள்வமென்றான்தீரமன்றேசெயமாக்கும்.

(இ - ள்.) மேகத்தொகுதிகளும் ஒளியுள்ள பறவைகளும் மிருகவகைகளும் தோற்றுமேயல்லது, மனிதத்தொகுதியை நாம் பார்க்கவில்லையே: இப்பிரமராக்கதன் எங்கிருக்கின்றானோ? என்று சிந்தித்து, துணிவுள்ள மனமும் தோள்களும் மலைபோன்றிருக்கும் மதுகையானென்னும் பெயருள்ள வேந்தர், இத்தி

னத்திலேயே வெற்றிகொள்வோமென்று துணிந்தார். இப்படி துணிவு நிச்சயமல்லவா ஒருவருக்கு வெற்றியை விளைவிக்கும். எ - று.

மனம் வலிமையில் மலைபோன்றும் தோள்கள் பருமனில் மலைபோன்றும் விளங்கலின், "துணியுமனமுந்தோளுமலையன்ன." என்றும், ஊக்கமுடையார்க்கியாவும் பலிதமாமாதலின், "தீரமன்றேசெயமாக்கும்." என்றும் கூறினர். இதனை, "உடையரெனப்படுவதூக்கமஃதில்லா - ருடையதுடையரோமற்று." என்னும் திருக்குறளுரையானுந் தெளிக. (௬௦௫)

அந்தவமயம்பேயினிகரலையுங்கொடியோன்முன்னுயிர்கள்
சிந்தக்காலிற்கற்களெலாஞ்செண்டினோடவதிவிரைவில்
வந்தபோதேவானவர்கோன்மலையினிறகையறுத்ததுபோன்
முந்திக்கைகளிறவெட்டிமூளைசிதறவேல்விட்டான்.

(இ - ள்.) அந்தருணத்திலே பேய்போன்று திரிகின்ற துட்டனாகிய அப்பிரமராக்கதன், தனக்கெதிர்ப்பட்ட சீவராசிகள் அழிவையடையவும் பெருங்கற்களெல்லாம் தன் காலிற்பட்டபோது பந்துபோல ஆகாயத்திலோடவும் அதிவேகமாக வந்தவுடனே, தேவேந்திரன் மலையின் சிறகுகளை வெட்டியது போன்று முன்னுகக் கைகளறும்படி சேதித்து, தலையிலுள்ள மூளைகள் சிதறும்படி வேற்படையைப் பிரயோகித்தனர். எ - று. (௧௦௬)

கைவேன்மத்தகந்தாக்கக்கான்யாறென்னத்தலைமலைநெய்
செய்யாறனைவனுயிருஞ்சென்றவுடலுந்தரைசாய்ந்த
துய்வாரின்னேயுலகெனுமுவகைமீக்கொண்டேரடைந்த
சைவாசாரத்தனியரசன்பெருமையென்றற்சாற்றரிதே.

(இ - ள்.) கைவேலாகிய செங்குந்தமானது அவனது சிரசிற்பாய்ந்தவுடனே, காட்டாறென்றுசொல்லும்படி அவனது தலையாகிய மலையினிடத்துத்தோன்றிய உதிரமானது செந்நிறங்கொண்ட நதிப்பிரவாகமாயோடிற்று. உடனே அவன் பிராணனும் நீங்கியது. சரீரமும் பூமியில் விழுந்தது. இப்போது இந்நகரத்தார் ஈடேறுவார்களென்னும் களிப்பு மீதூரப்பெற்று, தனது நகரமாகிய திருக்கண்டியூரிற்சேர்ந்த மதிகையார் என்னும் ஒப்பற்ற அவ்வரசரது பெருமை என்றற் சொல்லுதற்கரிதாகும். எ - று.

பிரவாகத்திற்குக் கான்யாறும், அப்பிரவாகத்தின் நிறத்திற்குச் செய்யாறு முவமித்தனரென்க. இவ்வரசர் இத்தகையுடையரென்பதை, "மிண்டிடாமன்மேவவீர்விளம்பிடாமலோருமின் - ரெண்டிடாமல்வாழ்வதெங்ஙன்சூரபன்மன்பட்டிடக் - கண்டவீரவாகுதேவர்கால்வருங்குலத்துமன் - வண்டுலாவுகண்டியூரன்வயிரவாகுகுந்தமே." என்னும் ஈட்டியெழுபதின் திருவிருத்தத்தானுந் தெளிக. (௧௦௭)

தேத்தாரகலக்குன்றவர்தஞ்செல்வப்பேதைச்சிறுமியர்கள்
சேத்தார்பாசார்மணியாலுஞ்சிற்றிற்கோலியடுப்பமைத்து
வேய்த்தாமணிதத்தனியுலைபெய்தெரிகால்விறகாற்றீமூட்டிப்
பாத்தார்த்துண்டுவிளையாடிப்பாடியாடுமுதுகுன்றோன்.

(இ - ள்.) தேனுள்ள மலர்மாலையணிந்த மார்புடைய வேடர்களின் பேதைப்பருவமுற்ற செல்வப்புத்திரிமார்கள் செந்நிறம் பொருந்தியவும் பசுநிறம் பொருந்தியவுமான மணிகளால் சிறுவீடுகட்டி அடுப்பும் அமைத்து, சங்குகளாகிய பாண்டத்தில் தேனாகிய உலைநீர்விட்டு மூங்கிலில்விளையும் முத்தை அதில் அரிசியாகப்போட்டு, சோதிவிருட்சத்தின் விறகுகளால் நெருப்புமூட்டிச்சமைத்து ஆரவாரித்துப் பாகித்துக்கொண்டு புசித்து, பின் விளையாடிப் பாட்டுகள்பாடிக் கூத்தாடுகின்ற பழமலையில் அரசாள்பவர். எ - று.

சிறுமியர்கள் சிற்றில் விளையாடுவ தித்தன்மைத்தென்பதை, "தேமாங்கனியினடுப்பமைத்துத்திகழுஞ்கழிந்தவலம்புரியிற் - செந்தேனுலைப்பெய்தரவீன்றசெழுமாமணிவெங்கனன்மூட்டிப் - பூமாதளையின்விதையரிசிபுகட்டிச்சமைத்துக்கதலிமடற் - பொங்கப்பிழியுமதன்கனியும்பொருந்தவளவிக்கறியட்டுக் - காமாதவிப்பூம்பந்தரிடைக்கயற்கண்ணுயமிழைத்தவண்டல் - கருதம்புவனகோடியெல்லாங்கரந்தும்படைத்துங்காக்குமொரு- சீமானுனக்கோரிலக்கோ சொல்சிறியேஞ்சிற்றில்சிதையேலே - தேரூர்வீதிப்போரூராசிறியேஞ்சிற்றில் சிதையேலே." என்னும் சிதம்பரசுவாமிகள் திருவாக்கானுந்தெளிக. (கoஅ)

வேறு.

வலமுலாமுபசுப்பிரமண்ணியர்
குலமுலாவியகோமணியன்னவன்
றலமுலாவுபாாயணமன்றபோ
பலமுலாவியபான்மையிற்றோன்றினோன்

(இ - ள்.) வல்லபங்குறையாத உபசுப்பிரமணியரென்னும் நவவீரர் மரபிற் சிறப்புற்றமாணிக்கம்போன்று விளங்குகின்றவர். அத்திருமுதுகுன்றத்தில் வாழ்ந்திருந்த பாராயணர் என்னும் வேந்தர்செய்த தபோபல மிகுதியுற்றதன்மையால் அவதரித்தவர். எ - று.

இராமருக்கிளையோராகிய இலக்குமரை இராமாநுசரென்றும் இந்திரனுக்கிளையோராகிய விஷ்ணுவின் அம்சருக்கு உபேந்திரரென்றும் வழங்குவதுபோன்று, குமாராநுசாகளென்றும் உபசுப்பிரமணியர்களென்றும் நவவீரர்க்குத் திருநாமம் வழங்குவதால், "உபசுப்பிரமண்ணியர்குலமுலாவியகோமணியன்னவன்." என்றார். (கoக)

பணியணிந்தபழமலையான்றிருப்
பணியணிந்துபதிந்தமனத்தின்

ணணியணிந்தவலங்கற்புயாசல
மணியனென்னும்பெயருடைமன்னனே.

(இ - ள்.) சர்ப்பாபரணமணிந்துள்ள விருத்தநாதரது திருப்பணிகள் அலங்காரத்துடன் பதிந்துள்ள மனமுடையவர். மலர்மாலையும் ஆபரணமும் தரித்துள்ள மலைகளென்று சொல்லத்தக்க புயங்களையுடைய மணியரென்னும் நாமமுள்ள வேந்தர். எ - று.

பணி என்பதற்குப் பாம்பென்றும் திருத்தொண்டென்றும் பொருளிருத்தலி னிவ்வாறுரைத்தனர். (கக0)

பிள்ளையாகிப்பிறந்துவளர்ந்தவன்
றள்ளையுந்தருதந்தையுமன்புறக்
கள்ளையுண்டுகளியளிமாவினங்
கொள்ளையாடுங்குளிர்வனமாடுமே.

(இ - ள்.) இம்மன்னவர் குழவியாய்ப் பிறந்து வளர்ந்து, அவரையீன்ற மாதாவும் பிதாவுங்கண்டு காதல்கொள்ளும்படி, தேனையுண்டு களிகூர்ந்த அளிகளென்னும் வண்டின்றொகுதிகள் ஈக்கள்சேர்த்துள்ள தேன்களைக் கொள்ளையடிக்கின்ற குளிர்ச்சியுற்ற சோலைகளில் விளையாடுவார். எ - று. (ககக)

பத்தியாகப்பலகலையும்மனச்
சுத்தியாகச்சொலுந்துகளின்றியே
யத்தியேறுமணிமணிவீதிவாய்ச்
சுற்றியோடுந்துரகதமேறுமே.

(இ - ள்.) அப்பருவங்கடந்த பிறகு வரிசையாகப் பலநூல்களையும் மனச்சந்தேகமற ஒதினர். அதன்பின் களங்கமில்லாமல் யானையேற்றங் கற்றனர். அலங்கரித்துள்ள அழகிய அரண்மனைவீதியில் சுற்றிச்சுற்றியோடுகின்ற குதிரையேற்றங் கற்றனர். எ - று. (ககஉ)

பெரியநாயகிபேரருளாலவன்
பருவமாயினன்பாரினையாளவு
முரியனாயினனென்னவுவந்துதன்
குருமணிக்கிரீடம்வேய்ந்தான்கொற்றவன்.

(இ-ள்.) விருத்தநாதர் இடப்பாகத்திலெழுந்தருளிய பெரியநாயகியாருடைய சிறந்த திருவருளால் அக்குமாரர் பருவமடைந்தனரென்றும், உலகபரிபாலனஞ்செய்தற் குரியவராயினரென்றும் அவரது பிதாவாகிய பராயணரென்னும் வேந்தருணர்ந்து களித்து; அவருக்கு நிறமமைந்த இரத்தினம்பதித்த தனதுதிருமுடியைச் சூட்டினர். எ - று.

எனவே கல்வியிற்றேர்ந்து யானையேற்றம் குதிரையேற்றம் கற்றுணர்ந்து உலகபரிபாலனம் புரியத்தக்க பருவம் வந்தமையுணர்ந்த பிதா, உடனே ஏனை

ய அரசர்கட்கும் திருமுகமனுப்பி வரவழைத்து அவர்கள் முன்னிலையில் தமது புத்திரருக்குப் பட்டாபிஷேகம் செய்வித்தனரென்பது கருத்து. (ககங)

அந்தவேலையருந்திருப்பேரவை
வந்தமன்னரின்மாமணவைப்பதி
மந்தகாசனெனும்பெயர்மன்னவன்
முந்தெழுந்திதுசொல்லமுயன்றனன்.

(இ - ள்.) அத்தருணத்திலே அருமையான சிறப்புற்ற அப்பெரிய சபையில் வந்துள்ள மன்னவர்கட்குள்ளே, மேம்பாடமைந்த மணவூரென்னும் நகரத்திற் கதிபதியாகிய மந்தகாசனென்னும் பெயருடைய அரசன், முற்பட்டுச் சபையைவிட் டெழுந்து நின்று இவ்வாறு கூறலாயினன். எ - று. (ககச)

நற்றவத்தொருநன்மகவந்திக
முற்பவித்திடுமென்னுமுரைப்படி
நிற்குதித்தனனின்மகன்றன்னது
பொற்பினோங்கும்புயவலியுள்ளனே.

(இ - ள்.) பிதாபுரிந்த நல்ல தபோபலத்தால் நற்புத்திரன் இவ்வுலகத்தில் வந்துபிறப்பான் என்னும் பெரியோர் வாக்கியப்படியே, உமதுபுத்திரன் தனது அழகுக்கேற்பப் புஜபலபராக்கிரமமும் பொருந்தினவனாய் உமக்குப் பிறந்தனன்.

பிதா தபோபலத்திற் கேற்றவண்ணம் புத்திரர்க ளுற்பவிப்பாரென்பதை விளக்கியவாறறிக. இதனை, "தக்கார்தகவிலரென்பதவரவ - ரெச்சத்தாற்காணப்படும்." என்றும், "தம்பொருளென்பதம்மக்களவர்பொரு - டந்தம்வினையால் வரும்." என்றும்வரும் திருக்குறள்களி னுரையானுந்தெளிக. (ககரு)

ஆதலானமக்கென்றுமடாதபுன்
றீதுசெய்யுஞ்செருநனுமாளவ
நீதியாற்றுநிருபனுமாயவன்
கோதுமாளச்செயுமுன்குழவியே.

(இ - ள்.) ஆகையால் - எனக்கு எக்காலத்தினும், சகிக்க வேலாத இழிவான கொடுமைகளைப் புரியும் பகைவனும், மாளவதேயத்தை நீதியுடன் அரசாளும் அரசனுமாகிய அவனுடைய கொடுமைகள் நிவாரணமாகும்படி உமது புத்திரன் செய்விப்பான். எ - று. (ககசு)

ஐப்பமின்றிதிலென்னவறிந்திறை
மெய்யெனத்தன்கரத்தில்விளங்கிய
செய்யவேலைச்சிங்காதனமீதொளிர்
துய்யமைந்தனருங்கரஞ்சூட்டினன்.

(இ - ள்.) இதிற் சந்தேகமில்லையென் றுரைக்க, அதுகேட்ட பராயண ரென்னும் வேந்தர் இது உண்மைதானென்றுணர்ந்து, உடனே தனதுகரத்திற் பிரகாசித்துக்கொண்டிருந்த செங்குந்தத்தை சிங்காதனத்தின்மீது வீற்றிருந்து விளங்கும் தூய்மையமைந்த தனதுபுத்திரராகிய மணியரென்பவர் திருக்கரத்திற் கொடுத்தனர். எ - று.

செய்யவேலென்றது செங்குந்தமெனப் பொருள்படநின்றதை யுணர்க.()

குமரகேண்மிளிர்குந்தங்கரங்கொடு
சமரமாடுகசத்துருவென்றெழு
திமிரமோட்டிச்செருக்களம்வென்றுறு
நமர்களோடுநகரமிலங்குக.

(இ-ள்.) ஓ புத்திரசிகாமணியே! கேட்பாயாக: ஒளி பெற்றுள்ள இச்செங் குந்தத்தைக் கரத்திலே தாங்கிப் போர்புரியக்கடவாய். அப்போர்க்களத்திலே பகைவர்களென்று தோன்றுகின்ற இருட்கூட்டத்தைப்போக்கிச்சயங்கொண்டு, நம்மிடத்திற் பொருந்தியுள்ள நம்மவர்களோடும் இந்நகரத்தில் அரசாண்டு விள ங்கக்கடவாய். எ - று.

பகைவர்கள் போர்க்கெதிர்ந்த காலத்து இச்செங்குந்தத்தைவிட்டு வேறு படையுடன் நீ செல்லலாகாதென்பார், "குந்தங்கரங்கொடுசமரமாடுக." என் றும், அவ்வாறு செல்லுவையேல் பகைவர்களென்னும் இருளை இச்செங்குந்த மென்னும் தினகரன் ஓட்டி வெற்றிதரும் எனக்குறிப்பிப்பார், "சத்துருவென் றெழுதிமிரமோட்டிச்செருக்களம்வென்று." என்றும், உனது வீரத்தன்மை குன்றிருக்கும்படி ஏனையமரபினர் சகவாசம்விட்டுச் சதா நம்மரபினருடனே பயின்றுவருவாயென்பார், "உறுநமர்களோடுநகரமிலங்குக." என்றும் கூறினர். நமர்கள்நம்மவர்களென்னும் பொருட்டு. இதனை, "தகைமலிதண்டுசூலமனலுமிழு நாகங்கொடுகொட்டிவீணைமுரல - வகைமலிவன்னிகொன்றைமதிமத்தம்வை த்தபெருமானுகந்தநகர்தான் - புகைமலிகந்தமாலைபுனைவார்கள்பூசல்பணிவார் கள்பாடல்பெருகி - நகைமலிமுத்திலங்குமணல்சூழ்கிடக்கைநணிபள்ளிபோலு நமர்காள்." என்னும் ஆளுடையபிள்ளையார் அருள்வாக்கானுந்தெளிக. (கக அ)

வயவரிக்கொடிநீடியவாழிநீ
செயமுறக்கடவாயெனத்திண்சிலைப்
புயமணவைப்புரவலர்ப்பார்த்ததி
நயவுரைத்தானவிலுமணியனே.

(இ - ள்) வெற்றிகொண்ட புலிக்கொடி நீடூழிவாழ்க: நீ வெற்றியே எக்காலமும் பெறுவாயாக: என்று ஆசீர்வதித்தவுடனே வலிய மலைபோலும் தோள்களைப்படைத்த மணவைவேந்தரை நோக்கி அதிக நயமாகச் சிலவார்த் தைகள் மணியரென்னும் வேந்தர் கூறுகின்றார். எ - று. (கககூ)

நன்றுதீரிகல்வந்ததுநம்முது
குன்றமுங்கிழமாங்குழகன்கிழ
மன்றவாணரவர்மனையாயிட
மொன்றுதேவியுயர்முதுநாயகி

(இ - ள்.) ஓ அரசரேறே! நன்மையொழிந்த இப்பகை யுமக்குநேர்ந்ததற்குக் காரண மெதுவெனில், நாம் வசிக்கும் திருமுதுகுன்றமென்னும் இவ்வூருங் கிழம். இதில்வீற்றிருந்தருளும் சிவபெருமானுங் கிழம். பொன்னம்பலவாணராகிய அப்பெருமான் மனைவியாய் இடப்பாகத்திற் பொருந்தியுள்ள அவர்தேவியாரும் மிகவுங் கிழம். எ - று.

எனவே போர்புரிய வலியற்றவர்கள் வாழூர் என்பது விருத்தாசலம் என்னும் பெயரானும், சிவபெருமான் கிழம் என்பது விருத்தநாதர் என்னும் திருநாமத்தானும், தேவியாரும் கிழம் என்பது விருத்தாம்பிகை என்னும் திருநாமத்தானும் விளங்கலின் இத்தகைய நகரத்தரசருக்குக் கீழ்ப்படிந்த உம்மை எதிர்த்தால் அவசியம் வெற்றிபெறலாமெனக் கருதிப் பகைவன் றுணிந்தானென்பது கருத்து. சிவபெருமான் கிழம் என்பதை, "இறைக்குவளையுமிளங்கிள்ளையுமழகென்பவர்சேர் - துறைக்குவளையுமெகினமும்வாவிக்குத்துயவிதழ் - நறைக்குவளையுமழகாமுதுகிரிநாதர்க்கின்றிப் - பிறைக்குவளையுமுடல்வந்தவாறென்கொல்பேசுகவே." என்னும் சிவப்பிரகாசசுவாமிகள் திருவாக்கானுந்தெளிக. (கஉ0)

நீவிரும்முதுநீதிபரென்பதால்
வாவிவந்தமராடியமாளவ
னாவிவீயவமர்க்களமண்ணுவான்
போவனென்னவெழுந்தனன்பொங்கியே.

(இ - ள்.) நீங்களிருவரும் வயோதிகர்களான அரசர்களென்னும் எண்ணத்தால் அதிவேகமாய்ப் பாய்ந்துவந்து போர்புரிந்த மாளவதேசத் தரசனுடைய பிராணனழியும்படி, போர்க்களத்தை யடைவதற்காகப் போகின்றேனென்று சினங்கொண்டு புறப்பட்டார். எ - று.

நீவிர் என்றது மணவைப்பதி வேந்தரையும் தமது பிதாவையும் குறித்துக் கூறியது. முதுநீதிபரென்பதற்கு மிக விசேடித்த நீதிவான்களெனக் கூறினுமாம். எனவே துன்மார்க்கருடன் எதிர்த்துப் போர்புரியீரென்று கருதி என்பது தாற்பரியம்.

யானைதேர்பரியாளொடுநால்வகைச்
சேனைமுன்னஞ்செலச்செயபேரிகை
வானவேற்றின்முழங்கிடமாளவக்
கோனிருந்தநகரங்குறுகினன்.

(இ - ள்.) இரத கஜ துரக பதாதிகளென்னும் சதுர்வகைச் சைனியங்களும் முற்பட்டுச் செல்லவும், வெற்றி முரசம் இடியேற்றைப்போன்று கோஷிக்கவும், மாளவதேசத்தரசன் வசிந்திருந்த நகரத்திற் சேர்ந்தனர். எ - று.

வானேறு எனற்பாலது எதுகைக்கிணங்க வான்வேறு என நின்றது. ()

பேரியோசைபிறங்கவறிந்தம
ஞரெனத்தனதூதரறிந்துபோய்
வாரிநேரவளைந்ததுவெம்படை
பாரிதென்னப்படையொடெழுந்தனன்.

(இ - ள்.) வெற்றி முரசத்தின் கோஷ்டம் கோஷிப்பதை யுணர்ந்த மாளவதேசத் தரசன் இது யாருடைய ஜெயபேரியென்று வினவலும், உடனே அவனுடைய தூதர்கள் ஓடி அவ்விடத்தில் வந்திருக்கும் சைனியங்களைப் பார்த்துச் சென்று, கடலைப்போன்று பெருஞ்சைனியங்கள் சூழ்ந்துகொண்டது தேவரீர் வந்து பார்க்கவேண்டுமென்றுரைக்க, உடனே தனதாயுதங்களோடும் புறப்பட்டான். எ - று. (கஉங)

நந்திறந்தெரியாமனகர்ப்புறம்
வந்தவீரனைவாட்டவெனச்சின
முந்தவோரிரதத்தினிலூர்ந்துதுள்
சிந்தவேவினன்சேனைமுடுகியே.

(இ - ள்.) நம்முடைய வல்லபத்தை யறியாதவனாய் நமது நகரத்திற்கு வெளியில் வந்த போர்வீரனை அழிக்கவேண்டுமென் றெண்ணிய கோபமானது செலுத்த, ஓர் தேரிலேறி மட்டுகளெழும்பிச் சிதறும்படி தனது சைனியங்களைத்தூண்டி யனுப்பினான். எ - று.

தான் ஏறிய இரதத்தைத் தனது கோபமானது செலுத்தும்படி சென்றானென்க. எனவே மிகவும் கோபாவேசனாய்ப் புறப்பட்டானென்பது கருத்து. ()

இருபடைகலந்தேகியமர்க்களம்
பொருதுநின்றெதிர்போர்புரிவீரர்கள்
பரியுகைத்தவர்பாய்மதயானையர்
விருதுறுங்கொடிவீக்கியதேரினர்.

(இ - ள்.) இருவகைச் சைனியங்களுங் கூடிப் போர்க்களத்திற்சென்று போர்வீரர்களும் குதிரைசெலுத்தும் வீரர்களும் மதம்பாயும் யானைவீரர்களும் வெற்றிக்கொடி கட்டியுள்ள இரதவீரர்களும். எ - று. (கஉரு)

யுத்தமீறியுளுற்றிடமாளவக்
கொற்றவன்றன்படைகுமைந்தாரவன்

சித்தமிக்கக்கொதிக்கச்சினந்துப
லத்திரஞ்சிலைபூட்டியார்த்தானரோ.

(இ - ள்.) ஒருவர்க்கொருவ ரதிகரித்துப் போர்புரிகையில், மாளவதேசத்தரசனுடைய படைவீரர்கள் இறந்தார்கள். அப்போது அவ்வரசன் தனது மனம் மிகவும் வெதும்பக் கோபித்து, தனது வில்லில் பல அம்புகளைப் பிரயோகித்து ஆர்ப்பரித்தான். எ - று.

மேற்கவியுமிதுவுங்குளகம். (கஉசு)

அம்பனந்தந்தொடுத்துத்தொடுத்தடர்
கும்பலின்னணிகோடக்கலக்கிடச்
சிம்புளென்னத்திகழ்முதுகுன்றிறை
யும்பரூஉக்கணைதொட்டனனோங்கியே.

(இ - ள்.) இவ்வாறு அனந்தம் அம்புகளைப் பிரயோகித்துப்பிரயோகித்து அவ்விடத்தி லெதிர்ந்துள்ள முதுகுன்ற மணியரின் சைனியவரிசை கலையும்படி கலக்க, சரபத்தையொத்துவிளங்கும் அம்முதுகுன்றத்தலைவராகிய மணியரென்பவரும் மிகவும் சினங்கொண்டு அவற்றினும் மேம்பட்ட அம்புகளைப் பிரயோகித்தனர். எ - று. (கஉஎ)

அட்டகாசஞ்செய்தேசமராடிய
துட்டவேதிலன்சோகமதானனி
கட்டமாகிக்கலங்கக்கணைமழை
விட்டவேகமுறுக்கமெலிந்தனன்.

(இ - ள்.) அட்டகாசஞ் செய்து போராடிய துட்டச்செய்கையுள்ள மாளவதேசத்தரசனான பகைவன், சோர்வினால் மிகவும் துக்கமடைந்து கலங்கும்படி மணியரால் விடப்பட்ட அம்புமாரி வருத்த வருந்தினான். எ - று. ()

பின்றெளிந்தமராடப்பெருமுது
குன்றவாணரைக்கொண்டமனத்தினால்
வன்றிறற்கணையேவவளைத்துட
றுன்றநெக்குத்தொளைத்துக்கிளைத்தன.

(இ - ள்.) அம்மாளவராஜன் மீண்டும் மூர்ச்சைதெளிந்து போர்புரிய, அப்போதுமுதுகுன்றமணியர் யாவர்க்குந்தலைவராகிய விருத்தநாதனைத்தியானிக்கின்றமனத்துடனே வலிமையான வல்லபமமைந்த அம்புகளைப் பிரயோகிக்க, அவ்வம்புகள் உடனே அவனைச்சூழ்ந்துகொண்டு அவனுடையசரீரத்தில்நெருக்கமாய்ப் பிளந்து துளைத்துக்கொண் டேருவின, எ - று.

முதுகுன்ற வாணராகிய சிவபெருமான் எவர்க்குந் தலைவரென்பதை, "தேவர்கோவறியாததேவதேவன் செழும்பொழில்கள்பயந்துகாத்தழிக்குமற்

றை - மூவர்கோனாய்நின்றமுதல்வன்மூர்த்திமூதாதைமாதாளும்பாகத்தெந்தை - யாவர்கோனென்னையும்வந்தாண்டுகொண்டான்யாமார்க்குங்குடியல்லோம்யாதுமஞ்சோ - மேவினோமவனடியாரடியாரோடுமேன்மேலுங்குடைந்தாடியாடுவோமே" எனனும் மணிவாசகப்பிரான் மலர்வாக்கானும், முதுகுன்றவாணனைத் தியானிப்போர் வெற்றியடைவா ரென்பதை, "கடிக்கஞ்சமனையுவந்துலகாக்குறுங்காரணனோர் - முடிக்கஞ்சமனைதொறும்பலியேற்றமுதுகிரியான் - மிடிக்கஞ்சமனைவருந்தொழவாழ்வம்விரவுறுமென் - குடிக்கஞ்சமனைவெருவுதலேயின்றுகொல்வனென்றே." என்னும் சிவப்பிரகாசசுவாமிகள் திருவாக்கானுந் தெளிக. (௧௪௯)

நாணியற்றசிலைநவிலச்சிலைப்
பாணியற்றவெம்பாணங்களற்றன
தூணியற்றனதூசிபிணித்ததே
ராணியற்றனவாழியுமிற்றன.

(இ - ள்.) வில்லிற்பூட்டிய நாணுமறுந்தன. அவ்வில்லேந்தியிருந்த கைகளுந்துணிபட்டன. அவ்வில்லிற் பூட்டிவைத்திருந்த கொடியபாணங்களுமழிந்தன. அவ்வம்புகள் போட்டிருந்த அம்புறாத்தூணிகளும் உடைந்தன. குதிரை பூட்டியிருந்த இரதத்தின் அஞ்சுருவாணியுங்கழன்றன. அவ்விரதத்தின் சக்கரங்களும் உடைபட்டன. எ - று. (௧௫௦)

சேனையெட்டுத்திசையுஞ்சிதறின
யானையாயவடுக்கலிரிந்தெழு
கானைநோக்கிக்கதித்தனநின்றெதி
ரேனைவீரரிரிந்தனரெங்குமே.

(இ - ள்.) அவனது சைனியங்களெல்லாம் அஷ்டதிக்கினும் சிதறிப்போயின. யானைகளென்னும் மலைகள் ஓங்கியுள்ள காட்டைப்பார்த்துக்கொண்டு வேகமாய் விலகிப்போயின, போர்க்களத்தில் எதிர்த்துநின்றிருந்த மற்றையவீரர்களனைவரும் எவ்விடங்களினும் ஓடிப்போனார்கள். எ - று. (௧௫௧)

கிரணமேதுஞ்செயலிலனாகியுட்
கரணமும்பொறியுங்கலக்குண்டுநல்
லரணமாகியவீரமகன்றுடன்
மரணமூர்ச்சையடைந்தனன்மாளவன்.

(இ - ள்.) அப்போது மாளவதேசத்தரசன் யாதோர் செய்கையும் தினையளவும்புரியச் சக்தியற்றவனாய், உள்ளிருக்கும் மனம் புத்தி சித்தம் அகங்காரமென்னும் அந்தக்கரணங்கள் நான்கும் - மெய் வாய் கண் மூக்கு செவி என்னும் ஐம்பொறிகளும் கலங்கி, நல்ல காவலாயுள்ள வீரத்துவமும் நீங்கி, உடனே மரணமடைவதற் கேதுவான மூர்ச்சையுற்றான். எ - று. (௧௫௨)

கண்டனன்முதுகுன்றுறைகாளைதேர்
விண்டிறங்கிவியன்சற்குணத்தினாற்
புண்டயங்கப்புழுதிபுரண்டமன்
னண்டையீண்டியயர்வுதவிரவே.

(இ - ள்.) அவ்வாறு மூர்ச்சையுற்றதை திருமுதுகுன்றத்தில் வாழும் அரசிளங்குமாராகிய மணியனென்பவர் பார்த்து, சிறந்த சற்குணத்தினாலே உடனே தனது தேரைவிட்டுக் கீழிறங்கி, சரீரத்திற் புண்கள்விளங்கும்படி புழுதியிற் புரண்டுகொண்டிருக்கும் மாளவதேசத்தரசன் சமீபத்தில் வந்து, அவனது மூர்ச்சை தெளியும்படியாக. எ - று.

பகைவன் போர்க்களத்தில் நிராதரவாய் மூர்ச்சையுற்றபோது, அவனை யுபசரித்து மூர்ச்சை தெளிவித்தலே மன்னவர்களிற் சுத்தவீரரது தன்மையாகலின், "வியன்சற்குணத்தினால்." என்றும், அவ்வரசனது சரீரமுழுமையும் அம்புகள்பாய்ந்து புண்பட்டிருப்பதால், "புண்டயங்க." என்றும் கூறினர். ()

ஓகையாலுபசாரமுஞற்றிடச்
சோகமாறித்துயின்றவனொத்தெழுந்
தாகமீதிலென்னாவிநின்னால்வந்த
தாகையால்வெற்றிநின்பாலதேயன்றே.

(இ - ள்.) முதுகுன்றமணியர் மிக்ககளிப்புடனே உபசாரங்கள்புரிய, உடனே மாளவதேசத்தரசன் அடைந்திருந்த மூர்ச்சை தெளியப்பெற்றவனாய் நித்திரைசெய்தவனைப்போல எழுந்துநின்று, இச்சரீரத்துள்ள எனது பிராணன் உம்மால் இப்போது வந்தபடியால், வெற்றி தேவரீருடையதே யல்லவா. (:

குந்தமேந்தினைவானவர்கோமகன்
மைந்தனாகினைபோரில்வலிகெட்ட
விந்தவென்னைவிடுத்தருளென்றுபல்
வந்தனஞ்செய்துமாளவன்போயினான்.

(இ - ள்.) செங்குந்தந் திருக்கரத்திற் றாங்கியிருக்கின்றீர். தேவர்பிரானாகிய சிவபெருமானுக்குப் புத்திரராயினீர். ஆதலால் யுத்தத்தில் வல்லபமிழந்து தோல்வியுற்ற அடியேனை விட்டுவிடுவீராகவென்று, பலவித வந்தனைகளைப்புரிந்து மாளவதேசத்தரசன் விடைபெற்றுச் சென்றனன். எ - று.

இவை மூன்றுங்குளகம். செங்குந்த மேந்துவோராகிய உபசுப்பிரமணிய குலோற்பவராகையால், சிவபெருமானுக்குப் புதல்வரானீர் என்பார், "வானவர்கோமகன்மைந்தனாகினை." என்றதென்க. (௬௫)

வெற்றியங்கொடிமேதினிநீடமர்
கற்றவன்மணவைப்பதிக்காவல

னுற்றபுன்கணொழித்தருணல்கிய
கொற்றவன்றிறங்கூறுவர்யாவரே.

(இ - ள்.) வெற்றித்துவசம் எக்காலத்தும் உலகில் விளங்கும்படி போர்புரியக்கற்றோரும், மணவைநகரத்தரச னடைந்திருந்ததுயரத்தை நிவாரணித்து அவனுக் குதவிபுரிந்தோருமாகிய முதுகுன்ற மணியனென்னும் வேந்தரது வல்லபத்தை விளம்பவல்லவர்கள் யார். எ - று.

பல போர்க்களத்தில் வெற்றிகொண்டோர்க்கல்லது ஏனையோர்க்கு வெற்றித்துவசம் எக்காலமும் நிலைபெறாதென்பதுணர்த்துவான், "வெற்றியங்கொடிமேதினிமீடமர்கற்றவன்." என்றார். முதுகுன்ற மணியனென்னும் இவ்வேந்தர் இத்தகைய பெருமையுடையாரென்பதை, "மூத்தமுதுகுன்றக்குரிசின் முதிருமணவைப்பாராளன் - பாத்தனென்னுமணியன்கைக்குந்தங்கொடுத்துப் பகரவே - பூத்தமார்பத்தார்பறித்துப்பூழிபடவேவீழ்ந்திறைஞ்சிக் - கோத்துச் செங்கைமலர்கூப்பிக்குறுகார்சிறுகிவரக்கண்டான்." என்னும் ஈட்டியெழுபதின் திருவிருத்தத்தானுந்தெளிக. (கருசா)

நம்பினோர்க்கும்பர்நண்ணுந்தருவைநே
ரெம்பியேற்கோரிலக்குமனாயினு
மிம்பர்நாரணனுமிவனிற்கவி
யம்புமொன்பதின்மர்திறம்யார்சொல்வார்.

(இ - ள்.) ஒன்றையிச்சித்துத் தன்னை நம்பிவந்த பேர்களுக்கு விண்ணுலகத்தின்கண் விழைந்தவையெல்லாந் தருவதாகிய கற்பகவிருக்கத்தினையொத்த என்றம்பியாகிய இந்த நாராயணனென்போன் எனக்கொப்பற்ற இலக்குமனெனச் சொல்லத்தக்கவனாயினும், இவ்வுலகின்கண் அவ்விலக்குமனுக்குத் தமயனாகிய நாராயணனேயாம். இவனிற்க மேற்கூறிய ஒன்பதின்மருடைய வல்லபத்தை யார்சொல்ல வல்லவர்கள். எ - று.

எனக்கு ஒழுக்கத்தில் இலக்குமனுக்கொத்தவனாயினும் சத்துருக்களுக்கு இராமனுக் கொப்பாவனென்பது கருத்து. இந்நாராயணரென்போ ரித்தகையாரென்பதை, "காராமுருவமொழிந்துபொன்னின்கவினார்பழுவைவளம்பதியில் - நாராயணனேவிக்கிரமநாராயணனுமென்றுதார் - வாராவழிவந்தோமென்றே வாயிற்புல்லைக்கவ்விவந்தச் - சேரார்சோராநின்றுதொழச்செய்யுமன்னன்செகுந்தம்" என்னும் ஈட்டியெழுபதின் திருவிருத்தத்தானுந்தெளிக. (கருஎ)

வேறு.

இத்தகையதிறம்வாய்ந்தேயிருள்சிக்குஞ்சுடர்முடிய
வுத்தமராம்விறலரசருண்டவரைநஞ்சமுக
முற்றனுகவொருமுடங்கலுடன்வரைந்துவிளிமினெனிர்
நித்திலமாமணிமாலையணியகலநிருபனென்றான்.

(இ - ள்.) ஒளிவிளங்கும் சிறந்த முத்துமணி மாலைதரித்த மார்புடைய அரசனே! இவ்வாறான வல்லபமுடையவர்களாய், இருள்போக்கும் பிரகாசமுடைய மகுடமணிந்த உத்தமர்களாகிய வெற்றிவேந்தருண்டு. அந்தகையோரைத் தேவரீர் சமுகத்தில் வந்துசேரும்படி உடனே ஓர் திருமுகம் எழுதி வரவழைப்பீராக என்றுரைத்தனர். எ - று. (கஙஅ)

சென்னியிதுதக்கதெனத்திருமுகமொன்றெழுதிவிடத்
தன்னிகரிற்கச்சிநகர்த்தனியரசன் முதலோன்பான்
மன்னவையிற்சென்றமடல்வாங்கிவிரித்துரையென்று
சொன்னமொழிச்சிரமேற்றுத்தொல்லமைச்சர்படிக்கின்றார்.

(இ - ள்.) இவ்வாறு வீரரென்பவர் சொல்லக்கேட்ட சோழராசன் இது தகுதியானதேயென்று தெளிந்து உடனே ஓர் திருமுகம் எழுதியனுப்ப, தனக்கொப்பற்றவராய் விளங்கும் கச்சித்தனியர் முதலாகச்சொல்லுகின்ற ஒன்பது வேந்தர்களின் சமுகத்திலும் சென்ற அத்திருமுகத்தை, ஒவ்வொருவரும் வாங்கிப்பிரித்து வாசிப்பாயாகவென்று அவ்வேந்தர்கள் கூறியவார்த்தையைச் சிரமேற்கொண்டு புராதனமாயுள்ள மந்திரிமார்கள் வாசிக்கின்றார்கள். எ - று. ()

கனகமுடியொளிவீசுங்கைலாயபரம்பரையீர்
தினகரனைவென்றவனைச்செருக்களத்தில்வென்றவிறற்
கனவீரவாகுதித்தகைக்கோளற்குலமுடையீ
ரினமிகலாச்செங்குந்தரென்னுமெழிற்றிருப்பெயரீர்.

(இ - ள்.) பொற்சிகரங்கள் காந்திபரப்புகின்ற திருக்கைலாய பரம்பரையுடையோரே! சூரியனை வெற்றிகொண்ட பானுகோபனைப் போர்க்களத்திற் சயித்தவல்லபமும் மேன்மையுமமைந்த வீரவாகுதேவரவதரித்த சிறந்த கைக்கோளென்னுங் குலமுடையோரே! ஓரினத்திற் பகைகொள்ளாதவர்களான செங்குந்தரென்னும் அழகும் செல்வமுமமைந்த பெயரையுடையோரே. எ - று.

இம்மரபினர் திருக்கைலாய பரம்பரையினரென்பதை, "தவகணநாதர்பணிகயிலாயத்தலவதிப - ருவகையிலீன்றவெங்கந்தனுக்கென் றுமுறுந்துணைவர்- நவகணவீரர்க்கிலக்கத்தவர்க்குதிநாகரிகர்- சிவகயிலாயபரம்பரையாரெனுஞ்செங்குந்தரே." என்னும் செங்குந்தர்மாலைத் திருவிருத்தத்தாலும், சூரியனைச்சயித்த காரணத்தால் பானுகோபனெனக் காரணப்பெயர்பூண்ட சூரபன்மாவின் புத்திரனை வீரவாகுதேவர் சயித்தாரென்பதை, "வாளிலங்கவனடுதலுஞ்சென்னியும்வரைநேர் - தோளும்யாக்கையும்வீழ்ந்தனசூரியன்பகைஞ - னாருலந்தனனவனுயிர்வெளவியேகடுவெ - ளளிமொய்ம்பனைவழுத்தியேதென்புலத்தடைந்தான்." என்னும் கந்தபுராணத் திருவிருத்தத்தாலும், "பூட்டியதேரொடும்பொலிந்தபாநுவை - யீட்டியதொட்டிலிலிருக்குமைந்தனை - மூட்டியசமரிடைமுடித்துமாசறத்-தீட்டியவீரர்கைச்சிறந்தகுந்தமே." என்னும் ஈட்டியெழுபதின் திருவிருத்தத்தாலும், இம்மரபினர்க்குக் கைக்கோளரென்றும் செங்குந்தரென்

றும் பெயருண்டென்பதை, "மாவைக்கைக்கொள்வர்வரிசைகைக்கொள்வர்வளருமணிக் - கோவைக்கைக்கொள்வர்கொடையைக்கைக்கொள்வர்பொற்கோயிலின்மெய்க் - காவல்கைக்கொள்வர்கருணைகைக்கொள்வர்கடம்பணியுந் - தேவைக்கைக்கொள்வர்சிவநாமங்கைக்கொள்வர்செங்குந்தரே." எனவும், "ஆலசெங்குந்தரமுதசெங்குந்தர்தம்மண்டலர்க்குக் - காலசெங்குந்தர்கடம்பணிசெங்குந்தர்கௌரிதரு - பாலசெங்குந்தர்பழிதீர்க்குஞ்செங்குந்தர்பற்றுதவ - சீலசெங்குந்தர்சிவானந்தராகுமிச்செங்குந்தரே." எனவும் வரும் செங்குந்தர்மாலைத் திருவிருத்தங்களானுந் தெளிக. (கசுo)

நாரணனும்வீரனுடனந்தஞ்சைநீதிபதிக்
காரணனுமூலகரசர்களைகணுயவர்கண்மனத்
தாரணராய்வல்லான்றன்றலையினையைந்தெல்லையிநீர்த்
தேரணவுமுன்சமுகமீவமெனவின்றறிய.

(இ-ள்.) வீரனென்பவரோடு நாராயணரும் நமது தஞ்சைவேம்பரென்னும் நீதிபதிபராகிய அமைச்சரும்,ஏனையமன்னவர்கட்குச் சுற்றத்தார்போன்று அத்தகையோர் சதா மனத்தில் நினைக்கத்தக்கவர்களாய், வல்லானென்னும் இரட்டனது தலையை ஐந்து நாட்களில் அறுத்து, அழகமைந்த உமதுசமுகத்துக் கொண்டுவந்து கொடுப்போமென்று இன்றையதினம் யாவரும் அறியும்படி. எ-று.()

தேவதசாட்சியும்புரிந்தார்திருந்தலனைவென்றுபுகழ்
மேவவுமைத்துணையாக்கவேண்டுமெனுங்குறிப்புணர்ந்து
நாவிலகாமரபாளரறிதிரெனநற்றஞ்சைக்
காவலனான்விடுநிருபமெனப்படித்தார்கனசபையில்.

(இ - ள்.) ஆணை செய்துவிட்டார்கள். பகைவனாகிய வல்லானைச் சயித்துக் கீர்த்தியடையும்பொருட்டு உங்களைத் தங்களுக்குத் துணைவர்களாகச் சேர்க்கவேண்டும் என்னும் குறிப்பைத்தெரிந்து, இதை வார்த்தைதவறாத மரபினராகிய நீங்களறிவீர்களென்று சிறந்த தஞ்சைநகரதிபனாகிய யானெழுதிய நிருபம்; என்று அவ்விராஜசபையில் வாசித்தார்கள். எ - று.

இம்மூன்றுங்குளகம். நாவிலகா மரபாளரென்றதை, "இந்துங்கதிருந்திசைமாறியெழினுங்கடனீர்சுவறிடினு - மீட்டுவளர்ந்தமகமேருவிடிந்துபெயர்ந்துவிழுந்திடினும் - வந்துபொழியுமழைமாரிமறுத்துந்துளிகள்வறண்டிடினும் - வானத்தமரர்க்கரியதெய்வமறைமாமொழிபொய்வழங்கிடினுஞ் - சந்தமிகுந்ததிருமாலின்றனதுகமலக்கரத்தில்வைத்துத் - தரிக்குங்கணைகள்தவறிடினுஞ்சாற்றுமொழிகள்தப்பாது-முந்துபுகழ்க்கச்சியிலரசர்முத்தந்தருகமுத்தமே-மொழிநாவிலகாமுதலியர்கள்முத்தந்தருகமுத்தமே." என்னும் செங்குந்தர் பிள்ளைத்தமிழ்த் திருவிருத்தத்தானும், "காவேகரப்பினுங்கார்பெய்தல்பொய்ப்பினுங்கட்கமலப் - பூவேமலையினுனியிடைபூப்பினும்பூதலத்தின் - மாவேழுடையவெய்யோன்வடக்குந்தெற்குமாறினுமெய்த் - தேவேவிலகினுநாவிலங்காதவர் செங்குந்தரே," என்னும் செங்குந்தர்மாலைத் திருவிருத்தத்தானுந்தெளிக. ()

ஒன்பதின்மரவைக்களத்துமுரைத்தமடல்வகையுணரரத்
தன்பதியைவிட்டெழுந்தார்தனித்தனியேயுலகநசை
துன்பமெனவிருவினையின்றொடர்பகலவிளங்கருட்பே
ரின்பமுறவகம்புறமுந்துறந்தவராங்கிசைநிலைப்ப.

(இ - ள்.) மேற்கூறிமுடித்த நவவேந்தர்களின் சமுகங்களினும் வாசித்த திருமுகத்தின்செய்தியை யறிந்து, உலகாபேகை துயரந்தரத்தக்கதென்று இருவினைகளின் சம்பந்தமும் நிவாரணமாகும்படி ஒளிமிக்க அருண்மயமான பேரின்பத்தை யடையவேண்டி, அகத்துறவு புறத்துறவு என்னும் இருவகைத் துறவையும் மேற்கொண்டோர்களொத்து, தங்கள் கீர்த்தியானது எக்காலத்தும் உலகத்தில் நிலைபெறுகுமாறு அவ்வொன்பதின்மரும் தனித்தனி தங்கள் தங்கள் தேயத்தைவிட்டு வெளிக்கொண்டார்கள். எ - று.

உலகாபேகை துன்பமென்பதை, "தோற்றமுண்டேன்மரணமுண்டுதுயரமனைவாழ்க்கை - மாற்றமுண்டேல்வஞ்சமுண்டுநெஞ்சமனத்தீரோ - நீற்றரேற்றர்நீலகண்டர்நிமிர்புனனிள்சடைமே - லேற்றர்கோயிலெதிர்கொள்பாடியென்பதடைவோமே." என்னும் ஆளுடையநம்பிகளின் அருள்வாக்கானும், இருவினையுமறுதலே இன்பமென்பதை, "இருள்சேரிருவினையுஞ்சேராவிறைவன் - பொருள்சேர்புகழ்புரிந்தார்மாட்டு." என்னும் திருக்குறளுரையானும் தெளிக. அகப்பற்று யானென்பதும் புறப்பற்று எனதென்பது மாகலின் இவற்றை விடுதலே முறையே அகத்துறவென்றும் புறத்துறவென்றும் கூறப்படும். இதனை, "யானெனதென்னுஞ்செருக்கறுப்பான்வானோர்க் - குயர்ந்தவுலகம் புகும்." என்னுமத் திருக்குறளுரையானே தெளிக. (கசங)

வாம்புரவிமீதேறிவலமீட்டிவிளங்கவிடப்
பாம்பிரவுக்கதிர்மதியும்படர்சடையான்றிருச்சரணந்
தாம்பரவிச்செலச்சேய்மையணித்தாகித்தரியலனாற்
றேம்பிரவிகுலவேந்தன்றிருச்சமுகஞ்சார்ந்தனரால்.

(இ - ள்.) தாவிச்செல்லும் குதிரைமீதூர்ந்து வலது கரங்களிற் செங்குந்தம் பிரகாசிக்கும்படி, விடந்தங்கிய சர்ப்பமும் இராக்காலத்தொளிரும் சந்திரனும் படர்ந்திருக்கும் சடைமுடியையுடைய சிவபெருமான் திருவடிகளைத் தாங்கள் துதித்துக்கொண்டு செல்ல, அவ்வழி நெடுந்தூரமாயிருந்தும் சமீபமாகிப் பகைவனுகிய இரட்டனால் வருந்திக்கொண்டிருக்கும் சூரியகுலத் தரசனான பராந்தகச் சோழனுடைய திருச்சமுகத்திற் சேர்ந்தார்கள். எ - று.

பாம்பும் சந்திரனும் பகையாகலின் அப்பகையைநீக்கித் தரித்தனனென்பான், "விடப்பாம்பிரவுக்கதிர்மதியும்படர்சடையான்." என்றனர். இதனை, "நச்சரவர்சடைமேனளிர்திங்களுமொன்றவைத்தங் - கச்சமெழவிடைமேலழகார்மழுவேந்திநல்ல - விச்சைபகர்ந்துமிகவிடுமின்பலியென்றுநாளும் - பிச்சைகொளண்ணனண்ணும்பிரமாபுரம்பேணுமினே." என்னும் ஆளுடையபிள்ளையார் அருள்வாக்கானுந்தெளிக. (கசச)

வந்தவரையெதிர்கொள்ளுமன்னவைபிறந்தமக்காத்
தங்கவணைமிசையிருப்பத்தஞ்சைவளம்பதியரச
னந்தவிலாப்புகழ்வீரநாரணராலெஞ்சமுகங்
தந்தமொழியதுகாக்கவேண்டுமெனவேதனியன்.

(இ - ள்.) இவ்வாறு அங்குவந்த மன்னவர்கள் ஒன்பதின்மரையும் எதிர்கொண்டழைத்துப்போன பராந்தகச்சோழனுடைய கொலுமண்டபத்தில், தங்கள் தங்களுக்கு ஏற்படுத்தியுள்ள ஆதனங்களில் அவ்வொன்பதின்மரும் வீற்றிருந்தபோது, வளப்பமிக்க தஞ்சைமாநகரத்தரசனாகிய அப்பராந்தகச்சோழன், குறைவுபடாத கீர்த்தியமைந்த வீரநாராயணராலே எனது சமுகத்திற் செய்து கொள்ளப்பட்ட சபதத்தை நிறைவேற்றவேண்டுமென்று பிரார்த்திக்க, அப்போது கச்சித்தனியனொன்னும் வேந்தர். எ - று.

எனவே பராந்தகச்சோழன் இவ்வொன்பதின்மரையும் எதிர்சென்றழைத்துவந்து, அவரவர்கட்குத் தனித்தனி யாசனமளித்திருக்கச்செய்து, வீரநாராயணர் என்சமுகத்திற்செய்துகொண்ட சபதத்தை நிறைவேற்றுவிக்கவேண்டுமெனப் பிரார்த்தித்தானென்க. (கசரு)

சூரனுக்கோர்வீரரெனத்தோன்றினோர்குலத்துதித்தார்
தாரணியிலொருவனொருதகுகருமஞ்செய்வானே
லாருமதுதகுமென்பதன்றியுமற்றதைமுடிக்க
நேருவதுமோவாதநெறியாகுமென்ஞான்றும்.

(இ - ள்.) சூரபன்மனைக் கொல்வதற்கு ஒப்பற்ற வீரனொன்றவதரித்த வீரவாகுதேவரின் குலத்திற் பிறந்தோர்களில் ஒருவன் உலகத்திற் குபகாரமான ஓர் தொழிலைச் செய்வானாகில், மற்றும் அக்குலத்திற் பிறந்தோரனைவரும் அக்காரியம் தகுதியானதே யென்பதுடன் அக்காரியத்தை நிறைவேற்றுவதற்காகத் தாங்களும் அதற் கொருப்படுவதும் எக்காலத்திலும் அழியாத நீதியாகும். எ - று.

நற்குலமுடையார்க்கு, அக்குலத்தோனொருவன் புரியும் உலகோபகாரத்தொழிலை வியந்து தத்தமக்கியன்றவரை யுதவிபுரிந்து அத்தொழிலை நிறைவேற்றலே கடமையென் றுணர்த்தியவாறறிக. (கசசு)

ஒன்னலனைவெல்வமெனவும்மவையின்மற்றிவர்கள்
சொன்னமொழிப்படிநடக்கத்தூதனுப்பவேண்டுமது
பின்னமுறுங்காரணத்தாற்பெரும்பறையேதூதாக
மன்னவனேயறைந்துவிடன்மநுமுறையின்விதியென்றான்.

(இ - ள்.) ஓ வேந்தனே! உமது பகைவனாகிய இரட்டனை வெற்றிகொள்வோமென்று உம்முடைய கொலுச்சபையில் இவர்கள் செய்த சபதத்தின்படி நடப்பதற்காக, முதலிலே ஓர் தூதனுப்பவேண்டியது முறைமை, அவ்வாறு தூதனுப்பப் பழுதும்சேர்ந்த காரணத்தினாலே, பெரிய பறையையே தூதாக வெண்ணி முழங்கச்செய்வது மனுஸ்மிருதியின் முறைமையெனக் கூறினர்.

போர்க்குப் புறப்படுவதன் முன் தூதனுப்புதலே மன்னர்கண் முறைமை யேனும், அம்முறைமை இருதிறவரும் சமத்துவத் தன்மையுடையார்க் கேயு மேயன்றி ஏனையோர்க்கேலாமையின், சாதாரணக் குடிகளில் ஒருவனாகிய இவ் விரட்டனுக் கதூதகாதென்று குறிப்பிப்பான், "அதுபின்னமூறுங்காரணத்தால்" என்றும், எவ்வகையாரேனும் யுத்தத்திற் கெதிர்க்கவேண்டினோர்க்கு முன்னர் குறிப்பாயுணர்த்துதல் முறைமையாகலின், "பறையேதூதாகவறைந்துவிடல் மதுமுறையின்விதி." என்றும் கூறினர். (கசுஎ)

காதலுறுந்தனியனிதுகழறவளவேசஞெடு
மோதருஞ்சீர்வயவீரரொருங்குமனமொருப்பட்டா
ராதவன்றன்குலமணியேயாணுக்கேருனவர்கள்
போதவிரைந்துரைதேவசாட்சிநிலைபுகன்றேமால்.

(இ - ள்.) பகைவர்களை வெல்வதிற் பேராவலுள்ள கச்சித்தனியனென்ப வர் இவ்வாறு கூறுதலும், அப்பராந்தகச் சோழனுடனே சொல்லுதற்கரிய புக ழ்வாய்ந்த ஜெயவீரர்களனைவரும் அவ்வாறே சம்மதித்தார்கள். சூரியகுல ரத்தி னமே! ஆண்மக்களிற் சிறந்தோர்களாகிய வீரநாராயணனென்னும் இருவரும், அப்பகைவனைச் செயங்கொள்ளப்போவதற்காக அதிவிரைவிற் செய்துகொண்ட தேவசாட்சி யென்னும் சபதமுறையைக் கூறினேமென்று கவிச்சக்கரவர்த்தி யார் திருவாய் மலர்ந்தருளினர். எ - று.

சொன்னசொல்லைக் காப்பாற்றுவோரோ ஆண்மக்களிற் சிறந்தோரென்ப தும், அச்சொல்லை மறப்போரும் பயனற்ற சொற்களைக் கூறுவோரும் ஆண்மக் களென்னும் நெற்களுக்குள்ளே பதருக்கொப்பாவார்களென்பது நூற்றுணிபாக லும், வீரநாராயணனென்னும் இருவரும் தாங்கள் செய்த சபதத்தை நிறைவே ற்றி மிக்க புகழ்பெற்று வாழ்ந்தார்களாகலானும், "ஆணுக்கேருனவர்கள்." என்றார். இதனை, "பயனில்சொற்பாராட்டுவானைமகனெனல் - மக்கட்பதடி யெனல்." என்னும் திருக்குறளுரையானுந்தெளிக. (கசுஅ)

தேவசாட்சிச்சருக்கம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம். ருசுக

---

## தூதறைசருக்கம்.

சூரனிடந்தூதானன்வீரனிலங்காதியன்பாற்சொன்னன் றாது
மாருதிசுயோதனன்பாற்கிருட்டினனே தூதானன்மன்னரன்ன
ராரணியுங்குலோத்துங்கவரசேவல்லான்றிருடனுதலாவிப்
பாரறியப்பறையறைந்துதூதுவிட்டார்வீரரிதுபகரக்கேண்மோ.

(இ - ள்.) ஆத்திமாலையணிந்துள்ள குலோத்துங்கச் சோழனே! சூரபன் மாவினிடத்தில் வீரவாகுதேவர் தூதானர். இலங்கைநகரத் திறைவனாகிய இரா

வணிடத்தில் ஆஞ்சனேயர் தூதுரைத்தார். துரியோதனனிடத்தில் கிருஷ்ணமூர்த்தியே தூதானார். ஆனால் அவர்களெல்லாம் அரசர்களாகும். வல்லாளனென்னும் இரட்டனோ கள்வனாகையால் கச்சித்தனியர் முதலிய வீரர்களெல்லாம் இவ்வுலகமெங்கும் அறிந்து கொள்ளும்படி பறையறைந்து தூதுரைக்குமாறு ஏவினார்கள். அதைக்கூறுகின்றோம் கேட்பாயாக. எ - று.

எக்காலத்து எவ்வெவர்க் கெவ்விதமாய் நடத்தவேண்டுமோ அவற்றிற்கு மாறாகநடத்தின் அக்காரியங்கள் கெடுமாகலின், அரசர்க் கனுப்பவேண்டிய தூதைத் திருடனுக்கனுப்புதல் தகாதென நிறுத்திப் பறையறைவித்தனரென்க. மாறாக நடத்திற் கெடுமென்பதை, "செய்தக்கவல்லசெயக்கெடுஞ்செய்தக்க - செய்யாமையானுங்கெடும்." என்னும் திருக்குறளானுந்தெளிக. (௯)

உலகறியப்பறையறையச்செய்தார்களுத்தமர்க
ளலகில்பெரும்புகழ்பரவுமாண்மையுள்ளவிறல்வேந்தர்
வலிமையுடனெமக்கும்வென்றிவருவித்தமாண்பாளர்
நிலைமையுள்ளாரிவர்பெருமையென்னென்றுநிகழ்த்துவன்யான்.

(இ - ள்.) உலகத்தாரனைவரும் அறிந்து கொள்ளும்படி உத்தமர்களாகிய அவ்வீரர்கள் பறையறைவித்தார்கள். அளவிறந்த பெருங்கீர்த்தி உலகமெங்கும் பரவச்செய்த ஆண்மைத்தன்மை வாய்ந்து வெற்றிபெற்ற மன்னவர்களும், எமக்கும் வலியவே வெற்றியைத் தருவித்த மாட்சிமையுடையவர்களும், மனோநிலைமையுள்ளவர்களுமாகிய இச்செங்குந்த வீரர்களின் சீர்த்தியை யான் ஏதென்று கூறுவேன். எ - று.

அலகில்பெரும்புகழ்பரவுமாண்மையுள்ளவிறல்வேந்த ரென்பதை, "வீணுக்கேறுதவாய்மைவிளம்பிடாவெற்றியாள - ராணுக்கேறய்ப்பிறந்தோரடுபுலிப் பதாகைமன்னர் - நாணுக்கேறுதசாபகாட்டியேயிறுத்தமாறன் - மாணுக்கேறு தமாற்றுரடைந்திடமருவுங்குந்தம்." எனவும், வலிமையுட னெமக்கும் வென்றி வருவித்த மாண்பாளரென்பதை, "வரச்சிங்காதனவளவர்தம்பிரான் - றரச்சிங்காதனந்தன்னிலேறியே - துரைச்சிங்காதனந்தொழுங்கவிக்கிடுஞ் - சிரச்சிங்காதனச்சீர்செங்குந்தமே." எனவும்வரும் ஈட்டி யெழுபதின் திருவிருத்தங்களானுந்தெளிக. (௨)

என்றவுடன்வ்ளவேசனெண்ணரியவுவகையுடன்
பொன்றிகழ்நாடதுபுரக்கும்புரந்தரன்வம்சத்தினனாய்
வென்றிபுனைசெங்குந்தவீரர்புராதனமுணர்ந்த
குன்றலிலாப்பெரும்பறையன்றனைவிளித்துக்கூறுவனால்.

(இ - ள்.) பறை யறைவிக்கவேண்டுமென்று வீரர்கள் கூறியவுடனே பராந்தகச்சோழன் களிப்பு மீக்கூர்ந்து பொன்மயமாகவிளங்கும் தேவலோகத்தைப் பரிபாலிக்கின்ற இந்திரனுடைய மரபினனாய், வெற்றிவாய்ந்த செங்குந்தவீரர்களின் பூர்வீகசரிதைக ளறிந்துள்ள குறைபாடற்ற செல்வமுடைய பெரும்பறையனை வரவழைத்து இவ்வாறு கட்டளையிடுகின்றனன். எ - று.

யானையேறும் பெரும்பறையனென்பவன் இந்திரனது மரபினனாய்த் திருவாரூருக்கு வந்தவனென்பது புராணசரிதமாகலின், "பொன்றிகழ்நாடதுபுரக்கும்புரந்தரன்வம்சத்தினனாய்." என்றார். (௩)

செங்குந்தர்பன்னிருவர்சேரலன்வல்லான்றலையை
யங்கையினிற்கொடுநாளைக்கைக்கந்தாநாள்வரவிசைந்தார்
நங்குடிகணகர்புனைந்துநாடினருட்டேவர்தம்
பங்கிலுறநோற்றிடுவான்பறையறைகவெனமொழிந்தான்.

(இ - ள்.) செங்குந்தமரபினராகிய வீரர்கள் பன்னிருவர் ஒருங்குகூடி, எமது பகைவனாகிய வல்லான் என்பவனுடைய தலையைவெட்டி, நாளையதினத்திற் கைக்கந்தாவது நாளையில் கையிலெடுத்துக்கொண்டு வருவதற் கொருப்பட்டார்கள். ஆதலால் நமது குடிகளாயுள்ளாரனைவரும் நகரத்தை யலங்கரித்து, அவரவர்கள் நாடியுள்ள இனிய திருவருள்வாய்ந்த தேவதைகள் அவ்வீரர்கள் பட்சமாயிருக்கும்படி பிரார்த்தித்துக் கொள்வதற்காகப் பறையறையக் கடவாயென்று கட்டளையிட்டனன். எ - று.

இராஜ விசுவாசமுடைய குடிகளெல்லாம் அரசனுக்குரிய காரியங்கள் வெற்றியாகவேண்டுமெனத் தத்தம் உபாசனாமூர்த்தங்களைப் பிரார்த்திக்கவேண்டுவது கடமையாகலின், "நங்குடிகணகர்புனைந்துநாடினருட்டேவர்தம்-பங்கிலுறநோற்றிவோன்." என்றார். (௪)

பறையறைகவெனமொழிந்தபராந்தகன்றனுரைகேளா
முறையுளிநித்தியநியதிமுடித்துத்தன்விருதையெலா
நிறைபெறக்கொண்டானைமிசைநெடுமுரசினுடனேறி
யறைதருவானாயினனமரரலர்மழைபொழிந்தார்.

(இ - ள்.) பறையறையக்கடவாயென்று கட்டளையிட்ட பராந்தகச்சோழனுடைய வார்த்தையைக்கேட்டு, முறைப்படியே தனக்குரிய நித்தியகருமங்களை முடித்துக்கொண்டு, தன்னுடைய விருதுகளனைத்தையும் குறைவற எடுத்துக்கொண்டு, பெரிய முரசப்பறையுடனே யானைமீதேறிக்கொண்டு பறையறையத்தொடங்கினன். அப்போது தேவர்கள் புஷ்பமாரி பொழிந்தார்கள்.

, பறையறையுந் தொழிலை மேற்கொண்ட இவன் இந்திரனது அம்சமாகிய யானையேறும் பெரும்பறையனுடைய சந்ததியானதலால், முறைமைதவறாதவனென்றும் விசேடவிருதுகளுடையவனென்றும் தேவர்களாற் கொண்டாடப்பெற்றவனென்றும் விளக்குவான், "முறையுளிநித்தியநியதிமுடித்து." என்றும், "தன்விருதையெலாநிறைபெறக்கொண்டு." என்றும், அமரரலர்மழைபொழிந்தார்." என்றும் கூறினர். (௫)

சிவநந்திகணத்தலைவராவிளங்குந்திறல்வேந்தர்
தவந்தேவர்புரியவருட்சத்திபதச்சிலம்புமணி

நவமங்கைமாரிடமெய்ம்மீசையுடனுனிலத்திற்
பவங்கொண்டார்வல்லாளைத்தலையறுக்கப்படைகொண்டார்.

(இ - ள்.) இரண்டாஞ்சம்புவாகிய நந்திகணுதிபர்களாயிருந்து தேவர்கள் தவம்புரிந்தகாரணத்தினுலே அருட்சத்தியாகிய உமாதேவியாருடைய திருவடிச்சிலம்பினின்றுதிர்ந்த நவரத்தினங்களிற்றேன்றிய நவமாதர்களிடத்திலே சரீரவளர்ச்சியுடனும் மீசையுடனும் இந்நிலவுலகத்துதித்தவர்களாகப் புகழோங்கிய வல்லபமுள்ள அரசர்கள், வல்லாளைத் தலையறுக்கும்படி ஆயுதசன்னத்தர்களாய்ப் புறப்பட்டார்கள். எ - று.

செங்குந்தமரபினர் பிரமசிருட்டியிலகப்பட்ட ஏனையமரபினரைப் போன்றவர்களல்லரென்பான், "சிவநந்திகணத்தலைவர்." என்றும், இவர்கள் பிரதமத்தில் நிலவுலகத்திற்கு வினைச்சம்பந்தத்தால் வந்தவரல்லரென்பான், "தவந்தேவர்புரிய." என்றும், அவ்வாறு வந்தகாலத்தும் மானிடர்கள் வயிற்றில் அவதரித்தவர்களல்லரென்பான், "சத்திபதச்சிலம்புமணிநவமங்கைமாரிடம்." என்றும், இவ்வீரர்கள் சிசுக்களாய்ப்பிறந்து அதன்பின் வயது வளரவளரச் சரீரவளர்ச்சியடைந்தவர்களல்ல ரென்பான், "மெய்ம்மீசையுடனுனிலத்திற்பவங்கொண்டார்." என்றும் கூறினர். (சு)

பண்டாறுமாமுகவனுக்குப்பாழிமிகுந்தம்பியராய்
மண்டியெதிர்சூராதிமருவலரைமாய்த்துப்பி
னெண்டிசையும்போற்றுமநுவிருங்குலத்தோர்க்குறவினரா
யண்டியவர்க்கடலனைத்துமாக்குவித்தெண்ணான்கறமும்.

(இ - ள்.) ஆதிகாலத்திற் சண்முகக்கடவுளுக்கு வல்லபம்மிக்க சகோதரர்களாயிருந்து, நெருங்கியெதிர்த்த சூரபன்மன்முதலிய பகைவர்களைக்கொன்று அதன்பின்பு, அஷ்டதிக்குகளினும் புகழப்பட்ட மனுகுலத்தரசர்களுக்குறவின்முறையாராய் அவர்களுடன் கலந்து, அவ்வரசர்களுக்கு வெற்றியனைத்தையும் விளைத்து, முப்பத்திரண்டு தருமங்களையும் எ - று.

முப்பத்திரண்டறங்களாவன:—"வண்ணான்புன்னாவிதன்காதோலைசோலைமடந்தடம்வெள் - சுண்ணம்பறவைப்பிணஞ்சுடற்றாரியஞ்சோறளித்தல்-கண்ணாடியாவிற்குரிஞ்சுகல்வாயுறைகண்மருந்து-தண்ணீர்ப்பந்தற்றலைக்கெண்ணெய்பெண்போகந்தரலையமே." எனவும், "மேதகுமாதுலர்க்குச்சாலையேறுவிடுத்தல்கலை - யோதுவர்க்குண்டிவிலங்கிற்குணவோயெர்பிணிநோய்க் - கீதன்மருந்து சிறைச்சோறளித்தலியல்பிறரின் - மாதுயர்காத்தனற்கன்னியர்தானம்வழங்கலுமே." எனவும், "கற்றவறுசமயத்தார்க்குணவுகருதும்விலை - யுற்றதளித்துயிர்மீட்டல்சிறுருக்குநவனற்பான் - மற்றுமகப்பெறுவித்தல்சிறுரைவளர்த்தலெனப் - பெற்றவிவற்றினையெண்ணான்கறமெனப்பேசுவரே." எனவும் வரும் இரத்தினச்சுருக்கத் திருவிருத்தங்களாற்றெளிக. (எ)

அம்புவியிற்றழைத்தோங்கவமரர்நலார்தமைவேட்டே
யெம்பரனூர்புண்ணியங்களனைத்தனைத்துமினிதியற்றிச்
செம்பொருள்சேர்தமிழ்நாட்டின்செழுமணித்தீபம்போன்றோர்
வெம்பியொருபன்னிருவர்விடியவெளியாகின்றார்.

(இ - ள்.) நிலவுலகத்தில் விளக்கமுற்று அபிவிர்த்தியாகும்படி தேவமாதர்களையே திருமணம் முடித்து, எமது சிவபெருமான் புண்ணியங்களெத்தனையோ அத்தனையும் இனிமையுடன் செய்து, செப்பமான பொருளமைந்த தமிழ் வழங்கும் தேயங்களுக்கெல்லாம் செழுமையான இரத்தினதீபம் போன்றவர்களாகிய செங்குந்தவீரர்கள் பன்னிருவர் நாளை காலையிற் புறப்படுகின்றார்கள்.எறு.

மேற்செய்யுளு மிதுவுங் குளகம். தேவமாதர்களையே திருமணம் முடித்தார்களென்பதை, இந்நூற் போராடற்சருக்கத்துப் பதினேழாவது செய்யுளுக்குதாரணமாகக்காட்டிய கந்தபுராணத் திருவிருத்தத்தானுந்தெளிக. (அ)

ஆதலினாலித்தஞ்சையணிநகருக்கணியனையீர்
நீதில்வளமாடமலைவசெறிதெருத்தெற்றிகண்முதலா
வோதுமிடமனைத்தையுநல்லுவகையுடன்றனித்தனியே
வீதமதாய்விண்ணவரும்வியக்கவலங்கரித்திடுமின்.

(இ - ள்.) ஆகையால் அழகிய இத்தஞ்சைமாநகரத்திற்கு ஆபரணம் போல் விளங்குகின்றவர்களே! குறைவற்ற வளப்பம்வாய்ந்த மாளிகைகள் நிறைந்துள்ள வீதிகள் வேதிகைகள்முதலாகச் சொல்லுகின்ற மற்றைய இடங்களெவற்றையும் மிகுந்த களிப்புடன் ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் எல்லைப்படி தேவர்களும் அதிசயிக்கும்படி அலங்கரிப்பீர்களாக, எ - று.

ஆபரண மில்லாவழி அரிவையர்க் கெவ்வாறழகில்லையோ அதுபோன்று, குடிகளில்லாவழி நகரத்திற் கழகின்மையின் குடிகளையே நகரத்திற் காபரணமாக வுவமித்து, "தஞ்சையணிநகருக்கணியனையீர்" என்றும், ஒவ்வோர் வீதியின்கண்ணுள்ள ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் அனுபவத்திலுள்ள எல்லைவரையில் அலங்கரிப்பீராக என்பார், "தனித்தனியேவீதமதாய்." என்றும் கூறினார். (கூ)

அவ்வவருநாளைமுதலைந்துதினம்விரதங்காத்
தெவ்வமிறங்குலதெய்வமேத்திபறம்பலவியற்றித்
தெவ்வடுவேலபயற்குஞ்செங்குந்தர்தமக்குமொரு
தெளவலுநேராதவணந்தாழ்ந்துபிரார்த்தித்திடுமின்.

(இ - ள்.) அன்றியும் அவரவர்களும் நாளையத்தினம் முதலாக ஐந்துதினங்களும் விரதமாகவிருந்து, பழிப்பற்ற தங்கள் தங்கள் குலதெய்வங்களைத் துதித்துப் பலவித தருமங்கள் புரிந்து, பகைவரைக்கொல்லும் வேலேந்திய பராந்த

கச்சோழனுக்கும் செங்குந்தமரபினராகிய வீரர்கள் பன்னிருவருக்கும் யாதோர் கெடுதியும் சம்பவிக்காவாறு பணிந்து பிரார்த்தித்துக்கொள்வீர்களாக. எ - று.

குடிகளாகிய தங்கட்கு நிர்ப்பயமுதிக்கும் வண்ணமே சோழன் வேண்டிக் கொண்டதும் வீரர்களிசைந்ததுமாகலின், குடிகளனைவரும் அவ்வீரர்கள் வெற்றியடையுமாறு பிரார்த்திக்கவேண்டியது கடமையென்றறிவிப்பான், "தெவ்வடுவேலபயற்குஞ்செங்குந்தர்தமக்குமொரு - தௌவலுறோாதவணர்தாழ்ந்துபிரார்த்தித்திடுமின்." என்றதென்க. (கo)

என்றுதஞ்சைநான்மாடவெழின்மறுகெலாம்பறையை
நன்றறைந்தங்குடன்குழுவுநால்வருணரொடும்வல்லான்
றுன்றுகடம்பூரினுமீதுணர்த்திடுவான்றன்னுகையில்
வென்றிபுனைவீரர்திறம்விரித்திவ்வாறறைகின்றான்.

(இ - ள்.) என்றிவ்வாறாகத் தஞ்சைமாநகரத்தின் அழகமைந்த நான்கு மாடவீதிகள்தோறும் பெரும்பறையை மிகவும் முழக்கி, அவ்விடத்தில் ஒருங்கு கூடின நான்கு வருணத்தர்களுடனே வல்லான் வசித்திருக்கும் கடம்பூர் என்னும் ஊரினும் இச்செய்தியைப் பறையறையப்போகும்போது, வெற்றியமைந்துள்ள அவ்வீரர்களின் வல்லபத்தை இவ்வண்ணம் கூறுகின்றனன். எ - று.

செங்குந்த மரபினர்க்கு முதல்வராகிய நவவீரர்கள் ஏனையரைப்போன்று பிரமசிருட்டிக்குட்படாதவராகலானும், அவ்வாறுட்பட்டோரே நால்வருணத்தராகலானும், அந்நான்குவருணத்தரினும் மேம்பட்டுச் சிவகுமார பாரம்பரியராவாரென்பதை விளக்குவான், "அங்குடன்குழுவுநால்வருணரோடும்." என்றார். இதனை, "முறைச்சோறுவன்பிணியாளர்க்குயாத்திரைமுந்துவர்க்குத் - துறைச்சோறுமுத்தமிழ்ச்சூரிகட்குஞ்சதுத்தொல்குலர்க்கு - மிறைச்சோறுநற்றவர்க்கின்சோறுங்காவலிலெய்த்தவர்க்குச் - சிறைச்சோறுமீகுவர்கைக்கோளராகியசெங்குந்தரே." என்றும், "நாற்பாற்குலத்தொழினண்ணுசெங்குந்தரநாற்குலத்து-மேற்பாலராகிவிளங்குசெங்குந்தர்தம்வெஞ்சமரிற் - றேற்பாரைத்தொண்டுகொடுயேசெங்குந்தர்துறக்கமிகு - சேற்பாவுகண்ணியர்க்கார்வலராகியசெங்குந்தரே." என்றும் வரும் செங்குந்தர்மாலைத் திருவிருத்தங்களானுந்தெளிக. (கக)

ஆறுமுகவேடுணையாயண்டமெலாஞ்செண்டாடுஞ்
சீறுபுலிக்கொடியுடையசெயவேந்தரந்தரத்திற்
பாறுலவுஞ்செங்குந்தப்படையாளர்வல்லான்றன்
வீறுபெறுந்தலையறுக்கவெளிவந்தார்வெளிவந்தார்.

(இ - ள்.) சண்முகக்கடவுளுக்குச் சகோதரர்களாய் அவதரித்து அண்டகோடிகளனைத்தையும் பந்தாடும் வல்லபமுள்ளவர்களாயும், கோபிக்கின்ற புலித்துவசமுடையவர்களாயும், வெற்றியோங்கிய மன்னவர்களாயும், ஆகாயத்திற் பருந்துகள் மொய்க்கும்படி உலாவுகின்ற செங்குந்தமென்னும் வேற்படையுடையவர்களாயும் விளங்குகின்ற உபசுப்பிரமணிய குலோற்பவர்கள் வல்லானென்ப

வனுடைய பெருமைபெற்ற தலையை வெட்டுவதற்காகப் புறப்பட்டார்கள் புறப்பட்டார்கள். எ - று. (கஉ)

நகம்படைத்தவொருமாதுதந்தவயற்படையார்
சகம்படைத்தநான்முகனைச்சாமியுரைகாப்பவவ
னகம்புடைத்துவிலங்கிட்டவதிவீராக்ரமத்தோ
டிகம்புடைத்துவல்லான்மூர்த்தினியறுக்கவெய்துகின்றார்.

(இ - ள்.) இமயவரையரையன் ஈன்றருளிய ஒப்பற்ற உமாதேவியார் கொடுத்தருளிய வெற்றியமைந்து சிறந்த செங்குந்தப்படையுடையவர்கள், உலகங்களைச்சிருட்டித்த பிரமதேவனைத் தங்கள் தலைவராகிய சண்முகக்கடவுளின் திருவார்த்தையைப் பரிபாலிக்கும்பொருட்டு அவனுடைய கருவத்தையழித்து அவன் காலிற் றளைபூட்டிய மிக்க வீரமுடையவர்கள், வீராவேசத்தோடு இவ்வுலகத்திலே வல்லானென்பவனையழித்து அவன் றலையையறுக்க வருகின்றார்கள். எ - று.

பார்வதியாரால் அருளப்பட்ட செங்குந்தமென்னும் வேற்படையுடையவரென்பதை, இந்நூற் போராடற்சருக்கத்துப் பத்தொன்பதாவதுசெய்யுளுக் குதாரணமாகக்காட்டிய ஈட்டியெழுபதின் றிருவிருத்தத்தானும், பிரமனைக் குட்டிசிறைப்படுத்தினரென்பதை, "அரும்பிரணவப்பொருளையாயாவயற்குப்-பெருந்தளைச்சிக்கஞ்செய்பெருமைக்கை" என்னும் திருக்கைவழக்கத்தானுந்தெளிக.

ஆரூரில்விடங்கரைக்கொண்டமைத்திட்டவன்பாளர்
தேரூருந்தில்லையிலேகொடியேற்றுந்திருவாளர்
காரூரும்பொழிற்றுணக்கடியரணத்துள்ளிரட்டன்
றாரூருங்களமறுக்கத்தனிவந்தாரினிவந்தார்.

(இ - ள்.) திருவாரூரில் வீதிவிடங்கரென்னும் தியாகராஜப்பெருமானைத் தேவேந்திர னிடத்தினின்றும் வாங்கிக்கொண்டுவந்து பிரதிஷ்டைசெய்த அன்புடையவர்களும், தேருலாவும் வீதிகளையுடைய சிதம்பரத்திலே நடராஜர் திருவிழாவுக்குத் துவசாரோகணஞ் செய்விக்கின்ற மேன்மையுடையவர்களுமாகிய செங்குந்தவீரர்கள்; மேகமண்டலத்தையளாவும் சோலைகள்சூழ்ந்து எஃகுத்தம்பத்தின்மீது காவலுடன் கட்டியுள்ள கோட்டைக்குள்ளே வசித்திருக்கின்ற வல்லானென்னும் இரட்டனுடைய மாலையணிந்திருக்கும் கழுத்தை யறுப்பதற்காகத் தனியே வந்தார்கள். இப்போதே வந்தார்கள். எ - று.

தேவலோகத்திலிருந்து தியாகராஜரைக்கொண்டுவந்து பூலோகத்தில் தாபித்தார்களென்பதை, "விண்டுமார்பத்திடையிருத்திவேலைக்களரிபணிமாறப்-பண்டுபூசித்திடுங்காலையாகண்டலன்போய்ப்பாற்கடலின் - வண்டுழாய்மாயனைவணங்கிவானிற்பழிச்சுந்தியாகரைமேற் - கொண்டுபோந்துபாரின்முசுகுந்தற்குதவுஞ்செங்குந்தம்." என்னும் ஈட்டியெழுபதின் திருவிருத்தத்தானும், தில்லையிற்

கொடியேற்றினேரென்பதை, இந்நூற் சிறப்புப்பாயிரத்துள்ள தில்லைவாழ்செங் குந்தர் துதியானுந் தெளிக. இனி என்பது ஈண்டு இப்போதென்னும் பொருளில் வந்தது. இவ்வாறு வருவதுண்டென்பதை, 'பண்டறியேன்கூற்றென் பதனையினியறிந்தேன் - பெண்டகையாற்பேரமர்க்கட்டு." என்னும் திருக்குறளானுமறிக. (கச)

கழுக்குன்றிற்சம்பாதிக்கமுதூட்டுங்கைக்கோளர்
மழுக்குன்றவிற்படையான்மாபாலர்காவிரியாற்
செழுக்குன்றுவளநாடன்றிருச்சமுகமிருந்தவல்லான்
வழுக்கண்டுதலையறுக்கவருகின்றூர்வருகின்றூர்.

(இ - ள்.) திருக்கழுக்குன்றமென்னும் க்ஷேத்திரத்தில் சம்பாதி சடாயுவென்னும் இரண்டு கழுக்களுக்குத் திருவமுதூட்டுகின்ற செங்குந்தமரபினரும், மழுவையும் மேருவரையாகிய விற்படையையுமுடையவராகிய சிவபெருமானுடைய குமாரர்களுமான வீரர்கள்; காவிரிநதிப்பெருக்கால் வளமைகுன்றாத சோழநாட்டதிபனாகிய பராந்தகச்சோழனுடைய திருச்சமுகத்தினின்றும் வெளிக்கொண்டு வல்லான் என்பவனுடைய கொடுமையைநோக்கி அவன் தலையை யறுக்கும்படி வருகின்றூர்கள் வருகின்றூர்கள். எ - று.

திருக்கழுக்குன்றிற் சம்பாதிக் கமுதூட்டுமரபினரென்பதை, "அம்பாழிமூழ்கியொருகற்பமெலாங்கிடக்கினுமென்னழலினின்று - வெம்பாமேவெளிக்காலுண்டேட்காலைவெளியில்விடாதிருந்தாலென்னே - வம்பாருமிதழியணிவேணியனூர்வேதமலைவலம்வந்தீண்டுஞ் - சம்பாதிக்கமுதளிக்குஞ்சயக்குந்தம்போல்வினவத்தாராவன்றே." என்னும் ஈட்டியெழுபதின் திருவிருத்தத்தானும், சிவகுமாரர்களென்பதை, "அப்பணிவேணியராலாலகண்டரன்பர்க்கெளிய - ரொப்புயர்வற்றவர்தஞ்சிறுபாலரென்றெண்கவிக - டப்பில்புராணம்பரணியுலாபிளைத்தண்டமிழ்முன் - செப்பும்பிரபந்தமெண்ணிலபெற்றவர்செங்குந்தரே." என்னும் செங்குந்தர்மாலைத் திருவிருத்தத்தானும் தெளிக. குற்றமின்றி விரோதவாகக் கோபியாரென்பதை விளக்குவான், "வல்லான்வழுக்கண்டுதலையறுக்கவருகின்றூர்." என்றூரென்க. (கரு)

முத்திக்காமகம்புரிந்தமுனிவரனுக்கிடராற்று
மத்திக்காளூர்திமுதலமரர்தமைப்புறங்கண்ட
சத்தித்தாரொருகுந்தப்படையாளர்தரியலனைக்
குத்தித்தான்றலையறுக்கக்குதித்தெழுந்தாருதித்தழுந்தார்.

(இ - ள்.) மோட்சத்தை யபேக்ஷித்து யாகஞ் செய்துகொண்டிருந்த ஓர் முனிவருக்கு இடையூறு புரிந்த வெள்ளையானை வாகனனாகிய இந்திரன்முதலிய தேவர்களை முதுகுகாட்டி யோடச்செய்த வல்லமையுடன் தாவிச்செல்லும் ஒப்பற்ற செங்குந்தமென்னும் வேலாயுதமுடைய கைக்கோளர்களும், மீண்டு மீண்டும் பிறந்து பிறந்து சுழலாதவர்களுமாகிய வீரர்கள் பகைவனாகிய வல்லானைக் குத்தித் தலையறுக்கும்படி கோபாவேசத்தாற் குதித்தெழுந்தார்கள்.

ஓர் முனிவருக்காக இவ்வாறு தேவர்களை வெற்றிகொண்டாரென்பதை, "பரகதிவேள்விபண்ணுமிருடிதன்பான்மைபாரா - வரகதிதந்தையேவுமமரரை மடியநூறி - யிரதமோடிவுளிவேழமியாகதானத்துக்கீந்து - சிரமணிமகுடம்பெற்றசெங்குந்தர்போலுமுண்டோ." என்னும் ஈட்டியெழுபதின் திருவிருத்தத் தானும் தெளிக. இம்முனிவர் முருகக்கடவுளால் முத்தியடைவான்கருதி யாகஞ்செய்ததை யுணராத பிரமன் அந்த யாகபலனுக்காகத் தனது பதவியை அவர்க்களிப்பான் கருதித் தேவரைக்கொண்டு அவரை அழைக்க, அக்கால் அவர் தாம் வேண்டியது பிரமபதவியன்றென்று மறுக்க, அதற்காற்றுதவராய்த் தேவர்கள் அம்முனிவரை யெதிர்க்கையில் முருகக்கடவுளின் சகோதரர்களாகிய வீரர்கள் அத்தேவர்களுடனெதிர்த்து அவர்களோட்டெடுக்கச் செய்தனரென்பது சரித்மாகலின்; அதைச்சுருக்கி இவ்வாறு கூறினர். இச்சரித்திரவிரிவைச் செங்குந்தர் புராணத்தில் விரிவாய்க்காணலாம். சத்தித்தா வொரு குந்தப்படையாளர் என்பதற்குப் பார்வதியார் பாலித்த ஒப்பற்ற வேற்படையுடையாரெனக் கூறினுமாம். (கசு)

காளிவலக்கைத்தாளம்பறித்தார்த்தகைக்கோளர்
மீளிநமனைச்சமரில்வெங்கண்டவயவேந்தர்
தூளிபடவானுருந்தூணேறியவனுடலங்
கூளியுணத்தலையறுத்துக்கொள்ளுவதில்லையமிலை.

(இ - ள்.) காளிதேவியின் வலக்கரத்திருந்த தாளத்தைப்பறித்து ஆர்ப்பரித்த செங்குந்தர்களும், வல்லபமுள்ள யமனைப் போர்க்களத்தில் முதுகுகாட்டியோடச்செய்த வெற்றியமைந்த மன்னர்களுமாகிய வீரர்கள்; ஆகாயத்தையளாவிய இருப்புத்தம்பத்தின்மீதேறி அவ்வல்லானுடைய கோட்டைகளைத் தூசெழும்பும்படி யடித்து அவனுடைய சரீரத்தைப் பேய்கள் புசிக்கும்படி தலைவெட்டிக் கொண்டுபோவதிற் சந்தேகமில்லை. எ - று.

காளிதேவியின் தாளத்தைப் பறித்தனரென்பதை, இந்நூற் சிறப்புப்பாயிரத் திருபதாவது செய்யுளுக் குதாரணமாகக் காட்டிய ஈட்டியெழுபதின் திருவிருத்தத்தானும், யமனுடனெதிர்த்து வெற்றிகொண்டனரென்பதை, "பிள்ளையாருயிர்க்குறுந்துணையாத்தனிப்பேறெய்துங் - கிள்ளையாரிவண்கொவேருகென்னுடலங்கிறிக் - கொள்ளையாருயிரெரிநரகுறவடுங்கூற்றுயிர்நனிசோர - வுள்ளியாவருநடுங்கத்தன்றிருமுகமேசெலுத்தொண்குந்தம்." என்னுமவ் வீட்டியெழுபதின் மற்றொரு திருவிருத்தத்தானுந் தெளிக. (கஎ)

சிறக்கையான்றனைமருதத்திடைமிதித்துச்சிரங்கொய்த
மறக்கைவேற்படைமருதமன்னவனையன்னவர்க
ளறக்கைபார்கொடுங்கோபமாகிவிக்கலன்றன்னை
யிறக்கைக்கேகவிடானையெல்லினொடும்வருகின்றார்.

(இ - ள்.) சிறக்கையானென்னும் ஓரரசனை மருதமரத்தடியில் மிதித்துத் தலையறுத்தவனாகிய கொடுமைத்தன்மையமைந்த செங்குந்தமேந்திய மருதவேந்தனையொத்தவர்களும், தருமம்புரியும் கரத்தினருமாகிய வீரர்கள் கடுங்கோபமுடையவர்களாய் விக்கலனென்னும் வல்லானை மரணத்திற் காயத்தப்படுத்த நாளையதிகாலையில் வருகின்றார்கள். எ - று.

மருதவேந்தனென்னும் செங்குந்தவீரர் சிறக்கையானென்னும் அரசனை வென்றாரென்பதை, "இடைமருதூரிற்சாபமேந்தியசிறக்கையானைப்- புடைமருதடியின்வீழப்பொருதியேபுறங்கொடாது - விடைமழுவுடையான்பாதமென்கமலத்திற்சேர்த்த - படைமருதன்கைக்குந்தம்போலினிப்பாரிலுண்டோ." என்னும் ஈட்டியெழுபதின் திருவித்தத்தானுமறிக. சூரியோதயகாலமாகிய அதிகாலையிலெனக் குறிப்பிப்பார், "எல்லினும்வருகின்றார்" என்றனரென்க.

முன்புசூர்வேரறுத்தமுனைவீரரிமையவரைப்
பின்புவான்குடியேற்றும்பேரரசரிந்நாளில்
வன்புசேர்மதிவல்லான்மணிமுடியைக்கொய்திடுவா
னின்புசேர்மனத்தோடுமிரதமிசையெழலுற்றார்.

(இ - ள்.) முற்காலத்தில் முருகக்கடவுட்குத்துணைவராயிருந்து சூராதியர் வேரறுத்தவர்களாகியபோர்வீரர்களும், தேவர்களையெல்லாம் அதன்பின்பு தேவலோகத்திற் குடியேற்றுவித்த பெருமைமிக்க வேந்தர்களுமாகிய செங்குந்தர்கள்; இக்காலத்திலே கொடுமைமிக்க மனமுடைய வல்லானென்பவனது அழகிய தலையை யறுக்கும்பொருட்டு இன்பமிக்க மனத்துடனே தேரின்மீதேறிப் புறப்படலானார்கள். எ - று.

முன்புசூர் வேரறுத்த முனைவீரரென்பதையும், இமையவரைப் பின்பு வான்குடியேற்றும் பேரரசரென்பதையும், "கருதலர்பொடிபடக்கருதுங்குந்தமே - விருதுடைச்சூர்முடிவெட்டுங்குந்தமே - பொதருனிப்புலிக்கொடிபுனையுங்குந்தமே-தருதலத்தருவெனத்தருஞ்செங்குந்தமே." எனவும், "செங்கவும் பொருதியதிருந்தலாரர - வங்கமேமண்மிசையாக்கியாவியைச் - செங்கதிர்வழியிடைச்செலுத்தித்தேவர்க - டங்களைவான்புகத்தருஞ்செங்குந்தமே." எனவும் வரும் ஈட்டியெழுபதின் திருவிருத்தங்களானுந்தெளிக. (ககூ)

மட்டலராரணிசோழன்றுணையாளர்மாநிலத்தார்
துட்டனிவனெனவாடுஞ்சூகரத்தின்கொடியானை
வெட்டிமணிமுடிபறிக்கவேண்டுமெனப்பன்னிருவர்
தட்டறவேபுறப்பட்டார்தரணியுயப்புறப்பட்டார்.

(இ - ள்.) நிலவுலகத்தார் ஈடேறும்படி அவதரித்தவர்களும், வாசனை வீசும் ஆத்திமலர்மாலைபணிந்த பராந்தகச்சோழரின் துணைவர்களுமாகிய செங்குந்தவீரர்கள் பன்னிருவரும், நிலவுலகத்துள்ளாரனைவரும் இவன் மிகக் கொடுமையாளன் எனக்கூறி வருந்துகின்ற பன்றிக்கொடியுடையவனாகிய விக்கல

னென்பவனை வெட்டி அவனது தலையைப் பறிக்கவேண்டுமென்றே தடையறப் புறப்பட்டுவிட்டார்கள். எ - று.

இச்செங்குந்தமரபினர் சோழன்முதலிய வேந்தர்கட்குத் துணையாவாரென்பதை, "ஆரஞ்செறியுமகலப்புருரானரிச்சந்திரன் - வீரஞ்செறிபுருகுற்சன்முசுகுந்தன்வெற்றிநள - னீரம்புணர்கார்த்தவீரியன்சோழனெழிற்செழியன் - சேரன்முதலனையர்க்கணியானவர்செங்குந்தரே." என்னும் செங்குந்தர்மாலைத் திருவிருத்தத்தானுமறிக. (உ0)

நஞ்சயிலுஞ்சிவன்மைந்தர்நாவிலகாமாண்பாளர்
விஞ்சுபுகழ்க்கைக்கோளர்வெய்யவல்லான்றலையறுக்க
யஞ்சுநாளென்றவதியதுகூறிவிரைவாகத்
தஞ்சையிடைவெளிவந்தார்தருமமிகவெளிவந்தார்.

(இ - ள்.) ஆலகாலத்தை அமுதாகக்கொண்டருளும் சிவபெருமான் குமாரர்களும், வார்த்தை மாறுபடாத மாட்சிமையுடையவர்களும், மிக்க கீர்த்தியுடைய உபசுப்பிரமண்ய குலோற்பவர்களும், தருமங்கள் உலகத்தில் ஈடேறும்படி அவதரித்தவர்களுமாகிய வீரர்கள்; கொடியவனாகிய வல்லானென்பவனுடைய தலையறுப்பதற்கு ஐந்து நாள் தவணையென்றுசொல்லி அதிவிரைவிலே தஞ்சைமாநகரத்திலே வெளிப்பட்டார்கள். எ - று. (உக)

இவ்வண்ணம்வயவீரரிசைகூறிச்செலலுற்ற
மைவண்ணப்பெரும்பறையன்வளங்கொண்டதிருக்கடம்பூ
ரெவ்வண்ணவீதியருமினிதறியவிரட்டர்பதி
யுய்வண்ணப்பேரேரியணைநின்றுமுரத்தறைந்தான்.

(இ - ள்.) இவ்வாறாக வெற்றியுள்ள செங்குந்தவீரர்களின் கீர்த்தியைச் சொல்லிக்கொண்டு போனவனாகிய கருநிறங்கொண்ட யானையேறும் பெரும்பறையன், வளப்பம் மிக்க திருக்கடம்பூரின்கணுள்ள எந்த வீதியிலிருக்கின்றவர்களும் நன்றாய்த் தெரிந்துகொள்ளும்படி இரட்டர்கட்குத் தலைவனாகிய வல்லான் தான் பிழைத்திருக்கும்படி கட்டிவைத்துக்கொண்டிருக்கும் பெரிய ஏரியின் கரைமேலு நின்றுகொண்டு உரத்த தொனியுடன் பறை முழக்கினான்.

வெற்றிபெறும்பறையரவம்வேழத்தின்முன்பின்னுஞ்
சுற்றிவருமக்களொலிதும்பிபிளிறொலியணையை
முற்றியெழுந்தனவல்லான்முன்காவலாளர்செவிப்
பற்றவெவருங்கேளாப்பயங்கொண்டாரிதுசெய்வார்.

(இ - ள்.) வென்றியடைந்துள்ள பறையின் முழக்கமும், அப்பறையனேறியுள்ள யானைக்கு முன்னும்பின்னுமாகச் சூழ்ந்துவருகின்ற மனிதர்களினோசையும், அந்தயானை கர்ச்சிக்கின்றதொனியும் அவ்வேரிக்கரைச்சுற்றினும் ஓங்கி

யிருந்தன. இவ்வாறான ஓசைகளனைத்தும் வல்லானுடைய கோட்டையிலுள்ள முதல்வாயிற் காவலாளர்கள் செவிகளிற் புகுந்தவளவில், அவர்களனைவரும் கேட்டு அச்சமடைந்து இவ்வாறு செய்வதாயினர். எ - று.

யாவராலும் வெல்லவேலானென்னும் பொருள்பட வல்லானென்னுங் காரணப்பெயர்கொண்டிருந்த இவனை வெல்லத்தக்க வீரர்கள் புறப்பட்டார்கள் என்றவார்த்தையைக்கேட்டு மனிதர்கள் குதூகலித்துப்பின்றொடர்ந்தார்களென்பார், "சுற்றிவருமக்களொலி." என்றாரென்க. (உங)

மெய்யதிரக்கடிதேகிவிக்கலன்கண்படுமிடத்துப்
பையவணைந்திருந்திரங்கிப்பதமேத்திவாய்புதைத்தெ
மையநமதணிமதில்சூழ்ந்தார்க்கின்றபேரோதை
மையம்புராசியெலாமவ்தொலித்தல்போலுமென்றார்.

(இ - ள்.) சரீரம் நடுங்கும்படியாக விரைவாகச்சென்று விக்கலனென்பவனுடைய படுக்கையறையிலே மெல்லச்சேர்ந்து ஓரிடத்திருந்து வருந்திப் பின்பு அவன்பாதங்களைப்பணிந்து வாய்பொத்திக்கொண்டு, எமது தலைவரே! நம்முடைய கோட்டையின் அழகுள்ள மதிலைச்சுற்றினும் ஆரவாரிக்கின்ற பெருங்கோஷ்டமானவை, கருநிறங்கொண்ட சமுத்திரங்களேழும் ஒருங்குகூடி முழங்குவதுபோலிருக்கின்ற தென்றார்கள். எ - று.

அரசன் தன்காதலியோடு கண்படுமிடத்து அவன் பரிசனராயுள்ளாருஞ் செல்லன் மரபன்றேனும் ஓராபத்துநேர்ந்துழி அவன் சீற்றங்கொள்ளாவகை சென் றறிவிக்கவேண்டியது கடமையாகலின் "விக்கலன்கண்படுமிடத்துப் பையவணைந்திருந்திரங்கி" என்றார், (உச)

எனவிரட்டர்பதிநெருனலிரவெல்லாந்தஞ்சைநகர்க்
கனவீரராற்பட்டகளைமாறக்கண்டுயில்காற்
கனவொன்றுகண்டனன்யான்கம்பலையுங்காண்குதுமென்
னினமாயமதியுடையீர்கேண்மினெனவிதுநவில்வான்.

(இ - ள்.) என்று காவலாளர்கள்கூற, அதுகேட்ட இரட்டர்கள் தலைவனாகிய விக்கலன், நேற்றிரவுமுழுவதும் தஞ்சைமாநகரத்துள்ள கனம்பொருந்திய வீரர்களாற்பட்ட துயரந்தீரும்படியாக யான் நித்திரைசெய்துகொண்டிருக்குங்கால் ஓர் கனாக்கண்டேன். அதற்கத்தாக்ஷியாயுண்டான பெருங்கோஷ்டத்தையும் இனிக்காணலாம். எமது சுற்றத்தினராகிய மதிமந்திரிகளே! முன்னர் யான்கண்ட கனவின்றன்மையைக் கேட்பீர்களாகவென்று இவ்வாறு கூறுகின்றான். எ - று. (உரு)

கரியொன்றுதுயில்போதுகன்றுகெடிதேவெருண்டங்
கரியிரண்டுசீறியெழவப்போதிலக்களிற்றின்

பரிசந்தப்பிடியுணர்ந்துபடர்சிங்கமிரண்டினையும்
விரைவுடனின்றடிபணிந்துமிகவிரங்கிவேண்டுதலும்.

(இ - ள்.) யானையொன்று நித்திரைசெய்கையில், அவ்விடத்தில்வந்த சிங்கங்களிரண்டு பார்த்து அதிவிரைவாகக் கோபித்துப்பாய, அப்போதந்த யானையின் மனைவியாகிய அழகிய பெண்யானையறிந்து, அவ்வாறு பாய்கின்ற சிங்கங்களிரண்டையும் அதிவேகமாகப் பாதங்களில் வணங்கி எதிரிலே நின்று வருந்திப் பிரார்த்தித்தலும், எ - று. (உசு)

அப்பரிசுகண்டிரங்கியரியிரண்டுமேக்கரியை
வெப்பமுடன்கொல்லாமல்விட்டேகிவிட்டதெனச்
செப்பவனையருகிருக்குஞ்சீரனங்கவல்லியுந்தா
னொப்புடனேகண்டகனவுரைசெய்யக்கேளுமென்றாள்.

(இ - ள்) அவ்வாறு பிரார்த்தித்தலைப்பார்த்து மனங்கனிந்து அச்சிங்கங்களிரண்டும் அந்தயானையைக் கொடுமையுடன்கொல்லாமல் விட்டுப்போயினவென்று கூற; அவன்பஞ்சணையின் சமீபத்திருந்த சிறப்புற்ற அனங்கவல்லியென்னும் அவன் மனைவியும் தான் இதுபோலவே கண்டகனவைச் சொல்லக் கேட்பீர்களாக வென்றனள். எ - று.

மேற்செய்யுளு மிதுவுங் குளகம். (உஎ)

என்கழுத்தின்மங்கிலியமிப்புவியிலிற்றுவிழ
வன்புமிகுந்தோரிருவரஞ்சாதேயென்றெடுத்துப்
பொன்பொலிமங்கலநாணென்கரத்தளித்துப்போய்விட்டார்
தென்புவியில்வந்துறையுந்தீதென்றுதானுரைத்தாள்.

(இ - ள்.) எனது கழுத்திலிருந்த மங்கலசூத்திரமறுந்து இந்நிலத்தில் விழவும், அன்பின் மேம்பட்ட இரண்டு ஆடவர்கள் நீ பயப்படவேண்டாமென்றுகூறிப் பொன்னாலாகிய அம்மங்கிலியத்தை யெடுத்து எனதுகரத்திற் கொடுத்துவிட்டுப் போய்விட்டார்கள். ஆதலால் நாமிப்போதுவசிக்கும் இத்தெந்நாட்டில் ஏதோ ஓர் தீமைசம்பவிக்கும் என்றுரைத்தனள். எ - று. (உஅ)

தக்கவருமமைச்சர்களுந்தானையதிபருங்கேட்டா
ரிக்கனவுபொல்லாதென்றிரட்டர்பதிதனைநோக்கி
மிக்கவளவன்புரியும்வினைதவிரப்போகாது
துக்கமடுத்திடுமுனநாமாய்ந்தகறுணியென்றார்.

(இ - ள்.) அச்சபையிலிருந்த பெரியோர்களும் மந்திரிகளும் சேனாதிபதிகளும் இக்கனவைக்கேட்டவர்களாய் இரட்டர்கள் தலைவனாகிய விக்கலனைப் பார்த்து, இக்கனவு பொல்லாததாயிருக்கின்றது. மேன்மைமிக்க சோழன் செய்யும் காரியம் வீணாகாது. ஆதலால் துயரம்வருவதற்கு முன்னமே நாம் ஆராய்ந்து அத்துயரத்தினின்றும் நீங்குவதுதான் முடிவான காரியமென்றார்கள்.

எல்லாருஞ்சொன்மொழிகேட்டிரட்டன்மிகவேநகைத்திங்
கெல்லார்க்கும்வல்லானுமென்றனக்குமாற்ருஞர்
பொல்லர்தேற்கனவுகண்டபொன்பூடணமாமோ
சொல்வீரென்ருனெவருஞ்சரியென்ருர்சொற்றவருர்.

(இ - ள்.) இவ்வாறனைவரும் கூறிய வார்த்தையைக்கேட்டு விக்கலன் பெருநகைசெய்து, இவ்வுலகத்துள்ள அனைவர்க்கும் வல்லவனுகிய எனக்குப் பகைவனுயுள்ளவன் எவன்? பொல்லாதென்பீராயின் கனவிற்கண்ட பொன் ஆபரணமாகுமோ? சொல்லுங்களென்ருன். அவன் சொல்லை மறுக்கவேலாத வர்களாய் அவர்களனைவரும் சரிதானென்ருர்கள். எ - று.

தீக்கனவுகண்டால் தீமை விளைவதானுல், பொன்வரக் கனவுகண்டால் அப்பொன் பூஷணமாமோ என விஞவிஞனென்க. (௬0)

வேகத்தாற்றன்னைநிகர்மீமாயமாவேறி
யூகத்தாற்கைபோயவோரிருவர்தமையேற்றி
மாகத்தின்வழியாகவந்துபுவிநின்றெணுவான்
றேகத்தால்வலியுளருந்தெரிந்துசெயனலமென்னு.

(இ - ள்.) இப்பால் வல்லானனவன் அதியுன்னதமாயோங்கியும் வேகத் தில் தன்னையொத்ததுமாகிய மாயக்குதிரையிலேறி, தந்திரத்தில் தேர்ந்தவர் களாய் ஒப்பற்ற இரண்டு இரட்டர்களையேற்றி ஆகாயமார்க்கமாகவந்து பூமி யில்நின்று, சரீரவல்லபமுடையவர்களானுலும் தெரிந்துசெய்வதே நலமென்று நினைப்பான். எ - று. (௬௧)

இதுகாறுநந்தமதோரேரியணைவரவெண்ணு
மதிகொண்டாரிலைவந்தார்மாண்டாரல்லாற்றமது
பதிகண்டாரரிந்நாட்பரவைநிகர்பெருங்கூட்டத்
ததிசயங்கண்டிங்குவருவீரென்னவவனிவிட்டான்.

(இ·ள்.) இதுவரையில் நம்முடைய ஒப்பற்ற ஏரிக்கரையண்டையில் வர வேண்டுமென்றுசிந்திக்கும் மனமுடையவர்களில்லை. ஓர்கால்வந்தவர்கள் இறந் தார்களேயல்லது, மீண்டும் தங்கள்தேசத்தைப்பார்த்தவர்கள் எவர்கள்? அப்படி யிருக்க, இப்போது வந்திருக்கும் கடல்போன்ற பெருங்கூட்டத்தின் அதிசயத் தைப்பார்த்து இங்குவருவீர்களாக என்று அவ்வூருக்கனுப்பினுன். எ - று.(௬௨)

விக்கலனுல்விடுந்தூதர்வேழமிசைப்பறையறையுந்
தொக்கவிடங்குறுகியவண்டோன்றுவதுந்தஞ்சையிற்போய்க்
கைக்கனவேலுடைவீரர்திறம்பேசிக்காசினியோர்
மிக்குவகைகொள்ளுவதும்வேந்தனதுபெருவலனும்.

(இ - ள்.) இவ்வண்ணம் விக்கலனால் ஏவப்பட்ட தூதுவர்கள் யானைமீதிருந்துகொண்டு பறைமுழக்குகின்ற பெருங்கூட்டங்கூடியுள்ள இடத்தையடைந்து அவ்விடத்தில் தோற்றும் தோற்றங்களையும், தஞ்சைமாநகரத்தினுட்சென்று அங்குள்ள அந்நகரத்தாரனைவர்களும் கரத்திற் பெருமைபொருந்திய செங்குந்தமேந்திய வீரர்களின் வல்லபம்பேசி மிகக்களிகூர்வதும், பராந்தகச்சோழனுடைய பெருவல்லபமும் எ - று. (கூங)

கண்டுபயங்கொண்டிடமது காவலனுக்கிறுதிவர
லுண்டிதனாலெனக்கலங்கியோடிவந்தவழிமடங்கிக்
கொண்டிரட்டனிடங்காணக்குதிரைமிசையிவர்ந்தரணம்
பண்டெனவந்திருந்தவன்றன்பதம்பணிந்துபன்னிடுவார்.

(இ - ள்.) பார்த்தவுடனே அச்சமுற்றவர்களாகி; இப்போதைய முயற்சியினால் எங்கள் தலைவருக்கு முடிவுசம்பவிப்ப துண்டென்றுவருந்தி வந்தவழியே திரும்பியோடிவந்து இரட்டன் தம்மையனுப்பின இடத்தில்வந்து கண்டு முன்போலவே அம்மாயக்குதிரைமே லேறிக்கொண்டு கோட்டையினுள்ளே சேர்ந்து ஓரிடத்திலிருந்து அவ்விரட்டனுடைய பாதங்களில்வணங்கிக் கூறுவார்கள். எ - று.

மேற்செய்யுளு மிதவுங் குளகம். (கூச)

ஐயகேளியாங்கண்டோமணையிருந்தவிழாவொலியு
மையவாம்பொழிற்றஞ்சைமன்னனிடம்பன்னிருவர்
செய்யவேற்கையேந்திநிற்பதுமத்திறனவரை
வையகநாப்பறையறைந்துவாழ்த்துவதுங்கேளின்னும்.

(இ - ள்.) ஐயனே! கேட்பீராக: நாங்களிருவரும் ஏரிக்கரையின்கணிருந்த விழாவொலியும், மேகங்கள் அவாவும் சோலைசூழ்ந்த தஞ்சைமாநகரத்தையாளும் பராந்தகச்சோழனிடத்திலே பன்னிரண்டு வீரர்கள் செங்குந்தத்தைத் தாங்கிக்கொண்டு நிற்கின்றதும், அவ்வீரர்களை அந்நகரத்துள்ளாரனைவரும் வாயே பறையாகவாழ்த்துவதும் பார்த்தோம். இன்னும் கேட்பீராக - எ - று.

மன்னவனுக்கினிதானமைந்தர்களுமவர்குலத்தா
ரெங்நிலமுமரசாளுமிறைவர்களுமவர்குலத்தார்
தென்னனபயன்றொழில்கள்செய்பவருமவர்குலத்தார்
பன்னியுரைமுத்தமிழின்பாவலருமவர்குலத்தார்.

(இ - ள்.) அப்பராந்தகச் சோழனுக்குப் போர்வீரர்களாயுள்ளவர்களும் அச்செங்குந்த குலத்தினரே: குறுநிலமன்னவர்களாய் ஆங்காங்கு அரசாட்சி புரிவோர்களும் அக்குலத்தவர்களே: பாண்டியனுக்கும் சோழனுக்கும் வேண்டிய காரியங்களைச் செய்பவர்களும் அக்குலத்தவர்களே: யாவராலும் மேன்மை

யாகக் கூறப்படுகின்ற முத்தமிழுணர்ந்த புலவர்களாயுள்ளவர்களும் அக்குலத்தவர்களே: எ - று.

முத்தமிழ் என்பன:—இயற்றமிழ் இசைத்தமிழ் நாடகத்தமிழ் என்னும் மூவகைத்தமிழ்களாம். (௩௬)

உடைவாள்கொண்டருகிருக்கு முத்தமருமவர்குலத்தார்
கடைவாயிலுள்வாயில்காப்பவருமவர்குலத்தா
ரடைவாகக்காணிக்காரானவருமவர்குலத்தார்
படையுடையார்தளமுடையார்படைத்தலைவரவர்குலத்தார்.

(இ - ள்.) உடைவாளேந்திப் பக்கத்தில் மெய்க்காப்பாளராயிருக்கும் உத்தமர்களும் அக்குலத்தவர்களே: கடைவாயிலும் முதல்வாயிலும் காவல் செய்வோரும் அக்குலத்தவர்களே: வரிசையாகக் கிராமாதிபதிகளாயுள்ளவர்களும் அக்குலத்தவர்களே: ஆயுதவகைகளுள்ளவர்களும் சைனியவகைகளுள்ளவர்களும் ஆயுதமேந்திய சைனியங்கட்குத் தலைவர்களாயுள்ளவர்களும் அக்குலத்தவர்களே: எ - று. (௩௭)

ஆனையுடன்பரியேறுமவர்தாமுமவர்குலத்தார்
மேன்மையுடனென்னலரைவெல்பவருமவர்குலத்தார்
கோனையிகலனுகாமற்கொள்பவருமவர்குலத்தார்
மானமுடன்வீரமுடன்வாழ்பவருமவர்குலத்தார்.

(இ - ள்.) ஆனைவீரர்களும் குதிரைவீரர்களும் அக்குலத்தவர்களே: பெருமையுடனே பகைவர்களை வெற்றிகொள்பவர்களும் அக்குலத்தவர்களே: தங்களரசனைப் பகைவரணுகாமற் காப்பாற்றிக் கொள்பவர்களும் அக்குலத்தவர்களே: மானமும் வீரமும் அமைந்துள்ளவர்களாய் வாழ்வோர்களும் அக்குலத்தவர்களே: எ - று. (௩௮)

அக்குலத்தார்செய்வினையையவனியிடையார்வெல்வா
ரக்குலத்தார்சேவகத்தினாண்மைகண்டபேரெவர்க
ளக்குலத்தார்தெள்ளிமையையாய்ந்துணர்தற்கெளிதாமோ
வக்குலத்தார்பெருமைசொலவனந்தனுமரல்கொளுமையா.

(இ - ள்.) அக்குலத்தவர்கள் செய்யுந்தொழிலை இக்கிலவுலகத்தில் வெல்லவல்லவர்கள் யார்? அக்குலத்தவர்களுடைய தொழிலின் ஆண்மைத் தன்மையைக் கண்டறிந்தவர்கள் யாவர்? அக்குலத்தவர்களின் புத்திகோசரத்தை யாராய்ந்தறிதற் கெளிதாகுமோ? ஆதலால் அக்குலத்தவர்களின் பெருமையைக்கூறுவதற்கு ஆதிசேடனும் மயங்குவான் ஐயனே! எ - று. (௩௯)

எந்நினைவாலெம்மனத்தாலெம்மறிவாலும்மானை
யுன்னியுரைசெயவொண்ணாதானுமுளத்தமைத்துப்

பொன்னணியு மணிமார்பா புகழிரட்டர் கோமானே
பன்னிருவர் செயல்கூறிப் பறையறைவித் தாரதுகேள்.

(இ - ள்.) அக்குலத்தவர்களின் பெருமையை உம்மாணைப்படி எங்களுடைய சிந்தனையாலும், எங்களுடைய மனத்தினாலும், எங்களுடைய அறிவினாலும் எண்ணியுரைக்கவேலாது. ஆயினும் அதனை உமதுசித்தையில் பொருந்த வைத்து, திருமகள்தங்கும் மார்புடைய திருமால்போன்றவரே! கீர்த்திபெற்ற இரட்டர்கள் தலைவரே! முன்பெம்மாற் சொல்லப்பட்டுள்ள அப்பன்னிரண்டு வீரர்களும் தாங்களினித் தொடங்குந் தொழிலின்றன்மையைக் கூறிப் பறையறைவித்தார்கள் அதைக்கேளும். எ - று. (௬0)

அஞ்சுநாளென் றவதியறுதியிட் டுத்தலைகொடுபோய்த்
தஞ்சைவாழ்வேந் துகரந்தந்திடுவோமெனக்கூறிக்
குஞ்சரத்தின்மீதேற்றிக்கொற்றமுடன்பறையறைந்தா
ரிஞ்சிபெரிதெனவெண்ணேலிறைவவெனவடிபணிந்தார்.

(இ - ள்.) ஐந்துதினங்கள் தவணையென்று வரையறுத்து, அதற்குள் உமதுதலையைக் கொய்துகொண்டுபோய்த் தஞ்சைமாநகரத்தில்வாழும் பராந்தகச்சோழன்கரத்திற் கொடுப்போமென்றுரைத்து, ஓர் பெரும்பறையை யானையின்மீதேற்றி வெற்றியுடன் முழக்குவித்தார்கள். ஆதலால்-ஓ அரசனே! நமது கோட்டையின் மதில் பெரிதென்று நினைக்கவேண்டாமெனக்கூறிப் பாதத்திற் பணிந்தார்கள். எ - று. (௬க)

அம்மொழியினாலிரட்டனறத்துடித்துத்தஞ்சைநகர்
வெம்மையுடன்றூளாக்கிவேந்தனையுந்திறைகொண்டு
செம்மையுடன்வெல்வெனெனச்சீறியெழுந்தான்சினந்தான்
மைம்மலையமுலையனங்கவல்லியிது சொல்கின்றாள்.

(இ - ள்.) அவ்வார்த்தையினாலே இரட்டனாகிய விக்கலன் மிகவும் துடிதுடிப்புடையவனாகி, தஞ்சைமாநகரமனைத்தையும் அதிவிரைவில் தூளிபடலமாகச்செய்து, பராந்தகச்சோழனையும் கப்பம்கட்டும்படியாகச் செய்துகொண்டு சிறப்புடனே வெற்றியடைவேனென்று வேகமாய் எழுந்துகோபித்தான். அப்போது கறுத்தமலைபோலும் தனங்களுடைய அனங்கவல்லியென்னும் அவன் மனைவி இவ்வாறுரைக்கின்றனள். எ - று. (௬௨)

வேறு.

கட்கினிதாகிக்காமவேளினுங்கவின்செயின்ப
முட்கினிதாகுநாதவொன்னலரில்லாதிக்காட்
கொட்குமாவலியால்வென்றிகொண்டனையுலகிலாரு
நட்பிலையதனுனிபோய்ஞாட்புறறகுதியன்றே.

(இ - ள்.) பார்வைக்கு இனிமை யமையத்தக்க மன்மதனைப்பார்க்கினும் அழகுடைத்தாகி, இன்பத்திலே மனத்திற்கினிமையாயுள்ள எனது தலைவரே! இன்றையவரையிலே பகைவர்களில்லாமல் தேவரீருடைய மிகுந்த வல்லபத்தால் வெற்றிபெற்றிருந்தீர். அவ்வாறு யாவரையும் வென்றதனால் உமக்கு உலகிலுள்ளார் ஒருவரும் நேசமுள்ளவர்களாயில்லை. இக்காரணத்தால் நீர் போர்க்களத்திற்சென்று யுத்தம்புரிதல் தகுதியல்ல. எ - று. (சங)

கறையடிமிக்கோர்காலேகண்டுதம்புகழ்மைகூறிப்
பறையடித்தெழுந்தவீரர்பயந்தவராமோயுத்தத்
துறையடிப்பதற்கோரையம்வேண்டுமோசோமநாத
விறையடிநினைந்திச்சூழலிருப்பதேவெற்றியென்றாள்.

(இ - ள்.) ஓர் காலை உரல்போலுங் கால்களுள்ள யானையின்மீ தாரோகணித்து தமது கீர்த்தியைக் கூறிக்கொண்டு பறையறைந்து வரும்படி புறப்பட்ட வீரர்கள் அச்சமுற்றவர்களோ? போர்முகத்திலே உம்மையடிப்பதற்குச் சந்தேகமும் வேண்டுமோ? ஆதலால்-சோமநாதர் என்னும் சிவபெருமானுடைய திருவடியைத் தியானித்துக்கொண்டு இவ்விடத்திலேயேயிருப்பதுதான் வெற்றியாகுமென்றுரைத்தாள். எ - று. (சச)

இல்லவளுரைத்தமாற்றமினிதுணர்ந்தக்காணல்லூ
ரெல்லையைக்கடந்துதொண்டவெழிற்றமிழ்நாடுபுக்குச்
செல்லுழிக்கண்டவீரசெங்குந்தரிவரேயாயின்
வெல்லுதனம்மாலில்லையென்றுவிம்மிதனுய்கின்றான்.

(இ - ள்.) தனது மனைவிகூறிய வார்த்தையை நன்குணர்ந்து, ஆதிகாலத்தில் நாம் வசித்திருந்த நல்லூரென்னும் ஊரின் எல்லையைத்தாண்டி அழகமைந்த தமிழ்நாடாகிய தொண்டநாட்டிற்சேர்ந்து போகும்போது பார்த்த வீர செங்குந்தர்களே இவர்களாயின் இவர்களை வெல்லுதற்கு நமக்கேலாதென்று அச்சமுடையவனாயிருந்தான். எ - று. (சரு)

அங்கிருபாலும்வைகுமமைச்சர்களெழுந்துபோற்றிச்
செங்குருமணிமாமௌலிச்செயவரசைந்துநாளி
லுங்கருந்தலையைவாங்கவுன்னினனதனுலிந்த
மங்குலம்படியவோங்குமதிலகத்திருத்தனன்றே.

(இ - ள்.) அப்போது அவனிரண்டு பக்கங்களிலும் சூழ்ந்துகொண்டிருந்த மந்திரிமார்கள் எழுந்து பணிந்து, செந்நிறமமைந்த மாணிக்கங்களிழைத்த சிறந்த கிரீடமணிந்துள்ள பராந்தகச்சோழனென்னும் வெற்றிபெற்ற மன்னவன் இன்றுமுதலைந்துதினங்களில் உமது பெருந்தலையையறுக்க எண்ணியிருக்கின்றானாகையால் மேகங்கள் அழகமையும்படி தோயப்பெற்றுன்னதமாயுள்ள இக்கோட்டைக்குள்ளேதானே யிருத்தல் நன்மையாகும் என்றார்கள்.

மந்திரர்தாமுமிற்றுய்மதித்துரைசெய்யவல்லான்
சிந்தனைசெய்வானெனண்ணியிருந்தனன்திருத்தமிக்க
செந்தமிழ்நாடதூதுசென்றதுசொற்றுமிஞ்சி
பந்தனைசெய்தவாறுங்கேளெனப்பகரலுற்றான்.

(இ - ள்.) மந்திரிமார்களெல்லாம் இவ்வாறு ஆலோசித்துக்கூற, வல்லானென்பவன் யோசிப்பதற்காக நினைத்திருந்தான். திருத்தம் மேம்பட்ட செந்தமிழ்வழங்கும் சோழநாட்டதிபனான குலோத்துங்கனே! தூதுசென்ற செய்தி சொல்லி முடித்தோம். அதன்பின் வல்லானனவன் கோட்டையைக் காவற்படுத்திய செய்தியைக் கூறுகின்றோம் கேட்பாயாகவென்று கவிச்சக்கரவர்த்தி கழறலாயினர். எ - று. (சஎ)

தூதறைசருக்கம்முற்றிற்று.
ஆகத்திருவிருத்தம் - ௬௬௬.

---

## காப்பமைசருக்கம்.

நிறந்தவளவாரணனூரர்ப்புலையன்கார்க்கரியோனிலைக்குடிக்கால்
சிறந்தநவவீரருங்கால்வந்தார்புவிவந்தசீர்த்திதோரா
வறைந்தபறைவினையுரைப்போனுயதறிவுற்றனமாலையசெய்யு [ன்.
மறந்தணவான்புரியேமமுறையென்றுனிறைகூத்தவாணன்சொல்வா

(இ - ள்.) வெள்ளைநிறமுடைய யானையைப்படைத்த இந்திரனாகிய திருவாரூர்ப்பறையனுடைய நிலைபெற்றன வம்சத்தின் சந்ததியான கார்போலுங் கருநிறங்கொண்ட அவன், சிறப்புற்று விளங்கிய நவவீரர்களின் அருமையான வம்சத்தில்வந்தவர்கள் நிலவுலகத்தில் அவதரித்த பெருமையை யுணர்ந்து அவர்கள் புரியத்தொடங்கிய செயல்களைப் பறையினால் தெரிவிக்கப் புறப்பட்டதை யுணர்ந்தோம்: ஐயனே! இனி தான்செய்யும் கொடுமையைத் தவிராதவனாகிய இரட்டன்செய்த காவல்களைக் கூறுவீரென்று குலோத்துங்கச்சோழன் பிரார்த்தித்தனன். அதுகேட்ட கவிச்சக்கரவர்த்தியாராகிய ஒட்டக்கூத்தர் திருவாய் மலர்கின்றனர். எ - று.

யானையேறும் பெரும்பறையன் எனவும் திருவாரூர்ப்புலையன் எனவும் பெயர்பெற்ற அவனும் தேவாம்சமுடையவனாகலின் அவன் சந்ததியார்க்கு அச்சிறப்புப்பெயர் வந்தவாறுபோன்று, வல்லானைவெல்ல வெளிப்பட்ட பன்னிருவரும் நவவீரரின் சந்ததியாராகலின் அச்சிறப்பே இவர்க்கும் உரித்தென்பதை விளக்கியவாறறிக. (க)

வேறு.

அடல்புனைசோமநாதனடியவர்க்கொந்தநாளு
மிடாதுநேராதென்பதெம்மனோர்கொள்கையேனு

முடனினியைந்துநாளுமூத்தியோடுறைவமென்னுத்
திடமுடன்காப்பமைத்தற்கெழுந்தனன்றீயவல்லான்.

(இ - ள்.) சோமநாதருடைய வெற்றியமைந்த தொண்டர்கட்கு எக்காலத்தும் இடையூறு சம்பவியாதென்பது எங்களுடைய அபிப்பிராயமாயிருந்தபோதினும், இனி நாமனைவரும் ஒருங்குகூடி ஐந்துநாளும் அதியூகத்துடனே வசித்திருப்போமென்று கொடியவனுகிய வல்லான் வல்லபத்துடனே காவலமைத்தற்காக முயற்சித்தான். எ - று.

வாஸ்தவத்தில் உண்மைப்பத்தி வாய்த்திருக்குமாயின் ஒருக்கால் இடையூறு நேருமோ என்னும் ஐயம் நிகழாதெனவும், இவ்விரட்டனுக்கு அத்தகைய நிச்சயபத்தியின்மையின், "இடாதுநேராதென்பதெம்மனோர்கொள்கையேனும்." எனக்கூறினுனெனவும் குறிப்பித்தமைகாண்க. உண்மைப்பத்தியுடையோர் இத்தகைய ஐயமுருரென்பதை, "இணையின்ஞானபூரணன்முழுதுணர்ந்தமைத்திட்டவாறலதிங்கே - யணைவுறுதொருதீதெமக்கவன்றரினுர்தடுப்பவர் நெஞ்சே-பணைகொடாவரமானமின்மையினுருப்பற்றிகின்றிலகொல்லோ-வுணைவுருதுடற்காவல்கைவிடுதியூழுள்ளவாவிடாதென்றே." என்னும் சாந்தலிங்கசுவாமிகள் திருவாக்கானுந்தெளிக. (உ)

எண்டிசைதொறுமெண்ணுகமிருந்துலகதனைத்தாங்க
வண்டருஞ்சேடனுக்கீண்டகைத்தல்போலெஃகத்தூண்கண்
மிண்டுமெண்பாங்கர்நாப்பண்வேறொருதூணமேழிற்
கொண்டமேனிலைபெற்றோங்குங்கோட்டைகீண்டெழுதன்மான.

(இ - ள்.) அஷ்டதிக்குகளிலும் அஷ்டமாநாகங்களிருந்து நிலவுலகத்தைத் தாங்கிக்கொண்டிருக்கவும் யாவரும் அணுகுதற்கரிய ஆதிசேடன் அதனடுவிற் பிளந்துகொண்டு மேலோங்கியெழுதல்போன்று, எகுத்தம்பங்கள் நெருங்கியுள்ள எட்டுத்திக்குகளின் மத்தியில் மற்றோர் எகுத்தம்பம் ஏழுநிலை மேல்மாடிகளமைந்து விளங்கும் கோட்டையுள்ளே யுருவிக்கொண்டு மேலோங்குதல்போல, எ - று.

நிலவுலகத்தின் எண்டிசைகளினும் எட்டு நாகங்கள் தாங்குவதுபோன்று எஃகினுலாய எட்டுத்தம்பங்கள் அஷ்டதிசைகளிலும் அமைந்திருக்க, அதனடுவே நூதனமாய் ஓர் எஃகுத்தம்பம் அக்கோட்டைக்கு மேலோங்கி யிருக்கச் செய்தது உலகின்மத்தியிலிருந்து சுமக்கும் ஆதிசேடன் அதனைப் பிளந்துகொண்டு மேலோங்கி யெழுந்ததுபோன்றிருந்ததென் றுவமித்தமைகாண்க. (௩)

ஒற்றரைவிளித்துச்சிற்பனொருவனைவருவித்தெஃகான்
முற்றியநூறடித்தூண்முப்பதிற்பருஉப்பிறங்கப்
பெற்றதாயரணநாப்பண்பிறழநட்டதன்மேல்வைரத்
துற்றபோதிகைவிட்டுத்திரங்கள்சட்டங்கள்யாவும்,

(இ - ள்.) தூதரைக்கூவி சிற்பனொருவனை வரவழைத்து, எஃகினாலாகிய நூறடியுயரமும் முப்பதடி பருமனுமுள்ள ஓர் தம்பத்தைத் தனது கோட்டையின் மத்தியில் விளங்கும்படி நட்டு, அத்தம்பத்தின்மீது வைரத்தாலாகிய போதிகைபரப்பி, அதற்குரிய உத்திரங்கள் சட்டங்கள் என்பவைகளனைத்தையும் எ - று. (ரு)

வயிரவாணிகளாற்றைத்தோர்வண்படாம்வீடுண்டாக்கிப்
பயிரவங்கொண்டுவிண்ணோர்பதுங்குறவைந்துநாட்குங்
கயிரவவாயாளோடுங்கறித்தலர்தியவைக்கான
வயிரமாருணவனைத்துமமைத்துறங்குறமஞ்சேற்றி.

(இ - ள்.) வயிரத்தினாலாகிய ஆணிகளாற்றைத்து, அச்சங்கொண்டவர்களாய்த் தேவர்களும் ஒதுங்கியிருக்கும்படி அழகமைந்த கூடாரம்போன்று ஓர் வீடுகட்டி, ஆம்பன்மலர்போலும் வாயையுடைய தனது மனையாளாகிய அனங்கவல்லியுடனே தானுமிருந்துகொள்ளும் உணவாதிகட்குவேண்டிய சருக்கரைசேர்ந்த அபூபவர்க்கங்களெல்லாம் ஐந்துநாளைக்கும் சேகரித்துக்கொண்டு, தாங்களிருவரும் நித்திரைபுரிவதற்காக ஓர் கட்டிலும் அவ்வீட்டிலேற்றி,எ-று.

வல்லான் முன்பமைத்துள்ள கோட்டையே அதியுன்னதமமைந்திருந்ததாகலானும், இப்போது அவ்வுன்னதத்தின்மீது நூறடியோங்கும்படி தம்பம் நட்டு அதன்மீது வீடுகட்டிக்கொண்டமையானும், நமதுலகத்திற்கு வருவதற்குச் சமீபித்தானேவென்று தேவர்களும் அச்சமுற்றாரகளென்பார்- "பயிரவங்கொண்டுவிண்ணோர்பதுங்குற." என்றும், ஐந்துதினங்களில் வல்லானை வெல்வோமென்று பன்னிருவீரர்களும் பிரதிக்ஞை செய்துகொண்டமையின், அவ்வைந்துதினங்களும் கழிந்தால் அதன்பிறகு பிரதிக்ஞைக்கு மாறுபட்டு நம்மை வெல்லமாட்டார்களென்னுங்கருத்தால், அவ்வைந்து தினங்கட்கும் வேண்டிய உணவாதிகளைச் சேகரித்துக்கொண்டானென்பார்; "ஐந்துநாட்குமயிரமாருணவனைத்துமமைத்து."என்றும் கூறினர். மஞ்சம் எனற்பாலது செய்யுணடைநோக்கி மஞ்செனநின்றது. (கூ)

வழுவழுத்தனந்தனொத்தவண்ணெஃகுத்தூணின்மச்சக்
கொழுமையோடனந்தமுத்தினெண்ணெயுங்கூட்டியீக்கு
நழுவெடுத்திடவரித்தந்நாகன்படநேருமில்லைக்
கழுமக்கீழிறங்கமாயக்கவரிபாங்குறவிருத்தி.

(இ - ள்.) வழுவழுப்புடையதாய் ஆதிசேடனைப்போன்ற வளப்பமமைந்த எஃகுத்தம்பத்தில் மீன்கொழுப்பையும் ஆமணக்குவித்தின் தைலத்தையுஞ்சேர்த்து ஈ ஏறினும் நழுவத்தக்கதாய்த்தடவி, அவ்வாதிசேடனுடைய படத்தையொத்த மேல்வீட்டை யடைதற்கும் கீழே இறங்குவதற்கும் மாயத்தன்மையமைந்த தேரினைப் பக்கத்திலிருக்க விருத்தி, எ - று.

நடுவேநாட்டிய அஃருத்தம்பத்தை ஆதிசேடனுக்குவமைகூறியிருப்பதால், அத்தம்பத்தின்மீதுகட்டிய மேன்மாடம் அவனுடைய படத்தையொத்ததென்பார், "அந்நாகன்பைநெருமில்." என்றார். எவ்வளவு வழுவழுப்பினும் நழுவாது செல்லத்தக்க ஈக்கும் நழுவும்படி யமைத்தானென்றமையின், மனிதர்கள் அத்தம்பத்தின்மீதேறல் அசாத்தியமென் றுணர்த்தியவாறறிக. (சு)

புறநகரெல்லைநின் றிடாகினிபொலியச்சூல
கரதலத்தினளாவைகுங்காளியைக்கூவிநீதா
னிரவுகளைந்துமென்பாலேதிலர்வாராவண்ணம்
விரு துடனிருந்துகாக்கவேண்டுமென் றுறுதிசெய்து.

(இ - ள்.) நகர்ப்புறத்தினெல்லையில் நின்றுகொண்டு டாகினிகள் காக்க சூலாயுதமேந்தியகரத்தினளாய் வீற்றிருக்கும் காளியை வரவழைத்து, என்னிடத்தில் ஐந்துநாளிரவிலும் பகைவர்கள் வராதபடி உன்னுடைய விருதுகளுடனே வீற்றிருந்து காத்துவரவேண்டுமென்று நிச்சயப்படுத்தி, எ - று.

டாகினிகள் என்பவை காளியின் சைனியங்கள். எனவே ஓரரசன் கொலுமண்டபத்தில் வீற்றிருக்க அவனது சைனியங்க ளெவ்வாறு வெளியே காவல்செய்திருக்குமோ அதுபோலக் காளியின் சைனியங்களான டாகினிகள் காவல்செய்திருக்க, காளி உள்ளே கொலுவிலிருந்தனளென்பது கருத்து. (எ)

வேம்பொடுகுருந்தசோகுவெட்சியாலத்திநீண்ட
காம்பிலந்தைக்காஞத்திகடுங்கருங்காலிவெள்ளி
லாம்பலவிருக்கமொன்றியடர்ந்திருண்டருக்கனேவ
வாம்பரியோரேழ்சோதிவாட்புகாகானச்சூழல்.

(இ - ள்.) வேப்பமரம் குருந்தமரம் அசோகமரம் வெட்சிமரம் ஆலமரம் அத்திமரம் மிகநீண்டுள்ள காம்புகளோடுகூடிய இலந்தைமரம் காட்டாத்திமரம் கடுமையாயிருக்கும் கருங்காலிமரம் விளாமரம் ஆகிய பலவிருட்சங்கள்சேர்ந்து நெருங்கியிருத்தலால் மிக்க இருள்சூழ்ந்ததாய் சூரியன் செலுத்தியபோது அவனது தேரிற்பூட்டிய சத்தபுரவிகளும் அவனது பிரகாசமுள்ள கிரணங்களும் உள்ளேபுகுதற்கேலாத சோலையினிடத்தில் எ - று.

கருங்காலி மிக்க வயிரமுடைத்தாய் ஏனையவிருட்சங்களனைத்தினும் வலியுடைத்தாகலின், "கடுங்கருங்காலி." என்றார். இதனை, "கருங்காலிக்கட்டைக்குநாணுக்கோடாலி - யிருங்கதலித்தண்டிக்குநாணும் - பெருங்கானிற் - காரெருமைமேய்க்கின்றகாளைக்குநான்றேற்ற - தீரிரவுதுஞ்சாதெங்கண்." என்னும் ஔவையார் அமுதவாக்கானுந்தெளிக. ஆதியுன்னதமாய் விருட்சங்களோங்கியடர்ந்திருண்டிருத்தலின், "அருக்கனேவவாம்பரியோரேழ்சோதிவாட்புகா." என்றார். (அ)

மந்திரவலியாற்றன்கைவசத்தளாய்க்காவல்பூண்ட
வந்தரிதன்னைக்கூவியாளியூரையைநீவி

விந்தைநீயைந்துநாளும்விழிதுயிலாதுபூத
பந்தியால்வாட்கையேந்திப்பாதுகாவெனப்பணித்து.

(இ - ள்.) மந்திரவலியினாலே தனக்குக் கைவசமாயிருக்கின்றவளாய்க் காவல்பூண்டிருக்கின்ற துர்க்கையையழைத்து, யாளிவாகனமுடையவளே! ஐயையென்றும் நீலியென்றும் விந்தையென்றும் திருநாமங்களுடையவளே! நீ வருகின்ற ஐந்துதினங்களும் கண்ணுறங்காது பூதவரிசைகளுடனே வாளாயுதத்தைக் கரத்திற்றாங்கினவளாய்க் காவல்பூண்டிருப்பாயாக எனக்கட்டளையிட்டு, எ - று.

மாயாசத்திகளின் சம்பந்தமுடையவர்களாய்க் காவல்பூணும் தலைமைபெற்றவர்களாய்க் காளியெனவும் துர்க்கையெனவும் சாமுண்டியெனவும் பலவிதசத்திகளுண்மையின், காளியெனவும் துர்க்கையெனவும் வேறுபிரித்துக்கூறினர். இவற்றினம்சங்களே ஆங்காங்கு கிராமதேவதைகளாய் வழங்குவர். (கூ)

தன்னரண்சூழ்வுற்றோங்கித்தகைபெறுமிஞ்சியேழுண்
மன்னியவிருபானெட்டுவாய்தலினேழ்கீழ்வாய்தன்
மின்னுறத்திறந்தொழிந்தவனைத்தையுமிண்டமூடிப்
பன்னெழுவாய்தற்காவல்பாங்குறச்சமைப்பதானான்.

(இ - ள்.) அதன்பின் தனது கோட்டையைச்சூழ்ந் தோங்கிவளர்ந்துள்ள மதில்களேழுக்குள்ளிருக்கின்ற நிலைபேறான இருபத்தெட்டு வாயிற்படிகளில் கீழ்த்திசையின்கணுள்ள எழ்வாயிற்படிகளையும் விளங்கும்படி திறந்து, எனைய இருபத்தொரு வாயிற்படிகளையும் வலிவாக மூடிவிட்டு, முற்கூறிய திறந்துள்ள ஏழுவாயிற்படிகளினும் மேன்மைபொருந்தும்படி காவல் ஏற்படுத்தலாயினன். எ - று.

எனவே தனது கோட்டையைச்சூழ்ந்திருக்கும்படி ஏழுமதில்களமைத்து, அவ்வொவ்வோர் மதிலினும் நந்நான்குவாயிற்படிகளமைத்து, அந்நான்குகளும் வடக்கு தெற்கு மேற்கு கிழக்கென்னும் நாற்றிசைகட்கும் ஏற்கவமைத்து, அவற்றுள் கிழக்கு நீங்க எனைய முத்திசைகளினுள்ள இருபத்தொருவாயிற்படிகளையும் மூடிவிட்டபின் அவ்வேழ்வாயிற்படிகட்கும் காவலமைத்தனனென்க. எண்டிசைதொறுமென்ற செய்யுள்முதல் இச்செய்யுள்வரையில் குளகம். (கo)

தலைப்புறவாயின்மாட்டுத்தறுகணாகியொள்வாள்
சிலைப்புதையாதியுற்றசேனைக்காவலரைவைத்து
நிலைப்படுமிரண்டில்வைவேனிமிர்கதைக்கழுமுனாதி
மிலைப்புறநிற்கும்வீரவிருதரைநிரப்பினானே.

(இ - ள்.) வெளியிலேயுள்ள முதல்வாயிற்படியிலே கொடூரமுள்ளவர்களாகிப் பிரகாசமமைந்த வாளாயுதமும் வில் அம்புறாத்தூணி முதலியவைகளும் தாங்கிக்கொண்டிருக்கின்ற சேனாபதிகளைக் காவலாகவைத்து, நிலையாயு

ள்ள இரண்டாம் வாயிற்படியிலே கூரிய வேலாயுதம் ஓங்கியுள்ள கதாயுதம் ஈட்டி முதலியவைகளைத் தாங்கியிருக்கின்ற வெற்றியுள்ள வீரர்களைநிரப்பிக் காவலமைத்தான். எ - று. (கக)

மற்றதையடுத்தமூன்றாம்வாய்தலின்மதமூன்றுங்கொண்
டுற்றசைம்மாக்கள்கண்டையொலியொடுமிருப்பக்கண்டு
பற்றுநான்காவதாகப்பகர்நெடுவாயிலின்கண்
செற்றமார்வாசியீட்டஞ்செறிதரவிருத்தினானே.

(இ - ள்.) அவ்விரண்டாவது வாயிற்படியைச் சேர்ந்துள்ள மூன்றாவது வாயிற்படியிலே மும்மதமும் பொழிந்துகொண்டிருக்கும் யானைகள் வீரகண்டையின் சத்தத்துடன் காவலாயிருக்கவைத்து, அதனைத்தொடர்ந்துள்ளதாய் நான்காவதென்று சொல்லத்தக்க நீண்ட வாயிற்படியிலே கோபம் மிக்க குதிரைக்கூட்டம் நிறைந்திருக்கும்படி காவலமைத்தனன். எ - று. (கஉ)

அணிபெறுமைந்தாம்வாயிலகத்துச்செந்நாயனந்தந்
திணிபெறவிடுத்தாறாகத்திகழ்தருவாயிலூடு
மணிபெறுநிறத்தவானவயவரியிருத்தியேழிற்
பிணிபெறுமடங்கலீட்டம்பிறங்கிடநிறுத்தினானே.

(இ - ள்) அழகமைந்துள்ள ஐந்தாம் வாயிற்படியிலே அளவிறந்த செந்நாய்களை வலிமைபொருந்தும்படி காவலாகவிடுத்து, ஆறாவதாக விளங்கும் வாயிற்படியிலே கருமையமைந்த நிறமுடையனவாகிய வெற்றியுள்ள புலிகளைக் காவலிருத்தி, எழாவது வாயிற்படியிலே கட்டப்பட்டுள்ள சிங்கக்கூட்டங்களை விளங்கும்படி காவலமைத்தான். எ - று. (கங)

உள்ளகழொன்றமைத்தற்குன்னித்தனரணைச்சூழ்ந்த
மள்ளல்சேர்வாயினான்கின்மருவுமேழ்மதில்கட்குள்ளே
புள்ளிமுன்னனவாழும்புறவகழ்நீரைப்பாய்ச்சி
யெள்ளலில்சகரரேய்ப்பவியற்றியண்டசங்கள்விட்டான்.

(இ - ள்.) உள்ளிடத்தில் ஓர் அகழியை ஏற்படுத்தவெண்ணி, தன்னுடைய கோட்டையைச்சுற்றியுள்ள வலியமைந்த நான்குவாயிற்படிகளோடு சூழ்ந்திருக்கும் ஏழ்மதில்களுக்குள்ளிடத்தில் இகழ்ச்சியற்ற சகரர்களைப்போன்று ஆழமாகத்தோண்டி, ஞெண்டுகள்முதலிய நீர்வாழுயிர்கள் வசித்திருக்கின்ற வெளியகழியின் நீரைப்பாய்ச்சி, அவ்வகழியில் முதலைகளைக் கொண்டுவந்து விடுத்தான். எ - று. (கச)

கடலினைவடவைசூழுங்காவலினகழிசூழ
மிடைதரவங்கியோடைவிதித்தனனதுமுன்வாண
னுடையெயிலென்னமண்டியுருத்தெரிந்தோங்கிற்றம்மா
நடலையேயுடையமாயநரபதிக்கருமையென்னே.

(இ - ள்) கடலை வடவாக்கினி சூழ்ந்திருக்கின்ற காவலைப்போன்று அந் நீரகழியைச் சூழ்ந்திருக்கும்படி நெருப்பகழியொன்று நிருமித்தான். அவ்வகழி யானது முற்காலத்திலே வாணாசுரனுடைய மதில்போன்று நெருங்கி சினங் கொண்டு எரிந்து வளர்ந்தது. வஞ்சகமேயுடைய மாயத்தன்மைவாய்ந்த குறு நிலமன்னனாகிய அவ்விரட்டனுக் கருமையானது யாது?. எ - று. (சரு)

அஞ்சுகமொழியாளோடுமெணிபடாம்விட்டிற்புக்கு
மஞ்சமீதிருந்துவைரவாள்கதைகவசமேற்று
விஞ்சுபொற்றலைமுன்னனவிருதுடனிருந்தானந்த
வஞ்சகன்காப்பிதாகுமன்னவென்றின்னுஞ்சொல்வான்.

(இ - ள்.) அழகிய கிளியின்வார்த்தைபோலும் வார்த்தையையுடைய தனது தேவியாகிய அனங்கவல்லியுடனே அலங்கரித்துள்ள கூடாரத்தினுள்ளே சென்று, அங்குள்ள கட்டிலின்மீதேறி வைரவாள் வைரக்கதை வைரக்கவசம் ஆகிய இவைகளைத் தரித்துக்கொண்டு, மேன்மையமைந்த பொற்றலைமுதலிய விருதுகளுடனிருந்தான். இதுதான் வஞ்சகனுகிய அவ்விரட்டனுடைய காவல் களாகும் அரசனே! என்றுரைத்து, கவிச்சக்கரவர்த்தியாகிய ஒட்டக்கூத்தர் இன்னும் கூறுகின்றனர். (கசு)

காப்பமைசருக்கம் முற்றிற்று.
ஆகச்செய்யுள்-சoகூ.

---

## எழுச்சிச்சருக்கம்.

கண்ணகன்ஞாலமெல்லாங்கடவுளிற்காத்தூய
புண்ணியநதிகள்போற்றும்பொன்னியாறுடையகோவே
திண்ணியவீரர்யாருந்திருந்தலன்றன்னைச்சாய்த்தற்
கெண்ணினராகித்தேரூர்ந்தெழுச்சிகொடிறத்தைக்கேட்டி.

(இ - ள்.) இடமகன்றுள்ள உலகமனைத்தையும் தெய்வத்தைப்போலப் பரிபாலிக்கின்ற பரிசுத்தமான தெய்வீகநதிகள் துதிக்கத்தக்க காவிரியாற்றை யுடைய வேந்தனே! மேற்கூறியுள்ள வலியமைந்த செங்குந்தவீரர்களனைவரும் பகைவனுகிய வல்லாளையழிப்பதற்குச் சிந்தையுடையவர்களாய் இரதங்களின் மீதாரோகணித்துப் புறப்பட்ட சரிதையைக் கேட்பீராக. எ - று. (க)

வேறு.

பறையாலறைதருதூதுவன்பகலோன்குடக்குறலு
நிறைகோடொடுமீண்டாண்டனைகநிமிர்மந்திரநோக்கா
முறையேவரலானனகர்முழுதுமற்றையிரவி
யிறையுந்துயிலின்றிப்புனைவாமெனவெண்ணினரன்றே.

(இ - ள்.) பறையறைந் தனைவர்க்கும் அறிவிக்கும்பொருட்டுச் சென்ற அூதனுகிய யானையேறும் பெருப்பறையன் சூரியன் மேற்றிசையில் அத்தமித்த வளவில், நிறைந்துள்ள கூட்டத்துடன்திரும்பி நமதரசனுடைய ஓங்கிய அரண் மனையை நோக்கிக்கொண்டு முறைமைப்படி வரத்தொடங்கினன். அந்நகரத் தாரனைவரும் அன்றிரவு இமையளவுநேரமும் நித்திரைசெய்யாதவர்களாய் நகர த்தை யலங்கரிக்கும்படி சிந்தித்தார்கள். எ - று. (உ)

பலநாட்சனியொருநாடனிற்பாழாமெனும்விழைவா
லலமாதியொழித்திற்றெருவனைத்துஞ்சுசியாற்றித்
தலைவாயில்கடோறும்பசுஞ்சாயற்பந்தர்வேயா
குலைசாய்கவர்கமுகீந்தொடுகொடிகால்களில்வீக்கி.

(இ - ள்.) பலநாளையசனி ஒருநாளையிற் பாழாகும் என்னும் ஆசையால் தங்கட்கிருந்த சஞ்சலம் முதலியவற்றை நீங்கி இல்லத்தையும் வீதியையும் சுத்திசெய்து, தலைவாயிற்படிகளிலெல்லாம் பசுநிறமுள்ள பந்தர்களிட்டு, குலைகள் தொங்கிக்கொண்டிருக்கும் கிளைகளையுடைய கமுகமரங்களையும் ஈச்சஞ் செடிகளையும் கொடிகளையும் அப்பந்தற்கால்களிற்கட்டி, எ - று. (ங)

அக்கால்களினடுவேமணியலர்மாலைகடூக்கி
யிக்கார்தரப்புனைவாய்தலினிருபாற்சுவர்முழுது
நக்காசிலநயவாசிலநந்தாசிலநடிப்பிற்
புக்காசிலவாகுங்கிழிபொற்பாரநிறைத்து

(இ - ள்.) அப்பந்தற்கால்களின் மத்தியில் இரத்தினமாலைகளும் புட்ப மாலைகளும் தொங்கவிட்டு, கருப்பஞ்சோலைகள் நிறையும்படி அலங்கரித்துள்ள அவ்வவ்வாயிற்படிகளின் இரண்டுபக்கங்களிலிருக்கும்சுவர்களெங்கும் சிலநகை த்துக்கொண் டிருப்பனவாகவும் சில புன்முறுவல்கொண் டிருப்பனவாகவும் சில நிந்தைசெய்துகொண் டிருப்பனவாகவும் சிலநாடகஞ்செய்யத் தொடங்கு வனவாகவுமுள்ள படங்களை அழகுநிரம்பும்படி விசேடமாகநிறைத்து, எ - று.

பளிக்குக்கல்படுத்தார்குறடோடபலபாவை
யிளிக்கொண்டவுமிசைகொண்டவுமிகல்கொண்டுவில்வணக்கி
வெளிக்கொண்டவும்வினைக்கொண்டவும்விறற்கொண்டவும்வறிதே
களிக்கொண்டவுமாயுள்ளனகவினுடுறவைத்து. ௫

(இ - ள்.) பளிங்குக்கற்களைப் பதித்துவிளங்குகின்ற வீதியின் குறடுகள் தோறும் பல்லை யிளித்துக்கொண்டிருப்பனவும் பாடிக்கொண்டிருப்பனவும் பகைகொண்டு வில்லைவளைத்துப் புறப்பட்டனவும் அப்போர்த்தொழிலைப் புரி ந்துகொண் டிருப்பனவும் வெற்றிகொண்டனவும் வீணுய்க் களிக்கின்றனவும் ஆகிய இவ்வித தன்மைகளுள்ளனவாகிய பல பதுமைகளை அழகுடனே ஆடிக் கொண்டிருக்கும்படி வைத்து. எ - று. (௫)

மண்டோய்தரநீர்தூவியமறுகெங்குமாக்கோலம்
கண்டோயிவைகாவேயிவைபூவேயிவைசோலே
யெண்டோயிவைதேரேயிவைபோரேயிவையூரே
பண்டோயிவைபணையேயெனப்பார்த்தோர்சொலவிர்த்து.

(இ - ள்.) பூமியில் ஊடுருவிப்பாயும்படி நீர்தெளித்துள்ள வீதிகளெல்லாம் பார்த்தவர்கள் நமதுகண்களிற்காணப்படும் இவைகள் சோலைகளே இவைகள் மலர்களே இவைகள் அரண்களே, எண்ணத்தக்கனவாயுள்ள இவைகள் இரதங்களே இவைகள் யுத்தங்களே இவைகள் நகரங்களே, அழகமைந்திருக்கும் இவைகள் தானியப்பயிர்களேயென்று சொல்லும்படி மாக்கோலமிட்டு;

எனவே இத்தகையகோலங்களை அரிசிமாவினால் தீட்டினார்களென்பது கருத்து. அக்கோலங்களிலுள்ள மாவும் எறும்புமுதலிய ஜந்துக்களுக் காகாரமாகும் வண்ணமும் அலங்காரமாயிருக்கும் வண்ணமும் தினந்தோறும் வீடுகளிற் கோலந்தீட்டவேண்டுவது முறைமை. இம்மாவிற்குப்பதில் இக்காலத்தார் சுண்ணப்பொடியை வைத்துக்கொண்டனர்.　　　　　(சு)

பகலோன்கிழக்குதியாமுனம்பலவாடவர்தத்த
மகமேயபெண்பாலாரொடுமறலாடிநல்விரத
முகராய்மனையுறைதேவரைமுறையாற்றொழுதேத்திச்
சுகமீராறுவோர்க்கும்மிகச்சூழ்வான்பிரார்த்தித்து.

(இ - ள்.) சூரியன் கீழ்த்திசையில் உதயமாவதற்குமுன்னரே பலபுருடர்களும் தங்கள்தங்கள் வீடுகளிலுள்ள மனைவிமார்களுடனே நீரில்முழுகிச் சிறந்த விரதமனுஷ்டிக்கும் தன்மையுடையவர்களாய், தங்கள்தங்கள்வீட்டில் வீற்றிருக்கும் இஷ்டதேவதைகளை முறைமைப்படி வணங்கித்துதித்து, வல்லானை வெல்லப்புறப்படும் சுத்தவீரர்கள் பன்னிருவர்க்கும் விசேடித்த சுகங்கிடைக்கும்படி பிரார்த்தித்துக்கொண்டு, எ - று.　　　　　(எ)

அருமாமறையோர்க்கும்பலவாற்றூர்க்குமுண்மகிழ்வாற்
சருவாதிநற்றானங்களைச்சமைத்தேபலநிறத்த
மருவாடைகநல்லாடைகண்மருங்கேறவுடஇக்கா
சுருபூண்டரித்தெதிர்நோக்கினருமைமைந்தர்தம்வரவை.

(இ - ள்.) அருமையாகச் சிறப்புற்றுள்ள வேதங்களையுணர்ந்த வேதியர்கட்கும் பலவகையினராய அதிதியர்க்கும் மனமகிழ்ச்சியினால் அன்னதானம் முதலிய தானங்களைச்செய்து, பலவித வர்ணங்களையுடைய பொற்சரிகைசேர்ந்துள்ள சிறந்தவஸ்திரங்களை அரைகளிற் பொருந்தும்படி உடுத்திக்கொண்டு, பொற்காசுகளாலாகிய அழகமைந்த ஆபரணங்களையணிந்துகொண்டு, உமாசுதர்களாகிய துவாதசவீரர்களின் வரவை எதிர்நோக்கிக்கொண்டிருந்தார்கள். எ - று.

சதுர்வகை வருணங்களிலும் அதிதியருண்டாகலின், "பலவாற்றூர்க்கும்." என்றும், சோடசமகாதானங்களிலும் முப்பத்திரண்டறங்களிலும் தலைமை யுடையது அன்னதானமேயாகலின், "சருவாதிநற்றானங்கள்." என்றும் கூறினர். பலநாட்சனியென்னுஞ் செய்யுண்முதல் விச்செய்யுள்காறுங் குளகம். (அ)

அருணன்விடுபொற்றேர்மிசையருக்கன்முனநம்மைத்
தருணந்தனையோராவணங்களைசெய்தவன்றனைக்கொன்
றிருணம்மிசைதுணைப்பற்றிமற்றெங்கட்கெனவாண்டோர்
கருணன்னெனவருநேர்மையைக்காண்பாமெனவந்தான்.

(இ - ள்.) சூரியன் அருணனென்னும் பாகனாற்செலுத்தப்பட்ட அழகிய இரதத்தின்மீதூர்ந்து, முன்னொருகாலத்திற் சமையமறியாதபடி நம்மைச் சிறைசெய்தவனைக் கொன்று உன்னைப்பற்றி எங்கட்கிது கடனுயிற்றென்று கூறி அரசாண்டவர்களாகிய செங்குர்தவீரர்கள் ஒவ்வொருவரும் கன்னனை யொத்துக் கைம்மாறு கருதாக் கொடையினராய் வருந்தன்மையைப் பார்ப்போமென்று உதித்தனன். எ - று.

எனவே சூரியோதயமாயிற்றென்பது கருத்து. சூரியனைத் தளைசெய்பவன் பானுகோபனும் அவன் பிதாவுமே. (௯)

பொறிதேனொடுஞிமிறும்வெயிற்புருடன்வரவோதா
நெறிதூதரின்வனசத்தடநேடிச்செலலுற்ற
வெறியார்பொழிற்றுயின்மஞ்ஞைமுன்விகிரங்களுமவைபோ
லிறைநேரியர்க்குணர்த்தச்சவையினிதேறியிருந்தான்.

(இ - ள்.) புள்ளிகளையுடைய பெண் வண்டுகளும் ஆண்வண்டுகளும் சூரியன்வரவைச்சோழனுக்கறிவிக்கின்ற தூதர்களைப்போன்று தாமரைகள் மலர்ந்துள்ள தடாகங்களைத் தேடிப்போகத்தொடங்கின. மணம் நிறைந்த சோலைகளில் நித்திரைசெய்துகொண்டிருந்த மயில்கள்முதலான பறவைச்சாதிகளும் அவ்வண்டுகளையொத்தே அத்தருணத்தைச் சோழனுக்குத் தெரிவித்தமையின் அவனும் கொலுச்சபைக்குவந்து சிங்காதனத்திலேறி யினிமையுடன் வீற்றிருந்தனன். எ - று. (௧௦)

வான்மாறினுங்கோன்மாறுதன்மருவாவளவேசன்
றூன்மாறலிலாக்கோட்டியுட்டகுநூல்வலர்விருதர்
பான்மாறலிலாச்சாரணர்பரிவித்தகருடனே
தேன்மாறுசொற்செங்குந்தர்பன்னிருவோருமெய்தினரே.

(இ - ள்.) மேகங்கள் காலத்தில் மழைபெய்தலினின்றும் மாறுபடினும் செங்கோனிலைமையில் மாறுபாடற்ற நீங்குதலில்லாத சபையிலே தகுதியமைந்துள்ள மந்திரிகளும் படைவீரர்களும் தம்மியல்பின் மாறுபடாத தூதர்களும்

அன்பமைந்த பெரியோர்களும் ஆகிய இவர்களுடனே, இனிமையில் தேனும் தோல்வியடையும்படியான சொற்களையுடைய செங்குந்தவீரர்கள் பன்னிருவரும் அடைந்தார்கள். எ - று.

மேகங்கள் காலக்கிரமந்தவறாது மழைபொழிதல் கடவுளாணையாதலின் அவ்வித ஆணைமாறுபடினும் மாறாத செங்கோலுடையானென்பார், "வான்மாறினுங்கோன்மாறுதன்மருவாவளவேசன்." என்றும், எக்காலும் கடுஞ்சொற் கூறுமியல்புடைய ரல்லரென்பார், "தேன்மாறுசொற்செங்குந்தர்." என்றும் கூறினர். (கக)

அறையாவருபறையோடரியமிசத்தினனவைபுக்
கிறைமாமலரடியேத்தினனெல்லாஞ்சொலிவல்லான்
சிறையேவலர்வந்தோர்ந்துசெல்திறனும்மவன்மறனு
முறைபாவுரைதரவேயிறைமுன்னாவிதுசொன்னான்.

(இ - ள்.) இந்திரனுடைய அம்சத்தினனாகிய யானையேறும் பெரும்பறையன் அறைந்தறிவித்துக்கொண்டுவந்த பெரும்பறையுடனே சோழன்சபைக்கு வந்து, அச்சோழனுடைய சிறந்த திருவடிகளைத்துதித்து நடந்த செய்தியனைத்தையுங்கூறி, வல்லானுடைய காவலிலமைந்த ஏவலாளர்கள்வந்து அச்செய்தியையறிந்துசென்றதன்மையையும் அவ்வல்லானுடையகொடுமையையும் முறைமைப்படிசொல்ல, இதுகேட்ட சோழன் ஆலோசித்து இவ்வாறு கூறினன்.

பழுவைப்பதியுதித்தெழுபரனார்தருபுதல்வீ
ரழவைக்கொடியுடையீரெனக்குரைதந்ததுநிறைவாம்
பொழுதின்றொடைந்தேநாளுளபோர்வெல்லுறுநீரார்
குழுவிற்குறும்விறலாயினுமவனேமிகக்கொடியோன்.

(இ - ள்.) திருப்பழுவூர் வீரட்டத்துள் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானருளிய புதல்வர்களே! புலிக்கொடியுடையவர்களே! எனக்கு நீங்கள் சொல்லிய உறுதிவாக்கியத்தை நிறைவேற்றுவதற்குரிய காலம் இன்றையத்தினத்துடனே ஐந்துதினங்கள்தா னிருக்கின்றன. யுத்தத்திற் சயிக்குந் தன்மையுடைய கூட்டத்தினராகிய உங்கட்கு வெற்றியுண்டாகுமாயினும், அவ்வல்லானே அதிக கொரேமுடையவன். எ - று.

நீங்கள் பன்னிருவரும் சுத்தவீரர்களாகலின் வெற்றிகொள்வது நிச்சயமேயானாலும் அவன் கொடியவனாதலால் வெகுஜாக்கிரதையா யிருக்கவேண்டுமெனக் குறிப்பித்தபடி. (கஉ)

சங்கத்திறையிதுகூறலுந்தகைசான்றபன்னிரண்டு
சிங்கத்தினிலொருவீரனென்சிங்கஞ்செயங்கூறிச்
செங்குந்தர்களாண்மைத்திறந்தேர்ந்தாள்குலமணியே
நங்கந்தனைநினையாவிடைநல்குஞ்செயலொன்றே.

(இ - ள்.) அவ்விராஜ சபையின்கண் சோழன் இவ்வண்ணங்கூறியவளவில், மேன்மைமிக்க துவாதசவீரர்களாகிய பன்னிரண்டு சிங்கங்களுக்குள்ளே ஓர் சிங்கமாகிய வீரரென்பவர் வெற்றிப்பாடு கூறிக்கொண்டு, செங்குந்தமரபினருடைய வல்லபத்தன்மையை நன்குணர்ந்து அவர்களைப்பரிபாலித்துவரும் சூரியகுலரத்னமே! நம்முடைய குமாரக்கடவுளைத் தியானித்து எங்கட்கு விடைகொடுக்கவேண்டிய செய்கையொன்றுதான் எங்கள் செல்லுகைக்குத் தடையாயிருக்கின்றது. எ - று.

சோழர்கள் இம்மரபினருடைய ஆண்மைத்திறமும் மதியூகமும் நைட்டிகமும் உணர்ந்தே மந்திரிகளாகவும் சேனாதிபதிகளாகவும் அமைத்துக்கொண்டிருக்கின்றாரென்றுரைப்பான், "செங்குந்தர்களாண்மைத்திறந்தேர்ந்தாள்குலமணியே," என்றார். (கசு)

இமைப்போதினித்தாழோமெனவெடுத்தோதலுமிறைவ
னமைத்தோங்கியதேராறிரண்டபயர்க்குமளித்துக்
குமைத்தாரகங்குலைக்குங்கரிகுரைகாற்படைமுதல
திமைத்தாங்கவர்பின்செல்லுறச்செய்தீதுதெரிப்பான்.

(இ - ள்.) இனி இமையளவுநேரமும் தாழ்க்கோமென்று அவ்வீரர்கள் விரித்துக்கூறியவளவில், அதுகேட்ட சோழன் அவர்களுக்கென்று நிருமித்து அதியுன்னதமாயிருக்கின்ற பன்னிரண்டு இரதங்கள் அப்பன்னிரண்டரசர்கட்குங்கொடுத்து, கெடுதிபுரிவோர்களுடைய அகங்காரத்தை யழிக்கத்தக்க யானைகள் குதிரைகள் பதாதிகள் முதலியவற்றைக்கூட்டி அவ்வரசர்கள் பின்றொடர்ந்து செல்லும்படிசெய்து இவ்வாறுரைக்கின்றனன். எ - று.

மேற்செய்யுளு மிதுவுங் குளகம். (கரு)

வேம்பார்தருதாரான்முதல்விளம்பேந்தல்கள்வலனாற்
றேம்பேறிடநின்றாரிதுதிணமாதலினமையாள்
காம்பூர்கடம்பலர்தாரினன்காத்தாள்கவென்றோதித்
தாம்பூலமளித்தவ்வவர்தமையுந்தழீஇமீண்டான்.

(இ - ள்.) வேப்பமாலையணிந்துள்ள பாண்டியன் முதலாகச் சொல்லத்தக்க அரசர்களெல்லாம் வல்லானென்பவனால் வருத்தமீக்கூர விருந்தார்கள். இதுநிச்சயமாதலால், நம்மையடிமையாகவுடைய காம்பமைந்த கடப்பமலர்மாலையணிந்தவராகிய குமாரக்கடவுள் உங்களைப் பரிபாலித்தருள்வாராக என்று ஆசீர்வதித்துத் தாம்பூலங்கொடுத்து, அப்பன்னிருவரையும் ஒவ்வொருவராகத் தழுவிக்கொண்டனன். எ - று. (கசா)

அதுபெற்றபின்போர்க்கோலமடைந்தெந்திரமேற
விதமுற்றதஞ்சுற்றத்தினரெழினட்பினர்முதலோர்

நதமுற்றபன்மணியிற்பொலிநறுந்தண்டிகையூர்ந்து
சதமுற்றபற்பண்டங்கொடுதாழ்ந்தார்புடைசூழ்ந்தார்

(இ - ள்.) சோழனிடத்தில் அவ்வாறு விடைபெற்றுக்கொண்ட பிறகு அப்பன்னிருவீரரும் யுத்தகோலமுடையவர்களாய் இரதத்தின்மீ தாரோகணிக்க, பிரியமுள்ளவர்களாகிய தங்கள் உறவினர்களும் அழகமைந்த நேசர்கள் முதலியவர்களும் ஆறுகளிலுதிக்கின்ற பலவித இரத்தினங்கள் பதிக்கப்பெற்று விளங்கும் சிறந்த சிவிகைகளி லேறிக்கொண்டு வந்து, நிலையாயுள்ள பலவித பொருள்களைக் கையுறையாகக்கொடுத்துப் பணிந்து புடைசூழ்ந்தார்கள். எ-று.

நதமென்பது ஆண்யாறென்றும் நதியென்பது பெண்யாறென்றுங் கூறுவர். இவற்றைமுறையே மேற்கோடுவதாலும் கிழக்கோடுவதாலுங்காணப்படும்.

அஞ்சாதவுணச்சேனையுளடலேறெனப்புக்கி
யெஞ்சாவலிகொடுமோய்த்தெழுசோரிக்கடனீந்தி
விஞ்சாவருவீரத்திறம்விளங்கப்பலபுடையுஞ்
செஞ்சாமரங்குடைதோரணஞ்செழுந்தோகைமுன்றிகழ்ந்த.

(இ - ள்.) அசுரசைனியங்களுக்குள்ளே வெற்றியுள்ள ஆண்சிங்கத்தை யொத்து அச்சமெய்தாமற்சேர்ந்து குறைவுபடாத வல்லபத்தால் அச்சைனியங்களையழித்து அவற்றினுதிரக்கடலில் மூழ்கி மேன்மையடைந்து வெளிப்பட்ட அவர்களது பூர்வ வீரத்தன்மை வெளிப்படுத்தும்படி, பலபக்கங்களினும் சிவந்த சாமரங்கள் சிவந்த குடைகள் சிவந்த தோரணங்கள் சிவந்து செழுவிய கொடிகள்முதலிய விளங்கின. எ - று.

முன்பு தேவாம்சம்பெற்று நவவீரர்களா யிருந்தகாலத்து குமாரக்கடவுட்குத் துணைவர்களாய்ச் சென்றடைந்த வீரத்தன்மையை, மானவாம்சமடைந்துள்ள இக்காலத்தும் வெளிப்படுத்தும் தோற்றம்போன்றிருந்த தென்றபடி. அன்றியு மவர்கட்குக் குடை கொடிமுதலிய சின்னங்கள் யாவும் சிவந்த நிறத்தினவாமென்பதை "பக்கத்தெழுந்துவருஞ்சூரனஞ்சப்படையெடுத்து - நெக்கப்பொருந்தோறுஞ்செஞ்சோரிவெள்ளநெடுங்கடல்போற் -கொக்கொத்தவெண்குடைமேலேயலையெறிகொள்கையினாற் - செக்கச்சிவந்தகவிகையுள்ளோர்கவிச்செங்குந்தரே." என்னும் செங்குந்தர்மாலைத் திருவிருத்தத்தானுமறிக. (கஅ)

முன்னாளறுமுகனோடவுண்முடித்தண்டரைக்காப்பப்
பின்னாண்மநுகுலவேந்தர்தம்பெருந்தாவினையொழிப்ப
மன்னாவிருவகையாந்தசவங்கத்துள்குக்குடமும்
பொன்னார்புலியும்மால்கொடிபுடைரண்டினுமசைந்த.

(இ - ள்.) முற்காலத்திலே சண்முகக்கடவுளுடன் சென்று அவுணர்களை யழித்துத் தேவர்களைப் பரிபாலிக்கவும், பிற்காலத்திலே சூரியகுலத்தரசர்க

ளுடைய பெருந்துயரை நிவாரணிக்கவும் கொண்ட நிலைபெருன இருவகைத் தசாங்கங்களில்; சேவலும் அழகமைந்த புலியும் பொறித்துள்ள சிறந்ததுவசங் கள் இருபக்கங்களினும் அசைந்தன. எ - று

முருகக்கடவுட்குத் துணைவர்களாய்த் தேவாம்சம் பெற்றிருந்தபோது அக்கடவுளின் தசாங்கங்களும், அதன்பின் மானவாம்சம்பெற்றுச் சூரியகுலத் தரசர்கட்குத் துணைவர்களாயிருந்தபோது அவ்வரசர்களின்தசாங்கங்களும் பெ ற்றுள்ளார்களாகலின்; ''மன்னுவிருவகையாந்தசவங்கத்துள்.'' என்றும், அவ் விருவகையுள் குக்குடத்துவசம் வலப்பக்கத்தினும் வியாக்கிரத்துவசம் இடப் பக்கத்தினும் அசைந்துவந்தன வென்பார், ''குக்குடமும்பொன்னூர்புலியும் மால்கொடிபுடைரண்டினுமசைந்த.'' என்றும் கூறினர். இம்மரபினர் இரு வகைத் தசாங்கங்களுடையா ரென்பதை, ''ஒப்புயர்வற்றகயிலாயவெற்பில் வல்லோங்கவுணர் - துப்பறவாறுமுகனேந்தித்துப்பின்றொல்லுலகின் - வெப் பறவெய்யோன்குலத்திவர்ந்தோங்கிவிற்பன்னர்மிகச் - செப்புதசாங்கமிருவ கைப்பெற்றவர்செங்குந்தரே.'' என்னும் செங்குந்தர்மாலைத் திருவிருத்தத்தானுந் தெளிக. (௧௯)

கயிலைப்பதியுறைகாவலர்கணமோடிவண்வந்தா
ரயிலைத்தரிகரன்றம்பியாருளோடிவண்வந்தார்
வெயிலைத்தொழுமநுவேந்தரைவேட்டோரிவண்வந்தார்
மயிலைப்பொருமரமாதர்கள்மணவாளர்கள்வந்தார்.

(இ - ள்.) திருக்கைலைவரையில் வசிக்கின்ற நந்திகணத்தலைவா அன்பு டனே இங்கு வந்தார்கள். வேலேந்திய திருக்கரமுடைய முருகக்கடவுளின் சகோதரர்கள் கருணையுடன் இங்கு வந்தாகள். சூரியனைப்பணிகின்ற மநு குலத்தரசர்களை விரும்பினோர்களாகிய செங்குந்த வீரர்கள் இங்குவந்தார்கள். மயிலைப்போன்ற சாயலுள்ள தேவமாதர்களின் கணவர்கள் இங்கு வந்தார் கள். எ - று.

இம்மரபினர் ஆதியில் நந்திகணத்தலைவர்களாயிருந்து, அதன்பின் முரு கக்கடவுளின் சோதரர்களாய் அவதரித்து, அதன்பின் சூரியகுலத்தரசர்களுக் குத் துணைவர்களானுரென்பதையும்; அக்காலத்தும் தேவமாதர்களையே மணம் புரிந்தனரென்பதையும் விளக்கியவாறறிக. இம்மரபினர் மநுகுல மன்னர்கட் குத் துணையாய்வந்தகாலத்தினும் தேவமாதர்களையே மணந்தனரென்பதை, இந்நூற் போராடற்சருக்கத்துப் பதினேழாவது செய்யுளுக் குதாரணமாகக்கூ றிய கந்தபுராணத்திருவிருத்தத்தானுமறிக. (௨0)

கல்லார்சுடரெனவேமிளிர்கைக்கோளர்கள்வந்தார்
செல்லாவெனச்செருநர்க்களைசெங்குந்தர்கள்வந்தார்
பல்லாயிரச்சிவபுண்ணியபரிபாலகர்வந்தார்
வல்லானெனும்பொல்லான்றனைவதைப்பான்வெளிவந்தார்.

(இ - ள்.) குன்றிற் பிரகாசிக்கும் விளக்கையொத்து விளங்குகின்ற கைக்கோளர்களென்போர் வந்தார்கள். பகைவர்களைச் செல்லுக்குச் சமானமாகக்கருதி யழிக்கவல்ல செங்குந்தவீரர்கள் வந்தார்கள். பலகோடி சிவபுண்ணியப் பரிபாலகர்கள் வந்தார்கள். வல்லாளென்னும் கொடியவனை வதைப்பதற்காக வெளிப்பட்டு வந்தார்கள். எ - று.

இம்மரபினர் ஏனையோர்புகழைக் குடத்திலிட்டவிளக்காக்கித் தம்புகழைக் குன்றிலிட்ட விளக்கொத்து எங்கும் விளங்கச்செய்தவர்களாகலானும், அத்தகைய புகழ் இவர்கள் கைக்கொண்டொழுகும் ஒழுக்கத்தால் விளைந்ததாகலானும், இவ்விரண்டையும் விளக்குவான் - "கல்லார்சுடரெனவேமிளிர்கைக்கோளர்கள்" எனவும், ஆதிகாலந்தொட்டுத் தொடர்ச்சியாய் அநேக பகைவர்களைத் தமது ஈட்டியின் வல்லபத்தாலேயே அழித்துவந்தார்களாகலின் அவ்வீட்டிக்குச் செந்நிறம் இயல்பாயிற்றென்பார், "செல்லாமெனச்செருநர்க்களை செங்குந்தர்கள்" எனவும், சிறப்புற்ற சிவக்ஷேத்திரங்களா யுள்ளவைகளிலெல்லாம் இம்மரபினர்செய்த சிவபுண்ணியமே விசேடமாயும் முதன்மையாயுமிருக்கின்றனவென்பார் "பல்லாயிரச்சிவபுண்ணியபரிபாலகர்" எனவும் கூறினர்.

என்னுப்பெரும்பொல்லேந்திக்கட்டியன்கூறிமுன்செல்ல
நன்னாதமொடைக்கோடணிநரலச்சுடர்தரும்விண்
மின்னுருமற்றவர்கேள்வருமவிருப்புற்றலர்தூவ
வொன்னான்வெருக்கொடுவாடவுலாவந்தனர்வீரர்.

(இ-ள்.) என்றிவ்வாறாகப் பெரியவிருதுகோலொன்றேந்திக்கொண்டு கட்டியக்காரன்சொல்லிமுன்னேபோகவும்,சிறந்த ஓசையுடன் பஞ்சகருவிகள் கோஷிக்கவும், பிரகாசம்பொருந்திய சொர்க்கலோகத்துள்ள தேவமாதர்களும் அவர்கள்கணவர்களாகிய தேவர்களும் பிரியமடைந்து மலர்மாரிசொரியவும், பகைவனாகியவல்லாளனென்பவன் பயங்கொண்டிளைக்கவும் துவாதசவீரர்களும் வீதியுலா வந்தார்கள். எ - று.

பஞ்சகருவிகளாவன:—கஞ்சக்கருவி - மிடற்றுக்கருவி - தோற்கருவி - துளைக்கருவி - நரப்புக்கருவியாம். இவற்றுள் தாளமுதலியபோன்றவை கஞ்சக்கருவி. கீதம்பாடுதல் முதலியவாய் சாரீரத்தால் விளைபவை மிடற்றுக்கருவி. மத்தளம் முதலியபோன்றவை தோற்கருவி. வேய்ங்குழல்முதலியபோன்றவை துளைக்கருவி. வீணை முதலியனபோன்றவை நரப்புக்கருவி. (உஉ)

உச்சிப்பொலிமுடியுங்குழையொளியுந்திருநுதலின்
வைச்சுப்பொலிவிரஞ்செறிமணிப்பட்டமுந்துணிவார்
சொச்சத்திருமலராலக்குமிதுலைவாண்மதிமுகமு
மச்சக்தெரிவட்காரடுமெயிலேபயில்காமும்.

(இ - ள்) உச்சியில்விளங்கும் கிரீடமும், காதிலணிந்த குண்டலங்களின் பிரகாசமும், அழகிய நெற்றியிற்றரித்து விளங்கும் இரத்தினங்கள்பதித்துள்ள வீரப்பட்டமும், நிச்சயத்தோடுணர்வார்க்குப் பிரசன்னமாகத்தக்க சிறந்த கமலாதனியாகிய இலக்குமிகணவரான திருமாலின் வதனம்போன்று சந்திரனை நிகர்த்துவிளங்கும் திருமுகமும், அச்சத்தையுணர்ந்த பகைவர்களைக் கொல்லத்தக்க வேலேந்திய கரங்களும். எ - று.

வைத்து எனற்பாலது எதுகைக்கிணங்க வைச்சு எனநின்றது. இவ்வாறு நிற்பதியல்பென்பதை, "அச்செல்லாமொன்றுயதிலேயிருவகையாய் - வைச்சதென்னசோணகிரிவள்ளலே - மிச்சையிலே - வாழ்ந்துசிலபேரிருக்கவாய் புதைத்துக்கைகட்டித்- தாழ்ந்துசிலபேரிருக்கத்தான்." என்னும் குகைநமசிவாயர் திருவாக்கானுந்தெளிக. (உரு)

பாரப்புயகேயூரமும்பவளத்திருநகையு
மாரக்கனமணிமாலிகையகலத்துறுமழகும்
போரிற்குறுபடையும்படைபொதிதூணியும்வில்லும்
வீரக்கழலொலியுங்கொடுவீதிச்செலுமெல்வை.

(இ - ள்.) பாரித்திருக்கும் தோள்களிலணிந்துள்ள புயகிரீதியும், பவளம்போலும் இதழ்கள் சிறிதலர்ந்து முத்துப்போலும் தந்தங்கள்தோன்றும் சிறுநகையும், முத்தினும் சிறந்த இரத்தினங்களாலுமாகிய அரதனமாலிகைகள் மார்பிலணிந்துள்ள அழகும், யுத்தம்புரிவதற்குரிய ஆயுதவகைகளும், அம்புகள் நிறைந்துள்ள அம்புறுத்தூணியும் வில்லும்,பாதங்களிலணியத்தக்க ஒலிக்கின்ற வீரக்கழலும் ஆகிய இவைகளுடனே துவாதசவீரர்களும் வீதியுலாவருகையில். எ - று.

அலங்காரங்கூறுங்கால் கேசாதிபாதமாகவேனும்பாதாதிகேசமாகவேனும் கூறவேண்டுவதிலக்கணமாகலின்,ஈண்டு இவ்விரண்டுசெய்யுட்களானும் அத்துவாதசவீரர்களின் கேசாதிபாதமாகக் கூறப்பட்டதை முறையே யுய்த்துணர்க.

மற்றிப்பெருமுதலாளிகள்வரவுக்கெதிர்நோக்கா
முற்றத்துமேன்மாடத்துமுன்முகமோங்கெணிற்குறுங்க
ணுற்றப்புடையினுந்தெற்றிமன்னுறுசந்திவைமுதலாப்
பற்றித்திரியாண்பெண்ணினர்பரிவார்கடன்மூழ்கி.

(இ - ள்.) இவ்வாறு அத்துவாதசவீரர்களாகிய பெரிய முதலாளிகள்வரவிற்கெதிர்பார்த்துக்கொண்டு முற்றங்களினும், மேன்மாடத்துமுன்முகப்பிலுள்ள அளவிறந்த சாளரங்களுள்ளவிடங்களினும், திண்ணைகளினும்,பொதுவிடங்களினும், வீதிகளின்முடிவிற்பொருந்தியுள்ள சந்துகளினும், ஆகிய இவ்விடங்களிலெல்லாம் உலாவுகின்ற ஆண்பாலாரும் பெண்பாலாரும் அன்பென்னும் கடலில் அழுந்தினவர்களாய்; எ - று.

ஓ நடன்னிருபகலோவெழிலுலகீறுறுப்ருவம்
வருபன்னிருமழுவாளிகள்வடிவோவெனவியவா
வொருவந்தமொடிவர்கூடுத லுணரிற்பெருவல்லான்
வெருவந்தமுறற்கென்னயிர்ப்பென்றுடவர்விதித்தார்.

(இ - ள்.) இவர்கள் ஒப்பற்ற துவாதசாதித்தர்கள்தானோ? அழகிய உலக மனைத்தும் அழியநேரும் மகா சங்காரகாலத்தில்வருகின்ற மழுவாயுதமேந்திய துவாதச ருத்திரர்களின் சொரூபந்தானோ? என்று வியந்து, இப்பன்னிருவ ரும் ஒருங்குசேர்ந்துவருதலை யோசிக்கையில் பெருமையடைந்திருக்கும் வல் லானென்பவன் அச்சமுறுதற் கென்னதவறு என்பதாக ஆண்மக்கள் கூறினார் கள். எ - று. (உசு)

அதுகேட்டவக்குழுவிற்சிலரவன்யாரையும்வெல்லும்
பதமேற்றெணிற்கணஞ்சூழ்தரப்படுநீலியையகத்து
மதிவீரியைப்புறத்தும்மாண்வலிலைக்குறவைத்துச்
சதமாயுளனவனுருயிர்சாய்த்தற்கிவர்தரமோ,

(இ - ள்) அவ்வார்த்தையைக்கேட்ட அக்கூட்டத்தாரிற்சிலர், அவ்வல் லானே எவரையும் வெல்லவல்ல வரத்தைப் பெற்றுக்கொண்டு எண்ணிறந்த கூட்டத்தார்கள் புடைசூழும்படி கொடிய காளியை உட்புறத்தினும் விசே டத்தன்மைபெற்றுள்ள துர்க்கையை வெளிப்புறத்தினும் கோட்டைக்கு வலு வாகக் காவல்வைத்துத் துணிவுடனிருக்கின்றானே: அவனுடைய உயிரைப் போக்குதற்கு இவர்களாற் சாத்தியமாகுமோ?. எ - று.

சதமாயுளன் என்பதற்கு நூறாயுள் உடையவனெனப் பொருள்கூறுதலு மாம். (உஎ)

எனவோதலுமருகேயவர்க்கிருந்தோர்களிற்சிலவர்
முனமாமுருகொடுமெய்திச்சூர்முனைவாட்டிமற்றவன்சே
யினமோடுவிடுத்தோங்கியவெணிற்கூளியையிறைமைக்
கனமோடொழித்தார்க்கிங்கிவன்கனமோபெரிதென்றார்.

(இ - ள்.) என்றுரைத்தவளவில், இவ்வாறுரைத்தவர்கள் சமீபத்திலிருந் தோர்களிற்சிலர் முற்காலத்திலே மேன்மையமைந்த குமாரக்கடவுளுடன்சென்று சூரபன்மனுடைய போரையழித்து, அவனுடைய குமாரனை அங்கி முகன் கூட்டமாக அனுப்பியதால் ஆக்கிரமித்துவந்த அளவிறந்த பூதங்களை அவற்றின் நிலைமையான மேன்பாட்டினராயுள்ள காளிமுதலானவர்களோடும் அழித்தவர்களாகிய நவவீரர்களுடைய சந்ததியாரான இவர்கட்கு இவ்வல்லா னென்பவனுடைய மேன்பாடோ பெரிதாகுமென்றுரைத்தார்கள். எ - று,

சூரபன்மனே சாட்சாத் முருகக்கடவுளாலேயே அழிக்கத்தக்க வல்லப முடையவன். அப்படிப்பட்டவனுடைய போரை யழித்ததுமன்றி, அவன்குமா

ரனுலனுப்பப்பட்ட வீரமாசுரி முதலானவர்களின் வலிமையையும் அழித்த வர்களுடைய சந்ததியாரெனக் குறிப்பித்தமையின் இவர்கள் தெய்வீகமுள்ள வர்களென விளக்கியவாறறிக. (உஅ)

வேறோர்சிலரதுகேட்டவைமெய்யேயிவர்மேனு
ணீறுகுறவெயின்மூன்றெரிநிமலன்சுதராகி
மாறுவருளறுமாமுகன்வழங்கப்பெறும்வகையா
லீறுகுறவமர்சாய்த்தனரினியாங்கொலென்றிசைத்தார்.

(இ - ள்.) மற்றுஞ்சிலர் அவ்வார்த்தையை வினவி, அவ்வெற்றிப்பாடனைத்தும் உண்மைதான்; ஆனால்- இவர்கள் முற்காலத்திலே முப்மதிலும் சாம்பராம்படி தகித்தருளிய சிவபெருமானுக்குப் புத்திரர்களாகிப் பெருமைபெற்ற சண்முகக்கடவுள் தமது மாறுபாடற்ற திருவருளைத் தமக்குத் தரப்பெற்ற நன்மையால் அவ்வசுரர்களியற்றிய போர் முடிவாகும்படி யழித்தார்கள். இப்போது அவ்வாறு முடியுமோ? என்றுரைத்தார்கள். எ - று. (உகூ)

மற்றுங்குளசிலராதைமறுத்தீங்கிவர்மநுவா
லுற்றோங்கியகுலமெய்தித்தமுழைவாழ்மகளுவக்கப்
பெற்றோங்கியகிளைக்காப்புவிபிறங்காருயிருணுவோ
னுற்றேங்கவிடுத்திட்டதையுணர்ந்துள்கலீர்போலும்.

(இ - ள்.) அவ்விடத்துள்ள மற்றும் சிலர் அவ்வார்த்தையைத் தடுத்து, இவர்கள் மரபினர் தேவாம்சம் நீங்கி மனுவினாற் சிறப்புற்று விளங்கிய சூரிய குலத்தில் மானவாம்சமடைந்தபோதும் தங்களிடத்தில் வாழ்ந்திருந்த புத்திரிகளிக்குமாறு அவள் வளர்த்துக்கொண்டிருந்த கிளிப்பிள்ளைக்காகப் பூலோகத்தில்விளங்கும் சீவராசிகளைக்கொல்லுகின்ற யமனும் ஏக்கமடையும்படி திருமுகம் அனுப்பியதை நீங்கள் ஆலோசித்துச் சிந்திக்கவில்லைபோலும். எ - று.

கிளிப்பிள்ளைக்காக யமனுக்குத் திருமுகமனுப்பினு ரென்பதை, இந்நூலுள் தூதறைசருக்கத்துப் பதினேழாவது செய்யுளுக் குதாரணமாகக்காட்டிய ஈட்டியெழுபதின் திருவிருத்தத் துரையானுந்தெளிக. (௩0)

அந்தாமரைத்தவிசாள்புரையருமைத்திருமகட்காச்
சந்தானமாங்கனியும்பலதழைகாயிவைவேண்டி
வந்தார்க்கவைதாராதிறுமாப்பவர்தலைமே
லுந்தாவமைத்தீண்டுற்றதையுணர்ந்துள்கலீர்போலும்.

(இ - ள்.) அழகிய தாமரையாதனமுடைய திருமகளைப்போன்ற அருமையான சிறப்புற்ற தங்கள் புத்திரிக்காகச் சந்தான மாம்பழமும் பலதழைகளும் காய்களும் ஆகிய இவைகளைவிரும்பி வந்தவர்கட்கு, அவைகளைக்கொடாமல் இறுமாப்புற்றிருந்த அவர்கள் தலைமீதிலேயே அவற்றை ஏற்றிவைத்து

இவ்விடத்திற்குக் கொண்டுவந்ததை நீங்கள் ஆலோசித்துச் சிந்திக்கவில்லைபோலும். எ - று.

சந்தானமாங்கனிமுதலியவற்றைக் கொண்டுவந்தனரென்பதை, "வடிவேலெடுத்தமனு துங்கவளவன்றேவிவெதுப்பாற - முடிவேள்வியிற்செந்தீத்தருகான்முளைமாங்கனிக்காச்குடநாட்டைச் - செடிவேரறுத்துச்சிறையிட்டுச்சென்னிவியப்பத்திறைபோலக் - கொடிவாண்முரசுகளிறுபரியிரதங்கொடுக்குஞ்செங்குர்தம்." என்னும் ஈட்டியெழுபதின் திருவிருத்தத்துரையாற்றெளிக. (௯க)

வெள்ளம்புடைசூழ்பூவினுண்மிளிரும்மிவரயிலின்
மள்ளற்கலிங்கஞ்சீனமராடந்துளுவஞ்சிந்
தெள்ளில்லருணஞ்சிங்களமிவைமுன்பதினெட்டு
முள்ளுந்தொறின்றுங்கொள்பனிப்புணர்ந்துள்கலீர்போலும்.

(இ - ள்.) விளக்கமுற்றிருக்கும் இவர்கள் கரத்தேர்திய வேற்படையால், கடலாற்புடைசூழப்பட்ட இந்நிலவுலகத்துள்ளே வலிமை மிக்க கலிங்கம் சீனம் மராடம் துளுவம் சிந்து இகழ்ச்சியற்ற அருணம் சிங்களம் என்னும் இவை முதலாகச் சொல்லப்படும் பதினெண்டேயங்களினுள்ளாரும், இன்றைக்கும் நினைக்கும்போதெல்லாம் நடுக்கங்கொள்வதை நீங்களாலோசித்துச் சிந்திக்கவில்லைபோலும். எ - று.

பதினெண்டேயங்களிவையென்பதை, இந்நூலுள் தேவசாக்ஷிச்சருக்கத்துப் பதினுருவது செய்யுளுக் குதாரணமாகக் காட்டிய ஓர் தனியனாலுணர்க. இம்மரபினர் பதினெண்டேயமும் வென்றாரென்பதை, "செங்கோனடத்துப்வளவனிட்டசிங்காதனத்திலினிதிருந்த- கங்கோன்கவியேகவியென்றுநாட்டிக்கவிபுன்கவிகளைந்து - வங்கோடீழங்கன்னடமாராட்டிரக்குச்சரஞ்சீனம் - கொங்கோடெங்குந்தரத்திறையேகொள்ளுமின்னார்செங்குந்தம்." என்னும் ஈட்டியெழுபதின் திருவிருத்தத்தானுந்தெளிக. (௯௨)

சிலரிவ்வணமொழிதந்திடச்சில்லோரிதென்கொல்லோ
பலசொல்லிவர்பதிபுண்ணியப்பரிபாலனராகி
யுலைவிற்பெரும்புகழ்பெற்றுளரதனாலுவையாவுந்
தலைநின்றுதற்காத்தாள்வதிற்சகடேயிவர்க்கென்றார்.

(இ - ள்.) சிலர் இவ்விதமாகக் கூறுகையில், வேறு சிலர் பலவார்த்தைகள் பேசுவதிற் பயனென்னை? இவர்கள் தொன்றுதொட்டுச் சிவபுண்ணியப் பாதுகாப்பாளராய் அழியாப் பெருங்கீர்த்தி யடைந்திருக்கின்றார்களாகலின், அச்சிவபுண்ணியங்களனைத்தும் முற்பட்டுநின்று பாதுகாப்பதனால் இவர்களுக்கு மாறுபாடேதென் றுரைத்தார்கள். எ - று.

பசுபுண்ணியம் மறுமையிற் பயனளிக்கத்தக்கதும் பதிபுண்ணியம் இம்மையிலேயே பயனளிக்கத்தக்கதுமாகலின், "உவையாவுந்தலைநின்றுதற்காத்தாள்வதில்." என்றார். (௯௩)

மற்றோர்புடைமகளிர்தமிற்சில்லோர்மயலாகி
முற்றாவிளமதிசூடியமுன்னோனுதல்விழித்தீப்
பற்றாவெரிமதன்பன்னிருவடிவங்கொடிப்பதியூ
டுற்றானெனவந்தாரிவர்க்குளவோவவன்கணையே.

(இ - ள்.) வேறோர் பக்கத்திலிருந்த மங்கையர்களுட்சிலர் காமங்கொண்டவர்களாகி, முதிராத இளம்பிறைதரித்த முதல்வராகிய சிவபெருமானுடைய நெற்றிக்கண்ணிற்றோன்றிய அக்கினிபற்றுதலாலெரிந்த மன்மதன் மீண்டும் பன்னிரண்டுருவமெடுத்து இந்நகரத்திலே வந்தானென்று சொல்லும்படி வந்தவர்களாகிய இத்துவாதசவீரர்கட்கும், அம்மதனுடைய மலர்ப்பாணங்களுண்டோ?. எ - று.

இப்பன்னிருவரும் ஒருவர்க்கொருவர் பேதமின்றி ஒரேதன்மையுடையராய் மன்மதனையொத்த அழகுடையராய் விளங்கலின், "மதன்பன்னிருவடிவங்கொடிப்பதியூடுற்றானெனவந்தாரிவர்க்கு." என்றும், அவ்வாறு மன்மதனே பன்னிரண்டுருவங் கொண்டிருப்பானாயின் இவர்கட்கும் மன்மதபாணங்களுளவோ? எனவும், அவ்வாறில்லாதிருக்குமாயின் அவர்கட்கு நம்மீது காதலுண்டாமோ? எனவும் கலங்கினரென்பார்; "இவர்க்குளவோவவன்கணை." என்றும் கூறினர். (௯௪)

எனவோதுதலுணர்ந்தாங்குளவிளையார்சிலரிவர்தா
முனமேயரமகளிரைமுயங்குஞ்செயலுநடி
மனுவார்குலம்வரவேட்டுளமகிழ்வார்நரமகளீ
ரினம்வேட்டுறற்கிசையவார்கொலிவ்வெணநீக்குமினென்றார்.

(இ - ள்.) என்று கூறுதலையறிந்து அவ்விடத்துள்ள சில மகளிர்கள், இவர்கள் முற்காலத்திலேயே தேவமாதர்களையணைவதற் கெண்ணங்கொண்டு அம்மாதர்களனைவரும் மநுவின்குலமாகிய சூரியகுலத்தில்வந்தவதரிக்க அவர்களைத் திருமணமுடித்து மனமகிழ்ந்திருப்பவர்களாகலின் ; மாணிடமாதர்களை இன்னும் மணம் முடிப்பதற்குச் சம்மதிப்பார்களோ? ஆதலால் இவ்வெண்ணத்தை நீக்குங்களென் றுரைத்தார்கள். எ - று.

தேவாம்சம் நீங்கி மானவாம்சம் பெற்றபோதும் தங்கள் சந்ததியார் தேவாம்சராகியே இருக்கவேண்டுமென்னும் எண்ணத்துடன், அத்தேவமாதர்களே மானவாம்சம்பெற்றுச் சூரியகுலத்திலவதரிக்கும்படி விரும்பித் திருமணம் முடித்தவர்கள், இப்போது மானிடமாதர்களை விரும்புவார்களோ? என்றபடி.

வேறு.

இன்னணந்தஞ்சைமேயவெண்ணின்மாந்தரும்பெண்டிரு
மன்னிநின்றேத்தநாற்பான்மறுகுளுந்தேரையோச்சிப்
பொன்னிமிர்விமானன்மேக்குப்போலிதிசைநண்ணுமெல்லவ
துன்னியகுழாத்தோடாலந்துறைதனிற்புக்கார்வீரர்,

(இ - ள்.) இவ்வாறாகத் துவாதசவீரர்களும் தஞ்சைமாநகரத்துள்ள அளவிறந்த ஆடவர்களும் மகளிர்களும் அங்கங்கிருந்து துதிக்கும்படி நாற்றிசைகளினுமுள்ள வீதிகளெல்லாம் தங்களிரதத்தைச் செலுத்திக்கொண்டு சென்று, பொன்மயமாயோங்கும் விமானத்தின்மீது சூரியன் மேற்றிசையில் பொருந்தும் தருணத்தில், தங்களை நெருங்கிவந்த கூட்டத்தார்களுடனே ஆலந்துறையென்னும்பதியிற் சேர்ந்தார்கள். எ - று.

தஞ்சையின் குடிகளிற் சிலரும் இவ்வீரர்களின் சுற்றத்தினரும் புடைசூழ்ந்து வந்தாராகலின், "துன்னியசுழாத்தோடு," என்றார். (ரு சு)

எழுச்சிச்சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-ச௱சுு.

---

பத்தாவது

# நிபந்தவணச்சருக்கம்.

விண்ணவர்கள்கோனும்வியப்புற்றுமகிழ்வெய்த
மண்ணதுபுரக்கும்வளவேசவயவீரர்
நண்ணலனைமாய்ப்பவருளுடிமணிவாக்கா
னிண்ணயமுரைத்தெழுநிபந்தனையுமோர்தி.

(இ - ள்.) இந்திரனும் அதிசயித்துக் களிகூரும்படி நிலவுலகத்தைப் பரிபாலிக்கின்ற குலோத்துங்கச்சோழனே! வெற்றியுள்ள அத்துவாதசவீரர்களும் பகைவனாகிய வல்லாளனையழிப்பதற்காகத் திருவருளைநாடி, தங்கள் அழகிய திருவாக்குகளாற் கூறிக்கொண்டு வெளிப்பட்ட சபதங்களையும் அறியக்கடவீராக. எ - று.

கவிச்சக்கரவர்த்தியாராகிய ஒட்டக்கூத்தர், அவ்வீரர்கள் தஞ்சையை நீங்கி வெளிக்கொண்டு ஆலந்துறையிற்சேர்ந்த சரித்திரத்தைக்கூறினோம், இனி அவர்கள் அவ்விடத்திற் செய்துகொண்ட சபதங்களைக்கூறுகின்றோம் அறிவீராக என்றுரைக்கத் தொடங்கினாரென்பார்; "மணிவாக்கானிண்ணயமுரைத்தெழுநிபந்தனையுமோர்தி." என்றனர். (க)

விக்கலன்படாமனையின்மேன்மணிபதித்து
நக்கிரணியக்கலசநாவகமுளின்னே
சக்கியினிவீழுமெனல்காட்டுவதுமான
மிக்கபகலோனிரதமேற்கடலுளாழ்ந்த.

(இ - ள்.) விக்கலனென்னும் இரட்டன்அமைத்துள்ள கூடாரத்தின்மேல் இரத்தினங்கள் பதிக்கப்பட்டுப் பிரகாசிக்கின்ற பொற்கலசமானது இப்போதே தவறி உள்ளேயிருக்கும் அகழியின்மத்தியில் விழுமென்று காட்டுவதுபோன்று, மேன்மையிற்சிறந்த சூரியனுடைய இரதம் மேற்றிசைக்கடலுள் இறங்கியது. எ - று.

பொற்கலசத்தைச் சூரியனாகவும் அகழியைக் கடலாகவும் உவமித்து, அவ் வல்லான் வாழ்விழந்து ஒளிமழுங்கும் குறியைக்காட்டிச் சூரியன்மறைந் திருட்டிற்றென்பதை விளக்கியவாறறிக. (உ)

தென்னவ்வளவன்படைநெருங்கிப்பிரட்டற்காத்
துன்னிஎழுசேனையைத்துடைத்தபொழுதங்கன்
மன்னிமிளிர்செம்புனலின்வாரியினையேய்ப்பப
பொன்னிரதன்போயதிசைபூத்தசெக்கர்வானம்.

(இ - ள்.) நேற்று விக்கலனுக்காகத் திரண்டெழுந்த சைனியங்களைச் சோழனுடைய சைனியங்கள் கிட்டியழித்தபொழுது அப்போர்க்களத்தில் நிலை பேருய் விளங்கிய உதிரப்பிரவாகத்தினையொத்து, பொன்மயமான இரதத்தை யுடைய தினகரன் மறைந்த மேற்றிசையிலே செவ்வானம் தோற்றிற்று. எ-று.

ஈண்டு உதிரப்பிரவாகத்தைச் செவ்வானத்திற் குவமித்தமை காண்க. இதனையே வண்ண உவமமென்பர். (௩)

வேறொருவரைப்பணிதல்விட்டுலகையோம்பி
வீறுமிறைவற்படலும்வேளிரினமொய்த்துச்
சீறியிருநாற்றிசைசெறீஇயவெனவொன்னுன்
சூறைதுவக்கோய்தலுறச்சூழ்ந்ததுபுன்மாலை.

(இ - ள்.) மற்றொருவரைத் தாழ்தலகற்றி உலகெங்கும் தானே பரிபாலித்து மேன்மையுற்ற சக்கரவர்த்தி யழிந்தமாத்திரத்தில் குறுநிலமன்னர்கள் நெருங்கிக் கோபித்து எண்டிசைகளினும் சேர்ந்ததுபோன்று, இனிப்பகைவனுகிய வல்லான் கொள்ளையடிக்கத்தொடங்குதல் ஒழியும்படி சிறிய மாலைக்காலம் வந்தது. எ - று.

பகல் இரவென்னும் இரண்டினும் பகலே சிறந்ததாகலின், அக்காலத்தைச் சக்கரவர்த்தியெனக்கூறினர். அன்றியும் அவ்விரண்டையும் போன்று நீடித்த காலவளவையுடைய தல்லவெனக் குறிப்பிப்பான், "புன்மாலை." என்றனரென்க. (௪)

நாலிருதிசைக்குமொருநல்லரணெனச்சூழ்ந்
தாலுதல்செயும்புகர்கொளானனவுவாக்க
டாலமிசைமொய்த்துலவுதன்மையெனவிண்மீ
னேலல்கொடுபம்மலுறவெங்குமிருள்சூழ்ந்த.

(இ - ள்.) அஷ்டதிசைக்கும் ஓர் சிறந்த கோட்டையைப்போன்று சூழ்ந்து அசையுந்தன்மையுடையதாய் புள்ளிகளுடைத்தாகிய முகமுள்ள யானைகள் நிலவுலகத்தில் நெருங்கித்திரியுந் தன்மையையொத்து, இருளானது நட்சத்திரங்கள் பொருந்துதலைக்கொண்டு எவ்விடத்தும் சூழ்ந்தது. எ - று.

திசையானைகளை இருளாகவும் அவற்றின் முகத்துள்ள பொற்புள்ளிகளை நட்சத்திரங்களாகவும் உவமித்தமை காண்க. (ரு)

வெண்மரைமலர்த்திகிரிமீதுபதினறு
யெண்முழவெண்சீலையிடையெப்திடவுடஇத்தன்
வெண்பணியுமின்னவெளெமெய்ப்பனுவலாட்டி
விண்மிசையெழுந்தெனமிளிர்ந்ததுவெண்டிங்கள்.

(இ - ள்.) வெண்டாமரைமலரென்னும் இரதத்தின்மீது பதினறுமுழமுடையதென்று கணக்கிடத்தக்க வெள்ளைவஸ்திரத்தைத் தனதிடையிற்பொருந்தும்படியுடுத்துத் தன்னுடைய வெண்ணிறவாபரணங்களும் பிரகாசிக்கும்படி வெண்ணிறத்திருமேனியுடைய கலைமகளார் ஆகாயத்தில் வந்ததுபோல, வெள்ளிய சந்திரன் விளங்கியது. எ - று.

கலைமகளார்க்கு வெண்டாமரை யாதனமும் வெள்ளுடையும் வெள்ளிய ஆபரணங்களும் வெண்டிருமேனியு முடைமையின், சந்திரமண்டலத்தையே இரதமாகவும் சோடச கலைகளையே வெண்சீலையாகவும் மற்றுள்ள நட்சத்திரங்களையே வெள்ளிய ஆபரணங்களாகவும் சந்திரிகையையே மேனியாகவும் கற்பித்துச் சந்திரனுக் குவமையாக்கினமை காண்க. (சு)

ஏரின்மிகுவேட்குமிரதிக்குமணமாற்றுஞ்
சீரிலெண்ணிற்றீபநடுவேதிகழுகிற்குந்
தாரிலகுகும்பவெனத்தாரகைகள்சூழ
நேரிலமுதக்கதிர்நிசாகரனுதித்தான்.

(இ - ள்.) அழகின்மேம்பட்ட மன்மதனுக்கும் இரதிக்கும் திருமணம் முடிக்கின்ற சிறப்பிலே, அளவிறந்த விளக்குகளின் மத்தியில் பிரகாசித்துக்கொண்டிருக்கின்ற ஒழுங்கமைந்த குடவிளக்கையொத்து, நட்சத்திரங்கள் தன்னைச்சூழ்ந்திருக்கும்படி ஒப்பற்ற அமுதகிரணங்களையுடைய சந்திரன் உதயமாயினன். எ - று.

கலியாணப்பந்தலில் கிளைவிளக்குமுதலிய அனேக தீபங்கள் ஏற்றினும் அவைக்கெல்லாம் விசேடமாகவும் மத்தியாகவும் குடவிளக்கு வைத்திருப்பது போன்று, ஆகாயத்தில் அநேக நட்சத்திரங்கள் பிரகாசிக்கும்படி அவைக்கிடையில் சந்திரனுதயமாயினன் என்றபடி. (எ)

காதலரகன்றபலகாரிகையர்மானத்
தீதில்பகன்மாமலர்கடேப்பியெழிறேய்ந்த

வோதவரடைந்தபலவொண்டொடியர்மான
வேதமிலிராமலர்களின்புகொடலர்ந்த.

(இ - ள்.) தங்கள் கணவர்கள் நீங்கிய பலமாதர்களைப்போன்று, பகலின்மலர்கின்ற குற்றமற்றுச் சிறந்த மலர்கள் வருந்தி அழகழிந்தன. மேற்சொல்லிய அககணவர்கள் வந்து சேர்ந்த பலமாதர்களைப்போன்று, இரவின் மலர்கின்ற குற்றமற்ற மலர்கள் இன்பத்துடனே மலர்ந்தன. எ - று.

பகன்மலர்களுக்குச் சூரியனும் இராமலர்களுக்குச் சந்திரனும் கணவர்களாகலின், தம்முடைய கணவனான சூரியன்மறைந்தபோது அம்மலர்கள் வாடியும், சந்திரனுதித்தபோது அம்மலர்கள் மலர்ந்துமிருந்தன என்றனர். பகன்மலர்கள் தாமரைமுதலியவை. இரவின்மலர்கள் குமுதம் முதலியவை. (அ)

தன்னிகரில்காவலன்றயங்குமுகம்வாடத்
துன்னுகுறும்போங்கிமகிழ்சூழுதல்கடுப்ப
மன்னுமரைநாண்மலர்தன்வாசவிதழ்கூம்பிச்
சின்னமுறவாம்பன்முகைசெம்மைகொடலர்ந்த.

(இ - ள்.) தனக்கொப்பற்றிருந்த சக்கரவர்த்தியொருவன் விளக்கமுற்ற முகம் வாட்டமடைந்திருக்க நெருங்கிய குறும்பரசர்கள் மேம்பட்டுக் களிகூர்வதைப்போன்று, சிலபேறுடனே அன்றலர்ந்த தாமரைமலர் தன்னுடைய மணமுள்ள இதழ்கள் குவிந்து அழகிய ஆம்பன்மலர்களின் அரும்புகள் செப்பம் மேற்கொண்டு மலர்ந்தன. எ - று.

தாமரைமலரே ஏனையமலர்களுட் சிறந்ததாகலின், அதனைச் சக்கரவர்த்தியாகவும் மற்றமலர்களைக் குறும்பரசர்களாகவும் உவமித்தமை காண்க. தாமரைமலரே ஏனையமலர்களிற் சிறந்ததென்பதை, "பூவினுக்கருங்கலம்பொங்கு தாமரை - யாவினுக்கருங்கலமரனஞ்சாடுதல் - கோவினுக்கருங்கலங்கோட்டமில்லது - நாவினுக்கருங்கலநமச்சிவாயவே." என்னும் ஆளுடையவரசுகளின் அருள்வாக்கானுமறிக. கணவனைக்காணின் முகமலர்ச்சியுறும் மாதர்களைப் போன்றும், அவனில்லாக்காலத்து முகமலர்ச்சியறும் மாதர்களைப்போன்றும், சூரியன் அத்தமித்ததனுல் தாமரைமலர் வாடியும் சந்திரோதய மானதால் ஆம்பல்கள் மலர்ந்தும் விளங்கின என்றபடி. (கூ)

இன்னவிரவோங்கியுறுமெல்லையினிலாலந்
துன்னுதுறையென்பதிதுலங்கவரும்வீர
ருன்னுவவுணர்ந்துசெயுமொற்றரைவிளித்து
நன்னயமொடின்னவிதநாடிநவில்கின்றூர்.

(இ - ள்.) இத்தகைய இரவு நீடித்திருந்தபோது ஆலந்துறை என்னும் நகரம் விளங்கும்படி வருகின்ற துவாதசவீரர்களும், நினைத்தவையனைத்தையும் குறிப்பாலறிந்து செய்கின்ற தூதர்களையழைத்து நன்மையுடனே இவ்வாறெண்ணிக் கூறுகின்றூர்கள். எ - று.

குறிப்பறிந்து தூதுரைத்தலே ஒற்றரிலக்கணமாகலின் அவ்விலக்கணமமைந்த தூதர் என்பார், "உன்னுவவுணர்ந்துசெயுமொற்றர்." என்றார். இதனை, "கடனறிந்துகாலங்கருதியிடனறிந் - தெண்ணியுரைப்பான்றலை." என்னும் திருக்குறளுரையானுந்தெளிக. (௧0)

பாரதுபுரந்திடுபராந்தகனவைக்கண்
வீரமொடுசொற்றதினத்தொன்றுசெல்மேலை
நேருருவநாற்றினமவற்றினிமலன்றாள்
வாரமொடுமுத்தினம்வணங்கிடநினைந்தாம்,

(இ - ள்.) உலகத்தைப் பரிபாலிக்கின்ற பராந்தகச்சோழனுடைய சபையிலே வீரத்தன்மையுடன் கூறியநாள்களைந்தில் ஒருநாள்கழிய இன்னும் கழியவேண்டிய தினங்கள் நான்கில், சிவபிரான் திருவடிகளை அன்புடனே மூன்றுநாள்கள் பூசிக்கும்படி எண்ணினோம். எ - று.

சபதம் செய்துகொண்ட தினங்களைந்தில் ஒருதினங்கழிந்தமையின், இன்னும் மூன்றுதினங்கள் சிவபிரான் வழிபாட்டிற்கழித்து வரம்பெற்றுக்கொண்டு ஐந்தாவது தினத்தில் வல்லானை வெல்லத் தீர்மானித்தோம் என்றபடி. (௧௧)

ஆதலினருக்கன்வெளியாகுமுனரற்கா
யோதுமபிடேகவகையொப்பனைசெயற்கு
மேதகவிளங்குமவைமெல்லசனமாதி
போதலுறவீண்டயர்திர்பொற்பவவையாவும்.

(இ - ள்.) ஆகையால் சூரியனுதிப்பதற்குமுன்னமே சிவபெருமானுக்குரியதென்று சொல்லத்தக்க அபிடேகத் திரவியங்களும், அலங்கரிப்பதற்காக மேம்பாடுடன் விளங்கத்தக்கவைகளும், மிருதுவான நிவேதனம் முதலியவைகளும் ஆகிய அவைகளனைத்தையும்; சிறப்பமையும்படி இங்குவந்துசேருமாறு செய்வீர்களாக. எ - று.

அபிடேகவகைகளும் அலங்காரவஸ்துக்களும் நிவேதனத்திற்குரிய சித்திரான்னவகைகளும் ஆகிய இவைகளைச் சேகரிப்பீர்களாக என்றபடி. (௧உ)

முற்றியபின்விக்கலன்முடித்துளகட்டோர்ந்து
மற்றுரைசெய்முத்தினமுமாயுமுனமீண்டு
நிற்றிடுதிரென்னலுநிமைப்பளவிலோடிச்
சொற்றபொருளத்தனையுஞ்சோர்தலறவீட்டி,

(இ - ள்) பூஜா உபகரணங்களெல்லாம் சேகரித்துமுடிந்தபிறகு, விக்கலனென்பவன் அமைத்துள்ள காவல்களனைத்தையுமறிந்து மேற்சொல்லிய மூன்றுதினங்களும் கழிவதற்குள்ளாகத் திரும்பிவருவீர்களாக. என்று கட்ட

ணையிட்டவளவில் இமையளவுநேரத்திலோடி மேற்கூறிய உபகரணங்களில் ஒன்றும் வழுவாமற்சேகரித்து, எ - று.

நிமை - இமையென்பதன் மரூஉவென்றுணர்க. (கஉ)

வேறு,

வெயிலெழுமுனீட்டியவப்பொருளையெல்லாம்வெள்ளேற்றின்மீ தூமாவின், பயிலுமுதுகினுங்களிற்றின்மஞ்சினுநீழ்கழுத்தனவெரின் பாங்குநளாஅ, மியலுறமேலேற்றிக்கொணர்ந்தங்கிருந்தோர்களிறும்பூது கொளவிறக்கித், துயிலெழுமங்கலம்பாடிவிக்கலனூர்ச்செலலுற்றார் தூயவொற்றர்

(இ - ள்.) மேன்மைமிக்க தூதுவர்கள் சூரியோதயத்திற்குமுன்பே சேகரித்த அக்தவஸ்துக்கள் அனைத்தையும், வெண்ணிறமுள்ள இடபங்களின்மீதும் குதிரைகளின் சிறந்த முதுகினும் யானைகளின் முதுகினும் ஒட்டகங்களின் முதுகினுள்ளும் இயல்பமையும்படி யேற்றிக்கொண்டுவந்து, அங்கிருந்தவர்கள் ஆச்சரியமடையும்படி இறக்கித் துவாதசவீரர்களும் நித்திரைதெளியும்படி திருப்பள்ளியெழுச்சிபாடி விக்கலனுடைய ஊர்க்குப் போகத்தொடங்கினார்கள்.

ஆதுணர்ந்தசெங்குந்தவடல்வேந்தர்விழித்தெழீஇயயனீராடித், தீதின்மரவுரியுடீஇத்திருவெண்ணீறக்கமணிதிகழவேய்ந்து, வீதலிலாவிறையுளத்திலுதித்தமைப்போலெழின்முகத்தில்வெளிவந்தோரால், வேதமொடாகமமுறைகொண்டருத்தியொடுபூசிப்பான்மேவினாரால்.

(இ - ள்.) அச்செய்தியையறிந்த செங்குந்தகுலோற்பவர்களும் வெற்றியுள்ளமன்னர்களுமாகிய அப்பன்னிருவரும் துயிலுணர்ந்தெழுந்து, சமீபத்துள்ள பிரமதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து, குற்றமற்றமரவுரியைத்தரித்து, திருவெண்ணீறு உருத்திராக்கமணிமாலை ஆகிய இரண்டையும் விளக்கமுறும்படியணிந்து, அழிவற்றவராகிய சிவபிரான் திருவுள்ளத்துதித்தவர்களாகும் தங்களைப்போன்றே அவ்விறைவருடைய அழகிய திருமுகத்திலுதித்தவர்களாகிய ஆதிசைவவேதியர்களைக்கொண்டு வேதசிவாகமமுறைமைப்படி அன்புடனே பூசிக்கத்தொடங்கினார்கள், எ - று.

சிவபிரான் திருவுள்ளத்துதித்தவர்கள் செங்குந்தரும், அப்பெருமான் திருமுகத்துதித்தவர்கள் சிவாசாரியருமாகலின், "வீதலிலாவிறையுளத்திலுதித்தமைப்போன்றெழின்முகத்தில்வெளிவந்தோர்." என்றார். ஆயின் சிவாசாரியர்களைப்போன்று நேரே சிவபிரான் திருவுள்ளத்துதித்தார்களோவெனின், நன்று வினவினாய்! சிவபிரான் திருநோக்கால் நவசத்திகளும் திருவுள்ளத்தால் நவவீரர்களும் உதித்தனரெனக் கந்தபுராணத் தோதியிருக்கின்றமை யுணர்கிலீர் போலும். இதனை, "எண்ணிலாநவமணிகளினுமையுருவெனைத்துங் - கண்ணினூற்றெறிந்தருளினால்வந்மெனச்சமற - வண்ணமேலோர்வகைமணிக்கொருசத்தி

களாக - நண்ணினர்நவசத்திகளமரர்நற்றவத்தால்.'' எனவும், "பருப்பதக் கொடிபுரைநவசத்திகள்பரமன்-திருப்பதத்திடைவணங்கிநின்றவளிடைச்சிந்தை விருப்பம்வைத்தலுமுனிவர்தமகளிர்போல்விரைவிற்- கருப்பமுற்றனர்யாவது முமையவள்கண்டாள்.'' எனவும் வரும் கந்தபுராணத் திருவிருத்தங்களாற் றெளிக. (கரு)

நன்னியமத்தொடுந்திலதநெய்யாட்டியானிடத்தீதநனுமைந்தாட்டிப்
பன்னுமமுதைந்தாட்டிப்பாறயிர்நெய்தேன்கழைதென்பழஞ்சாந்தாட்டி
மன்னுதபனப்புனலாதியவாட்டிமலரணிகள்வயங்கச்சூட்டித்
தின்னலுணல்பருகலொடுநக்கன்முறைநிவேதனங்கள்சிறக்கவூட்டி.

(இ-ள்.) சிறந்த நியமத்துடனே எண்ணெய் யபிடேகித்து, அதன் பின் பசுவினிடத்துதிக்கும் பஞ்சகவ்வியத்தை யபிடேகித்து, அதன்பின் ஆக மங்களிற்கூறப்படுகின்ற பஞ்சாமிர்தத்தையபிடேகித்து அதன்பின் பால் தயிர் நெய் தேன் கருப்பஞ்சாறு இளநீர் சந்தனம் என்னும் இவைகளை வரிசையாக அபிடேகித்து, அதன்பின்னர் தபனகலசதீர்த்தம் முதலியவைகளை யபிடேகித்து, மலர்களும் ஆபரணங்களும் பிரகாசிக்கும்படி தரித்து, தின்னல் உண்ணல் நக்கல் பருகல் என்னும் நால்வகையாகிய நிவேதனங்களைப் பெருமையமையும்படி நிவேதித்து, எ - று.

அபிடேகத் திரவியங்களை இவ்வரிசையாகவே அபிடேகிக்க வேண்டுமென்பதை, "நல்லதிலநெய்யாடியானிடத்தைந்தாடிநவையிலையமுதமாடி - நல்கு காரணகாரியம்முறையினன்றியேநறுநெய்பாறயிராடியே - மெல்லமலர்மது வாடியின்கழைச்சாறாடிமென்பழச்சாறாடியே - விழையுமிளநீராடியாரக்குழம் பாடிவிதியினமைதடனமாடி.'' என்னும் சிவப்பிரகாசசுவாமிகள் திருவாக்கானுந்தெளிக. பஞ்சகவ்வியங்களாவன:—பால் தயிர் நெய் கோமயம் கோசலம் என்பவைகளே. பஞ்சாமிர்தம் இரசபஞ்சாமிர்தம் எனவும் பலபஞ்சாமிர்தம் எனவும் இருபகுப்பாகக்கூறப்படும். அவற்றுள், சர்க்கரை - தேன் - பால் - நெய் - தயிர் - என்னும் ஐந்தும் கூட்டில் இரசபஞ்சாமிர்தமாம். இவற்றுடன் வாழை மா பலா என்னும் முப்பழமும் சேர்த்தால் பல பஞ்சாமிர்தமாம். இதனை, "சர்க்கரைதேன்பானெய் ததியென்றவோரைந்து-மற்புதனுக்காட்டுமமிர்தம்'' என்னும் சிவராத்திரி கற்பத்தானுமுணர்க. (கசு)

இன்னியங்கள்பலமுழங்கவிருந்தூபதீபவகையினிதிற்காட்டி
மன்னுமறையாய்ந்தெடுத்தமந்திரமோராயிரத்தான்மாலூரத்தாற்
பன்னுமருச்சனையாதிபணித்தம்மிலபிடேகர்பலராலின்பந்
துன்னிருசொல்வேதபாராயணஞ்செய்வித்தின்னேதுதிக்கலுற்றார்.

(இ-ள்.) அதன்பின் பலவாத்தியங்கள் கோஷிக்கும்படி பெரிய தூப வகைகளையும் தீபவகைகளையும் இனிமையுடனேகாட்டி, நிலைபேறுயுள்ள வேத

ங்களால் ஆராய்ந்தோதப்பட்ட சகஸ்திரநாமங்களாலும் வில்வத்தால் யாவரும் துதிக்கத்தக்க அருச்சனைமுதலியவற்றைப்புரிந்து, தம்மரபினருள்ளே அபிடேகஸ்தராயுள்ளார் பலரைக்கொண்டு இன்பத்தைச் சேர்க்கத்தக்க' வடமொழி தென்மொழி என்னும் இருமொழிகளிலுள்ள வேதங்களைப் பாராயணஞ்செய்வித்து, உடனே தோத்திரிக்கத் தொடங்கினார்கள். எ - று.

மேற்செய்யுளுமிதுவுங்குளகம். வடமொழியிலுள்ளவை இருக்காதி சதுர்வேதங்களும் தென்மொழியிலுள்ளவை தேவாரதிருவாசகங்களுமாகலின், அவற்றையுணர்த்துவான், "துன்னிருசொல்வேதபாராயணஞ்செய்வித்து." என்றார்.

தாயினைநேர்ந்திரங்கியருடலைவவோவெமதருமைச்சனகவோ
புன்,மாயையெலாமாய்வுறமெய்ஞ்ஞானமெனும்வாளுதவுமாண்பவோ
வீ, ணாயபுவிவாழ்க்கையிடையயர்வேமையாட்கொளநேரையவோவ
ன், காயவிரட்டனையொழித்தற்காவருமெம்மருங்கிருந்துகாத்திடாயே.

(இ - ள்.) சர்வான்மாக்கட்கும் தாய்போன்று திருவுள்ளமிரங்கியருள் புரியும் பெருமானே! எங்கட்கருமையான பிதாவே! அற்பமாகிய மாயைகளனைத்தும் அழியும்படி மெய்ஞ்ஞானமென்னும் வாளைப்பாலிக்கும் தயாளுவே! அவமாகிய உலகவாழ்க்கையில் வருந்துகின்ற அடியேங்களை ஆட்கொள்வதற்காக எழுந்தருளிய ஆசாரியரே! வலியசரீரமுடைய விக்கலனென்னும் இரட்டனை யழிப்பதற்காக வருகின்ற எங்கள் பக்கத்திலிருந்து காத்தருள வேண்டும். எ - று.

கருப்பத்தில்வைத்து வளர்த்தீன்ற தாயாகவும், உதித்தபின் பருவம்வந்த தருணத்திற் கல்விபயில்வித்தாதரித்த பிதாவாகவும், அதன்பின் அக்கல்வியினலாயபயன் ஞானமடைதலேயெனத்தெளிவித்த ஆசாரியராகவும், அதன்பின் மெய்ஞ்ஞானத்தின் பிரயோஜனமாக முத்தியளிக்கும் தெய்வமாகவும், ஆகக்கூடிய மாதாபிதாகுருதெய்வம் என்னும் நான்குவிதமாகவும் விளங்குவார் சிவபிரான் ஒருவரே என்பதை விளக்கியவா றுய்த்துணர்க. (க௭)

நாத்திகஞ்சொனுவினரைநண்ணாரிற்கிடத்துமெங்கணுதவோநல்
லாத்திகஞ்சொலன்பினரையருகிருந்தாளுதல்புரியுமையவோபுன்
னூத்தைமிகுமெய்யுற்விலுவகையறவெவமைப்புரக்குமுறுவவோநின்
கூத்துணராதுயிரலைக்கும்வல்லானையொழிக்கவருள்கூர்ந்திடாயே.

(இ - ள்.) நாத்திகம் கூறுகின்ற நாவுடையோரைப் பகைவரைப்போன்றழிக்கின்ற எங்கள் தலைவரே! மேன்மைமிக்க ஆத்திகம் கூறுகின்ற நாவுடையோரைச் சமீபத்திருந்து அடிமைகொள்ளும் ஐயனே! கீழ்மையையுடைய மலமிகுந்துள்ள சரீரபந்தத்தில் மகிழ்ச்சிநீங்கும்படி அடியேங்களைப் பாதுகாக்கின்ற ஞானசொரூபரே! தேவரீர் திருவிளையாடலையறியாமல் சீவர்களை வருத்துகின்ற வல்லானென்பவனை யொழிக்கும்படியாகத் திருவருள்புரிதல்வேண்டும்.

நாத்திகங்கூறுவோர் நமக்குமேற் றலைவரின்றென்னுங்கருத்தால் தீவினைக்கஞ்சார்களாகலின் அத்தீவினையே அவர்கட்குப்பகையாய்க் கொல்லுமென்றும், ஆத்திகங்கூறுவோர் தமக்கருள்புரியும் தலைவருண்டென்னுங் கருத்தால் நல்வினையேபுரிவாராகலின் அந்நல்வினையே அவர்களைப்பாதுகாக்கும் என்றும் குறிப்பாலுணர்த்தியவாறறிக, ஆயின் கடவுள் நேரே உவத்தலும் வெறுத்தலும் அடைதலின்றோவெனின், அவர் சர்வசீவதயாபரராகலின் அவர்க்குச் சிலரிடத்து விருப்பும் சிலரிடத்து வெறுப்பும் நேராது; அவரவர்கள் வினைப்போகங்களையே ஊட்டாநிற்பர். இதனை, "வேண்டுதல்வேண்டாமையிலானடிசேர்ந்தார்க் - கியாண்டுமிடும்பையில" என்றும், "பெருமைக்குமேனைச்சிறுமைக்குந்தத்தங் - கருமமேகட்டளைக்கல்" என்றும் வரும் திருக்குறள்களினுரையாற்றெளிக. இத்துவாதசவீரர்களும் இப்போது தொடங்கிய காரியத்திற்குச் சரீராபிமானம் பெருந்தடையாகலின், "புன்னூற்றைமிகுமெய்யுறவினுவகையறவெமைப்புரக்குமுறுவவோ." என்றும், அவரவர்கள் வினைப்படி சிவபெருமான் ஊட்டுவிக்கின்றாரென்னும் உணர்ச்சியின்மையின் தானே யாவரையும் வெல்லவேண்டுமெனக்கருதிச் சீவர்களை வருத்திக்கொண்டிருத்தல் வல்லானியற்கையாகலின், "நின்கூத்துணராதுயிரலைக்கும்வல்லான்." என்றும் கூறினர். (கக)

புன்னெறியிற்பல்காலும்புக்கிடுவோர்க்குச்சேய்த்தாம்புனிதவோப, னன்னெறியைநாடோறுநணுகிடுவோர்க்கணித்தாநண்பவோவெண், பொன்னரியீதெனவாலந்துறையிருந்தெம்பவந்தொலைக்கும்புராணவோகொல், வன்னெறிசேர்விக்கலனைவாட்டவருமெமக்குனருள்வழங்கிடாயே.

(இ - ள்.) கீழ்மைநடையிற் பலகாலமும் செல்கின்றவர்கட்கு அதி தூரமாயிருக்கும் தூயரே! பலவிதமான நன்மார்க்கத்தைத் தினந்தோறுமடைகின்றவர்கட்கு அதி சமீபமாயிருக்கும் நேயரே! வெள்ளிமலையிதுவாகுமென்று ஆலந்துறையில் வீற்றிருந்தருளி அடியேங்கள் பிறவியையொழிக்கத்தக்க புராதனரே! எவரையுங்கொலைபுரிகின்ற கொரேநடையடைந்துள்ள விக்கலனென்பவனை அழிக்கும்படி வருகின்ற அடியேங்களுக்குத் தேவரீர் திருவருளை நல்குதல்வேண்டும், எ - று.

தீயொழுக்கமுடையோர்க்குத் தெரிசிக்கவேலாத சேய்மையினின்றும், நல்லொழுக்கமுடையோர்க்கு நாடவுமொண்ணாத அண்மையினின்றும் அருள்புரிதல் சிவபெருமான் திருவருளியற்கையென்பதை யுணர்த்தியபடி. இதனை, "கையார்வளைசிலம்பக்காதார்குழையாட - மையார்குழல்புரளத்தேன்பாயவண்டொலிப்பச் - செய்யானைவெண்ணீறணிந்தானைச்சேர்ந்தறியாக் - கையானையெங்குஞ்செறிந்தானையன்பர்க்கு - மெய்யானையல்லாதார்க்கல்லாதவேதியனை - யையாறமர்ந்தானைப்பாடுதுங்காணம்மானாய்." என்னும் மணிவாசகப்பெருமான் மலர்வாக்கானுமறிக. (உ0)

எனத்துதித்திவ்வகையேயைங்கரற்குமறுமுகற்குமெழிற்பூசை யாற்றி, மனத்துறுகோட்பாடுரைத்துவழுத்திமறையவர்க்குமாதுலர்க்குங்கைப்ப, வினத்தொடுசானங்கள்பலவியற்றியருள்பெற்றாரயின்னேமூன்று, தினத்துளுநோற்றிருப்பவலான்செயல்யாவுமொற்றர் வந்துசெப்பினரால்.

(இ - ள்.) என்றிவ்வாறு தோத்திரஞ்செய்து, இதுபோலவே விநாயகக் கடவுட்கும் சண்முகக்கடவுட்கும் அழகிய பூசையைமுடித்து, தங்கள்மனத்தின்கணுள்ள எண்ணத்தை அக்கடவுளர்களிடத்தும் விண்ணப்பித்துக்கொண்டு துதித்து, வேதியர்கட்கும் யாசகர்கட்கும் வெறுப்புண்டாகும்படி சோடசமகாதானங்களையும் பலவாகச்செய்து, அம்மூர்த்திகளின் திருவருளையடைந்தவர்களாய் இவ்வண்ணமே மூன்றுதினங்கள் அநுஷ்டித்துக்கொண்டிருக்கையில் வல்லான் ஏற்படுத்தியுள்ள காவல்களின் செய்தியனைத்தும் தூதர்கள்வந்து சொன்னார்கள். எ - று.

ஈஸ்வரபத்தி யுள்ளோரனைவரும் கிரியைகளனைத்தும் கடவுளின் திருவருண்முன்னிலையில் நடக்கின்றனவென்னும் தேற்றமுடையோராகலின், இவ்வீரர்களும் சிவபிரானைத்துதித்து அவர் திருவருள்முன்னிலையில் வல்லானை வெல்லக்கருதி இவ்வாறு துதித்தனரென்க. மெய்ப்பத்தியுடையோர் இவ்வாறு திருவருள் முன்னிலையானே யாதொருகிரியையும் இயற்றுவரென்பதை, "வேதவேள்வியைநிந்தனைசெய்துழ - லாதமில்லியமணொடுதேரரை - வாதில்வென்றழிக்கத்திருவுள்ளமோ - பாதிமாதுடனாயபரமனே - ஞாலநின்புகழேமிகவேண்டுந்தென் - னாலவாயிலுறையுமெம்மாதியே." எனச் சமணர்களிடத்தில் வாதிட்டுவெல்லுமாறு ஆளுடையபிள்ளையார் சிவபிரான் திருவுளப்பாங்கைக் குறையிரந்திருந்தலானு முணர்க. (உக)

ஆங்கதுகேட்டலும்வீரநாரணர்களிருவோருமகத்துட்பொங்கி
நாங்கிளிவேந்தற்குரைத்தநாளைந்தின்மூன்றரைநாணடந்தவிவ்வ
னீங்குமுனம்விரைந்தேகனீதநமிற்சாதலுறினேனையோர்நின்
றேங்கல்கொளாவகையேற்பாடியற்றனலமெனயாருமிசைந்தேற்றார்"

(இ - ள்.) அத்தூதர்கள் வந்துரைத்த செய்தியைக்கேட்டவளவில் வீரநாராயணர்களிருவரும் மனத்திற்சினங்கொண்டு, நாம் பராந்தகச்சோழனுக்குக் கூறிய ஐந்து தினங்களில் மூன்றரை நாள்கள் கழிந்தன. ஆதலால் இன்றைய விரவு கழிவதற்கு முன்பு துரிதமாய்ச்செல்லுதலே நீதியாகும். அவ்விடத்தில் நம்மில்யாராவதிறந்தால் மற்றையர்கள் அதுகுறித்துநின்று ஏக்கமுறுவண்ணம் ஏற்பாடுசெய்வது நன்மையென்றுரைக்க, மற்றுள்ளாரனைவரும் ஒருப்பட்டு இதனை யங்கீகரித்தார்கள். எ - று.

ஒருவனிறந்ததைக்குறித்து ஏனையோர் வருந்திக்கொண்டிருக்கின் தாங்கள் செய்துகொண்ட சபதம் நிறைவேறாதாகையால், "நமிற்சாதலுறினேனையோர்நின் - றேங்கல்கொளாவகையேற்பாடியற்றனலம்." என்றனர். (உஉ)

பன்னிருவோருந்தமதுகேசபங்கிதனைப்பின்னிட்பந்தஞ்செய்து
மின்னுகருந்துகில்புனைந்துசீராவுஞ்சல்லடமுமிளிரவேய்ந்து
பொன்னிலவுவட்டமிடக்கரத்தும்வாள்வலக்கரத்தும்பொற்பவேந்தி
யின்னபடிவீரன்முதல்யாவருஞ்சினிபந்தனைகளிசைப்பதானார்.

(இ - ள்.) அப்போது துவாதசவீரர்களும் தங்களுடைய தலைமயிரைப் பின்னிக் கட்டிக்கொண்டு, விளக்கமுற்ற கருநிறவஸ்திரமுடுத்து, சீராவையும் சல்லடத்தையும் பிரகாசிக்கும்படி தரித்து, பொன்போல்விளங்கும் கேடகம் இடக்கரத்திலும் வாளாயுதம் வலக்கரத்திலும் அழகமையும்படிதாங்கி, அடியில்வருமாறு வீரர்முதலியயாவரும் சிலசபதங்களைக் கூறலாயினர்.

வேறு.

நன்றியில்வல்லான்றன்னைநறுக்கிடற்கொருவனம்மிற்
பொன்றிடிற்சமரமாற்றப்புறங்கொடுத்தேகியூரிற்
சென்றிடினன்றிகொன்றதீயவனாவேனென்று
வென்றிகொள்படைமுன்வைத்துக்கடந்தனன்வீரன்மன்னோ.

(இ - ள்.) நன்றியறியாதவனாகிய வல்லானென்னும் விக்கலனைக் கொல்வதற்காக நம்மில் ஒருவனிறந்தால், அதுகண்டு பயந்து போர்புரிவதற்குப் புறங்கொடுத்துநீங்கி ஊர்க்குப்போவேனாயின் ஒருவர்செய்த நன்றியைமறந்த கொடியவனாவேனென்றுகூறி வீரரென்பவர் தமது வெற்றிப்படையை முன்வைத்துத் தாண்டினர். எ - று.

மகாபாதகங்கட்கெல்லாம் தீர்வுரைத்துள்ள வேதசிவாகமங்களில் ஒருவர்செய்த நன்றியை மறந்தபாதகத்திற்குத் தீர்வுரைக்கவில்லையாகலின், அதனினுஞ் சிறந்த பாதகமில்லையென்று குறிப்பிப்பான், "நன்றிகொன்றதீயவனாவேன்." என்றார். செய்ந்நன்றிமறத்தல் அதிபாதகமென்பதை, "எந்நன்றி கொன்றார்க்குமுய்வுண்டாமுய்வில்லை - செய்ந்நன்றிகொன்றமகற்கு." என்னும் திருக்குறளுரையானுக்தெளிக. (உச)

விக்கலன்றன்னைவெல்லவேண்டியிங்கமர்க்குவந்த
தக்கவர்க்கிறுதிவந்தால்சமர்பொருதவற்கொலாமற்
புக்கிடிற்சிவத்துரோகப்புன்கணனாவேனென்று
நக்குமொண்படைகடந்தானாரணனென்பமாதோ.

(இ - ள்.) விக்கலனென்னும் வல்லானைவெல்ல விருப்பங்கொண்டு இவ்விடத்திற் போர்புரிவதற்குவந்த தகுதியுள்ளவர்கட்கு மரணம் நேர்ந்தால், அதன்பின்னும் யுத்தம்புரிந்து அவ்வல்லானைக்கொல்லாமல் திரும்பிச் செல்வேனாகில் சிவத்துரோகம்புரிந்த கொடியவனாவேனென்று நாரணரென்பவர் பிரகாசிக்கின்ற தமதுசிறப்புற்ற ஆயுதத்தைத்தாண்டினார். எ - று. என்ப - மாது - ஓ - அசைகள். (உரு)

வினைபுனை வல்லான் றன்னைவெட்டிடவென்னப்போரின்
முனைசெயவந்தபேர்க்குமுடிவுறின்முடித்திடாமன்
மனைபுகிலொருவன்கற்பின்மடந்தையைப்புணரும்பாவி
யனையனுனென்றேகச்சியான் றனுயுதங்கடந்தான்.

(இ - ள்.) துஷ்கிருத்திய மேற்கொண்ட வல்லானை வெட்டுவதற்கென்று யுத்தகளத்திலே போர்புரிய வந்தவர்கட்கு மரணம் சம்பவித்தால், அதன் பின்னும் அவ்வல்லானைக்கொல்லாமல் தனியே வீட்டிற்குத் திரும்புவேனுயின் ஒருவனுடைய கற்புள்ள மனைவியைக் கலந்தவனுவேனென்று கச்சித்தனியர் என்பவர் தமது ஆயுதத்தைத்தாண்டினுர். எ - று. (உசு)

மன்னிரட்டனைக்கொலாமன்மன்மொருமித்துவந்த
வென்னவர்க்கணுகுந்தீமையெய்திடாதூரிலேகி
னென்னையைக்கொன்றபாவியாவனென்றுயுதத்தை
யுன்னினன்றிருமுன்வைத்துக்கடந்தனனொற்றியானும்.

(இ - ள்.) நிலைபெறுயுள்ள விக்கலனைக்கொல்லாமல் மனவொருப்பாடுற்றடைந்த என்குலத்தார்க்குச்சம்பவிக்கும் கெடுதியைச் சகியாமையால் ஊருக்குத் திரும்பிப்போவேனுகில், மாதாவைக்கொலைபுரிந்த மாபாவியாவேனென்று ஒற்றியூரர் நினைத்துச் சந்நிதிக்கு முன்பாகத் தமது ஆயுதத்தைவைத்துத் தாண்டினர். எ - று. (உஎ)

மருவிரட்டனைவெல்லாமல்வந்துபின்றிரும்பியேகிற்
பொருணசைகொண்டவாசாற்புகழ்ந்துநங்குலத்திலுள்ள
குருவினையிழந்தபாவக்கொடியனென்றெழிற்களத்தூ
ரரசனுயுதத்தைவைத்துக்கடந்தனனுருமேத்த.

(இ - ள்.) சன்மார்க்கம் மருவிய விக்கலனை வெல்வதற்காகவந்து பின்பு அவனைவெல்லாமல் திரும்பிச்சென்றுல், பொருளிச்சையடைந்த ஆசாரியனைத் துதித்து நமதுகுலத்திலுள்ள ஆசாரியரைநிந்தித்த பாவம்விளைத்த கொடியவனுவேனென்று களத்தூரரசர் யாவரும் துதிக்கும்படி ஆயுதத்தைவைத்துத் தாண்டினர். எ - று. (உஅ)

வேறு.

கூடலனைவெல்லாமற்கூடிவருந்தமரணியுங்
கேடணியாமற்சேரிற்கீழ்க்குலத்தான்றனைக்குருவாக்
கோடல்செயும்பெரும்பாவக்கொடுமையெனப்புற்றிடங்கொ
ளேடவிழுந்தார்மார்பத்திறைகடந்தான்படையம்மா.

(இ - ள்.) பகைவனுகிய வல்லானைச் சயிக்காமல் உடன்கூடிவரும் சுற்றத்தாரடைகின்ற துயரத்தை நானும் அடையாமல் ஊருட்சேர்வேனுயின்,

தங்கள்குலத்தினும் தாழ்ந்தகுலத்துள்ளவனை ஆசாரியராகக் கொள்கின்ற பெரும்பாதகமடைந்த மூடனென்று புற்றிடங்கொண்டாரென்னும் இதழ்களலர்ந்த நீபத்தாரணியும் மார்பினையுடைய அரசர் தமதுபடையைத்தாண்டினர். எ - று. அம்மா- வியப்பிடைச்சொல். (உகூ)

வீணுற்றவல்லானைவெல்லாமற்றமரிருக்க
நாணுற்றுப்புறங்கொடுக்கினம்பினரைநட்டாற்றிற்
காணுற்றான்பசுநூலைக்கற்றானுமாவனென
வாணுக்கேறாகியகோளாந்தகனும்படைகடந்தான்.

(இ - ள்.) வீண்செய்கை புரிகின்ற வல்லானை என்னுடன்வந்த சுற்றத்தினரெல்லாம் வெற்றிகொள்ளாதிருப்ப அக்கால்நாணமில்லாது முதுகுகாட்டியோடுவேனாயின், நம்பினவர்களை நட்டாட்டிற் கைவிட்டவனும் சிவபோதத்திற்கேதுவாகிய நூல்களைக் கற்றவனுமாவேனென்று ஆண்மக்களென்னும் சிங்கங்கட்குத்தலைவராகிய கோளாந்தகரும் தமது ஆயுதத்தைத்தாண்டினர். எ-று.

வேதசிவாகமபுராணேதிகாசங்களும் அதன்சார்பாயுள்ளவைகளும் பதிநூல்களெனவும் ஏனையவை பசுநூல்களெனவும் கூறப்படுமாகலின், அத்தகைய பதிநூல்களையேயோதிப் பயனடையாமற் பசுநூல்களையோதிப் பவஞ்சேகரித்த பாவியாவேனென்றனரென்க. (௩0)

ஒன்னலனைவெல்லாமலுடன்வந்தோர்க்குற்றவினை
தன்னையநுபவியாமற்றனிவந்தேனாயினியன்
மன்னவனையமர்க்களத்தில்மடியவிட்டுக்கடிதேகுங்
கொன்னகனென்றேபள்ளிகொண்டானும்படைகடந்தான்.

(இ - ள்.) பகைவனை வெற்றிகொள்ளாமல் என்னோடும் வந்தவர்கட்குச் சம்பவித்த துக்கத்தை யுடனிருந்து அநுபவிக்காமல் தனியேவந்தேனானால்; தன்னைப்பாதுகாத்த இயல்புடைய அரசனைப் போர்க்களத்தில் இறக்கும்படி விட்டுவிட்டு அதிவிரைவிற்செல்கின்ற கடுஞ்சித்தமுடைய பாவியாவேனென்று பள்ளிகொண்டாரும் தமது ஆயுதத்தைத் தாண்டினர். எ - று. (௩க)

வித்தைவலான்றன்முடியைவெட்டார்மலங்கேகும்
பத்திருவர்க்குற்றவினைபாராமற்புறங்கொடுக்கின்
வைத்தவடைக்கலப்பொருளைவவ்வியபாதகனாவேன்
சத்தியமென்றேபிணவன்றனதுபடையைக்கடந்தான்.

(இ - ள்.) மாயவித்தை வல்லவனுன விக்கலன்றலையை வெட்டாமலும் அவ்விடத்திற்குச்செல்லும் பன்னிருவீரர்க்கு நேர்ந்த துயரத்தைநோக்காமலும் புறங்காட்டுவேனாயின், அடைக்கலமாகவைத்த பொருள்களை யபகரித்த பாதகனாவேன் இது பிரமாணமென்று பிணவர் தமது ஆயுதத்தைத் தாண்டினர். எ - று. (௩உ)

திடமுடனேபடைமுடிக்கச்செல்பாக்குநம்மவர்க்காங்
கடுவினையைத்தீர்க்காமற்கரந்தேகினுலொருவன்
மடமாதருடன்மைந்தர்மடியத்தீமனையிலிடுங்
கடும்பாவியாவனெனுக்கண்டியனும்படைகடந்தான்.

(இ - ள்) மனேதைரியத்துடனே பகைவனையழிக்கச்செல்வதற்கு நம்மவர்க்குள்ளே சம்பவிக்கின்ற கொடியதுயரத்தை நீக்காமல் ஒளித்துச்சென்றால், ஒருவன் தனது மாதர்களோடும் மக்களோடும் உயிரிழக்கும்படி அவன் வீட்டில் நெருப்புவைக்கின்ற கடும்பாவியாவேனென்று கண்டியூரரும் தமது ஆயுதத்தைத் தாண்டினர். எ - று. (௩௩)

வல்லானைவெல்லவென்றுமனமொருமித்தேநடக்கு
நல்லார்கட்கிடரணுகினடுநில்லாதேகுவனேன்
சொல்லாவலுடன்வந்தவிருந்திருக்கத்தான்றுய்த்த
பொல்லாதானுவ்னெனுப்புகழ்மணியன்படைகடந்தான்.

(இ - ள்.) வல்லானை வெற்றிக்கொள்வதற்கென்று மனவொருப்பாடுடன் செல்கின்ற நல்லவர்களாகிய நம்மவர்க்குத் துயர்நேர்ந்தால் நானும் மத்தியிராமல் மறைவேனேயாகில், கூறத்தக்க ஆசையுடனேவந்த விருந்தினர் காத்திருக்கத் தான்மாத்திரம் புசித்த கொடும்பாவியாவேனென்று புகழ்பெற்ற மணியர் தமது ஆயுதத்தைத் தாண்டினர். எ - று. (௩௪)

தரியலனைக்கொலவேகுஞ்சமரிலெமருடனமரைப்
புரியாமலெதிர்காட்டிப்புறங்கொடுக்கிலடைக்கலமா
வருமவருக்கிடறிழைத்தோன்மாமிமனையிருந்துண்டோ
னிருவர்கதியுறுவனெனுவெழில்வேம்பன்படைகடந்தான்.

(இ - ள்.) பகைவனைக் கொல்வதற்காகச் செல்கின்ற போர்க்களத்தில் எம்மவர்களுடனே போர்புரியாமல் எதிரேகாட்டிவிட்டு முதுகுகாட்டுவேனேயின், அடைக்கலமாக வந்தவர்கட்குத் தீமையியற்றினவனும் மாமியார்வீட்டிலிருந்து புசித்தவனும் ஆகிய இவர்களிருவரும் அடையத்தக்க கதியடைவேனென்று அழகமைந்த தஞ்சைவேம்பரென்பவர் தமது ஆயுதத்தைத் தாண்டினர். எ - று. (௩௫)

இப்படிச்சந்நிதிவாயிலேவிலகினுவிலகா
மெய்ப்பெரியவைரமிகுவீரரிதுகூறியரன்
செப்பரியதிருமுன்னஞ்சென்றுரும்பணிந்தெழுந்தெங்
கைப்பெரியவாமலகக்கனியேயென்றிதுபுகல்வார்.

(இ - ள்.) இவ்வாறுகச் சந்நிதிவாயிலில் குறிபார்த்தெய்யும் அம்புவிலகிப்பாயினும் நாங்கள் நாவினின்றுகூறிய வார்த்தைமாறாத உண்மையான சிறந்த

வைராக்கியத்தின் மேம்பட்டவர்களான அப்பன்னிரண்டுவீரர்களும் இவ்வாறு சபதஞ்செய்துகொண்டு, சொல்லுதற்கரிய மகிமைவாய்ந்த அப்பெருமான் திருமுன்னே யாவரும்போய் வணங்கியெழுந்து, எங்கள் கரங்களிற்கிடைத்த பெருமையுள்ள நெல்லிக்கனிபோல்பவரே யென்று துதித்து இவ்வாறு விண்ணப்பிக்கின்றார்கள். எ - று,

எனவே ஆலயத்திற்கெதிரிலிருந்து சபதஞ்செய்துகொண்டபின்பு சந்நிதியையடுத்து விண்ணப்பிக்கின்றார்களென்பதுணர்க. ஏவிலகின் என்பதில் உம்மைதொக்கது. (௩௬)

தேவர்பயந்தீர்த்தசுரர்தீமையகற்றியபரமே
மேவலனும்வல்லானைவென்றவன்றன்றலைகொண்டு
காவலன்முன்செல்லும்வணங்கருணைசெயாயாயினியா
நாவிலகோமெங்கடலைநறுக்கிமுனம்வைக்கின்றோம்.

(இ - ள்.) தேவர்களுடைய அச்சத்தையொழித்து அசுரர்களின் கொடுமையை நிவாரணித்த கடவுளே! பகைவனுயிருக்கின்ற வல்லானென்னும் விக்கலனைச்சயித்து அவனுடைய தலையை எடுத்துக்கொண்டு பராந்தகச்சோழனுக்குமுன்னே செல்லுமாறு திருவருள்புரியீராயின், நாங்கள் சொன்ன சொல்லை மாற்றமாட்டோமாகையால் எங்கள் தலைகளைத் துண்டித்து உம்முடைய சந்நிதிக்குமுன் வைக்கின்றோம். எ - று.

சொன்னசொற்றவறுச் சுத்தவீரராகலின், "நாவிலகோமெங்கடலைநறுக்கிமுனம்வைக்கின்றோம்." என்றனரென்க. (௩௭)

எனமெழுகினுருகிமனமிருவிழிகடாரளமுகத்
தனையறியார்கணப்போதுநிற்பவ்ரன்றண்ணருளா
னினைவின்முனமொருகோட்டுநெடுந்துதிக்கைக்கன்றுமதன்
பினையமரருருகோட்டுப்பிடிமருவுங்கன்றிருந்த.

(இ - ள்.) என்று விண்ணப்பித்துக்கொண்டு மனமானது அனலிற்பட்ட மெழுகைப்போன்றுருகி, இரண்டுநேத்திரங்களினின்றும் முத்துக்களைப்போன்று ஆனந்தக்கண்ணீரொழுகும்படி பரவசப்பட்டு ஓர் க்ஷணநேரம் நிற்கையில்; அவர்கள் சிந்தனைக்குமுன்பாகச் சிவபிரானுடைய குளிர்ந்த திருவருளால் ஒற்றைக்கோடும் நீண்டதும்பிக்கையுமுடைய யானைமுகக்கடவுளும் அவருக்குப்பின்னே தேவர்களுடைய இரக்கத்தைத்தொலைக்கும் தெய்வகுஞ்சரியை யணைக்கின்ற குமாரக்கடவுளும்தோற்றினார்கள். எ - று. (௩௮)

கண்டார்கள்சிரந்தாங்குகரங்குவித்துப்பேரவசங்
கொண்டார்கள்செய்ததவக்குறைமுடிந்ததெனவேத்திக்
தொண்டாருமெமையாளத்தோன்றியவாவரவேண்டுந்
தண்டாமமணிபிரட்டன்றனைவெல்லத்துணையென்றார்.

(இ - ள்,) இப்படி சிவபெருமானருளால் மூத்தபிள்ளையாரும் இளையபிள்ளையாருந் தோற்றியதைத் துவாதசவீரர்களும் தரிசித்தார்கள். உடனே சிரமேற்சேர்த்த கரங்களைக்குவித்துப் பெரிதாகிய பரவசங்கொண்டார்கள். நாங்கள் இயற்றிய தவக்குறைநிறைவேறிற்றென்று துதித்து, அடிமைகளாகிய எங்களை ஆட்கொண்டருளுமாறு காட்சிகொடுத்தவண்ணமே குளிர்ந்த மலர்மாலைதரித்த இரட்டனுகிய விக்கலனைச் சயிப்பதற்குத் துணையாகவரவேண்டுமெனப் பிரார்த்தித்தார்கள். (ககூ)

பத்திவடிவாகிவரும்பன்னிருவர்கரதலத்திற்
சத்திவடிவேறுணையாந்தனிக்குந்தப்படைவிளங்க
வெற்றிவரர்க்கருள்செயும்வீரரும்பின்றொடர்ந்துவர
முத்திகரிமுன்னடக்கவிடைநடந்தார்முனைவீரர்.

(இ - ள்.) பத்திவடிவமாயுள்ள துவாதசவீரர்கள் தமது திருக்கரங்களில் சத்தியின் சொரூபமாயுள்ள கூரியவேலாயுதத்திற்குத்துணையாகிய ஒப்பற்ற கைவேலென்னும் குந்தப்படை பிரகாசம்வீசும்படி, தேவர்கட்கு வெற்றியைத் தந்த முருகக்கடவுளும் நவ வீரர்களும் பின்றொடர்ந்துசெல்ல முத்தியின்பத்தை அடியார்கட்குப் பாலிக்கின்ற யானைமுகக்கடவுள் முன்னேநடக்கப் போரில்வல்லவர்களாகிய தாங்கள் நடுவே சென்றார்கள். எ - று.

சிவபிரான் திருவருளே சத்திவடிவாக அப்பெருமான் இடப்பாகத்திலிருப்பதும், அந்தச்சத்தியே வேற்படையாக முருகக்கடவுள் திருக்கரத்திருப்பதுமென்று நூல்கள் முறையிடுதலின், "சத்திவடிவேல்." என்றும், அச்சத்திவேலுக்குத் துணையாயிருந்து சூராதிகளையொழித்தது கைவேலாகலின் "துணையாந்தனிக்குந்தப்படை" என்றும், இவ்விருவகை வேலாலும் வெற்றியை விண்ணவர்க்களித்தவர் சண்முகக்கடவுளும் அவர் சகோதரருமாகலின், "வெற்றிவரர்க்கருள்செயும்வீரரும்" என்றும் கூறினர். சிவபெருமான் திருவருளே சத்தியாகவும் வேற்படையாகவும் விளங்குமென்பதை, "இலகருட்சத்தியேசத்தியாகக் கையிலெடுத்தஞானச்சேவகா." என்னும் சிதம்பரசுவாமிகள் திருவாக்கானும், இச்சத்திவேலுக்குத் துணையாயிருப்பது இச்சத்தியாற்றரப்பெற்ற நவவீரர்களின் கைவேலென்பதை, "தேடுவார்வலமாய்வந்துதெரிசிப்பார்சென்னிமீதுசூடுவார்மலரேதூவித்தொழுதகைகூப்பிசிற்பார் - பாடுவார்காவென்றெம்மைப் பரிவினனந்தமாக-வாடுவார்குகன்கைச்செவ்வேற்கருர்துணைக்குந்தமென்றே." என்னும் ஈட்டியெழுபதின் திருவிருத்தத்தானும், விநாயகக்கடவுள் முத்தியின்பமளிப்பரென்பதை, "முக்கணிறைதருகரியைமுன்னடத்திப்பின்னதன்றுட்பக்கன்மறைந்தேகுநர்வெம்பாசவிகளுசமுற - மிக்கவமர்விளைத்திளையாவீரரெனப்பூரணவூர்ப் - புக்கிணையிற்பரானந்தப்பூவையையுமேவுவரால்." என்னும் சாந்தலிங்கசுவாமிகள் திருவாக்கானுந்தெளிக. மூத்தபிள்ளையாரும் இளையபிள்ளையாரும் இவர்கட்கிளையரான நவவீரர்களும் துவாதசவீரர்க்குமாத்திரம் தரிசனங்கொடுத்துக்கொண்டுவந்தனரென்க. (௬0)

அங்கதுகாணெழிற்றஞ்சையரணகன்றுமவரோடு
பொங்கியெழுஞ்சதுரங்கப்பொருநருநற்பரிசனருந்
தங்குபெருமுறவினருந்தயங்குறல்கண்டிவணுங்க
டுங்கமொடும்வரவிறைவற்றொழுதிருமினெனவோதா.

(இ - ள்.) அவ்வாறு செல்கின்றதைக் காண்கின்ற அழகமைந்த தஞ்சை மாநகரத்தின் கோட்டையைவிட்டு அத்துவாதச வீரர்களுடனும் களிகூர்ந்து வெளிக்கொண்ட சதுரங்கசைனியங்களும் சிறந்த பரிசனர்களும் நிலைபெற்று யுள்ள விரிவான உறவின்முறையாருந் தவிப்பதை அவர்கள் பார்த்து, நாங்கள் வெற்றியுடனே மீண்டும் இவ்விடத்திற்குவரும்படி சிவபெருமானைப் பணிந்து கொண்டிருக்கக்கடவீர்களென்று கூறி, எ - று.

நாங்கள் பிரதிக்கினைசெய்துகொண்டு புறப்பட்டபடியால், இப்போது நீங்கள் பிரிவாற்றாமையால் வருந்துவதற்காக வெற்றிகொள்ளாது நகர்க்குத் திரும்பமாட்டோம். ஆதலால்நீங்கள் இவ்விடத்திலேயே நாங்கள் வெற்றியடைந்துவரும்படி சிவபிரானைத் தியானித்துக்கொண் டிருங்களெனக் கூறினாரென்க. (சக)

ஆளிதிரண்டேகலெனவன்றாலந்துறையிருந்து
மீளிவர்களுரைக்கின்றார்வேந்தனுடன்சொலுமைந்து
நாளிலினுநமக்கிருப்பதொன்றரைநாடானென்றே
மாளவிரட்டனைக்கொலப்போம்வழியில்வருவினைமொழிவாம்.

(இ - ள்.) ஆளிகள் ஒருங்குசேர்ந்து செல்லுதல்போன்று அத்தினத்தில் ஆலந்துறையிலிருந்து திரும்பிய இவர்கள் கூறுகின்றார்கள். நமது அரசனாகிய பராந்தகச்சோழனுடனே நாம்சொல்லிய ஐந்து தினங்களில் கழிந்தது போக இன்னும் நமக்கிருப்பது ஒன்றரைநாள்தானென்றுகூறி, இரட்டனாகிய விக்கலன் இறக்கும்படி கொல்வதற்காகச் செல்லும் மார்க்கத்தில் அவர்கட்குச் சம்பவிக்கின்ற செயல்களைக் கூறுவோம். எ - று.

நாம் அரசனுடன் கூறிவந்த தினங்களுக்தில் மூன்றரைநாட்கள் கழிந்து இன்னும் நமக்கிருப்ப தொன்றரைத்தினங்களேயாகலின், இனித் தாழ்த்திருக்கா துடனேசென்று காரியத்தை நிறைவேற்ற வேண்டுமென நிச்சயித்தனரென்பது கருத்து. மேற்செய்யுளு மிதுவுங் குளகம். (சஉ)

நிபந்தனைச்சருக்கம் முற்றுப்பெற்றது.

ஆகத்திருவிருத்தம். சஅச.

---

# பதினொன்றாவது
# தப்பாரோகணச்சருக்கம்.

*நேரியனைக்கனமாக்கவவனவையிற்சொன்னநெடுமொழியைப்பு
றங்காக்கத்தங்குலப்பேரோங்கப், பாரினையகாலமெலாம்பெரிதலைக்
கும்பொல்லாப்பகையொதுக்கவெளிவந்தவீரரினத்தவர்மேல், வாரி
நிகர்க்குங்கருணைவள்ளலொளியக்கமறைத்தமுதகிரணவிழிமலர்த்தி
யதுமானச், சூரியனையத்தகிரியிமைமூடிக்கொள்ளத்தோன்றினனம்
புலியுதையகிரியிமைப்பத்துலங்கி.*

(இ - ள்.) பராந்தகச்சோழனைக் கௌரவப்படுத்தும்படி அவன்சபையிற் கூறிய சபதத்தைப் பாதுகாத்தற்கும் தங்கள்குலத்தின்கீர்த்தி யபிவிர்த்தியாதற்கும் நிலவுலகத்தை இத்தனைகாலமும் மிகவும் வருத்திக்கொண்டிருந்த கொடேரனாகிய பகைவனை யழிக்கும்பொருட்டுப் புறப்பட்ட துவாதசவீரர்கண்மீது கடல்போலும் கிருபையமைந்த வள்ளலாராகிய சிவபெருமான் உலகிற்கொளி தரும்படியான இரண்டுகண்களையும் மறைத்தருளி அமுதகிரணங்களைப் பரம்பச்செய்யும் ஓர்கண்ணைமாத்திரம் திறந்ததுபோன்று, சூரியனென்னும் கண்ணை அத்தகிரியென்னும் இமையானது மூடிக்கொள்ளவும் சந்திரன் உதயகிரியென்னும் இமைதிறந்ததனால் ஒளிவீசி உதயமாயினன். எ - று.

இவர்கள்செய்துகொண்ட பிரமாணமானது சோழனுக்குப் பெருமைதரத் தக்கதும் தங்கள்குலத்தினர்க்குக் கீர்த்தியை விளைக்கத்தக்கதுமானதென்பார், "நேரியனைக்கனமாக்கத்தங்குலப்பேரோங்க." என்றும், சிவபிரானுக்குரிய திரிநேத்திரங்களுள் சூரியன் அக்கினி என்னும் இரண்டும் உலகத்திற்கொளி தரத்தக்கதேனும் உஷ்ணமிகுதியுடைமையின் அந்நேத்திரங்களைத் திறக்கின் வெப்பந்தருமெனத் திருவுள்ளங்கொண்டு, யாவர்க்கும் குளிர்ச்சியைத்தருகின்ற சந்திரனென்னும் கண்ணைத்திறந்து கருணையுடன் பார்த்ததுபோன்று சந்திரனுதித்தனனென்பார், "வாரிநிகர்க்குங்கருணைவள்ளலொளியக்கமறைத்தமுதகிரணவிழிமலர்த்தியதுமான." என்றும், சூரியசந்திரர் உதிப்பதும் மறைவதும் உதயகிரியும் அத்தகிரியும் என நூல்கள்முறையிடுதலின், சூரியன் என்னும் கண்ணைமறைப்பது அத்தகிரியென்னும் இமையெனவும் சந்திரனென்னும் கண்ணைத்திறப்பது உதயகிரியென்னும் இமையெனவும் குறிப்பிப்பான், "சூரியனையத்தகிரியிமைமூடிக்கொள்ளத் தோன்றினனம்புலியுதையகிரியிமைப்பத்துலங்கி." என்றும் கூறினர். ஒளியக்க மறைத்தென்றதனால் சந்திரனுக்கொளியின்றோவெனின், அக்கினி சம்பந்தத்தாற் சூரியனுக்கும் சூரியசம்பந்தத்தாற் சந்திரனுக்கும் ஒளியுண்டாமென்பது தத்துவநூற்றுணிபாகலின், இயற்கையிற் சந்திரனுக் கொளியின்றென்னுந் தேற்றத்தால் அவ்வாறு கூறினரென்க.

(க)

வேறு.

மற்குலவும்புயவீரர்களேகும்வழிப்பால
வற்குலவும்பெரிதாகியகானமடைந்திட்டே
துற்கையுறைந்திடுமெல்லையுள்வந்தனர்சூழ்காவல்
பொற்புடனேவருபூதமதொன்றுபொருந்திற்றே.

(இ - ள்.) பராக்கிரமம்பொருந்திய புஜங்களையுடைய துவாதசவீரர்கள் தாங்கள்செல்லும் வழியிலுள்ள அந்தகாரம் நிறைந்த பெருங்கானகத்தைச் சேர்ந்து, துர்க்கைவசித்திருக்கும் எல்லைக்குள்ளே வந்தார்கள். அவ்விடத்திலே காவலாக அழகுடன் சுற்றிவருகின்ற ஓர் பூதமிருந்தது. எ - று.

நகருக்கு உட்புறத்தில் காளியையும் வெளிப்புறத்தில் துர்க்கையையும் காவலமைத்திருந்தனாகலின், துர்க்கையுள்ளகாவலெல்லையிற்சேர்ந்தனரென்க.

அவ்வழியெல்லியிலேகியபேரெவராலும்
வவ்விநிணந்தசையுண்டுமகிழ்ந்தவழக்கத்தாற்
றிவ்வியவீரர்வருஞ்செயல்கண்டுதிறற்பூதங்
கவ்வையுறும்படிவந்ததுமுன்னர்களிப்புற்றே.

(இ - ள்.) அந்தவழியில் இரவில் செல்கின்றவர்கள் எவர்களாயினும், அவர்களைப்பற்றிக்கொன்று அவர்கள் சரீரத்துள்ள நிணத்தையும் தசையையும் புசித்துக்களித்த வழக்கத்தினால், சிறப்புற்ற துவாதசவீரர்களும் வருகின்ற செய்கையைநோக்கி, வல்லபமுள்ள அப்பூதமானது அவ்வீரர்கட்குக் கலக்கமுறும்படி முன்னதாகக் களிகூர்ந்துவந்தது. எ - று. (௩)

எண்ணறுகாலமடைந்தபெரும்பசியின்றோடே
திண்ணமதாகவகன்றனவென்றுசிரித்திட்டே
நண்ணுறுவாரைவளைந்துபிடித்திடநாடித்தான்
கண்ணெரிபொங்குறவாயெரிகாலக்கதித்துற்றே.

(இ - ள்.) அளவுபடாத காலங்களாக நாம் அனுபவித்துக்கொண்டிருந்த பெரும்பசியானது இன்றையத்தினத்தோடு நிச்சயமாக நிவாரணமாயிற்றென்று சிந்தித்துக்கொண்டு நகைத்து, அவ்விடத்தில் வருகின்றவர்களைச்சூழ்ந்து பிடித்துக்கொள்ள வெண்ணி, கண்களில் நெருப்புப்பொறிகள் பறக்கவும் வாயிலும் அக்கினிப்பொறிகள் கக்கவும் வேகமாய்வந்து, எ - று. (௪)

பிஞ்சுமதிப்பிறைகூரெயிறும்பெரிதாகுஞ்செங்
குஞ்சியுநாசிமுனீட்சியுமுள்ளகுறட்பூத
மஞ்சனமேனியதாவொருபேரொலியாலித்தே
விஞ்சியவீரர்கடம்முனமீதுவிளம்பிற்றே.

(இ - ள்.) இளஞ்சந்திரனென்று கூறத்தக்க மூன்றும்பிறைபோலும் கூரியபற்களும் நீண்டுசிவந்திருக்கின்ற தலைமயிரும் முன்னே நீண்டிருக்கும் மூக்கும் உடைத்தாகிய குறுகியவடிவுள்ள அப்பூதம், மைபோலும் கருநிறமுடைய சரீரத்துடனே ஒப்பற்ற பெருங்கோஷ்டம் முழக்கிப் பராக்கிரமத்தின் மேம்பட்ட அவ்வீரர்கட்கு முன்பு இவ்வாறுகூறியது.

மதி பிறை என்னும் இரண்டும் ஒருபொருட்கிளவிகளேனும் ஈண்டிரண்டையும் ஒருங்குபிரயோகித்தமையின் பிறை என்பதற்குக் கதிர் எனப்பொருள் கொண்டாம். மேற்செய்யுளு மிதுவுங் குளகம். (௫)

இன்றெமதெல்லையுளேமதியாவகையேகுற்றோர்
கன்றவிமைப்பொழுதிற்கொளுரங்கொடுகாதித்தான்
கொன்றுதிரம்பருகிட்டுநிணக்குடர்கூசாமற்
றின்றுவிழுங்குவனென்றலகையதுசீறிற்றே.

(இ - ள்.) இத்தினத்திலே எங்கள் எல்லைக்குள்ளே எங்களைமதியாமல் வந்தவர்கள் வருந்தும்படி, இமையளவிற்குள்ளாக நான் அடைந்துள்ள வல்லபத்தைக்கொண்டு போர்புரிந்து கொன்று உதிரத்தைக்குடித்து நிணந்தோய்ந்துள்ள குடர்களை அச்சமின்றிப் புசித்து விழுங்குவேனென்று அப்பூதம் சினந்தது. எ - று. (௬)

கிட்டிவளைத்ததுகண்டுமுனிந்துகிளர்தும்பை
மட்டலர்தாரணிநாரணனங்கெதிர்வந்துற்றே
வெட்டினன்வாள்கொடுபூதமிரைந்துவெருண்டோமுன்
னெட்டிவிழுந்ததிரண்டுகரந்தரையின்வீழ.

(இ - ள்.) அப்பூதம் சமீபித்துச் சூழ்ந்ததை வாசனையுடன் மலர்ந்திருக்கும் விளக்கமுற்ற தும்பைமாலையணிந்துள்ள நாரணரென்பவர்பார்த்து, அவ்விடத்தில் எதிர்த்துவந்து சினந்து தமது வாட்படையைக்கொண்டு வீசினர். உடனே அப்பூதமானது தனதிரண்டுகரங்களும் துண்டமாய் நிலத்தின்மீது வீழும்படி பயங்கொண்டு நெடுந்தூரத்திற்போய் விழுந்தது. எ - று. (௭)

கையறவே துயர்கொண்டுமெலிந்துகலங்கித்தன்
மெய்யிரணங்கொளவோடிடவீரர்பின்மேவுற்று
ரையையடிக்கமலங்களில்வீழவவட்டானும்
பையவொர்கைகொடுமஞ்சலையென்றுபணித்திட்டாள்.

(இ - ள்.) கைகளிரண்டும் வெட்டுப்படவே துன்படைந்து வருந்திக் கலக்கமுற்றுத் தனதுசரீரம் புண்ணுறும்படி யோடுதலும், துவாதசவீரர்களும் அதைப் பின்றொடர்ந்து சென்றார்கள். அவ்வாறோடிய பூதமானது துர்க்கையின் திருவடித்தாமரைகளிற்பணிய, அப்போது அத்துர்க்கை மெல்லத்தனது ஓர்கரத்தால் பயப்படாதேயென்று அபயாத்தமளித்தனள். எ - று. (௮)

ஈதெதுகூறெனவெம்முடையெல்லையிலீராறு
கோதுறமானிடரேகினர்சென்றுகுறுக்குற்றே
காதிவளைத்தனன்வாளதிலென்னிருகைவீழ
மோதினர்பின்புதொடர்ந்தனரென்றுமுழங்கிற்றே.

(இ - ள்.) இத்தகைய சம்பவத்திற்குக் காரணம் யாது கூறுவாயென்று துர்க்கைவினவ, எங்கள் எல்லைக்குள்ளாக குற்றம்பொருந்திய பன்னிரண்டு மானிடர்கள் வந்தார்கள். அப்போது நான் அவர்களெதிரிற்சென்று தடுத்துச் சூழ்ந்து போர்புரிந்தேன். உடனே அவர்கள் வாட்படையால் என்னிரண்டு கைகளும் அறுந்துவிழும்படி வெட்டிவிட்டு அதன்பின்னும் தொடர்ந்துவந்தார்களென்று அப்பூதம் ஆரவாரித்தது. எ - று. (௬)

சொல்லதுகொண்டுவெகுண்டெரிசூலிதுணுக்குற்றே
யல்லிடையிங்ஙனமேகியபேரையடங்கத்தான்
கொல்லுவனென்றெழுமுன்வயவீரருள்கோவான
வல்லபமீறியவீரன்மற்றீதுவகுப்பானல்,

(இ - ள்.) அச்சொற்களைக் கேட்டுக்கொண்டு அக்கினியைப்போன்று சினந்த துர்க்கை திடுக்கிட்டு, இரவில் இவ்வாறு வந்தவர்களனைவரையும் கொன்றுவிடுவேனென்று புறப்படுவதற்கு முன்பாக வெற்றிவாய்ந்த துவாதசவீரர்களுக்குள் தலைவரான வல்லடமிக்க வீரரென்பவர் இவ்வாறிசைக்கின்றனர்,

அந்தரிசீறியெழுந்தனளிங்குறுவோரங்கஞ்
சிந்திடுநாமுனினைந்ததழிந்ததுதீர்வாக
விந்தமெய்யாளதிறந்திடலுண்மையிராதென்று
முந்தியநீள்புகழ்தேடுதல்மூதறிவின்றன்மை,

(இ - ள்') துர்க்கை கோபங்கொண்டு புறப்பட்டாள். ஆதலால் இவ்விடத்திலுள்ளவர்கள் சரீரமெல்லாம் அழிந்துவிடும். நாம் முன்கொண்ட எண்ணம் நிச்சயமாகக் குலைந்தது. ஆனால் இந்தச்சரீரமானது எக்காலத்தும் அழியாமலிராது. எப்போதாவது இறப்பது மெய்யாகும். அதுகொண்டு முற்பட்டு நிற்பதாகிய பெரும்புகழைத் தேடுதல் பேரறிவின் தன்மையாகும். எ - று.

விம்மியதுர்க்கையுளங்களிகூரவிரைந்திட்டே
நம்மிலொருத்தனிவண்பலியாகநயந்துற்று
லம்மைவிரும்பிவரந்தருமென்னவடற்கச்சிச்
செம்மலெனுந்தனியானுமகிழ்ந்துசிரந்தன்னை.

(இ - ள்.) ஆதலால் சினந்துள்ள துர்க்கை மனமகிழ்ச்சி மேற்கொள்ளுமாறு, அதிவிரைவிலே நம்மிலொருவன் பலியாவதற்கு விரும்பிச்சென்றால் அந்துர்க்கை நம்மை யிச்சித்து வரந்தருவாளென்று கூறலும், அழகமைந்த கச்சித்தனியர் என்னும் வீரர் மனங்களித்துத் தமது சிரத்தை, எ - று. (௧௨)

குத்தியறுத்தெதிர்கொண்டுநடந்துகொளென்றேமுன்
வைத்துவணங்கிடவேபலிகொண்டனண்மாமோடி
யத்திறமுற்றறிநாரணனேகியவட்டாழச்
சித்திமகிழ்ந்தவணின்றுமுனென்றுரைசெய்கின்றாள்.

(இ - ள்.) குத்தியறுத்து எதிர்கொண்டுபோய் இதனைப் பலியாக வேற்றுக்கொள்வாயென்று அவளுக்கு முன்பாகவைத்துப் பதணிலும், சிறந்த துர்க்கையானவள் அவ்வாறே பலிகொண்டாள். அத்தன்மை முழுவதுமறிந்த நாராயணர் சென்று அத்துர்க்கையைப்பணிய, அப்போது மனமகிழ்ந்து அத்துர்க்கை அவ்விடத்திருந்து அந்நாராயணருக்கெதிரில் ஓர்சித்தியைக் கூறுகின்றாள்.

மேலிரண்டுசெய்யுளு மிதுவுங் குளகம். (௧௩)

வெற்றிகொண்மாதவவீரர்களெம்முனமேவுற்றீ
ரிற்றிவணெய்திவணங்கியகாரணமேதென்றாள்
முற்றிறலோர்கள்பணிந்துவலானைமுடுக்கிப்போய்ச்
செற்றிடநீவிடைதந்தருளென்றுரைசெய்திட்டார்

(இ - ள்.) செயம்பெற்றுள்ள பெருந்தவமுடைய வீரர்களே! நீங்கள் எமக்கு முன்பாக வந்திருக்கின்றீர்கள்: இன்றிவ்விடத்தடைந்து பணிந்த காரணமென்னையென்று வினவினள். வல்லபம் முழுவதுமுடைய வீரர்கள்வணங்கி, வல்லானென்பவனை எதிர்த்துச்சென்று அழிக்கும்படி நீ விடையளிக்க வேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். எ - று. (௧௪)

அப்படியேயவனைக்கொலுமென்றவளன்பாலே
தப்பறவேவிடைநல்கிடவீரர்தழைந்திட்டார்
மைப்படுகானமகன்றுகடம்பையில்வந்துற்றே
வெப்புறுகாளியுறைந்திடுமெல்லையுண்மேவுற்றார்.

(இ - ள்.) அவ்வாறே அவனைக் கொல்லுங்களென்று அத்துர்க்கை யன்புடனே தவறுதிருக்கும்படி விடைகொடுத்தனுப்ப, அதுகேட்ட வீரர்கள் மனமகிழ்ந்தார்கள். பின்பு அந்தகாரமான அக்காட்டைக் கடந்து கடம்பையில்வந்து சேர்ந்து, கொடூரச்செய்கையமைந்த காளிகாதேவி வீற்றிருக்கின்ற எல்லைக்குள்வந்தார்கள். எ - று. (௧௫)

காளியுறைந்திடுகோயின்மருங்குறையுங்காவல்
கூளிகள்வாயெரிபொங்கிடுமெண்ணில்குறட்பூத
நீளவதன்கணமுங்கணநேரநெருங்கித்தாய்
மீளிவிறற்படைவீரரைக்கண்டெதிர்மேவுற்றே.

(இ - ள்.) காளிகாதேவி வீற்றிருக்கின்ற ஆலயத்தின் பக்கத்துள்ள காவலாளர்களாகிய அக்கினி புகைந்துகொண்டிருக்கும் வாயையுடைய பேய்களும்

அளவிறந்த குறுவடிவுடைய பூதங்களும் விசேடித்த அப்பூதக்கூட்டங்களும், க்ஷணநேரத்திற்குள்ளாகக் கிட்டித்தாவிப் பராக்கிரமமும் வெற்றியுமுள்ள படையேந்திய அவ்வீரர்களைப் பார்த்து எதிரிற்சென்று, எ - று. (கசு)

கட்பொறிசிந்திடவாயரவங்கொடுகாளிதன
துட்பொலியெல்லைவருந்திறமென்னெனவோங்கிப்போ
யுட்கவடித்தவைநேர்ந்தனகண்டவுரத்தீரர்
கட்கமுடன்படைவிட்டுமுடுக்கினர்கட்டோடே.

(இ - ள்.) அப்பேய்களும் பூதங்களும் காளிகாதேவியின் விளக்கமுற்ற எல்லைக்குள் வருந்தன்மை யென்னென்று, கண்களில் அக்கினிப்பொறிகள் சிந்தும்படி வாய்களாற் கர்ச்சித்துக்கொண்டு மேற்கொண்டு சென்று சூழ்ந்து கொண்டவைகளாய் அவர்கள் நடுக்கமுறும்படியடித்தன. அதுகண்டவலியுள்ள தைரியசாலிகளாகிய ஏகாதசவீரர்களும் ஒரேகூட்டமாய் வாட்படையுடன் வேற்படையும் வீசியெதிர்த்தார்கள். எ - று.

மேற்செய்யுளு மிதுவுங் குளகம். (கஎ)

உற்றகனற்கணெரித்துவிழித்தனவொவ்வொன்று
நற்றினமென்றுசிரித்தனசிற்சிலநாணமன்
மற்றையசெய்கைகள்பற்பலவாகவயக்கிவளை
பற்றிரளாலதரத்தையதுக்கினபாரிடமே.

(இ - ள்.) அப்போது ஒவ்வோர் பேய்களும் நெருப்புவீசுகின்ற கண்களெரியும்படி விழித்துப்பார்த்தன. இன்னும் சிற்சிலகூளிகள் வெட்கமடையாமல் இது நமக்கு விருந்துகிடைக்கத்தக்க நல்ல சுபதினமென்று சிரித்தன. பூதங்களெல்லாம் மற்றுள்ள கோரச்செயல்களைப் பலவாகப்புரிந்து, வளைவாயுள்ள பற்கூட்டங்களால் தங்கள் இதழ்களைமென்றன. எ - று. (கஅ)

சத்தமுகிற்குலமுற்றியபோன்றுசரிப்பூத
மொத்துவெளிப்படுபன்னொருருத்திரர்போல்வந்தார்
சித்தமுறுக்கியெழுந்தனர்பூமிதிடுக்கிட்ட
வத்தவயிற்படையிற்பிசிதங்களறுத்திட்டார்.

(இ - ள்.) அப்போது ஒன்றுகூடி வெளிப்படுகின்ற ஏகாதசருத்திரர்களைப்போன்றுவந்த ஏகாதசவீரர்களும் மனத்திற்சினங்கொண்டு புறப்பட்டார்கள். உடனே பூமிநடுங்கியது. அவ்வீரர்கள் தங்கள் கரங்களிலேந்தியுள்ள வேற்படையால், சத்தமேகங்களும் ஒருங்குசேர்ந்ததுபோலத் திரிந்துகொண்டிருந்த பூதங்களின் தசைகளை அறுத்தார்கள். எ - று.

வீரர்களின் கோபாவேசத்திற்காக ஏகாதசருத்திரர்களையும், பூதங்களின் நிறத்திற்காக சத்தமேகங்களையும் உவமித்தனராகலின், முறையே இரண்டும்

பண்புவமமும் வண்ணவுவமுமாதலறிக. சத்தமேகங்கள் - சம்வர்த்தம் ஆவர்த்தம் புட்கலாவர்த்தம் சங்காரித்தம் துரோணம் காளமுகி நீலவருணம் : இவை முறையே மணி நீர் பொன் பூ மண் கல் தீ பொழிவன. (கக)

கோளரிமுன்பலவேழமிரிந்துறுகொள்கைத்தே
தாளதறுந்தனகைகளறுந்தனதலைநின்று
மூளையெழுந்தனவாயினவோடினமுன்சூரி
தாளையடைந்தனவீரர்வரச்சந்நிதானத்தே.

(இ - ள்.) சிங்கத்திற்குமுன் பலயானைகள் ஓடிப்போகும் தன்மையைப் போன்று, அப்பூதங்களனைத்தும் கால்களற்றனவாகவும் கைகளற்றனவாகவும் தலைகளிலிருந்து மூளை புறப்பட்டனவாகவும் துயரடைந்தனவாய்க் காளிக்கு முன்னே அவள்சந்நிதியில் ஏகாதச வீரர்களும் தொடர்ந்துவரும்படி ஓடின. அவள் திருவடிகளில் அடைக்கலம்புக்கன. எ - று. (உ0)

வெம்மையெண்டோளிதெரிந்துறுமுன்னரவ்விறல்வீ
ரம்மையுறைந்திடுமெல்லையில்வந்தனமங்கேகிச்
செம்மையுறும்படிகண்டவள்சந்நிதிசேர்ந்திட்டே
நம்மிலொருத்தனவட்பலியாகிடநணிஇன்னே.

(இ - ள்.) அப்போது வெற்றிப்பாட்டினையுடைய அவ்வீரர்கள், அஷ்ட புஜங்களையுடைய காளிகாதேவி பூதகணங்கட்குநேர்ந்த துன்பத்தினையுணர்ந்து கடுமைசெய்யாமுன்னம், நாமக்காளிகாதேவிவீற்றிருக்கும் எல்லைக்குவந்தோம்: அவ்விடத்திற்குப்போய்ச் செப்பமமையும்படி அவள் சந்நிதியைப்பார்த்தடைந்து, நமக்குள் ஒருவன் அவளுக்குப் பலியாகுமாறுசேரில் இப்போதே, எ - று.

எண்ணியகாரியம்யாவையுமாயிடுமென்னத்தோட்
டிண்ணியசிங்கமதாகியவொற்றிசிரந்தன்னைக்
கண்ணுறவாள்கொடரிந்தெதிர்சென்றுகளிப்பாகப்
பண்ணுறுகாளிமுன்வைத்துவிழுந்துபணிந்திட்டான்.

(இ - ள்) நாம் நினைத்த காரியங்களெல்லாம் சித்தியாகுமென்றுரைக்க, வலியுள்ள புஜங்களையுடைய ஆண்சிங்கமாகிய ஒற்றியூரார் தமது சிரத்தை யாவர் கண்களுக்கும் புலப்படும்படி வாளாயுதத்தால் அறுத்தெடுத்துக்கொண்டு, களிப்புடனே சீர்மையுற்ற காளிகாதேவிக்கெதிராகப்போய் அவள்திருமுன்வைத்து வணங்கினர். எ - று.

மேற்செய்யுளு மிதுவுங் குளகம். (உஉ)

நீலியுளங்களிகொண்டிடவீரன்முனேயத்தார்
சீலமதாயவளுக்கினிதாத்திருமுன்வீழுங்

கோலமுடன்பரிவோடெழுந்தெதிர்கும்பிட்டார்
சூலிமகிழ்ந்துமுனின்றவர்கட்கிதுசொல்கின்றாள்.

(இ - ள்.) அப்போது காளிகாதேவி மனமகிழ்வுறதலும் வீரநாராயணர் முதலிய தசவீரர்களும் தூய்மையுடையவர்களாகி, அவளுக்கினிமைபெறும்படி அவள் சந்நிதிக்குமுன் சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்கரிக்குந் தன்மையுடையவர்களாய் அன்புடனே எழுந்து அவட்கெதிரினின்று வணங்கினார்கள். அதற்குக்காளி களிப்புற்றுத் தன்முன்னே நிற்கின்ற வீரர்கட்கு இவ்வாறு திருவாய்மலர்கின்றனள். எ - று. (உ௩)

எம்மைவிரும்பிவணங்கியகாரணமேதென்றாள்
வெம்மைபுனைந்திடுநாரணன்வாய்மைவிதிக்கின்றான்
பொய்ம்மைபுனைந்தவிரட்டனைவென்றுபுறங்காண
வம்மையெமக்குவரந்தருவாயெனவன்புற்றே,

(இ - ள்.) நம்மை இச்சித்துப் பணிந்த காரணமேதென்று வினவினள். விருப்பம் மேம்பட்ட நாராயணர் உண்மையுரைக்கின்றனர். பொய்யையேமேற்கொண்டவனாகிய இரட்டனைச்சயித்து முதுகுகாட்டியோடும்படிச்செய்ய, அம்மையே! எங்களுக்கு வரம்பாலிக்கவேண்டும். என்று பிரார்த்திக்க அதுகேட்ட காளிகாதேவி அன்புடையவளாகி, எ - று. (உ௪)

விக்கலனம்மையவாவிலனென்றுவிடைதந்தே
தெக்கணமன்னனிடத்தெழுவெற்றிச்செயலுள்ளார்க்
கக்கணமேயவன்வைத்திடுகாவலரண்வெல்லுஞ்
சொக்கமதாயவரங்களளித்தனடேய்தாக.

(இ - ள்.) விக்கலனே நம்மை விரும்புதவில்லையென்று கருதி, தென்றேயத்துள்ள சோழராஜனிடத்திருந்தும் வந்த வெற்றிப்பாடுள்ள அத்தசவீரர்கட்கும் உள்ளேசெல்லும்படி விடைகொடுத்ததுமன்றி அந்தக்ஷணத்திலேயே அவ்விக்கலன் அமைத்துள்ள காவல்களையெல்லாம் வெல்லும்படியான சிறப்புற்ற வரங்களையும் மேன்மையமையும்படி அளித்தருளினள். எ - று.

மேற்செய்யுளு மிதுவுங் குளகம்.

காவலமைத்ததுமாத்திரமேயன்றி உண்மையில் நம்மிடத்து அன்புபதிக்கவில்லையாகலின், அத்தகையனுக்கு நாம் காவலிருக்கமாட்டோம் நீங்கள் உள்ளேசெல்லுங்கள் என்று விடையளித்தாளென்பது கருத்து. (உ௫)

வீரர்களையிருவோருமவள்விடைகொண்டேக
மூரலுடன்கடிதேகினன்றும்பிமுகத்தோனுஞ்
சீரணவும்புவிமாதுடைபோன்றுதிகழ்தார்த்தே
யாரமொதுக்குமகோததிநேர்புறவகழ்கண்டார்.

(இ - ள்.) அத்தசவீரர்களும் அக்காளியின் விடைபெற்றுக்கொண்டு செல்ல, அப்போது யானைமுகமுள்ள மூத்தபிள்ளையாரும் புன்னகையுடனே விரைந்தெழுந்தருளினர். சிறப்புற்ற பூதேவியின் ஆடையாகிய கடலைப்போன்று விளக்கமுற்றுக் கோஷித்து முத்துக்களைக் கரையிலொதுக்குகின்ற பெரும் புறக்கடல்போன்ற புறம்பிலுள்ள அகழைப்பார்த்தார்கள். எ - று. (உசு)

வேறு.

வன்பழிகொள்விக்கலன்வரைந்துதொடவந்த
புன்பழிவிலங்குறநும்பொன்னடியையென்மே
லின்புறவிடுத்திடுமினென்றையிருவோரை
யன்புடன்விளித்தலெனவாலமிரைந்தார்த்த.

(இ - ள்.) கொரேமான பழியடைந்துள்ள விக்கலனென்னுமிரட்டன் அளவிட்டுத் தோண்டுதலால் வந்ததாகிய இழிவான பழிச்சொல் எங்களுக்கு நிவாரணமாகும்பொருட்டு, பொன்போலும்விளங்கும் உங்கள்திருவடிகளை என்மேல் இன்பமுடனே விடுத்திடுவீர்களென்று அத்தசவீரர்களையும் அன்புடனழைத்தல்போன்று அவ்வகழியில் நிறைந்துள்ள நீர் சத்தித்துக் கோஷித்தது.

எனவே வல்லான் தோண்டலொற்' சுரந்தோமென்னும் பழிச்சொல்லை உங்கள் பாதபரிசத்தால் ஒழிக்கவேண்டுமென்னுங் குறிப்பாய் சத்தித்ததென்றபடி.

அன்றுவிணெழும்புதல்செய்தார்கலிகடந்தே
வென்றிகொளுநீருமிழ்மிதத்துறுவேன்மீது
மின்றகறியோரிழிவிருத்தலைவிடுத்தே
துன்றல்செய்மினென்றகழிதொழுததிரைக்கையால்

(இ - ள்.) அக்காலத்தில் ஆகாயமளவுமோங்கிக் கடலைத்தாண்டி வெற்றிகொண்டநீங்கள் உங்கட்குமிழ்நீரினளவாயுள்ள என்மீதுந்தாண்டுதல்செய்து ஓர் தாழ்வை ஏற்படுத்துவதைவிட்டு, என்னிடத்தில் நெருங்கிவாருங்களென்று அகழி தனது அலைகளாகிய கைகளால் வணங்கின. எ - று.

எனவே அக்கால் வீரவாகுதேவர் கடலைத் தமதுமிழ்நீருக்கொப்பாக அலக்ஷியஞ்செய்து தாண்டியதுபோல இக்காலவர் சந்ததியாரான நீங்கள் உங்கட்குமிழ்நீரி னளவாயுள்ள என்னையு மலக்ஷியஞ்செய்து தாண்டி ஓரிழிவினை விளைக்காது என்மீது வந்துபோகவேண்டுமெனப் பணிந்தது என்றபடி. (உஅ)

இற்றைவரைச்செல்சிடமியாவுளுநல்வெற்றி
யுற்றசெயல்போலிவணுமுற்றிடுதிரென்றே
கொற்றவரையோடையெனுங்கோதைதுளிநுரையிற்
சொற்றமணிமாலதியைத்தூவிப்பல்லாண்டோதும்.

(இ - ள்.) இன்றையவரையிற் சென்றவிடங்களிலெல்லாம் சிறந்தவெற்றியடைந்துவந்ததுபோலவே, இவ்விடத்தும் வெற்றியடையக்கடவீர்களாக வென்று அத்தசவீரர்களையும் அகழியென்கின்ற பெண்ணானது துளிகளென்றும் நுரைகளென்றும் சொல்லப்படுகின்ற இரத்தினங்களையும் மலர்களையும் இறைத்துப் பல்லாண்டுகூறும். எ - று.

துளிகளையும் நுரைகளையும் முறையே முத்துக்களாகவும் மல்லிகைமலர்களாகவும் உவமித்து, அப்போதுண்டாகும் சத்தத்தைப் பல்லாண்டுகூறியதாகக் கற்பித்துள்ளதை யுய்த்துணர்க. (உகூ)

அரட்டர்செயனுடியகிலத்திடர்விளைக்கு
மிரட்டனகழென்பெயரிலாதுமதெழிற்பேர்
திரட்டியிடற்செய்ம்மினெனச்செப்பிகைகுவித்த
றெருட்டுவசெவ்வாம்பலுஞ்செந்தாமரையுமவணே.

(இ - ள்.) அவ்வகழியிலுள்ள செவ்வாம்பன்மலரும் செந்தாமரைமலரும், துட்டர்கள்செயலைமேற்கொண்டு உலகத்தினிடத்திலே துயர்விளைவிக்கும் இரட்டனால் தோண்டப்பட்ட அகழி என்கின்ற பெயரில்லாமல் உங்களுடைய அழகமைந்த பெயர்கள் சேரும்படியாகச் செய்வீர்களென்று கூறிக் கைகளைக் குவிப்பதைவிளக்குவ. எ - று.

அகழியே ஓர் மாதாகவும் அம்மாதுக்கு அவ்வகழியிலுள்ள செவ்வாம்பன் மலரும் செந்தாமரை மலருமே இரண்டுகரங்களாகவும் உவமித்தமைகாண்க.

இவ்வணமிலங்குபுறவெல்லையகழ்காணூஉத்
தெவ்வர்தமைவெல்லுமவர்செய்வதினியென்னென்
றுவ்வுறல்கடுப்பவுனலுற்றனரிருப்பக்
கவ்வுறுகோளாந்தகன்கணித்திதுகரைப்பான்

(இ - ள்.) இவ்வாறுவிளங்குகின்ற புறத்தெல்லையிலுள்ள அகழியைக்கண்டு பகைவர்களை வெற்றிகொள்ளத்தக்க அத்தசவீரர்களும் இனி நாம் என் செய்வோமென்றெண்ணித் தவஞ்செய்வதைப்போன்று யோசித்துக்கொண்டிருக்க, மனத்துயரடைந்த கோளாந்தகரென்பவர் இதனைத் தீர்மானித்து இவ்வாறுரைக்கின்றனர். எ - று. (௩க)

காயமிஃதெவ்வகையுமாயுமெனல்கண்டா
மாயவுறிலென்றுமழியாதநிலையூடே
தோயவுறல்வீரமதிற்றுன்னுறல்கெம்பீர
மேயதவந்தானமுனெவ்வேதுமிதிலாமே.

(இ - ள்,) இத்தேகம் எவ்விதத்தினும் அழியுமென்பதையறிந்துள்ளோம். ஆராயத்தொடங்கினால் எக்காலத்தினும் அழிவற்ற நிலையுடனே பொருந்தும்படி

யிருத்தலே சுத்தவீரத்தன்மையாகும். அத்தன்மையுடையோரிற் சேர்தலே மேம்பாடாகும். நூல்களிற்கூறியுள்ள தவம் தானம் முதலிய எல்லாக்காரணங்களும் இதனாலேயே விளையும். எ - று.

காயம் எவ்வகையினும் அழிவையுடைத்தென்பதை, "புக்கிலமைந்தின்று கொல்லோவுடம்பினுட் - டுச்சிலிருந்தவுயிர்க்கு," என்னுந்திருக்குறளுரையானுந்தெளிக. பூதவுடம்பழிவதாயிருத்தலிற்புகழுடம்புதேடவேண்டியதே வீரத்தன்மையென்பார், "என்றுமழியாதநிலையுடேதோடவுறல்வீரம்." என்றார். இதனை, "மலரவன்செய்-வெற்றுடம்புமாய்வனபோன்மாயாபுகழ்கொண்டு - மற்றிவர்செய்யுமுடம்பு." என்னும் குமரகுருபரசுவாமிகள் திருவாக்கானுந்தெளிக. பகைவர்களை வெற்றிகொள்வதனாற்றானே தவமும் தானமு முதலியவை சித்தியாமென்றது உபசாரமாகக்கூறியதோவெனின்? அற்றன்று-அஃதுண்மை வாக்கியமே: எவ்வாறெனின்? தவம் சித்தியாதற்கு இன்றியமையாத ஜீவகாருணியம் வேண்டும். சுத்தவீரத்தன்மையுடையாரிடத்து அக்காருணியங்குடிகொண்டிருத்தலினாலன்றோ உலகங்களிலுள்ள ஆன்மாக்களின் துயரங்களையொழிப்பதற்காகப் பகைவனையும் அவன் சைனியங்களையும் கொல்லுதல்? இதனாலே தவமும், அத்தகைய பகைவனை எதிர்க்கும்போது அப்பகைவன் தங்களாற்றலினும் மேம்பட்ட ஆற்றலுடையானாயின் தங்களுயிரையும் இழத்தலால் இதனினும் மேம்பட்ட தானம் என்னுளது? இதனாலே தானமும், இவ்விரண்டிற்குமுரிய சத்தியவசனம் இன்சொன்முதலியவையும் அவர்க்கமைந்திருக்குமென்பதை யூகித்துணர்க. (உஉ)

ஆதலினென்னுடனொருவராருயிர்விடுக்கி
னீதமொடிராக்கையினைநேர்பெறவிணைத்தெண்
கோதில்வயவீரரதுகொண்டகழ்கடத்தற்
கேதுறுமெனுஞ்சொன்மணியன்செவியிலேற.

(இ - ள்.) ஆதலால் என்னுடனே மற்றொருவர் தன் பிராணனைவிட்டால், வரிசையுடனே இவ்விரண்டுசரீரங்களையும் ஒன்றாகச்சேர்த்து, குற்றமற்ற மற்றை அஷ்டவீரர்களும் அத்தெப்பத்தைக்கொண்டு இவ்வகழியைத் தாண்டுவதற்கு ஏதுவாகுமென்னும் வார்த்தையானது மணியரென்னும் வீரருடையகாதில் விழுந்தவளவில், எ - று.

அவ்வகழியைத்தாண்டி உள்ளே பிரவேசிப்பதற்கு ஓர் தெப்பம்வேண்டுமாகையால், அதற்காகக் கோளாந்தகர் தமதுயிரைவிடுவதாக நிச்சயித்துக்கொண்டு மற்றொருவர் தம்முடனே உயிர்விடுவாராயின் இரண்டுசரீரங்களையும் ஒன்றுசேர்த்துத் தெப்பமாக்கிக்கொண்டு மற்றுள்ள எட்டுவீரர்களும் இவ்வகழியைத் தாண்டலாமெனக் கூறினரென்க. (உரு)

அக்கணமறுஞ்சிரவணாகவவனுந்தன்
றொக்கைவிடவெண்மார்கைதுணித்துக்குடர்பீறி

யோக்கவிணைத்தார்த் துடுபமொண்மைகொளச்செய்தார்
முக்கண்ன்மகார்க்கிதுமுடிப்பதரிதேயோ.

(இ - ள்.) அந்தகூணமே மணியரென்பவரும் தமது கழுத்தை வெட்டிக்கொள்ளக் கோளாந்தகரும் உயிர்நீங்கிச் சரீரத்தை வீழ்த்த, உடனே மற்றுள்ள எண்மரும் உயிர்விடுத்த இருவருடைய கரங்களைவெட்டிக் குடலையுங்கிழித்தெடுத்து, அவ்விரண்டு சரீரங்களையும் ஒன்றாகச்சேர்த்து அக்குடர்களாற்கட்டி ஓர் தெப்பமாகப் பிரகாசிக்கும்படி செய்தார்கள். திரிநேத்திரதாரியாகிய சிவபிரான் குமாரர்களான அவ்வீரர்களுக்கு இத்தகைய காரியம் முடிப்பதருமையோ? எ - று.

எனவே இருவருடைய சரீரங்களையும் நெடுக்குக்கழிகளாகவும், அவர்களுடைய நான்குகரங்களையும் குறுக்குக்கழிகளாகவும், குடர்களை அவற்றையிணைக்கும் கயிறுகளாகவுங்கொண்டு தெப்பமமைத்தார்களென்பது கருத்து. மேற்செய்யுளுமிதுவுங்குளகம். (௩௪)

இன்னவுடற்றெப்பமுருகேசனினிதுற்ற
மின்னுறுநன்னுணலின்மிடைந்ததவிசென்கோ
முன்னநெடுமாறொழின்முடிப்பவறிதுயிலுண்
மன்னியொளிர்மாசுணமணிப்பெய்தவிசென்கோ.

(இ - ள்.) இவ்வாறியற்றிய யாக்கைப்புணையானது, முருகக்கடவுள் இனிமையுடன் குழவியுருக்கொண்டு வீற்றிருந்த பிரகாசம்பொருந்திய சிறந்த சரவணத்தாற் சமைந்த பீடமென்னலாமோ? முற்காலத்தில் திருமால் தமது திக்கிர்த்தியத்தை முடிப்பதற்காக அறிதுயில்செய்துகொண்டிருந்த நிலைபெற்ற பிரகாசமுடைய இரத்தினங்களமைந்த ஆதிசேடனாகிய சயனமென்றுரைக்கலாமோ? எ - று. (௩௫)

மற்றதிலிவர்ந்தவர்வசுக்களுருவென்கோ
வுற்றதிசைக்காவலருகந்தவடிவென்கோ
செற்றமிலர்க்கெய்துறுமெண்சித்தியெழலென்கோ
வெற்றெனவவ்வம்பியிவர்வேந்தரையிசைப்பாம்.

(இ - ள்.) அத்தெப்பத்திலேறிய அஷ்டவீரர்களையும் அஷ்டவசுக்களின் உருவமாகக் கூறலாமோ? அஷ்டதிக்குகளினுமுள்ள பாலகர்களின் விருப்பமுற்ற வடிவமென்று கூறலாமோ? சினமற்றவர்கட் கடையத்தக்க அஷ்டமாசித்திகளே வெளிப்பட் டேறிற்றென்று கூறலாமோ? அத்தெப்பத்திலேறிய அரசர்களாகிய அஷ்ட வீரர்களையும் வேறென்னென்று கூறுவோம்.

அஷ்ட வசுக்களாவார்:—அனலன் அணிலன் ஆபச்சையன் சோமன் தரன் துருவன் பிரத்யூசன் பிரபாசன் என்பவர்களாம். அஷ்டதிக்குப்பாலகர்கள்:—இந்திரன் அக்கினி இயமன் நிருதி வருணன் வாயு குபேரன் ஈசானன்

என்பவர்களாம். அஷ்டமாசித்திகளாவன:—அணிமா மகிமா கரிமா இலகிமா பிராத்தி பிராகாமியம் ஈசத்துவம் வசித்துவம் என்பவைகளே. இவ்வஷ்டசித்திகளும் காமக்குரோதாதி துர்க்குணங்களை யொழித்தோர்க்கன்றிச் சித்தியாதாகலின், 'செற்றமிலர்க்கெய்துறுமெண்சித்தி.'' என்றனர். இவ்வீரர்கள் எண்மராகலின் அஷ்டவசுக்களென்போமா என்றும், திக்குப்பாலகரென்போமா என்றும், அஷ்டசித்திகளென்போமா என்றும் கூறினர். எனவே அஷ்டவசுக்களைப்போன்ற தெய்வீகமும் திக்குப்பாலர்களைப்போன்ற வல்லபமும் அஷ்டசித்திகளைப்போன்ற காரியவிருத்திபுரியும் பேராற்றலுமுடையோரென்பதையுங் குறிப்பா யுணர்த்தி நின்றதை யுய்த்துணர்க. (௬௩)

கோலமுறுகோலமதிற்கோலவயவீரர்
சாலவினிதேறியகழ்தாண்டியிசைமாதைச்
சீலமுறுபஞ்சவரிற்சேர்ந்துகரையேறித்
தூலமுறநின்றிடுமெண்டூணமெதிர்கண்டார்.

(இ - ள்.) நீரோட்டமுடைய அகழியில்விட்ட அத்தெப்பத்திலே அழகும் வெற்றியுமமைந்த அஷ்டவீரர்களும் மிகவும் இனிமையுடன் ஏறி அவ்வகழியைக்கடந்து, தூய்மையினரான பாண்டவர்களைப்போன்று கீர்த்தி என்னும் மாதைச்சேர்ந்து கரையிலடைந்து, மேலே உத்திரங்கள் பொருந்த நிற்கின்ற எட்டுத் தம்பங்களையும் எதிரே பார்த்தார்கள். எ - று.

பாண்டவர்களைவரும் துரோபதை என்னும் ஓர் மாதையே சேர்ந்திருந்ததுபோல இவ்வெண்மரும் கீர்த்தி என்னும் ஓர் மாதையே சேர்ந்தார்களென்பார் ''இசைமாதைச்சீலமுறுபஞ்சவரிற்சேர்ந்து.'' என்றார். எனவே எண்மர்களும் தனித்தனி கீர்த்தியுடையவர்களாய்க் கரைசேர்ந்தார்களென்றபடி. (௬௭)

அண்டருமணற்கரியவட்டதிசைத்தூணம்
வண்டரணியைச்சுவலில்வைத்தகரியெட்டுங்
கண்டகன்வலிக்குருவுகாத்தவனருப்பந்
துண்டமதிலேந்தவிணிற்றாக்கியதைமானும்.

(இ - ள்.) தேவர்களாலும் நெருங்குவதற்கருமையாக அஷ்டதிசைகளிலுமிருக்கும் தூண்களெட்டும், வளப்பம் மிக்க இந்நிலவுலகத்தைத் தமது முதுகில் வைத்துக்கொண்டிருக்கும் அஷ்டகஜங்களும் கொடூரனாகிய விக்கலனுடைய வல்லபத்திற்குப் பயத்தினைப் பாதுகாத்துக்கொண்டு, அவனுடைய கோட்டையைத் துதிக்கையினாலேந்திக்கொள்வதற்காக ஆகாயத்தில் தூக்கியதை யொத்திருக்கும். எ - று.

அங்குள்ள தூண்களெட்டும்,பூமியைத்தாங்கும் அஷ்டகஜங்களும் தங்கள் துதிக்கைகளால் வல்லாளனுடைய கோட்டையைத் தாங்க மேலே தூக்கிக்கொண்டிருப்பதையொக்கும் என்றபடி. (௬௮)

தன்னொருபடைக்குமிடல்சால்படையிரண்டு
மின்னுகவசாதிகளுமேவலன்சுமத்த
லுன்னிவயிராயுதனுமீ இபவெழுநண்போ
டின்னவெஃகத்தூணுருவையேற்றுறல்கடுக்கும்.

(இ - ள்.) தனது ஓராயுதத்திற்கெதிராக அதினும் வல்லபம் மிக்க இரண்டுபடைகளும் பிரகாசிக்கின்ற கவசம் முதலியவைகளும் தன்பகைவன் தாங்கிக்கொண்டிருப்பதை யெண்ணி, வச்சிராயுதனுகிய இந்திரன் தன்னோடுற்ற நண்பினராகிய எழுவரோடு இவ்விதமான எகுத்தம்ப வடிவைப் பெற்றுக்கொண்டிருத்தலையும் ஒக்கும். எ - று.

இந்திரன் வச்சிராயுதம் ஒன்றேயுடைமையானும், விக்கலனென்பவன் வயிரவாள் வயிரக்கதை வயிரக்கவசம் முதலியவை பெற்றிருப்பதானும், இத்தகைய பகைவனை நாம் வெல்வதருமையென்று கருதி அவ்விந்திரன் தனது நேயராகிய மற்ற திசைக்காவல ரெழுவரோடு தானும் தூணுருவமைந்து நிற்கின்றதையும் நிகர்க்கும் என்றபடி. (ருகூ)

வாசுகிமுனெண்வகையமாசுணமித்தூணென்
ருேசைகொடுரைக்கினவையூர்தல்செயுலோமங்
காசினிசுமப்பக்கருதானரணேத்தத்தந்
தேசுறுபைதாங்குமெனத்தேர்தன்மரபன்றே.

(இ - ள்.) இவ்வெட்டுத்தூண்களும் வாசுகிமுதலாகச் சொல்லுகின்ற அஷ்டமாநாகங்களே யென்று திடமாகச்சொல்லின், அந்நாகங்களூர்கின்ற வால்களே உலகங்களனைத்தையும் தாங்கிக்கொண்டிருக்க, பகைவனுகிய இவனது ஒரு கோட்டையை அந்நாகங்கள் தங்கள் தங்களுடைய பிரகாசமமைந்த படங்களாற் சுமக்கின்றனவெனக் கூறுதன்முறைமையல்லவோ. எ - று.

அஷ்டமாநாகங்களே இத்தூண்களென் றுவமிக்கின், அவை நாகலோகத்துள்ளனவாகலின் தங்கள் வாற்களினுலே உலகமுழுவதையும் சுமந்து இவனது கோட்டையொன்றைக் காப்பதற்காகத் தங்கள் எட்டுத் தலைகளையும் மேலே நீட்டிற்று என்றுகூறுத லமையுமென்பது கருத்து. அஷ்டமாநாகங்களாவன:—வாசுகி அனந்தன் தக்கன் சங்கபாலன் குளிகன் பதுமன் மகாபதுமன் கார்க்கோடகன் என்பவைகளே. இவ்வெட்டுமே பூமியைத் தாங்குவதாயின் ஆதிசேடன்சுமப்பதின்றேவெனின், அற்றன்று - இந்நாகங்களெட்டும் எண்டிக்கினும் தாங்க நடுவே ஆதிசேடன் தாங்குவன். இந்நவநாகங்களும் காசிபமுனிவருக்குரிய மனைவியர் பதின்மூவருட் கத்துருவைக்குப் பிறந்தன. இவற்றிற்குக் கடவுட் பாம்பென்றும் மாசுணங்களென்றும் பெயர். உலோமம் வால்.

சூகரவிலோதனன்சொலிற்சிறிதுநீங்கார்
மாகர்பகைசெற்றிடுமடர்தையரெனின்மற்

றுகமதுநோகவவனுரரண்சுமப்ப
நாகரெனுமூவகையர்நண்ணலரிதேயோ.

(இ - ள்.) பன்றிக்கொடியையுடைய விக்கலன்சொல்லும் வார்த்தையிலே தேவர்கள் பகைவர்களாகிய அசுரர்களையழித்த காளி துர்க்கையென்னும் இருவருமே சிறிதுந்தவறுர்களென்று சொல்வோமாயின், அவ்விக்கலனதுகோட்டையைத் தங்கள் சரீரம்வருந்தும்படி சுமப்பதற்காக நாகரென்னும் பெயரையுடைய மூன்றுவகையினரும் வந்திடுதலருமையோ? எ - று.

நாகம் என்பது யானைக்கும் பாம்புக்கும் தேவலோகத்திற்கும் பெயராகலின், நாகர் என்பது உபசாரத்தால் அஷ்டகஜங்களுக்கும் அஷ்டமாநாகங்களுக்கும் தேவலோகாதிபத்தியம் பெற்றிருப்பதால் இந்திரனுதிய திசைக்காவலருக்கும் பொருளாதல்கொண்டு, ''நாகரெனு மூவகையர்'' என்றார். எவர்க்கும் வசியமாகாத காளியும் துர்க்கையுமே வசியமான விக்கலனுக்கு எவர்தான் ஏவல்புரியார்களென்றபடி. (சுக)

இத்தகையதூண்கடமிலிந்திரதிசைத்தூண்
சித்திரவரண்செனெறிசேர்க்குமெனலாயூஉ
மித்திரரெண்வேந்தர்தமுள்வீரனெழுவோரைக்
கத்தியொருயுத்தியைக்கரைத்திடுவதானுன்.

(இ - ள்.) இவ்வாறுகிய எட்டுத்தம்பங்களுக்குள் இந்திரத்திசையிலுள்ள ஒருதூணே சித்திரங்களமைந்த அக்கோட்டைக்குப் போகும் மார்க்கத்திற் கொண்டுபோய்விடுமென்பதை யாராய்ந்துணர்ந்து, மித்திரர்களாயிருக்கும் அவ்வஷ்டவீரர்களுக்குள் தலைவராகிய வீரரென்பவர் மற்றைச் சத்தவீரர்களையும் அழைத்து ஓர் யுத்தியைக் கூறுவதாயினர். எ - று.

விக்கலன் நாற்றிசைவாயில்களையுமடைத்துக் கீழ்த்திசைவாயில்களைமாத்திரம் திறந்துவைத்தனனுகலின் இந்திரதிசையாகிய கிழக்குத்திசைக்கணுள்ள தூண் ஒன்றினுல்மாத்திரமே மேலரணுக் கேறுமார்க்க மமைந்திருந்ததை யூகத்தாற் கண்டார்களென்க. (சுஉ)

தூணமதுவோபெரிதுதொத்தலுமற்றுகா
யாணருமஞ்சுற்றுழல்வாரதலினரன்றுள்
பேணல்கொடிங்கிவ்விருவர்பேகமெனலாய்மா
றேணமொடுபோயினெளிதெய்துமரணென்றுன்.

(இ - ள்.) இவ்வெகுத்தம்பமோ பெரிதாயிருக்கின்றது. தொத்தியேறுதற்குமேலாது. தேவதச்சரும் அச்சங்கொண்டுவருந்துவார்கள். ஆதலால் நாம் சிவபெருமான் திருவடிகளைப் பூசித்துக்கொண்டு இரண்டிரண்டுபேர்களாகத் தவளையைப்போன்று ஒருவர்முதுகி லொருவர் மாறிமாறி வலியோடு பாய்வோமாயின், இதன்மீதுள்ள கோட்டை அதிசுலபத்திற் கிட்டுமென்றுகூறினர். எ-று.

மற்றதையுணர்ந்திவ்விருமானவர்மண்டூகம்
பற்றுமுறைபற்றிவெரின்பாய்ந்தவணமாற
வுற்றொருவருக்கொருவரோகைகொடுதூண
முற்றுமுகளூற்றதன்முடிக்குமுடியானார்.

(இ - ள்) அவ்வாறுரைத்ததையறிந்த வீரர்கள் இரண்டிரண்டுபேர்களாகத் தவளைபிடிக்கும் பான்மையைப்போன்று பிடித்துக்கொண்டு, ஒருவர்முதுகின்மேலொருவர்பாய்ந்து அவ்வண்ணமேமாறி ஒருவருக்கொருவர் களிப்பின் மேம்பட்வர்களாய் அத்தூண் உச்சிவரையிலேறி, அதனுடைய உச்சிக்குச் சிகரமானார்கள் எ-று. (சச)

இந்தவகைமாறிமணித்தம்பமுடித்தட்டில்
வந்துபுரமூன்றுமொருமாணுருவிலார்ந்த
வந்தரமிதோகொடியனூருமிதிலேறுத்
தந்திரமியற்றியதுவோவெனத்தவித்தார்.

(இ - ள்.) இவ்வண்ணமாக ஒருவர்மேலொருவராகவேறி அழகிய அத்தம்பத்துச்சியிலுள்ள தட்டிலில்வந்துசேர்ந்து, மூன்றுபுரங்களும் ஒரேயுருவமாயமைந்த அந்தரக்கோயி லிதுதானோ? துட்டனாகிய விக்கலன் இதன்மீது யாவரும் ஏறவொட்டாமற் செய்திருக்கும் தந்திரமிதுவோ?என்று பரிதவித்தார்கள்.

பற்றவொருபற்றிலைபறக்கச்சிறகில்லை
யிற்றைக்ழியிற்றிறலுமில்லைநமர்நால்வர்
செற்றனர்செயத்தகுவதென்னெனத்தெளிந்தே
முற்றுணைவருங்கரிமுகற்சரணினைப்பார்.

(இ - ள்) இவ்விடத்திற் கைகளாற்பற்றவோ ஓர் பற்றுமில்லை. பறப்பதற்கோ சிறகுகளில்லை. இத்தினங்கழிந்தாலோ வெற்றிப்பாடில்லை. நம்மவரில் நால்வர் உயிரிழந்தார்கள். இனிச்செய்யத்தக்கது யாதென்று ஆலோசித்துத் தெளிந்தவர்களாய், முதலில் தங்களுக்குத் துணையாய்வந்த யானைமுகக்கடவுளின் திருவடிகளைத் தியானிக்கின்றார்கள். எ-று. (சரு)

## வேறு.

வான்றானய்வளிதானய்வன்னியறன்மண்டானய்
மான்றேரில்வருமிரவிமதியாவிவடிவானே
னீன்றானேயடியவர்கட்கெளியானேயிகபரத்து
மான்றானேயிதுசமயமருளாளவேண்டாவோ.

(இ - ள்) ஆகாயமாகவும் வாயுவாகவும் தேயுவாகவும் அப்பாகவும் பிருதிவியாகவும் குதிரைபூட்டிய இரதத்தில் வருகின்ற சூரியனாகவும் சந்திரனாகவும்

ஆன்மாவாகவும் வடிவங்கொண்டுள்ள சிவபிரானருளிய மூத்தகுமாரரே! அடியார்கட் கெளியரானவரே! இகத்திலும் பரத்திலும் நிறைந்துள்ளவரே! இத்தருணத்தில் திருவருள்சுரந்து எங்களையாளுதல்வேண்டாவோ? எ-று

சிவபிரான் அஷ்டமூர்த்த முடையாரென்பதை, போற்றியென்போலும் பொய்யர்தம்மையயாட்கொள்ளும்வள்ளல் - போற்றிநின்பாதம்போற்றிநாதனே போற்றிபோற்றி-போற்றிநின்கருணைவெள்ளப்புதுமதுப்புவனநீர்தீக் - காற்றியமானன்வானமிருசுடர்க்கடவுளானே." என்னும் மணிவாசகப் பிரான் மலர்வாக்கானுமறிக. (சஎ)

துர்ச்சமயத்தவரறியாச்சுடராகிப்பரைகாண
நச்சரவம்பூண்டசைவோனருண்மதலாய்நாயடியோ
முற்சபையிற்சொலிவந்தமொழிமாறாதுறுமோவெ
னச்சமையந்தீர்த்திடுவானருளாளவேண்டாவோ.

(இ-ள்.) புன்சமய வாதிகளா லறியப்படாத சோதிசொரூபமுடையவராய் அம்பிகை கண்களிக்கும்படி விடத்தையுடைய பாம்பை ஆபரணமாகத்தரித்துக்கொண்டு ஆனந்தத்தாண்டவம் புரிகின்ற சிவபிரானருளிய குமாரரே! நாயினுங்கீழ்ப்பட்ட அடியேங்கள் முன்னே பராந்தகச்சோழன்சபையிலே சொல்லிவெளிப்பட்ட சபதந்தவறாது நிறைவேறுமோ என்னும் பயமும் சந்தேகமுந்தீர்த்தருளுமாறு திருவருளால் எங்களை யடிமைகொள்ளவேண்டாவோ?எ-று.

சைவசமயத்தைத்தவிர ஏனையசமயங்கள் சிற்சில கன்மசித்திகளைத்தருமேயன்றி மெய்ம்மையான பரம்பொருளின் சொரூபதரிசனத்தைத் தராதென்பார், "துர்ச்சமயத்தவரறியாச்சுடராகி." என்றார், ஆன்மாக்களின் துயரையொழிப்பது ஆனந்தத் தாண்டவமேயாயினும், அத்தரிசனம் புரிதற்கு ஆன்மாக்கட்குப் பக்குவமின்மையின் காருணியங்கொண்டு அம்பிகை ஆன்மாக்கட்காக அந்நடனத்தைத் தரிசித்துக்கொண்டிருக்கின்றது.அஃதெதுபோலவெனின்-ஒரிளங்குழவிக்கு நேர்ந்த கொடும்பிணியைத் தீர்ப்பதற்குரிய பெரிய ஔஷதத்தை அக்குழவி யுண்ணும்பக்குவ மின்மையின்,அக்குழவியின் தாய் அதற்காகத் தான் அவ்வௌஷதத்தைப் புசித்து அக்குழவியின்கொடும்பிணியை நிவர்த்திப்பதுபோலாமென நூல்களிற்கூறியிருத்தலின்,"பரைகாணநச்சரவம் பூண்டசைவோன்."என்று கூறினர். சைவசமயத்தைத்தவிர இதரசமயங்கள் பரம்பொருட் சொரூபதரிசனம் பயக்காதென்பதை, "சைவசமயமேசமயஞ்சமயாதீதப்பழம்பொருளைக்- கைவந்திடவேமன்றுள்வெளிகாட்டுமிந்தக்கருத்தைவிட்டுப்-பொய்வந்துழலுஞ்சமயநெறிபுகுதவேண்டாமுத்திதருந்-தெய்வச்சபையைக்காண்பதற்குச்சேரவாருஞ்சகத்தீரே. என்னும் தாயுமானார் திருவாக்கானும், ஆன்மாக்கட்காகவே அம்பிகை நடனதரிசனஞ்செய்துகொண் டிருக்கின்றதென்பதை, "பாலுண்குழவிபசுங்குடர்பொறாதென-நோயுண்மருந்துதாயுண்டாங்கு-மன்னுயிர்த்தொகுதிக்கின்னருள்கிடைப்ப-வையமீன்றளித்ததெய்வ

க்கற்பி-னருள்சூற்கொண்டவையரித்தடங்கட்-டிருமாண்சாயற்றிருந்திழைகாண
ச்-சிற்சபைபொலியத்திருநடம்புரியு-மற்புதக்கூத்த.'' என்னும் குமரகுருபரசுவாமிகள் திருவாக்கானுந்தெளிக. (௬அ)

திருவாலந்துறைமருவுஞ்செழுஞ்சோதிச்செம்மாலோ
மருவாலும்பொழிற்றஞ்சைவளவனுடன்புகன்றமொழி
யொருவாதிங்காகுறவெம்முளபகிழ்வாலோங்குறநி
னருவாலுமுருவாலுமருளாளவேண்டாவோ.

(இ - ள்.) திருவாலந்துறையில் வீற்றிருந்தருளும் செழுஞ்சோதிச் சொரூபராகிய சிவபிரானளித்த குமாரரே! மணங்கமழு மலர்ச்சோலைசூழ்ந்த தஞ்சை மாநகரத்திலே அரசுசெலுத்துகின்ற பராந்தகச்சோழனுடன்சொல்லிய சபதவார்த்தையானது தவறாமல் நிறைவேறவும், எங்களுடைய மனம் களிப்பான் மேம்படவும் தேவரீர் அருவத்திருமேனியாலும் உருவத்திருமேனியாலும் திருவுளக்கருணையுடன் அருள்புரியவேண்டாவோ? எ-று.

அருவத்தால் அருள்புரிதல் அவனைவெல்லத்தக்க உபாயங்கள்கருத்திற்றோற்றுவித்தல். உருவத்தால் அருள்புரிதல் அவர்கள் கரசரணாதியவயவங்கட்கு அபூர்வவல்லபமுண்டாக்குதல். (௬௯)

எனத்தாழ்க்கைதைங்காத்தேவையிருகரம்விண்ணெழவோச்சிக்
கனைத்தூங்காரத்தொனியாற்கடந்தாளிப்பாய்ச்சல்கொளத்
தினைப்போதிலெண்மருமேற்றிகழறண்முன்வாயிலிடைக்
கனத்தோடிருப்பவிண்ணோர்கைகொட்டியார்த்தனரால்.

(இ - ள்)என்றிவ்வாறு துதித்து ஐங்கரக்கடவுளாகிய விநாயகரைப் பணிந்து தங்களிரண்டுகரங்களையும் ஆகாயத்திலெழும்பும்படி தூக்கிக்கனைப்புக்காட்டி ஊங்கார வோசையால் மேலேகிளம்பி யாளியைப்போற்பாய, தினையளவுநேரத்திற்குள்ளாக அவ்வஷ்டவீரர்களும் அத்தம்பத்தின்மீதுவிளங்கிய கோட்டையின் முதல்வாயிலிற் பெருமிதத்தோடு மிருக்கப்பார்த்து தேவர்களும் கைகொட்டி யாரவாரித்தார்கள். எ-று.

இவ்வாறிவர்கள் சென்றது விநாயகர் தமது துதிக்கையாற் றூக்கியதாலென்க. (௭0)

வேறு.

முன்னிருவாயிற்காவன்முனைவீராதியர்க்கும்
பின்னிருவாயிற்காவல்பெற்றகரிடரியிவைக்கு
மன்னியொருநாளுமறந்துறங்காதிருந்த
முன்னிலையான்மெய்ம்மறந்துமுடிசாய்ந்தவிழிமூய்ந்து.

(இ - ள்.) முற்பக்கத்துள்ள இரண்டுவாயில்களிலும் காவலுள்ள போர்வீரர்முதலியவர்கட்கும் பிற்பக்கத்துள்ள இரண்டுவாயில்களிலும் காவலுள்ள

யானைகள் குதிரைகள் என்னும் இவைகட்கும், நிலைபெறுக முற்பட்ட நான்குதினங்களும் மறந்தும் நித்திரைகொள்ளாதிருந்தகாரணத்தால், சரீரம் அயர்ந்து கண்கள்மூடித் தலைகள் சாய்ந்தன. எ - று.

இவர்கள் அங்கு சென்றது ஐந்தாவது தினமாகையால் அதற்கு முந்திய நான்குதினங்களும் உறங்காதயர்ந்திருந்தமையின் மெய்மறந்துறங்க நேர்ந்ததென்றபடி. (ருக)

கரிமுகவனருட்டிறமோகழிந்தவொருநால்வயவர்
புரிமயலோபுவிபரையர்புண்ணியமோசிறையிலிருந்
தெரிபடுமன்னவர்மடவாரினிதியற்றுந்தவப்பயனோ
வுரைசெயந்நாளுள்விழிப்போவொன்றுன்கட்டுறங்கினவால்.

(இ - ள்.) யானைமுகக்கடவுளின் திருவருள் வல்லபமோ? இதற்குமுன்னிறந்த ஒப்பற்ற நான்குவீரர்கள் தெய்வீகமாய்ப்புரிகின்ற மயக்கமோ? உலகத்தையாளும் அரசர்கள்செய்த புண்ணியமோ? விக்கலனுற் சிறைசெய்யப்பட்டு மனம் நொந்துகொண்டிருக்கும் அரசர்களும் அரிவையர்களும் இனிமையுடனே செய்துவருகின்ற தவத்தின்பயனோ? சொல்லிய முந்திய நான்கு நாட்களின் நித்திரைபங்கமோ? பகைவனுகிய அவ்விக்கலனுடைய காவல்களெல்லாம் உறக்கங்கொண்டன. எ - று. (ருஉ)

முன்வாயிறணைச்சேர்ந்தமுதலியர்நாலிருவோரு
மன்வாய்வாட்படையொடந்நால்வாயிலிலேகிக்கடந்து
பின்வாயிலெனுமைந்திற்பிறங்குறுஞ்செந்நாய்களைக்கண்
டென்வாயிலென்காவலென்றிறும்பூதுற்றனரே.

(இ - ள்.) முன்வாயிற்படியிலடைந்த முதலியர்களெண்மரும் நிலைபெறுயுள்ள வாளாயுதத்துடனே அந்நான்கு வாயில்களிலே சென்று தாண்டி, அவற்றிற்குப் பின்னுள்ள ஐந்தாம் வாயிற்படியிலே விளங்குகின்ற செந்நாய்களைப்பார்த்து, ஈதென்ன வாயிற்படி ஈதென்ன காவலென்று ஆச்சரியப்பட்டார்கள்.

செங்குந்த மரபினர்க்கே முதலியர் என்னும் பட்டம் அநாதியாக வழங்கிவருத லியல்பென்பதைக் குறிப்பிப்பான், "முதலியர்நாலிருவோரும்." என்றூர். என்னை? பிரமசிருட்டியிற்சிக்கிய ஏனையமரபினரைப்போலாது, சிவபிரான் திருமுகத்துதித்த சிவாசாரியர்களைப்போன்றே இன்னோரும் அப்பெருமான் திருவருட்பார்வையிற் றேன்றினோர் மரபினராகலினென்க. ஆதலினன்றே முகத்திற்றேன்றிய வேதியர்கட்கு ஆசிரியரென்றும் பார்வையிற்றேன்றிய செங்குந்தர்கட்கு முதலியரென்றும் பெயர்கள் வழங்கிவருகின்றன. இம்மரபினர்க்கேமுதலியரென்னும்பட்டமுரித்தென்பதை, "இந்திரனயன்மாறேவர்யாவர்க்குமுதன்மையாக-வந்தபான்மையினுற்குலமழுப்படையத்தனர்க்கு- முந்தியநாமந்தானுமுதலியராகையாற்செங் - குந்தர்சந்ததிக்குமப்பேர்முதலியரென்றுகூறும்.''என்னும் ஈட்டியெழுபதின் திருவிருத்தத்தானும் இந்நூலாசிரியர் சரித்திரத்தானும் தெளிக. (ருங)

ஆரூர்ப்புற்றிடங்கொண்டானண்டிகமெண்ணிலவேனெய்த்
தோரூருந்தசைதெறிக்கிற்சுவைத்தொதுங்குமவ்வமையத்
தேரூரவ்வாயில்கடக்தேகற்காமெனக்கூறிப்
போரூரும்வாள்கொடுதன்பொன்முடிகொய்துயிர்துறந்தான்.

(இ - ள்.) அப்போது திருவாரூர் புற்றிடங்கொண்டாரென்னும் வீரர் செந்நாய்கள் விசேடித்திருக்குமாயின் உதிரம் ஊறிக்கொண்டிருக்கும் தசையரிந்துபோட்டால் அதனைத்தின்றுகொண்டு ஒதுங்கியிருக்கும், அத்தருணத்தில் அழகமைந்த அவ்வாயிற்படியைத் தாண்டிச் செல்லக்கூடுமென்றுரைத்து; போர்புரிதற்குரிய வாட்படையை எடுத்துக்கொண்டு அதனுல் தமது அழகிய தலையை யறுத்துக்கொண்டு உயிர்விட்டனர். எ - று. (ருச)

அங்கதுகண்டெழுவோருமவனியில்வீழுடலையரிந்
துங்குறுங்கொக்கினத்தெறிந்தவ்வொண்வாயில்கடந்தாறுய்த்
தங்குறும்வாயிலையண்மித்தயங்கலும்பேழ்வாய்திறந்து
பொங்குபுலியீட்டம்வரக்களந்தைபிரான்புகல்கின்ருன்.

(இ - ள்.) அதைப்பார்த்த மற்றுள்ள சத்தவீரர்களும் பூமியில் விழுந்த சரீரத்தையறுத்து அங்கிருந்த செந்நாய்கட்கு விருந்திட்டு அந்த வாயிற்படியைத்தாண்டி, ஆருவதாயுள்ள வாயிற்படியைச்சேர்ந்து பார்த்தலும் அங்கு விசேடித்த பெரியவாயைத் திறந்துகொண்டு புலிக்கூட்டங்கள் எதிரேபாய்ந்துவர, அப்போது களந்தைநகர்க் கரசர் கூறுகின்ருர். எ - று.

வேறு.

சடமோநிலாதுபுகழோகெடாதுதமரீரெதிர்ந்தபுலிவா
யுடலேபகிர்ந்துதருமின்களென்றெனுடைவாள்கொடாவிசுரர்நா
டடராதகர்ந்துவிடவீரனுதியதிவீரரந்தவணமே
பிடவூகசாலமுணுநேரமேழ்கொளெழில்வாயிலூடுசெலுவார்.

(இ-ள்.) சரீரமோ நில்லாது. புகழோ அழியாது. ஆதலால் சுற்றத்தவர்களே! எதிர்த்த புலியின்வாயிலே எனது சரீரத்தை வெட்டிக்கொடுப்பீர்களாக. என்றுரைத்து தமது உடைவாளையுருவிக்கொண்டு பிராணன் வீரசொர்க்கமடையும்படி வெட்டிக்கொள்ளுதலும், வீரர்முதலிய சு தவீரர்களறுவரும் அவ்வாறே அச்சரீரத்தைத் துணித்துப்போட, அம்மாமிசத்தைப் புலிக்கூட்டங்கள்தின்றுகொண்டிருக்கையில் ஏழாவதாகிய வாயிற்படியிற் சேர்ந்தார்கள்.

அஞ்சாதுசெல்லுமறுவோருமங்ஙனடருற்றிரைந்துகுமுறும்
பஞ்சானனங்களலவாவிருந்தபடிகண்டுதில்லைநகரோ
னஞ்சாயிகத்திலுதியாவொறுக்குநண்ணுறாக்கோறல்வயமே
செஞ்சேவற்றேருகைவேனம்பியாளர்திரளென்பதொன்றுசெயலே.

(இ - ள்.) அச்சமடையாமற் செல்லுகின்ற ஆறுவீரர்களும் அவ்விடத்தில் நெருங்கிக் கோஷித்துக் கர்ச்சிக்கின்ற சிங்கங்கள்கூடி யிருந்தலைப்பார்த்து, புலியூர்ப் பள்ளிகொண்டாரென்னும் வீரர், விடத்தையொத்து இவ்வுலகத்தி லுதித்து வருத்துகின்ற பகைவர்களைக் கொல்லுதலே வெற்றியாகும். சிவந்த சேவற்கொடியையும் மயில்வாகனத்தையும் வேற்படையையுமுடைய குமாரக் கடவுளின் சகோதரர் மரபினரென்பவர்கள் ஒரே செய்கையைச் செய்பவர்கள். எ - று. (ருஎ)

அதனாலெனுவியுயர்வானமெய்தவரிதானகீர்த்தியழியா
ஆதவாவுடற்கொடெதுசெய்துமென்னவுடைவாளுரீஇத்தங்முடியைக்
கதுமென்னவீசியிதனவிவ்வாயில்காக்கின்றசிங்கமுணவே
யிதவாயளித்திவ்வாயிற்கடந்திடீரென்றுவீந்தனனரோ.

(இ - ள்.) ஆதலால் எனதுயிர் சொர்க்கமடையச் செய்தேனுயின் அருமையான புகழ் எக்காலமும் அழியாது. அவ்வாறியற்றுமல் ஏதுக்கும் பிரயோசனமற்ற இச்சரீரத்தைக்கொண்டு வேறென்ன செய்யப்போகின்றோம்? என்றுரைத்து உடைவாளை யுருவிக்கொண்டு தமதுதலையை அதிவிரைவிலேவெட்டி, இவ்வுடலைக்கொண்டுபோய் இவ்வாயிலைக் காத்துக்கொண்டிருக்கின்ற சிங்கங்களுண்ணும்படி இதவாகக்கொடுத்து இவ்வாயிலைக்கடந் துள்ளேசெல் வீர்களாகவென் றுயிர்துறந்தனர். எ - று. (ருஅ)

சீறிக்கனன்றவுளைமாமடங்கல்செவ்வாயிலந்தவுடலங்
கீறிப்பகிர்ந்துதரமிக்கிருந்தவுதரத்தவங்கிகெடவே
கோறற்றவிர்ந்தவவையுண்ணவைவர்குதிகொண்டுதாண்டவதுகால்
வீறித்திகழ்ந்தொண்புகர்வான்கிழித்துவெளிவந்துசொற்றவிவையே.

(இ - ள்.) சீறி எதிர்த்தனவாகிய மயிர்கணிறைந்த சிங்கங்களின் சிவந்த வாய்களிலே புலியூர்ப்பள்ளிகொண்டாரது சரீரத்தைத் துணித்துப் பாகித்துக் கொடுக்க, அவைகட்கு விசேடித்திருந்த பசித்தீயானது தணியும்படி கொல்லுதற்கெண்ணிய எண்ணமொழிந்து அவைகள் அத்தசைகளை யுண்டுகொண்டிருக்கையில், மற்றுள்ள வீரர்களைவரும் குதித்து அவ்வாயிலைக்கடக்க, அப்போது மிகப்பெருகிய விளக்கத்துடனே பிரகாசமுடைய புள்ளிகளமைந்த ஆகாயத்தைக் கிழித்துக்கொண்டு வெளிப்பட்டு ஆகாயவாணிவந்து இவ்வார்த்தைகளைக்கூறின. எ - று.

எனவே ஆகாயவாணி தெய்வீகமாய் இவ்வாறு கூறிற்றென்பது. (ருகூ)

அந்தோவிதென்னையடர்சாமநான்கிலொருசாமமுள்ளவிதனு
டந்தாயுளத்திரனலோடையோடுசலவோடைதாவியரணம்
வந்தேறியெஃகில்வருதூணமொன்றைவகையாற்கடந்துவிறலைச்
சந்தோடமொன்றவுறவேண்டுமோதுதடையின்றியாகவெனவே,

(இ - ள்.) ஐயோ ! ஈதென்னே? நூல்களையாராய்ந்துள்ள சித்தமுடைய வீரர்களே! இன்றிரவிற்குரிய சாமங்கள் நான்கினுள் மூன்றுசாமங்கள்கழிந்து மிகுதி ஒருசாமந்தானிருக்கின்றது இவ்வொருசாமத்திற்குள் அக்கினியோடை நீரோடை என்னும் இரண்டோடைகளையுந்தாண்டி, அவற்றுள்ளிருக்கும் கோட்டைக்குள்வந்து அங்குள்ள ஓர் எஃகுத்தம்பம் ஒன்றை வல்லபத்தாற்கடந்து சந்தோடம் பொருந்தும்படி வெற்றியடையவேண்டும். ஆதலால் அக்காரியம் உங்கட்குத் தடையின்றியாகுக என்று கூறியது. எ - று.

இச்செய்யுளினந்தத்தையும் மேற்செய்யுளி னக்தத்தையுங்கூட்டி, "எனச் சொற்றவிவையே." என முடித்துக்கொள்ளுக. (சுO)

வேறு.

வரமுற்றவயின்விட்டுவரவொத்தவொருசித்தவயவேறனு
ருரமிக்கமடமுற்றவலனிட்டவனல்பற்றியொளிர்சோதிமுப்
புரமிட்டவனலொத்துவளைவுற்றுவயிரத்தபுயனுதனார்
மரனுற்றதழைபெற்றபசைவற்றவெரிபற்றுவகைதேறினார்.

(இ - ள்.) ஆகாயவாணியினிடத்தில் வரம்பெற்றுக்கொண்ட விடத்தை விட்டு வருவதற்குச்சம்மதித்த ஒருப்பட்டமனமுடைய சித்திகள்வாய்ந்த ஆண் சிங்கம்போன்றவர்கள், வல்லபம் மிக்க அறியாமைபெற்றுள்ள வல்லானென்னும் இரட்டன் அமைத்திருக்கும் அக்கினியோடையின் தீயெரிந்து பிரகாசிக்கின்ற ஒளியானது திரிபுரங்களைத் தகித்த அக்கினியை யொத்துச் சூழ்ந்து வச்சிராயுதமேந்திய மேகவாகனனாகிய இந்திரனுடைய கற்பகத்தருவிலுள்ள தழைகட்கமைந்திருந்த பசுமைவற்றி யுலரும்படி சுவாலைவீசுகின்ற தன்மையை யுணர்ந்தார்கள். எ - று.

எனவே அனலோடையின் சுவாலை தேவலோகபரியந்தம் தாவிற்றென்ற படி. (சுக)

மிகலாகியருகாருமரமாதிகளுமோடிமெலிவாகியே
புகலாரையெனவாடலதுகாணுமிதுதீமைபுதுவாறெளி
பகலாமெனுதனெழுநாவெனலையாடுபடையாமிகற்
கிகலாயநமரேகவனலாறுதணிவாகுமிதுபாரென.

(இ - ள்.) விசேடமாகப் பக்கத்திலுள்ள விருட்சங்கள் முதலியவை களும் வருத்தமடைந்தோடி இனி யாவரிடத்திற் சரண்புகுவோமென்று வாட்டமுறுவதைப் பாருங்கள், இதுமிகத்தீங்காகும். இப்புதிய ஆறானது பிரகாசிக்கின்ற பகற்காலத்தையுண்டுபண்ணும், அதிலுள்ள அக்கினிதேவனுடைய ஏழு நாக்களெனச்சொல்லப்படுகின்ற அலைகள் போர்புரிகின்ற சேனைகளாகும். பகைவர்க்குப் பகைவராகிய நம்மவர்கள் இதன்மீது செல்லும்படி இவ்வக்கினியாறு தணியப்போகின்றது இதைப் பாருங்களென்று, எ - று.

அவ்வக்கினியாற்றிற் கருகிலுள்ள மரங்களெல்லாம் அத்தீயால்வெடித்துத் தூரப்போகின்றமையின், "மரமாதிகளுமோடி." என்றும், சற்றுதூரத்திற்போய் விழுந்துகிடப்பதால், "புகலாரையெனவாடல்." என்றும், இவ்வீரர்கள் சென்றது இரவாகையால் அப்போதவ்வக்கினியாற்றின் பிரகாசம் சூரியனொளிபோன்றிருத்தலின், "புதுவாரொளிபகலாடும்." என்றும், அவ்வக்கினிக்குள்ள ஏழுநாக்களென்னுமலைகள் பகைவரைவாட்டும் படைகள்போன்றதென்பார், "அனலுதனெழுநாவெனலையாடுபடையாம்." என்றுங்கூறினர். (சஉ)

மணநக்குபுலைமிக்ககடமொத்தசடமித்துள்வதிசீவனே
கணமிக்குவலயத்தினிலைநிற்பதிலைநித்யகதிநிற்குமாற்
றிணிமிக்கெமினமுற்றீருடலுக்குளடிவைக்கிற்செலலாமெனப்
பிணவற்குத்துணிவுற்றவ்வனலுக்குள்விழன்மிக்கபெருமைத்தரோ.

(இ - ள்.) நறுமணம் இகழ்ந்து நகைக்கத்தக்க புலானாற்றம் விசேடித்துள்ள பாத்திரம்போன்றது இச்சரீரம். இதனுள்ளே வாழ்ந்துகொண்டிருக்கும் உயிரோ இந்நிலவுலகத்தில் ஓர் க்ஷணநேரமாயினும் நிலையாய்நிற்பதில்லை. நாம் அடையத்தக்க வீரசொர்க்கமே நிலைக்கத்தக்கது. ஆதலால் - வல்லபமிகுத்துள்ள எம்மரபிற்றோன்றினவர்களே! இவ்வாற்றில் எனது சரீரத்தின்மீது உங்கள் பாதத்தைவைக்கிற் செல்லலாமென்று பிணவர் என்னும் வீரர்க்குத் தைரியந்தோன்றி அவ்வக்கினியோடையில் விழுந்தது மிகுந்த கீர்த்தியாகும். எ-று.

எனவே பிணவர் தாம் அவ்வக்கினியோடையில்விழுந் துயிர்போக்குவதாயும், அதன்பின் தமதுசரீரத்தின்மீது ஏனைய வீரர்களேறி அவ்வோடையைக் கடக்கலாகு மெனவுங்கூறி விழுந்தாரென்றபடி. மேற்செய்யுளு மிதுவுங் குளகம். (சங)

இவனங்கமனலுங்கவவணின்றெமனலங்கையிறையுன்னியே
நவதுங்கசெயசிங்கமனரன்றவ்வெரியங்கிநதியேறியே
கவனஞ்செலவிலங்கணெதிர்நின்றுவெருவந்துகண்டார்களாற்
புவனங்கள்வளைவங்கவலைசிந்துவெனநின்றபுனலேரியே.

(இ - ள்.) இப்பிணவருடைய சரீரத்தை அவ்வக்கினி விழுங்கிவிட, நூதனமான அற்புதங்கள்விளைக்கும் ஜெயசாலிகளாகிய ஆண் சிங்கங்கள்போன்ற ஏனையவீரர்கள் அங்கிருந்து மழுவேந்திய திருக்கரமுடைய எங்கள் சிவபெருமானைத் தியானித்து அப்போதே எரிந்துகொண்டிருக்கும் அவ்வக்கினியோடையிலேறி, அச்சரீரத்தினின்றும் அதிவிரைவாய்ப் பாய்ச்சல்கொண்டுபோகையில் உலகங்களனைத்தையும் சூழ்ந்துள்ள மரக்கலங்களும் அலைகளும்வாய்ந்த கடலென்று சொல்லும்படியிருந்த நீரோடையை அவ்விடத்திலிருந்து எதிரிலே அச்சமடையும்படி பார்த்தார்கள். எ - று. (சச)

விரிகஞ்சவிலைதந்தமணிவந்தவெயினந்தில்விதமானவிற்
சுரிசங்கமணியின்னதிரைகொண்டுகரைவந்துசுடரானதா
லெரிவந்ததெனவஞ்சியியல்கண்டுகரைநின்றவிவராகமேற்
றெரிகின்றசிவகங்கைதணல்வந்தகளைசிந்தத்திரைவீசுமால்.

(இ - ள்.) விரிந்துள்ள தாமரையிலைகளிலேயுள்ள முத்துக்களினின்று வீசும் ஒளியும், வளைந்துள்ள சங்குகளீன்ற குறைபாடற்றதன்மையுள்ள முத்துக்களின் ஒளியும் ஆகிய இவைகள் அலைகளைக்கொண்டு கரையிற்சேர்ந்து பிரகாசித்தன. அப்பிரகாசத்தால் இங்கும் அக்கினிவந்ததென்று அச்சமுற்றுப் பின் அதன்தன்மையை நோக்கிக் கரையிலே நின்றுகொண்டிருந்த இவ்வீரர்களின் சரீரத்தின்மீது, யாவராலுமறிகின்ற சிவகங்கையே இவர்களக்கினியிலிருந்து வந்த ஆயாசந்தீரும்படி அவ்வோடையினின்றும் தண்ணென் றலைகளைவீசும்.

முத்துப்பிறக்குந் தானங்கள் இருபதனுள் தாமரையும் சங்கும் உளவாகலின், "கஞ்சவிலைதந்தமணி." என்றும், "சுரிசங்கமணி." என்றும் கூறினர். அத்தானங்கள் தலசம் எனவும் சலசம் எனவும் இருவிதமாகும். இவ்விரண்டனுள் மேற்கூறிய இரண்டுதானங்களும் சலசமாகும். இருபது தானங்களை "தந்திவராகமருப்பிப்பியூகம்." என்றிந்நூல் வரலாற்றுச் சருக்கத்தினது முதற்செய்யுளுக் குதாரணமாகக்காட்டிய புகழேந்தியாருளிய இரத்தினச்சுருக்கத் திருவிருத்தத்தானுந்தெளிக. (சுரு)

நீராயியிர்ங்கொங்கைபீரோடிமேலாடுநேராகவே
வீராதிவீரேசராதாரமீநீரம்வீசுங்கொலோ
சீராளரேநீவிராவேரிபாராதுதோராரிடம்
போராடவோபோதலோதீரெனுக்கூஉய்ப்புலம்புங்கொலோ.

(இ - ள்.) அந்நீரோடையிலுள்ள கங்கை யென்னும் தாயானவள் குளிர்ந்த தனது தனங்களில் பீர்கொண்டு மேல்விழுந்து தெறிப்பதற்கொப்பாக, வீராதிவீரர்கட்குத் தலைவர்களுடைய சரீரத்தில் மேல்நீராகிய அலைகளால் வீசுகின்றனளோ? அல்லது-சிறப்புற்ற புத்திரர்களே! நீங்களெல்லாம் இவ்விரவில் இது ஏரி என்றும் யோசியாமல் பகைவரிடத்திற்குப் போர்புரிவதற்காகவா செல்லுகின்றீர்கள் சொல்லுவீர்களாக, என்று அவர்களையழைத்துப் பேசுகின்றனளோ? அறியோம். எ - று.

அவ்வகழியின் நீர் கோஷித்து அலைவீசுதலுக்குக் காரணங் கற்பித்துக் கூறியபடி. (சுசு)

கண்டேயிறும்பூதுகொண்டேவரும்போதுகாந்தாரமே
வண்டோடியும்பாடுமம்போருகம்விள்ளயம்பாதலங்
கொண்டோடலாற்கோடுகெண்டேறவின்றுகிக்குந்தாயுதப்
பண்டாரருட்கண்டியுரான்மற்றீதோர்சொல்பாலிப்பனே.

(இ - ள்.) இவ்வாறு வீரர்கள் அவ்வேரியைநோக்கி அதிசயப்பட்டுக்கொண்டுவருகையில், காந்தாரப்பண்களை வண்டுகள் பாடி உலாவிக்கொண்டிருக்கும் தாமரைகள் மலர்ந்துள்ள நீராழம் பாதாளலோகம்வரையிற் கொண்டுபோவதால் அதன் கரையைக்கண் டேறுதற்கில்லாதவர்களாய், செங்குந்தமென்னும் கருவூலப்பொருளுடைத்தாயிருக்கின்றவர்களுள் கண்டியூரர் இவ்வண்ணமாய் ஒருவார்த்தை கொடுப்பதாயினர். எ - று. (சுஎ)

பொல்லாதவல்லாளனெல்லாரினுங்கோரன்பூமிக்கணே
நில்லாமலில்லாதிகொள்ளாமல்கல்லோலநீரத்துளே
சொல்லாளமல்லாளவில்லாளவில்லாததூறென்றிலே
வெல்லாதுவெல்வார்முனில்லாதிங்குள்ளானேவீராவிவன்.

(இ - ள்.) ஓ வீரரே! வல்லாளனென்னும் இவன் கொடூரம் மிக்க வல்லபமுடையவன். உலகத்துள்ளாரனைவரினும் துட்டன். அன்றியும் பூமியிலே யிராமலும் இவ்விடத்திலே வீடுமுதலியவை கட்டிக்கொள்ளாமலும் அலைகள் வீசும் நீர் நிறைந்துள்ள இவ்வேரிக்குள்ளே, வார்த்தையாடவும் மல்யுத்தம்புரியவும் விற்போரியற்றவும் ஏலாத ஓர் இருப்புத்தம்பத்திலே, எவரையும் வெற்றிகொள்ளாமலும் வெற்றிகொள்வார்முன்னே நில்லாமலும் இங்கிருக்கின்றானே. எ-று.

என்றாலுமிக்கண்டகன்பொன்றறிணமிந்தவேரிக்குளே
மன்றேறுமென்னூன்வகிர்ந்திட்டிடங்கர்க்குவடகத்தையோர்
பொன்றோய்தரும்பந்தெனச்செய்திவர்ந்தேகல்பொற்பென்றுதன்
மின்றோய்முடிக்கீழ்விழுக்கண்டம்வீசிச்சொல்வேய்ந்தானரோ.

(இ-ள்.) இப்படியிருந்தாலும் இந்தத்துட்டன் அழிந்துபோதல் நிச்சயமாதலால், இந்த ஏரிக்குள்ளே வீரசொர்க்கமடைகின்ற எனது மாமிசத்தை இதிலுள்ள முதலைகட்குப் பாகித்திறைத்து, எனது தோலை பொன்மயமாகவிளங்கும் துருத்தியாகச்செய்து அதில் சலம் நிரப்பி அதையுருட்டிக்கொண்டே நீந்திச்சென்று அத்தம்பத்தின்மீ தேறிப்போகுதல் அழகாகுமென்று தமது விளக்கமுற்ற தலை கீழேவிழும்படிக் கழுத்தை வெட்டிக்கொண்டு கீர்த்திபுனைந்தார்.

அதுகண்டவயவீரரொருமூவரவைபேணியகழ்தாண்டுறு
மதிகண்டமுறஞாயில்பலகொண்டவெயிலேறிமருவானர
ணெதிர்கண்டுதிகழேழ்கொணிலையாவுமிடறின்றியெளிதண்மியே
விதிகொண்டவுலகொன்றுமொருதூணமிசைமாடமிகநோக்கினர்.

(இ - ள்.) இவ்வாறு திருக்கண்டியூரர் கூறி யிறந்ததைப்பார்த்த வெற்றியுள்ள ஏனைய மூன்றுவீரர்களும் அப்படியேசெய்து அவ்வேரியை நீந்திச்சென்று, சந்திரமண்டலம் தனது கண்டமட்டில்வரும்படியான உன்னதமுடையதாய்ப் பல வுறுப்புகளமைந்துள்ள மதிலின்மேலேறி, பகைவனாகிய வல்லாளனுடைய கோட்டையை எதிரிலே பார்த்து, அக்கோட்டையின் எழுடுக்குகளையும்

யாதோ ரிடையூறுமில்லாமல் அதிசுலபத்திற்கிட்டி, பிரமனுடைய உலகமாகிய சத்தியலோகம்வரையி லோங்கியுள்ள ஓர் எருத்தம்பத்தின்மீ தமைந்த மாடத்தை வெகு விநோதமாய்ப் பார்த்தார்கள். எ - று. (எ0)

மேனுண்முகுந்தன்கைவிரலொன்றிலிலகுற்றவெற்பாங்கொலோ
காஞர்குழற்கௌரியோருசிமுனை நின்றகவினேகொலோ
வானுருமொருவிந்தமண்ணுழமுனியோச்சிவளை கைகொலோ
வாஞதவகைதூணமொன்றிற்படாம்வீடுமமைவுற்றதே.

(இ - ள்.) ஒருவராலும் ஏற முடியாத படி ஓர் தூணில் வஸ்திரத்தினாலான கூடாரமும் அமைந்திருக்கின்றதே: இத்தூணமும் படாம்வீடும் முற்காலத்திலே திருமால் திருக்கரத்துள்ள விரலொன்றில் விளங்கிய கோவர்த்தனகிரியோ?மணம் வீசும் கூந்தலுடைய பார்வதியார் தவமுன்னிலையில் ஒருசிமுனையில்நின்ற அழகே தானோ? ஆகாயமளாவியிருந்த ஒப்பற்ற விந்தவரையானது பாதாளத்தழுந்தும்படியாக அகஸ்தியமுனிவர் நீட்டிவளைத்த அவரது திருக்கரமோ? எ - று. (எக)

என்றேயிறும்பூதுகொண்டாருளெழிறஞ்சையிறைவேம்பனீ
தொன்றேமுனுள்வானிலுருவிச்செல்சூர்மேலையுறுகோபுரத்
தென்றாழிலவன்சேய்வெனென்பேற்றியதிலேறியினிதாடுவோர்
தொன்றுயகுலமன்னுவேமுக்குமரிதென்றுசொலிச்சொல்லுமே.

(இ - ள்.) என்றிவ்வாறு ஆச்சரியப்பட்டவர்கட்குள்ளே அழகுள்ள தஞ்சைமாநகரத்தரசராகிய வேம்பரென்பவர், இஃதோர் பெரியகாரியமோ? முற்காலத்திலே ஆகாயத்தி லூடுருவிச்செல்லும் சூரபன்மாவினுடைய மேலைக்கோபுரத்தில், அவனுடைய குமாரனை வச்சிரவாகுவினது முதுகென்பை ஏற்றி அவ்வெலும்பின்மீதிற் சூரியனைப்போ லேறிநின்று இனிமையுடன் கூத்தாடுவோர்களின் புராதனமான குலத்தில் நிலைத்துள்ள நமக்கும் இஃதருமையோவென்று கூறிப் பின்னும் கூறுகின்றனர். எ - று. (எஉ)

சாதற்கெனத்தோன்றுஞான்றேவருத்துள்ளதனுவாலினி
யாதக்கதடலாதலாற்றூணினெய்த்தோரொடுறல்கூட்டியே
மேதக்கவரிமாமுகற்பேணியளையுற்றுமேவச்செயம்
போதக்கதினியாமெனுவுன்னிவாட்காவிபோக்குற்றனன்.

(இ - ள்.) இவ்வுலகில் பிறக்கும்போதே இறப்பதற்கென்றே நியமித்திருக்கும் இச்சரீரத்தால் இனியாகவேண்டியது வெற்றியொன்றேயாகலால், இத்தூணிலே உதிரத்தோடு மணலையுஞ்சேர்த்து மேன்மைபெற்ற யானைமுகக்கடவுளைத் தியானித்துப் பூசி ஏறிடில் ஜயமாம். இனி யிறக்கத்தகுவது நாமேயாகுமென்றெண்ணித் தமதுடைவாளை யுருவி வீசிக்கொண்டு உயிர் துறந்தனர்.

மிகுவீரரிருவோருமதுநாடியுதுகூடிமேலேறினர்
பகலோனுமூரைதேரிலினியாகுமதுகாணல்பாக்கூறினு
ணிகரேயில்வளவேசவிதுதூணமுடிகண்டவெழினேர்மைகா
ணிகவாழ்வின்மிகவாழும்வல்லாற்கினுயிரீதலினியோதுவாம்.

(இ-ள்,) அப்போது மிகுதியாய்கின்ற வீரர்களிருவரும் அதனைக்கண்டு அவ்வாறியற்றி அத்தம்பத்தின்மேலேறினர்கள். சூரியனும் தனது பொன்விமானத்தில் இனியாகுங் காரியத்தைக் காணும்பொருட்டு ஆரோகணித்தான். ஒப்பற்ற குலோத்துங்கச்சோழனே! இதுதான் தம்பத்தினுச்சியைக் கண்ணுற்ற அழகுள்ளதன்மையாகும். இகலோகவாழ்க்கையிலே மிக்க பெருமிதத்துடன் வாழ்கின்ற வல்லானுக்கு இனிய சீவனைப்பாலிக்கும் சரிதத்தைஇனிக்கூறுவோமென்று கவிச்சக்ரவர்த்தியார் திருவாய்மலர்ந்தனர். எ-று. (எச)

தம்பாரோகணச்சருக்கம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ருசுக.

---

பன்னிரண்டாவது

## மாங்கல்லியப்பிச்சையிட்டசருக்கம்.

கொடிஞ்சியந்தேர்ச்சக்கரத்தினுக்குயிரைக்கொடுத்தகோக்கன்றி
னுக்காவின், நெடும்புவியனைத்துங்காத்தறமோம்புநிகரிலாச்செம்மலை
யளித்த, திடங்கொணற்குலத்தோய்கௌசிகன்சுதன்மைச்செவ்வி
யோவெனும்படிவல்லான், விடங்கமுன்னுனவுறுப்புகளனைத்தும்
வியனவமணிகளாற்சமைத்து.

(இ-ள்.) மொட்டையுடைய இரதத்தின் சக்கரத்திற்குத் தன்னுயிரைக்கொடுத்த பசுவின் கன்றினுக்காக, நீண்ட இந்நிலவுலகம் யாவையும் பரிபாலித்துத் தருமத்தை வளர்க்கத்தக்க ஒப்பற்ற குமாரனைக்கொடுத்த நிச்சயத்தையுடைய சிறந்தகுலத்திற் பிறந்தவனே! வல்லானென்பவன் இது இந்திரனுடைய வசந்தமண்டபத்தின் அழகுதானோ என்று சொல்லும்படி, கொடுங்கைமுதலாகிய உறுப்புக்களெல்லாம் மேம்பாடமைந்த நவரத்தினங்களாலேசெய்து, எ-று.

இவ்வாறு பசுவின்கன்றுக்காகத் தனது குமாரனைப் பலிகொடுத்தவர் மனுமுறைகண்ட சோழர். இச்சரித்திரவிரிவைத் திருத்தொண்டர்புராணத்துள்ள திருவாரூர்ச்சிறப்பிற் காண்க. (க)

செம்பொனாற்பித்திபலவகையிலீலைதிகழுறவெழுப்பியார்தரைக்கண்
விம்பமார்பளிக்குக்கற்படுத்தெண்ணில்விதவிளக்காடிபொற்பாவை
தம்பநேர்கருவித்திரள்பண்ணிகாரந்தகரந்தாம்பூலமுன்யாவும்
டம்புறாஉம்படாம்வீட்டதனிடைச்சசியும்பலாரியுந்தூங்குமஞ்சேய்ப்ப.

(இ - ள்.) பசும்பொன்னாற் சுவர்களைப் பலவித லீலைகள் விளங்கும்படியாகவெழுப்பி, நிலமெங்கும் பிரதிபிம்பந்தோன்றத்தக்க பளிங்குக்கற்களைப் பதித்து, அளவிறந்த விதங்களான தீபங்களும் கண்ணாடிகளும் பொற்பதுமைகளும் சங்கீதக்கருவிக்கூட்டங்களும் பலகாரவர்க்கங்களும் வாசனைத்திரவியங்களும் தாம்பூலமும் ஆகியவனைத்தும் அடர்ந்துள்ள கூடாரமென்னும் அவ்வீட்டின்நடுவே; இந்திராணியும் இந்திரனும் துயில்கூறும் கட்டிலைப்போன்று. எ-று

மெல்லனத்தூவிமல்லிகையாதிமேவுநல்லமளியைவிரித்துச்
சில்லுருப்பாவைசாமரையிரட்டச்சிலமணிச்சிவிறியையசைப்பச்
சில்லகாலாதியுருத்தொடச்சில்லசிவணுமைங்கருவியையிசைப்பச்
சில்லநல்வாசநீரலர்தூவத்திகழ்சப்ரமஞ்சமதேறி.

(இ - ள்.) மிருதுவான அன்னத்தூவியும் மல்லிகைமலர்முதலியவும் பொருந்தும்படி சிறந்த மெத்தையைவிரித்து, அழகமைந்த சில பதுமைகள் வெண்சாமரைவீசவும், சிலபதுமைகள் இரத்தினவிசிறியை அசைக்கவும் சில பதுமைகள் பாதமாதிய வடிவங்களைப் பிடித்துக்கொண்டிருக்கவும், சில பதுமைகள் பஞ்சவாத்தியங்களை முழக்கவும், சில பதுமைகள் மணமுள்ள பன்னீரையும் மலர்களையும் தூவிக்கொண்டிருக்கவும் விளங்குகின்ற கட்டிலின்மீதேறி; எ - று.

சயனங்கள் ஐந்துவிதமாகலானும் அவற்றுள் அன்னத்தூவி முதன்மையானதாகலானும், "மெல்லனத்தூவிமல்லிகையாதிமேவுநல்லமளி" என்றும், ஐந்துவிதக்கருவிகளால் இசையுண்டாமாதலின், "ஐங்கருவியையிசைப்ப." என்றுங்கூறினர், பஞ்சசயனங்களாவன:—அன்னத்தூவி, இலவம்பஞ்சு, செம்பஞ்சு, வெண்பஞ்சு, மயிர் என்னுமிவைகளாம். ஐங்கருவிகளாவன:—தோற்கருவி, துளைக்கருவி, நரம்புக்கருவி, மிடற்றுக்கருவி, கஞ்சக்கருவி என்பவைகளாம். (௩)

பண்படும்வயிரக்கவசமெய்வீக்கிப்பாணிகடண்டுவாடாங்கக்
கண்படுகின்றான்காதலியனங்கவல்லியோகழிந்தநாளுரு
மெண்படுமுளத்தளாய்மெலிந்தந்தோவிகல்பெரிதுடையவர்தமக்கு
நண்பெவர்பாலுமிலார்க்கும்வெங்கொடுமைநன்னுறுஞ்செயலைநாடுனர்க்கும்

(இ - ள்.) வலியமைந்த வச்சிரக்கவசத்தைச் சரீரத்தில் தரித்து, இரண்டுகரங்களும் வச்சிரத்தண்டும் வச்சிரவாளும் தாங்கிக்கொண்டிருக்கத் துயில்புரிகின்றான். அவன் பத்தினியாகிய அனங்கவல்லியோ - சென்ற நான்குதினங்களினும் சிந்திக்கின்ற சிந்தமுடையவளாய் வருந்தி, ஐயோ! விசேடபகையு

ள்ளவர்கட்கும், யாரிடத்திலும் நேசமில்லாதவர்கட்கும், மிகக் குரூரமமைந்த செய்கையைப் புரிகின்றவர்கட்கும், எ - று. (ரு)

ஆறலைப்பார்க்குமரிவையர்கற்பையழிக்குறுங்கொடியர்க்கும்பொயர்க்கும், வீறுகாமுகர்க்கும்வினைமுடவர்க்கிடுக்கண்விளைத்திடும்வெய்யர்க்கும்விபுலத், தீறிலாநிந்தையேவருஞ்சொல்லவினையதீங்கனைத்தையுமிழைத்தன், மாறிலாக்கயவர்தமக்கெலாந்தீமேதவருவதுதிண்ணமீதல்லால்.

(இ - ள்.) வழிபறித்துப் பொருளபகரிப்பவர்கட்கும், மாதர்கள் கற்பையழிக்கின்ற துன்மார்க்கர்கட்கும், பொய்கூறுகின்றவர்கட்கும், விசேடித்த காமமுடையவர்கட்கும், நேசமுள்ளோர்க்குத் தீமைபுரிகின்ற கொடியவர்கட்கும், இந்நிலவுலகத்துள்ளாரனைவரும் நிந்தைகூறும்படி இத்தகைய தீமைகள் புரிவதில் மாறுபாடற்ற மூடர்கட்கெல்லாம் தீமையே விளைவது நிச்சயம். இதுவல்லாமலும்- எ - று. (சு)

கண்டதுர்க்கனவைக்கருதுதோறுள்ளங்கபிலெனக்கலங்குறுமபயன், மண்டும்வெஞ்சினத்தனுயினன்பறையால்வருவதிற்றென்றுணர்ந்தனமா, லண்டர்தம்பகையாகுறினுஞ்செங்குந்தர்பகையணுவுமாகாதே, தெண்டிரைசூழுலகின்மற்றினியாஞ்செயத்தகும்வினைகள்யாவெனவே.

(இ - ள்.) நாம் கண்ட சொப்பனத்தை நினைக்கும்போதெல்லாம் மனம் கபிலெனக் கலங்குகின்றது. சோழனே விசேடித்த கடுங்கோபனுய்விட்டான். அவன் அறைவித்த பறையினுல் மேல் விளையப்போகின்றது இதுவென்று அறிந்திருக்கின்றோம். சிறந்த தேவர்கள் பகை நேரிடினும் செங்குந்தர்களுடைய கொல்லத்தக்க பகை அணுவளவும் கூடாதே: தெளிந்த கடலாற்சூழப்பட்ட இந்நிலவுலகத்தில் இனிமேல் நாம் செய்யத்தக்க காரியங்கள் எவைகளென்று,

துஞ்சுறவிருப்போர்சோரர்காமுகர்வெஞ்சூரினர்வெறியர்நல்விரதமெஞ்சிடாதயர்வோரேய்பசியாளரிகலுளோரயலிடத்துறைவோர் விஞ்சுறவல்லல்விளைதருமனத்தோரென்னுமிவ்வீரைந்துபேருங் கொஞ்சமுந்துயிலாரென்பதுகடுப்பக்கூரயிற்கண்படாளாகி.

(இ - ள்.) இறக்கும்படி யிருப்பவர்களும், கள்ளர்களும், காமுகர்களும், கொடியநோயாளர்களும், பைத்தியங்கொண்டவர்களும், சிறந்த விரதத்தை முட்டுப்பாடற முடிப்போர்களும், கொடும்பசியுடையவர்களும், பகைமையுள்ளவர்களும், அயலிடத்திற் கரந்துறைவோர்களும், விசேடித்த துயர்பெற்ற மனமுடையவர்களும் என்று சொல்லத்தக்க இப்பத்துவகையினரும் சற்றும் நித்திரை புரியார்கள் என்பதுபோன்று அனங்கவல்லி கூர்மையுள்ள வேல்போலும் தனது கண்களை மூடாதவளாகி; எ - று. (எ)

உகமொருநான்காவொழிந்தநாளுமுறுவதோர்நாளிற்றையிரவு
மகலின்மேலில்லையிடரெனவுன்னியருக்கன்கீழுதிதராமுன்னஞ்
சுகமுறக்காலசந்திமுற்றித்துணைவனைவிழிப்பிக்குமுறைமை
தகவுறீஇயிருந்தாளிவ்வெலாங்கண்டார்சாளரவழியுவாய்வீரர்.

(இ - ள்,) கழிந்த நான்கு தினங்களும் நான்கு யுகங்களாகக் கடந்தன. இன்னுமிருக்கின்றது ஒரேநாளாகும். இன்றிரவுங்கழிந்தால் அதன்மேற் றுன்பமில்லை. என்றெண்ணி சூரியன் கீழ்த்திசையில் உதயமாகாததற்குமுந்தித் தான் சுகமடையும்பொருட்டுக் காலையிற் செய்யவேண்டிய நித்தியகருமங்களை முடித்துக்கொண்டு, தனதுகணவனைத் துயிலெழுப்பும் வழக்கப்படி செய்வதற்கெண்ணியிருந்தனள். அங்குசென்ற வீரர்களிருவரும் இவையனைத்தையும் சாளரவழியாய்ப் பார்த்தார்கள். எ - று.

கற்புடைய மாதர்கள் கணவன் றுயின்றபின் றுயின்று விழிக்குமுன் விழித்துத் தங்கள் கணவன்மாரைத் துயிலுணர்த்தல் கடமையாகலின், "துணைவனை விழிப்பிக்குமுறைமை" என்றார். இவ்வாறியற்றல் கற்புடைமாதரிலக்கணமென்பதை, "அடிசிற்கினியாளேயன்புடையாளே-படிசொற்றவறாதபாவா-யடிவருடிப் - பின்றூங்கிமுன்னெழுந்தபேதையேபோதியோ் - என்றூங்கு மென்கணிரா." என்னும் திருவள்ளுவநாயனார் திருவாக்கானுந்தெளிக.இவ்வெண்செய்யுளுங்குளகம்,                (அ)

அம்மவோவிந்தவறக்கொடும்பாவிக்கமைந்துளசெல்வமேசெல்வ
மிம்மியுங்குறையாவரந்தவத்தளவுக்கீதலேகடமையாக்கொண்ட
நம்மையாளுடையானிவற்களிவரம்பினடுக்கெடுமென்றதனாலோ
சம்மினம்பதின்மர்சூழ்தராநின்றோதநுகணனின்னும்விழித்திலனால்.

(இ - ள்.) அம்மா! தருமத்தைக்கெடுக்கும் கொடியவனாகிய இந்தப்பாவிக்கு வாய்ந்திருக்கும் ஐஸ்வரியமே ஐஸ்வரியம். அவரவர்கள் செய்கின்ற தவத்தினளவுக்கு இம்மியளவுங்குறையாதபடி வரந்தருதலே கடமையாகக்கொண்ட, நம்மையடிமையாகவுடைய சிவபிரான் இவனுக்குப்பாலித்தவரமானது பின்னர் இடையிற் கெடுமென்று கூறியதினாலோ? வெற்றிமிக்க நம்முடைய இனத்தவர்கள்பதின்மரும் சூழ்ந்துகொண்டிருப்பதாலோ? இக்கொடியவன் இன்னும் விழிக்கவில்லை. எ - று.

இப்போது இவன் விழித்திருப்பானாகில் எங்கள் சபதப்படி முடிப்போம். அப்படிமுடிப்பதற்குச் சிவபிரானருளிய காலவெல்லைக்கிடையில் அழிவுநேரிடுமென்ற சிவாக்கினையினாலே தான் அவன்விழிக்கவில்லையோ? அல்லதுநம்மினத்தவர்களில் உயிர்துறந்தபதின்மரும் நம்முடன் துணையாய்வந்து காத்திருப்பதனாலேதான் அவர்கள் தோற்றத்தைக்கண்டச்சமுற்று விழிக்கவில்லையோ? என்றெண்ணினார்களென்றபடி.                (கூ)

ஆதலாலிவன்கண்விழிப்பினைக்காண்போமென்றெணியருநெறிவந்தார்
கோதிலாவனங்கவல்லியுமஞ்சங்குறுகியொண்முகத்தெதிரிருந்து
காதலனடியைத்தைவருகின்றாள்கண்பிசைந்தவள்வரவோர்ந்த
வேதிலான்விழித்துச்சிலநுவல்கின்றானிலாளுமேசிலநுவல்கின்றாள்.

(இ - ள்.) ஆதலால் இவன் நித்திரை விடுதலைக் காணுவோமென்றுசிந்தித்து அக்கூடாரவாயிற்படிக்கெதிரே வந்தார்கள். குற்றமற்ற அனங்கவல்லியும் வல்லானுறங்கும் கட்டிலைக்கிட்டி அவன்முகத்திற்கெதிராகவிருந்து, தனது கணவனாகிய அவன் கால்களைத்தடவுகின்றாள். அனங்கவல்லி வந்ததையறிந்த பகைவனாகிய வல்லான் நித்திரை தெளிந்து கண்களைப் பிசைந்துகொண்டு சில கூறுகின்றான், அவன் மனைவியும் சில கூறுகின்றாள். எ - று. (௬0)

வேறு.

கண்டுயினுணீத்தகாரிகை தன்னைத்தீங்கு
மிண்டியகொடியநெஞ்சவிக்கலன்றன்னையந்த
மண்டபத்தழகைவீசுமலர்மணச்சுகத்தைவீரர்
கண்டகங்கொதிப்பக்காய்ந்துகதுமெனப்பேசுகின்றார்

(இ - ள்.) அப்போது அவ்வீரர்களிருவரும் நான்குதினங்களாக நித்திரைவிட்டிருந்த அனங்கவல்லியையும், தீமைவிசேடித்த கரோசித்தமுடைய விக்கலனையும், அவனிருக்கு மண்டபத்தின் அழகையும், அங்கு வீசுகின்ற புஷ்பவாசனையின் சுகத்தையும் நோக்கி மனம் வேகும்படி கோபித்து; அதிவிரைவாக இவ்வாறு கூறுகின்றார்கள். எ - று. (௬௧)

மேகவாகனனைப்போலுமிளிர்தனபதியைப்போலுஞ்
சோகமொன்றில்லான்போலுந்தூங்கினையுனக்குமிந்த
போகமோவின்னுசெய்யும்புலைஞனேயென்னவைது
மாசமும்வியக்கவார்த்துப்பாய்ந்தனரவன்றன்மார்பில்.

(இ - ள்.) மேகவாகனனான் இந்திரனைப்போன்றும், விளக்கமுற்ற குபேரனைப்போன்றும், யாதோர் வருத்தமும் இல்லாதவனைப்போன்றும் நித்திரை செய்தனையே: உனக்குக்கூட இவ்வளவு போகம்வேண்டுமோ? கொடுமையேபுரிகின்ற கீழ்மகனே! என்று நிந்தித்து, தேவலோகமும் அதிசயிக்கும்படி ஆர்ப்பரித்து அவ்விக்கலனுடைய மார்பிலே பாய்ந்தார்கள். எ - று. (௬௨)

அக்கணம்வல்லான்சீறியருகுளவாடண்டேந்தி
முக்கலுற்றெழுவாயத்தமுன்னிச்சென்னியையுயர்த்தா
னக்குநாரணன்முன்பாய்ந்துகருபடைக்கையைக்கொப்பைச்
சிக்குறப்பிடித்தலங்கல்செயாவணனெருக்கினின்றான்.

(இ - ள்.) அப்போதே விக்கலன் அதிட்டிக்கொண்டு சமீபத்திருந்த வாளையும் தண்டையும் எடுத்து மூக்கிக்கொண்டெழுந்திருப்பதற்காகப் பிரயத்தனஞ்செய்யவெண்ணி தலையைத்தூக்கினான். அதுகண்ட நாராயணரென்பவர் சிரித்து முன்னாகப்பாய்ந்து, ஒளிவீசுகின்ற தண்டு வாள் தாங்கியிருந்த கைகளையும் அவனுடைய குடுமியையும் சேர்த்துப் பிடித்துக்கொண்டு அசையவொட்டாதபடி அழுத்திநின்றனர். எ - று. (௩௩)

பொட்டெனக்கழுத்தைப்பற்றிப்பொலிதரும்வீரவாளால்
வெட்டக்கையோங்கிநின்றான்வீரனாரணனுமன்னன்
கட்டியகழலும்வாளுங்கவசமுங்கதையுங்கையாற்
றொட்டனனெடுத்தான்வல்லான்றுணிந்தெழற்கிலானய்நோந்தான்.

(இ - ள்.) அக்கால் வீரரென்பவர் திடீரென்று அவன்கழுத்தைப்பிடித்துக்கொண்டு தமது கையிலிருக்கும் விளக்கமுற்ற வீரவாட்படையால் வெட்டுதற்காகக் கையை மேனீட்டிநின்றார். அப்போது நாராயணரென்பவர் அவன் கட்டியிருந்த கழலையும் வாளையும் கவசத்தையும் கதையையும் தமது கரத்தாற் பற்றியெடுத்தனர். வல்லான் துணிவுடனெழுந்திருப்பதற் கேலாதவனாய் வருந்தினான். எ - று.

இங்கே கழலென்றது-ஆடவர் கொடையாலும் வீரத்தாலுமணியும் பூண்.

கற்பினளெனைமணந்தகைம்மலைகண்டசிங்க
சொப்பனம்பலித்ததென்னத்துவண்டுறக்கொழுகொம்பில்லாப்
பொற்பிளங்கொடியின்வாடிப்போற்றியொண்பதத்தில்வீழா
வற்படுங்கூந்தல்சோரவழுதிதுபகரலுற்றாள்.

(இ - ள்.) அப்போது கற்புடைய அனங்கவல்லியானவள் என்னைத் திருமணம் முடித்த மணவாளர் என்னும் யானையானது கண்ட சிங்கசொப்பனத்தின்பலன் சரியாய்ப் பலித்ததே யென்று சரீரம் துவளும்படி படர்தற்குரிய கொம்பற்ற அழகமைந்த பசுங்கொடிபோல வாட்டமுற்றுத் துதித்து, அவர்களுடைய விளக்கமுற்ற திருவடிகளிற்பணிந்து, இருள்போலும் கூந்தல் சரியும்படி புலம்பி இவ்வாறு கூறலாயினள். எ - று. (௩௫)

வையகநெடுநாள்செய்தமாதவத்தெழுந்ததன்ம
தெய்வதப்படிவேயெய்த்தனரைப்புரக்குங்காவே
யுய்வரங்கொடுக்கவந்தவொருபரம்பொருளேயேழை
யையகோமுறையேவுங்கட்கடைக்கலங்காத்தல்வேண்டும்,

(இ - ள்.) இந்நிலவுலகம் வெகுகாலம்புரிந்துவந்த பெருந்தவத்திற் றோன்றிய தருமதேவதையின் உருவங்களே! இளைத்த வறியவர்களைப்பாதுகாக்கும் கற்பகத்தருவைப்போன்றவர்களே! யாங்களீடேறும் பொருட்டு வேண்டிய வர

ங்களைப் பாலிக்கும்படி எழுந்தருளிய ஒப்பற்ற பரம்பொருட் சொரூபங்களே! ஐயோ! அடியேங்கள் ஏழைகள். நாங்களிருவரும் வரிசைப்படி உங்கட்கடைக்கலமானோம். ஆதலாற் பாதுகாக்கவேண்டும், எ - று. (கசு)

கண்ணகன்ஞாலமேத்துங்கந்தவேளென்னவந்த
வண்ணன்மீரபயமென்றனன்பனைக்கொலற்கயானோர்
பெண்ணெனவளியாலீகமங்கலப்பிச்சையென்றாள்
பண்ணமர்மொழியாள்சாலப்பங்கயவிழிநீர்சோர.

(இ-ள்.) இடமகன்ற உலகமெங்கும் துதிக்கின்ற முருகக்கடவுளைப்போன்றுவந்த தமையனமார்களே! அடைக்கலம்: என்னுடைய கணவனைக் கொலைபுரியவேண்டாம். நான் உங்களுடைய பெண்களுக்குள்ளே ஓர்பெண்ணாயெண்ணிக் காருணியத்தினால் மாங்கல்யப்பிச்சை கொடுக்கவேண்டும். என்று பிரார்த்தித்துக்கொண்டு, மீண்டும் பண்போன்ற ஓசையமைந்த வார்த்தைகளையுடைய அவ்வனங்கவல்லி தாமரைமலர்போலும் கண்களில் மிகவும் துக்கநீர் சொரியும்படி.,

என்னுடன்பிறந்தார்நீரேயானுமதிளையளென்றாள்
மன்னுமங்கலநாணற்றால்வசையுறும்துவேற்கியப்
பின்னுமுங்கடனுமென்றேபேதையாளிரக்கக்கண்டான்
றன்னைவந்தடைந்தோர்தம்மைக்காத்திடுஞ்சமரவீரன்.

(இ-ள்) நீங்கள் என்னுடன் பிறந்த தமையன்மாராகவும் நான் உங்கள் தங்கையாகவும் நான்சொன்னால், நிலைபெறுயுள்ள எனது மங்கலசூத்திரத்தை நான் இழப்பேனாயின் உங்களுக்குப் பழிப்பாகும். ஆதலால் மங்கலசூத்திரத்தை எனக்குக் கொடுத்தல் உங்கள் கடமையாகுமென்று அனங்கவல்லி பிரார்த்திப்பதை, தம்மையடைந்தோரைப் பாதுகாக்கும் காருணியமுடைய போரில்வல்ல வீரரென்பவர் நோக்கினர். (மேற்செய்யுளுமிதுவுங்குளகம்.) எ-று. (க௮)

பத்தியாற்கணவற்காக்கப்பணிந்தனளெனவிரங்கி
யுத்தமோத்தமனாம்வீரனோங்கியகரமேனிற்க
மற்றோரத்தந்தானீட்டிமங்கலப்பிச்சைதந்தோஞ்
சொற்றபன்மொழியாளெஞ்சந்துயறலையேழையென்றான்.

(இ - ள்.) பத்தியினாலே தனதுகொழுநனைக் காப்பதற்காக வணங்கினாளென்று இரக்கங்கொண்டு, உத்தமோத்தமராகிய வீரரென்பவர் முன்புதூக்கியகை மேலேயே நிற்கும்படிநிறுத்தி, மற்றோர் கையைநீட்டி மாங்கல்லியப்பிச்சை கொடுத்தோம். பெண்ணே! இனி முற்கூறிய பலவார்த்தைகளால் மனம்வருந்தாதே எனக்கூறினார். எ-று. (கக)

வெட்டவந்தடைவந்துற்றவிக்கலன்றனைப்பிடித்துக்
கட்டுகவனங்கூர்நந்தலைசக்காவலன்சமூகங்கொண்டு

விட்டிவன்றலையைக்காண்மினென்றவண்விளம்பிவந்த
திட்டமுற்றிடுவோமென்றுசெப்பலுமிளவலொத்தான்.

(இ - ள்.) இவனைவெட்டுதற்கும் ஓர்தடைவந்து சம்பவித்தது. ஆதலால் இவ்விக்கலனைப்பிடித்துக் கட்டக்கடவாய். அதன்பின் வளமைமிக்க தஞ்சைமா நகரத்திறைவனாகிய பராந்தகச்சோழனுடைய சமுகத்திற்கொண்டுபோய்விட்டு, இவன்றலையைப் பார்ப்பீராகவென்று அவ்விடத்திலே முன்பு கூறிவந்த சபதத்தைமுடிப்போமெனக் கூறுதலும்; இளையவராகிய நாராயணரும் அதற்கிசைந்தார். எ-று. (உ0)

மார்பகத்திருப்பவீரனாரணன்வலித்துக்கைகா
லேர்பெறவிட்டான்பூதவிலங்கினையிணங்கிப்போற்றிப்
பேர்பெறும்வல்லான்சொல்வான்பிராணனைத்தந்தீர்கொண்ட
சீர்பெறும்பெண்ணாலென்றுற்செப்பிடுமாற்றங்கேண்மோ.

(இ - ள்.) அப்போது விக்கலனுடைய மார்பின்மீது வீரரென்பவ ருட்கார்ந்திருப்ப, நாராயணரென்பவர் அவ்விக்கலனுடைய கைகளிரண்டையும் கால்களிரண்டையும் தனித்தனி சேர்த்து இழுத்து வலியமையும்படி பூதவிலங்குமாட்டினார். உலகெங்கும் பிரசித்தியுற்றிருந்த விக்கலன் மிகவும் நேசமுடையனாய்த்துதித்துக் கூறுகின்றான். நான் மனைவியாகக்கொண்ட சிறப்புற்ற அணங்கவல்லியால் என்பிராணனைப் பாலித்தீர்கள்,என்றுற் சொல்லப்படும் வார்த்தையையும் கேட்பீர்களாக. எ - று. (உக)

எவர்க்கும்வல்லான்யானேயெனக்கொருமாற்றானிந்தப்
பூவுலகத்தில்லென்னப்பொங்கினன்றருக்கிவாழ்ந்தேன்
றேவருங்காணவஞ்சுந்திறன்மிகுங்காளியாதி
காவலுங்கடந்துவந்தென்கால்கைக்குத்தளையுமிட்டீர்.

(இ - ள்.) எத்தகையோர்க்கும் வல்லமையுடையோன் நானே,எனக்கொருபகைவன் இந்நிலவுலகத்தில் இல்லையென்று களித்துக் கருவித்து வாழ்ந்திருந்தேன். தேவர்களும் பார்ப்பதற் கச்சமடையத்தக்க காளி துர்க்கை முதலியோர்களுடைய காவல்களையுந் தாண்டிக்கொண்டுவந்து,எனது கைகளுக்கும் கால்களுக்கும் விலங்கும் மாட்டினீர்கள். எ-று. (உஉ)

வீரசிங்கங்காளுங்கள்வென்றியினிளைத்தேன்மாய
நீரகந்தருவகான்குநினைத்தலுமெழுந்துசெல்லும்
வாரபுட்பகத்தேரொன்றுவைரவாடண்டிரண்டு
சூரடுங்கவசத்தோடுசூகரக்கொடியுமுள்ளேன்.

(இ - ள்.) வீரத்தன்மையான் மேம்பட்ட சிங்கம்போன்றவர்களே!இப்போது உங்கள்வெற்றியால் தோல்வியுற்றேன்.மாயத்தன்மையுடைய குதிரைகள்

நான்கும், நினைத்தமாத்திரத்திற் புறப்பட்டுப் போகத்தக்க தன்மையமைந்த புட்பகத்தேரொன்றும்,வைரவாள் வைரத்தண்டு ஆகிய இரண்டும்,அச்சத்தைப்போக்கத்தக்க வைரக்கவசத்துடனே பன்றிக்கொடியும் உடைத்தாயிருக்கின்றேன். எ-று. (உ௩)

மல்லல்கொளிவற்றைவிட்டான்மற்றிலையெனக்காதா ர
மில்லவளோடுங்கூடியென்புரநாடிக்கீழ்திக்
கெல்விமேற்றிக்குறுமுனேகுவேனுங்கள்பேரைச்
சொல்லியான்பிழைக்குமாறுதொல்லருட்பிச்சைதாரீர்.

(இ - ள்.) வலியமைந்துள்ள இவைகளைவிட்டுவிட்டால் எனக்காதாரமானவைகள் வேறேயில்லை. ஆதலால் இவைகளைப்பெற்றுக்கொண்டு என்னைவிட்டுவிட்டால், மனையவளுடனே சேர்ந்துகொண்டு எனதுதேசத்தைநோக்கிகிழக்குதித்துள்ள சூரியன் மேற்குறு முன்னமே செல்வேன். உங்கள் பெயர்களைச் சொல்லிக்கொண்டு நான் சீவனஞ்செய்திருக்கும்படி பழைமையான உங்களருட்பிச்சை தருவீர்களாக. எ - று. (உச)

மன்பதைக்கினியோர்துன்பஞ்செய்கலனும்பாலற்றே
யென்பதையுணர்மினிந்தவெழிற்படையாணைசொன்னே
னென்பெருங்கிளைஞர்நீவிரெனதுமைத்துனமார்நீவி
ரென்குலத்தெய்வநீவிரென்றிருகரங்குவித்தான்.

(இ - ள்.) உலகத்துள்ள மானிடர்களுக்கு இனியாதோர்துயரும் புரிவதில்லை. உங்களிடத்திலும் அவ்வாறேயென் றறிந்துகொள்வீர்களாக. இவ்வார்த்தைகளை என்னுடைய அழகமைந்த ஆயுதங்களின்மீதாணைவைத்துக்கூறினேன். எனது பெருஞ்சுற்றத்தினரும் நீங்களே: எனது மைத்துனமார்களும் நீங்களே: எனது குலதெய்வங்களும் நீங்களே: என்று துதித்து இருகைகளையுங்கூப்பி வணங்கினன். எ - று. (உரு)

சத்துருவாயெதிர்த்தாற்சத்துருவானதீரன்
மித்துருவாயடைந்தான்மித்துருவானவீர
னெத்திசையோருமெண்ணவிசையலாதில்லையென்னச்
சித்தமதிரக்கமாகித்திகைத்துநின்றிதனைச்சொல்வான்.

(இ - ள்.) பகைவர்கள் சத்துருவாகவேநின்று எதிர்த்துப் போர்புரியிற் சத்துருவாகவேயிருக்கும் தீரமுடையவரும்,அவர்களே நேசர்களாகச்சேர்ந்தால் நேசமாயிருப்பவருமான வீரரென்பவர் இதுகேட்டவுடன் மனமிரக்க முடையவராகி மயங்கியிருந்து,எவ்வுலகத்தினும் எத்திக்கினும் உள்ளவர்களாற்சிந்தித்தல் கீர்த்தியைத்தவிர வேறுபொருளில்லை யெனத்துணிந்து இவ்வாறு கூறுகின்றனர். எ - று. (உசு)

அவடனூற்கொல்லவுன்னையஞ்சினேந்தஞ்சைவாழுந்
தவளவெண்குடைமன்னற்குன்றலையறுத்தேகவெண்ணி
யிவளவுவந்தோமுன்றனினியவாதாரமோய்ந்து
துவளலாலுனையெவ்வாறுதுலேப்பதென்றுன்னிநின்றேம்.

(இ - ள்.) உன் மனைவியாகிய அனங்கவல்லியால் உன்னைக்கொல்வதற்கு அச்சமுற்றோம். ஆனால் தஞ்சைமாநகரத்தில் அரசுசெலுத்தி வாழ்ந்திருக்கும் வெண்கொற்றக்குடையையுடைய பராந்தகச்சோழனுக்கு உனதுதலையை வெட்டிக்கொண்டுபோய்க் கொடுப்பதற்காகவே இவ்வளவு பிரயாசத்துடனே வந்தோம் உன்னுடையமேன்மையமைந்த ஆதாரங்களொழிந்துவருந்தியதினால் உன்னை யெப்படி விடுவதென்று யோசித்திருக்கின்றோம். எ - று. (உஎ)

மன்னவன்முன்னமியாங்கண்மாற்றமென்கூறுமாறு
பன்னுகவென்னவீரர்பயந்துளநடுங்கிவல்லா
னென்னிருந்தலையேயென்னவியம்பியமாயைதன்னாற்
பொன்மணிமௌலிவாய்ந்தபொய்த்தலைதருவலென்றான்.

(இ - ள்.) ஆதலால் இப்போது பராந்தகச் சோழனுக் கெதிரிற்போய் நாங்கள் என்சொல்வது அதனைக்கூறுவாயாக வென்று வீரர்வினவலும், விக்கலன் அச்சமெய்தி மனம் நடுக்குற்று, என்னுடைய மாயாவல்லபத்தால் எனதுசிறந்த சிரசைப்போலவே பொன்னாற்செய்து இரத்தினங்கள்பதித்த கிரீடமணிந்த பொய்த்தலைதருகின்றேனென் றுரைத்தான். எ - று. (உஅ)

கொடியனிவ்வண்ணமோதக்குந்தவேற்குமரர்மங்கை
மடிதனையேற்றுணுமங்கலப்பிச்சைதந்தோம்
படியிசைவென்றியொன்றேபயனதுமுடிந்ததென்று
மடியவர்க்கெளியானலந்துறையிறையருளாலின்றே.

(இ - ள்.) கொடியனாகிய விக்கலன் இவ்வாறுரைக்க, அதுகேட்ட செங்குந்தமென்னும் கைவேற்றாங்கிய வீரர்களிருவரும் யோசிக்கின்றார்கள். இவனது மனைவியாகிய அனங்கவல்லியென்பவள் தனது முன்றானையைவிரித்து யாசித்தாள், நாமும் அவளுக்கப்போது மாங்கல்லியப்பிச்சை கொடுத்துவிட்டோம், உலகத்திலே சுத்தவீரர்களாயுள்ளோரடையத்தக்க பிரயோசனம் வெற்றியொன்றேயாகும், அத்தகைய வெற்றியானது எக்காலத்தினும் அடியார்க்கெளியராயிருந் தருள்புரியும் திருவாலந்துறையில் எழுந்தருளிய சிவபிரான் திருவருளால் இன்றே முடிந்தது, எ - று. (உகூ)

ஆதலாலிவனைவாட்டியடைவதென்விட்டாரென்னும்
பூதலத்திசையுண்டாகிபொலிதருஞ்சமரிற்றஞ்சுந்
தீதுளான்கோட்டையுள்ளசித்திரதிறனும்போதார்
பாதபத்திறனுங்கண்டுவருதுநாமெனப்படர்ந்தார்.

(இ - ள்.) ஆகையால் இவனைக்கொன்று வேறேகாமடையும் பயனென்னை? பகைவனைக்கூடக் கொல்லாமல்விட்டுவிட்ட காருணியமுடையவர்களென்னுங் கீர்த்தி விசேடித்து இந்நிலவுலகத்தில் விளக்கமுற்றிருக்கும், போர்க்குப் பய மடைகின்ற கொரேனுடைய கோட்டையிலுள்ள விசித்திரங்களையும் மலர்க ணிறைந்த விருக்ஷபேதங்களையும் நாம் பார்த்துவருவோமென்று சென்றார்கள்.

மேற்செய்யுளுமிதுவுங்குளகம். இவ்விரண்டாலும் அவ்வீரர்களுடைய வெற்றிப்பாடும் சீவகாருண்யமும் விளக்கியவாறறிக. இதனை, "வல்லான்றன் றிருத்தேவிமங்கிலியம்பிழையாமன்மடிதானேற்றிங் - கெல்லோருமங்கிலியப் பிச்சையிடுமெனத்தாள்வீழ்ந்திரப்பவேண்டிக் - கொல்லாமல்விடுதல்புகழெனக் கருதியோகற்பின்கொண்டவாய்மை - நல்லார்களிருந்தவையின்புகழ்கைக் கோகாத்ததுகொனஞ்செங்குந்தம்" எனவும், "எல்லாக்காலத்தினுமொன்றேற் பவருக்கில்லையெனுஞ் - சொல்லானதுகற்றுஞ்சொல்லறியாரேந்துகுந்தம் - வல் லானைக்கொல்லாமன்மனைவிக்குமாங்கிலிய - மூல்லாசத்துடனளிக்குமுதவி யதொன்றறிந்தேமால்." எனவும் வரும் ஈட்டியெழுபதின் திருவிருத்தங்களானு மறிக. (கூo)

வேறு.

அவ்வயிற்காவற்பூண்டவெம்படைக ளாரையும்விளித்தவர்க்கரசா
ந், தெவ்வயினிகழ்ந்தபடியெடுத்தோதிச்செயவலையார்த்தனரார்ப்ப
ப், பவ்வநின்றெழுந்ததிரைபொரவலைந்துபரவினர்வெருவினரவ
ரை,வெவ்வயிற்படையாரஞ்சலென்றுரைத்துவெற்றியங்கொடிநிறீஇ
ச்சொல்வார்.

(இ - ள்.) அவ்விடத்திலே காவலாயிருக்கும் கொடியசைனியங்களாகிய அனைவரையும் வரவழைத்து, அவர்கட்குத் தலைவனாகிய வல்லானுக்கும் தங் கட்கும் நடந்தசெய்தியை விரிவாகக்கூறிச் செயசங்கமுழக்கினார்கள். அவ்வாறு முழக்கியவளவில், கடலினின்றுந்தோன்றிய அலைகளைப்போன்று அலைந்து வந்துபணிந்துஅச்சமுற்றார்கள். அப்போதுபெருமைமிக்கவேற்படையையுடைய வீரர்கள் அவர்களை நோக்கிப் பயப்படாதீர்களென்றுகூறி, வெற்றிக்கொடியைத் தாபித்துச் சொல்லுகின்றார்கள். எ - று. (கூக)

துட்டனுக்கடங்கிமற்றவன்றன்னாற்சொல்லியபணியெலாம்புரிந்து
மட்டறுதுயரமடைந்திதுகாறுமனைமகார்தந்தைதாயுறவோர்
நட்டவர்பிறந்ததேயமுந்துறந்தநடலையுமிப்பகைக்கோளும்
விட்டதுவெருவன்மின்களென்றினிதாய்விளம்பினரன்னைநேரளியால்

(இ - ள்) தாய்போன்றதயையினால் அவர்களைநோக்கி, நீங்கள் இதுவ ரையில் கொரேனாகிய விக்கலனுக்கு அடங்கினவர்களாய் அவன்கட்டளையிடு கின்ற ஏவல்களையெல்லாம் செய்துகொண்டு அளவிறந்த துக்கமுற்று மனைவி மக்கள் மாதா பிதா உறவினர் நேசர் பிறந்தவூர் இவைமுதலியவற்றைப்பிரிந்தி ருந்ததுயரமும் இவ்விதமானபகைமைத்தன்மைவாய்ந்த கொள்கைகளும் இன்

றுடனே விட்டுப்போயின; இனி அச்சமுறவேண்டாமென்று இனிமையுடனே கூறினர். எ - று. (௩௨)

துயர்க்கடல்கடந்துசுகத்துறையடைந்தார்தூயவர்வரவெனும்புணையா
லயர்ப்பிலராகியிருந்தனரெவருமாளியேயனையமைத்தொழுது
கயற்கணெம்மரசியாலிதுவரைக்குங்காத்தனமுயிரெனவல்லான்
செயற்சொலிப்பின்னர்வரத்தவர்நடந்தார்தீயவன்வினையெலாங்காண.

(இ - ள்.) இவ்விருபுனிதராகியவீரரின் வரவென்கின்ற தெப்பத்தினால் துன்பவாரியைத் தாண்டிச் சுகமென்னும் கரையி லடைந்தவர்களாகிய யாவரும் சோர்வில்லாதவர்களாகியிருந்தார்கள். அவர்கள்பின்னும் சிங்கம்போன்ற அவ்வீரர்களைப்பணிந்து,கயல்போலும் கண்களைப்படைத்த எமது அரசியினால் மாத்திரமே இதுவரையில் உயிர்காத்திருந்தோம் என்றுகூறி வல்லானுடைய துர்ச்செய்கைகளைச்சொல்லிக்கொண்டே பின்னேவரும்படி, அவ்வல்லானுடைய கொரேச்செய்கைகள் அனைத்தையும் பார்ப்பதற்காக வரம்பெற்றுள்ள இவ்விருவீரர்களும் சென்றார்கள். எ - று. (௩௩)

தெங்கிளங்கமுகமரனணிகூந்தற்செழும்பனைதருவணிவாசக்
குங்குமவிருக்கவணிதிகழ்சாந்தங்கோங்கிலவலர்மரனணிபூப்
பொங்குமந்தாரம்பாதிரியாத்திபுன்னையந்தருவணிசாதி
மங்கலசுகந்தமல்லியாதிப்பூமலர்வனச்செயறனைக்கண்டார்.

(இ - ள்.) தென்னமரங்களும் இளங்கமுகமரங்களும் இருக்கும்வரிசையையும், செழுமையமைந்த கூந்தற்பனைவிருக்ஷவரிசையையும், மணமுள்ள குங்குமமரங்களின் வரிசையையும், சந்தனமரங்களும் மலர்கள் நிறைந்துள்ள கோங்கிலவ மரங்களுமிருக்கின்ற வரிசையையும், விசேடித்த மலர்கள் விகசித்துள்ள மந்தாரை பாதிரி ஆத்தி புன்னை என்னும் அழகிய மரங்கணிறைந்தவரிசையையும், மங்கலகரமான நறுமணங்கமழும் சாதிமல்லிகை முதலிய மலர்கணிறைந்த செடிகளின் வரிசையையும் அமைத்துள்ள நந்தனவனத்தின் சிறப்பைப் பார்த்தார்கள். எ - று. (௩௪)

காண்டகுவளங்கூர்கிளைதொறும்பனையின்காயெனத்தொங்குவவெதிர்த்த
வாண்டகையவர்தஞ்சிரமெனவந்தாரறைதருங்கொடுமையுங்கண்டா
ரீண்டிளங்கொடியினரிவையர்வாடவிருஞ்சிறைக்கொண்டுவன்படுத்த
நீண்டநன்மாடவணியிதுவென்னநின்றதனெழிலெலாங்கண்டார்.

(இ - ள்.) காணுதற்குரிய வளமை மிக்க அம்மரக்கிளைகளிலெல்லாம் பனங்காய்கள்போன்று தொங்குகின்றவைகள், எதிர்த்த அரசர்களுடையதலைகளென்று கூடவந்தவர்கள் கூறுகின்ற கொடுமையையும் பார்த்தார்கள். இவிட்த்திலே இளங்கொடிபோன்ற மாதர்கள் வாட்டமடையும்படி பெருஞ்சிறைகொண்டு அடைத்துவைத்திருக்கும் அலங்காரமுள்ள பெரியமாடங்களின் வரி

சை இதுவென்றுகூற, அவ்விடத்திலே சற்றுநின்று அம்மாடவரிசைகளின் அழகனைத்தையும் பார்த்தார்கள். எ - று. (௩௫)

பாலினுமினிதாய்த்தெளிந்தரவிந்தப்பனிதருகுமுதநற்குவளை
நீலவொண்மலர்களாதியவெல்லாந்தகுபொன்போன்மணிபெனநிறைந்து
மேலவச்சிரக்கற்படுத்தியநீரார்குளமெழிலேலவையுங்கண்டா
ரேலவார்கூந்தலவரொடுங்கிரீடையியற்றிடுந்தடநிலைகண்டார்.

(இ - ள்.) பாலினும் இனிமையான தெளிவுடைத்தாகி தாமரை குளிர்ச்சியுள்ள ஆம்பல் நல்ல நீலோற்பலம் என்னும் விசேடித்த விளக்கமுள்ள மலர்கள்முதலிய வனைத்தும், மேம்பாடமைந்த நவரத்தினங்கள்போன்று நிறைவுற்று, அழகமைந்த வயிரக்கற்படிகளமைத்துள்ள நீர்நிறைந்த குளங்களின் அலங்காரமனைத்தையும் பார்த்தார்கள். மணங்கமழும் நீண்ட கூந்தலையுடைய மகளிர்களுடனே ஜலக்கிரீடை செய்கின்ற தடாகத்தின் நிலைமையையும் பார்த்தார்கள். எ - று. (௩௬)

ஆடவர்மணிகடமணியத்திலகுமணிகலனிசைதருநிதியு
மேடவிழ்நறவமலரணியளகவிளையவரணிகலனிதியு
நாடவர்தம்பானித்தலும்பறித்தநவமணியிறையவர்பெயரா
ராடகநிதியும்வைப்பிடமாயவருபெருங்கூடமுங்கண்டார்.

(இ - ள்.) ஆண்மக்கள் அணியத்தக்கனவாய் இரத்தினங்களாலும் பொன்னாலும் விளங்குகின்ற ஆபரணங்களும் அத்துடன் அவர்களிடத்திருந்த திரவியமும், இதழ்களலர்ந்து தேனொழுகிக்கொண்டிருக்கும் மலர்களையணிந்துள்ள கூந்தலைப்படைத்த பெண்மக்களின் ஆபரணங்களும் திரவியமும், இவையன்றி பலநாட்டவர்களிடத்தினும் தினந்தோறும் அபகரித்தநவரத்தினங்களும், அவ்வவ்வரசர்கள் பெயர்பதிந்திருக்கும் பொன்னுபரணதிகளும் வைத்திருக்கும் இடமாகிய அருமையும் பெருமையும் அமைந்த பொக்கிஷசாலையையுப்பார்த்தார்கள். எ - று. (௩௭)

பத்தியாநிவந்தகொடிமணிமாடம்பாசிலைக்காவணவீதி
மத்தியிலொளிகாலிரணியச்சிகரமண்டபமதனடுவரசர்
யுத்தமேவென்றிமணமுதற்பலவாவோங்கிக்காசமேவரைந்த
சித்திரச்சாலையதனடுவிருந்தசியமாவணையெழிற்கண்டார்.

(இ - ள்.) வரிசையாக ஓங்கியிருக்கும் கொடிகள்நாட்டிய அழகியமாடங்களும், பச்சோலையாற் பந்தரிட்டுள்ள அம்மாடவீதிகளும், அவ்வீதிகளுக்கிடையில் ஒளிபரப்புகின்ற பொனனாலாகிய சிகரமுடைத்தான மண்டபமும், அம்மண்டபத்தினிடையில் அரசர்கள் ஒருவரோடொருவர் செய்கின்ற யுத்தமும் வெற்றியும் திருக்கல்யாணமும் முதலாகிய பலவிதமாகவிரிந்துள்ள சரித்திரங்கள் எழுதியிருக்கும் சித்திரசாலையும், அச்சாலையினிடையில் சமைத்திருந்த சிங்காதனத்தின் அழகும் பார்த்தார்கள். எ - று. (௩௮)

ஆகொடுமறமேயறமெனவியற்றுமற்பனுக்கித்துணை போக
மாகொடுங்கோலற்கொணர்கவென்றேவவந்தனனனங்கவல்லியென்மின்
பாகடு த்தின்பாற்கனிகலந்தபடியெனகன்பனையைய
வோகடுந்தண்டஞ்செய்வதையொழிகவெனவுரைத்தடிமலர்பணிந்தாள்

(இ - ள்.) ஆ ஆ! குரூரமான பாபத்தையே புண்ணியமாகப் புரிகின்ற அற்பனாகிய விக்கலனுக்கு இவ்வளவுவைபோகமா? கொடுங்கோலையுடைய விக்கலனைக் கொண்டுவரக்கடவீர்களென்று சிலரையேவ அவனும்வந்தான் அப்போது அவன்மனைவியாகிய அனங்கவல்லி யென்னும் மாதுசிரோன்மணி பதமாகக்காய்ச்சிய பாகிலே பாலு முக்கனிரசமும் கலந்ததுபோன் றினிக்கும்படி, எனதுதமயன்மாரே! என்பிராணநாதருக்குக் கடியதண்டனைசெய்வதை ஒழிப்பீராக என்றுகூறி அவர்களுடைய பாதமென்னுமலர்களிற்பணிந்தனள். எ-று.

முன்னரே தன்கணவனுக்கு உயிர்ப்பிச்சையும் அதனால் தனக்கு மாங்கிலியப்பிச்சையும் கொடுத்திருப்ப ஈண்டவள்வேண்டிக்கொண்டது யாது கருதியோவெனின், அவனதுகாறுஞ்செய்துள்ள கொடுஞ்செய்கைகளனைத்தையுநேரிலவர்கள் கண்டாராகலினும் அவ்வாறுகண்டமாத்திரத்தின் மீளாமல் அதிசினங்கொண்டவர்களாய் அங்கனமிருந்துகொண்டே யவனை வருவித்தன ராகலினும் அச்சுற்று, ஓர்கால் யாதேனுமோர் கடுந்தண்டனை விதிக்க நேருமென்னுங்கருத்தால்மீண்டும் வேண்டினளென்க. (௩௯)

தங்கையென்மொழியாற்பணிமொழிதன்னாற்சரணெனக்கரங்குவித்திடலாற்
சிங்கவேறனையார்கொண்டெழுந்துறுத்தசினந்தணிந்தம்மைநீர்வேட்ட
பொங்குமாநிதியும்பற்பலவகைத்தாம்பொருள்களுங்கொண்டெழுமென்ன
வங்கவராசைகெடவதுசுமக்குமளவெடுத்தெழுந்தனரன்றே.

(இ - ள்.) தங்கையென்றுரைத்த வார்த்தையினாலும், அன்புடனே குளிர்ந்து கூறிய வசனங்களாலும், உங்கட்கடைக்கலமென்று கைகளைக்கூப்பியபடியாலும், ஆண்சிங்கம்போன்றவர்கட்குத் தோன்றி விசேடித்துப்பெருகிய கோபந்தணிந்து: அம்மையே! நீங்கள்விரும்பிய விசேடித்த பெருந்திரவியங்களும் பலபலவகைகளாகிய வஸ்துக்களும் எடுத்துக்கொண்டு போவீர்களாகவென்றுரைக்க, அவ்விடத்திலே அவர்கள் ஆசைகெடும்படியாக, அவ்வாசை சுமக்கத்தக்கவளவு எடுத்துக்கொண்டு புறப்பட்டார்கள். எ - று. (௪௦)

விடக்குணக்கொடியவிரட்டனைப்பிணித்தவிலங்கினைத்தறித்தவன்மனையா
மடக்கொடியுடனேபுட்பகத்தேரில்வதிதரச்செய்தகலசழி
தொடக்கமுங்கடந்துவிட்டனர்விடலுந்தொல்லைநாளிருந்தவெம்பேய்கள்
வடக்கொழுங்கொம்பினின்றகல்வனபோல்வடத்திசைநோக்கியேநடந்தார்

(இ - ள்.) விடத்தையொத்த கொடூரகுணமுடைய இரட்டனுக்குப்பூட்டிய விலங்கைவெட்டி, அவன்மனைவியாகிய இளங்கொடிபோன்ற அனங்கவல்லி

யென்பவளோடு புட்பகத்தேரிலேறும்படிசெய்து, அகன்றுள்ள அகழியின்முத லுந்தாண்டிப் போகும்படி அனுப்பிவிட்டார்கள். அவ்வாறனுப்பினவுடனே வெகுகாலமாயிருந்த பேய்களெல்லாம் கொழுமையான ஆலவிருட்சத்தின் கிளையினின்றும் நீங்கியதுபோலத் தங்களிருப்பிடமாகிய வடதிசையைநோக்கிச்சென்றார்கள், எ - று.

எஃகுத்தம்பமே ஆலவிருக்ஷமாகவும் அதன்மீது அவன் அமைத்திருந்த கூடாரமே அதன்கிளைகளாகவும் அவனேபேயாகவும் உவமித்தமைகாண்க. (சுக)

பின்னருமந்தவீரர்கண்மீண்டுபேசியவாசனத்திருந்து
மன்னவரேனை மாந்தர்கள்படைகண்மாதராருடன்வருகென்னச்
சொன்னதையுணர்ந்தார்திரண்டனர்வந்தார்தூயவரோதுவர்சிறையீர்
பொன்னொடுதூசுமணிகலனுதிபொருளவாக்கெடவெடுத்தெழுவீர்.

(இ - ள்.) மீண்டும் அவ்வீரநாராயணரிருவரும் திரும்பி முன்சொல்லிய விக்கலனுடைய சிங்காதனத் தேறியிருந்து, அவனால் சிறைபட்டிருந்த அரசர்கள் மற்றைமனிதர்கள் சைனியங்கள் மகளிர்கள் என்னும் இவர்களைச் சிறையைவிட்டு உடனே வரக்கடவீர்களென்று கட்டளையிடுதலும் அக்கட்டளையையறிந்த அவர்களனைவரும் ஒருங்குகூடிவந்தார்கள். அப்போது பரிசுத்தர்களாகிய அவ்வீரர்கள் கூறுகின்றார்கள், ஒ சிறையிலிருந்தவர்களே! பொன் வஸ்திரம் இரத்தினம் ஆபரணம் இவைமுதலியவஸ்துக்களை உங்கள் ஆசைநிரம்பும்படி எடுத்துக்கொண்டு போவீர்களாக, எ - று. (சுஉ)

என்றலுந்தந்துணிவளவெடுத்தேயெழுந்தனர்சிற்சிலர்நெஞ்சங்
கன்றியசிறையின்விடிதலேபொருளின்கண்ணதென்றெழுந்தனர்சில்லோ
ரன்றவராரும்பேசியவிரதமணைதரவேரியுங்காளி
துன்றியகாவலெல்லையுங்கடந்துவிட்டனர்தொன்னகரணைய.

(இ - ள். என்று கூறினவளவில் சிலபேர்கள் தங்கள் தங்கள் சத்திக்கேற்றவரையில் எடுத்துக்கொண்டுபோனார்கள். சிலபேர்கள் மனம்வருந்தப்புரிந்த சிறைச்சாலையினின்றும் வெளிப்படுத்தியதே விசேடபொருள்களைத்தேடுதற் கிடமென்றுசென்றார்கள். இவ்வாறுசென்றவர்களனைவரும் முன்சொல்லிய புட்பகத்தேர்வருதலும் அதிலேறி அவ்வகழியையும் காளிமுதலியோர் நெருங்கியுள்ள காவல்களனைத்தையும் தாண்டித் தங்களுடைய புராதன நகரங்களையடையச் சென்றார்கள். எ - று.

முன் விக்கலனையும் அனங்கவல்லியையும் ஏற்றிக்கொண்டு சென்ற புட்பகத்தேரேமீண்டு இவர்களையும் ஏற்றிக்கொண்டு அகழியையும் காவல்களையும் கடத்திவிட்டதென்பார், "பேசியவிரதமணைதர." என்றார். (சுங)

இத்தகைச்சிறையுளாரையுமுயிருள்ளேனையசீவர்கடமையும்
புத்தமுதன்னார்தரையிடைவிடுத்துப்புட்பகவிரதமீங்கொண்டு

வித்தகமாயவாள்கதைகவசம்விண்ணெழூஉஞ்சூகரப்பதாகை
பொய்த்தலையாதியதனிடையிருத்திப்புரவிகளுன்கையும்பூட்டி.

(இ - ள்.) இவ்வண்ணமாகச் சிறையிலிருந்தவர்களையும் உயிருடனே சீவித்திருந்த மற்றைய சீவராசிகளையும் புதிய அமுதம் போன்ற இனிமையுடைய அவ்வீரர்களிருவரும் பூமியில் விட்டுவிட்டு, புட்பகத்தேரிலாரோகணித்து அற்புதமாகிய வச்சிரவாள் வச்சிரக்கதை வச்சிரக்கவசம் ஆகாயமளாவ ஓங்கியிருக்கும் பன்றிக்கொடி விக்கலன்கொடுத்த பொய்த்தலைமுதலியவற்றை அவ்விரதத்தி லிருக்கவைத்து மாயக்குதிரைகள் நான்கையும் அத்தேரிற்கட்டி, எ - று.

சிங்கங்கள் புலிகள் செந்நாய்கள் முதலியவைகளையெல்லாம் அவன் வைத்திருந்தமையின் அவைகளையும் காடுகட்குப்போகும்படி யனுப்பிவிட்டார்களென்பார், "உயிருள்ளேனையசீவர்கடமையும்." என்றும், அமுத மிறவாமற்செய்வதுபோன்றே இவர்களும் இத்தனைகோடி ஜீவர்களும் உயிரிருவண்ணம் புரிந்தாராகலின், "புத்தமுதன்ஞர்" என்றும், ஏனைய ஆயுதங்களைப்போலாது மாயவித்தைகள் வல்லனவாகலின், "வித்தகமாயவாள்கதைகவசம்." எனறும் கூறினர்

தீயவனிருந்தவரணமுமனையுந்தீதெனுங்கலைவிதியதனாற்
றீயிடனலனென்றத்தகுபுரத்தைச்சிவனெனத்தீயிடைப்படுத்து
மாயமாமனுவாற்றூண்டினரருணண்மரகதவாம்பரிதூண்டத்
தூயவெஞ்சோதிமேற்செலவாலந்துறையிடைவந்துசேர்ந்தனரால்.

(இ - ள்.) ஓர்கொடியவன் வசித்திருந்தகோட்டையும் வீடும் கொடியனவே என்று நூல்கள் கூறுகின்ற முறைமையினால், அவற்றை நெருப்புக்கிரையாக்குதலே நன்மையென்றெண்ணி அப்படிப்பட்ட நகரத்தைச் சிவபிரானைப்போன்று அக்கினிக்கிரையாக்கி, மாயமாகிய குதிரைகளை மந்திரத்தாற்றூண்டினார்கள். அப்போது அருணனாகிய பாகன் பசுநிறத்துடனேதாவிச்செல்லும்குதிரைகளைத் தூண்டுதலால் தூய்மையான பெருமையமைந்த சூரியன் மேற்றிசையிற்செல்ல இவ்வீரர்களிருவரும் திருவாலந்துறையென்னும் க்ஷேத்திரத்திற்குவந்துசேர்ந்தார்கள். எ - று.

சிவனெரித்ததும் புரமே இவர்களெரித்ததும் புரமேயாகலின், "புரத்தைச்சிவனெனத்தீயிடைப்படுத்து." என்றும், அந்திக்காலத்தில் ஆலந்துறைக்கு வந்தார்களென்றுணர்த்துவான், "அருணன்மரகதவாம்பரிதூண்டத் - தூயவெஞ்சோதிமேற்செலவாலந்துறையிடைவந்துசேர்ந்தனர்." என்றும் கூறினர். மேற்செய்யுளுமிதுவுங்குளகம். (சரு)

இன்னணம்வீரரிரட்டர்கோக்காவியீந்தவன்மனைக்குமாங்கிலிய
மன்னுறச்செய்தமாண்பையம்மரபோர்மணவினைப்பந்தருளின்று
முன்னியீராறுகலயத்துட்பொங்கன்முறையினாற்பூசித்துத்தாலி
மின்னுறுகூறைவைத்தெடுத்தணியும்விதிவழாதியற்றன்மேவுவரால்.

(இ - ள்.) இவ்வாறு அவ்வீரர்கள் இரட்டர்கட்கரசனாகிய விக்கலனுக்கு உயிர்கொடுத்து அவனுடையமனைவியாகிய அனங்கவல்லிக்குஅவளணிந்துள்ள மாங்கிலியத்தை நிலைபெறச்செய்த கீர்த்தியை அம்மாபோர் நாளதுகாறும் கருதி,கல்யாணப்பந்தரில் பன்னிரண்டுகலயங்களிற் பொங்கலிட்டுப்பூசிக்குமுறைமையினால் கல்யாணப்பெண்ணுக்குரிய தாலியையும் கூறையையும் வைத்தெடுத்து அவளுக்கணியும் விதியினின்றும் வழுவாது செய்துவருவார்கள் எ - று.

கற்புடையனங்கவலிக்குளமிரங்கிக்காமருங்கைப்படையுழவர்
தற்பெயருலகம்புகழ்செயக்களநாண்டந்ததுபுகன்றனம்புறவாற்
பொற்புறுதனுவாரூன்கொடைகொடுத்தபுனையிசைமநுகுலத்துதித்த
விற்பொலிகரத்தோயென்றுரைத்தனனல்வீரமொய்ம்பினனெனப்பிறந்தோன்.

(இ - ள்.) வீரவாகுதேவரே இவரென்றுரைக்கும்படி அவதரித்தவராகிய கவிச்சக்ரவர்த்தியார்,ஓர்புறாவுக்காக அழகுற்ற சரீரத்தமைந்த தசைகளைத் தானம்புரிந்த சிபிச்சக்ரவர்த்தியினுடைய புகழ்வாய்ந்த மனுகுலத்துற்பவித்த வில்லேந்தி விளங்கும் கரமுடைய குலோத்துங்கனே! கற்புத்தன்மையுள்ள அனங்கவல்லிக்காகத் திருவுள்ளமிரங்கி, பொலிவுற்ற செங்குந்தமேந்திய திருக்கரமுடைய வீரர்கள் தங்கள் பெயரை உலகத்தார் புகழும்படி அவள்கழுத்திலிருந்த மாங்கல்யத்தைத் தங்கள்பிச்சையாகவளித்த சரிதத்தைக்கூறினோம் எனத்திருவாய்மலர்ந்தனர். எ - று. (சஎ)

மாங்கல்லியப்பிச்சையிட்டசருக்கம் முற்றிற்று.
ஆகத்திருவிருத்தம். கூ0கூ

---

பதின்மூன்றாவது,

# மெய்த்தலைச்சருக்கம்.

---

பைத்தபாம்பரைவீக்கியபரமனுக்கன்ப
ருய்த்தபற்றலையாசனத்தொளிர்கவியரசே
மெய்த்தலைக்கதைவிரும்பினனென்றனன்பொன்னி
புத்தலைத்துறையிறையருட்கூத்தனுமொழிவான்.

(இ - ள்) படமுடையசர்பத்தைக் கச்சாக அரையிற்கட்டியுள்ள சிவபிரானுக்கடியவர்களாகியசெங்குந்தர்கள் அமைத்தஆயிரத்தெண்டலைகளமைந்த சிரச்சிங்காதனத்தில் விளங்கிய கவிச்சக்ரவர்த்தியே!இனிமெய்த்தலைச்சரிதத்தைக்கேட்க அவாவினேனென்று,முத்துக்களை அலைகளாற் கொழிக்கின்ற காவிரித்துறையையுடைய சோழநாட்டிற்கிறைவனாகியகுலோத்துங்கச்சோழன்கூறினன். அதுகேட்ட திருவருணிறைந்த ஒட்டக்கூத்தர் திருவாய்மலர்கின்றனர்.

தன்னகட்டனந்தரநலனுடைவளத்தஞ்சை
மன்னனன்னெறிமாறியவிரட்டனைவதைப்பான்
பன்னிரண்டினரேகலுந்தன்மனைபடர்ந்து
மின்னுமாமணியிழந்தமாசுணமெனமெலிந்தான்.

(இ - ள்,) தன்னிடத்திலே அளவற்ற வளப்பங்களையுடைய சிறந்த தஞ்சைமாநகரத் திறைவனாகிய பராந்தகச்சோழன், நல்லொழுக்கத்தில் வேறுபட்ட விக்கலனை யழிக்கும்பொருட்டுப் பன்னிரண்டு வீரர்களும் சென்றவளவில் தனது அரண்மனைக்கு வந்து, பிரகாசிக்கின்ற சிறந்த மாணிக்கத்தைப் போக்கிய சர்ப்பத்தைப்போன்று வருந்தினன். எ - று. (உ)

விடிதரூறுஞ்செனுளெண்ணிவிரும்பலொன்றின்றிப்
பொடியணிந்தருள்புனிதனையகத்திடைப்போற்றிக்
கடிகைதன்னையோருகமெனக்கழித்தைந்தாநாளெல்
சுடிகைசேர்பொழுதுற்றனன்சுடர்செய்மேன்மாடம்.

(இ - ள்.) பொழுது விடியும்போ தெல்லாம் சென்றநாட்களைக் கணக்கிட்டுக்கொண்டு யாதோர்விருப்பமு மில்லாமல், திருவெண்ணீறணிந் தடியார்க்கருள்புரியும் சிவபிரானை இதயத்தில் துதித்துக் கொண்டு, ஓர்நாழிகையை ஓர் யுகமாகப் போக்கி, ஐந்தாந்தினம் சூரியன் உச்சிக்கு வரும்பொழுது ஒளிமிக்க மேன்மாடத்திற் சென்றான். எ - று. (ங)

குணத்திசைக்கணுயிருந்தனன்குந்தவேற்குமரர்
கணத்தில்விக்கலனரணையெண்முரணைவெங்கனலிக்
குணக்கொடுத்தலும்பற்றினமுற்றினவுவன்றன்
மணத்தருக்குலஞ்சித்திரந்தீற்றியமாடம்

(இ - ள்.) மேன்மாடத்தேறிய சோழன் கிழக்குத்திக்காகப் பார்த்திருந்தனன். செங்குந்தமென்னும் வேலேந்திய வீரர்களிருவரும் ஓர் க்ஷணநேரத்திலே விக்கலனுடைய கோட்டையையும் யாவரும் மதிக்கத்தக்க அவனது பகைமையையும் கொடிய அக்கினிதேவனுக்கு ஆகாரமாகக் கொடுத்தமாத்திரத்தில், அவனுடைய மணமுள்ள விருக்ஷத்தொகுதிகளும் சித்திர மெழுதியிருந்த அரண்மனையும் முழுவதும் பற்றிக்கொண்டன. எ - று. (ச)

புல்லனித்தினமேகினன்புரமெரிமடுத்த
நல்லபாதபநண்ணுதுமெனச்சின்மிருகங்கள்
செல்லலுற்றனபறவையினீட்டமச்செறிகாப்
பல்லவம்பொரச்சிவந்தனசேர்ந்தனபவனம்

(இ - ள்.) அப்போது கொரேனுகிய விக்கலன் இத்தினத்திற்சென்றான், அவனுடைய நகரத்தினும் தீப்பற்றிக்கொண்டது, ஆதலால் நாம் வேறு நல்ல

காடுகளிற் சேர்வோமென்று சில மிருகங்கள் செல்லத்தொடங்கின. பறவைத் தொகுதிகளெல்லாம் அடர்ந்திருந்த சோலையிலிருந்த விருக்ஷங்களைப் போலவே சிவந்தனவாய்த் தேவலோகத் தடைந்தன. எ - று.

சிலமிருகங்கள் மாத்திரம் உயிர்தப்பிப் பிழைத்தனவென்றும் ஏனையமிருகங்களும் பறவைக்கூட்டங்களும் தீயான்மடிந்தனவென்றும் உணர்த்தியவாறறிக. புண்ணியர்களாகிய இவ்வீரர்கள் மூட்டிய தீயா லிறந்தமையின், "சேர்ந்தனபவனம்." என்றார். (ரு)

மாமகச்செயனின்றனமறம்புரிவலனு
னுமவித்தனைப்பெற்றிலம்வெம்பசிநலிவாற்
றீமையுற்றிடச்செய்பகைமுடித்துமென்றுடன்று
தூமமுற்றிமேலெழவெரிந்தோங்கினன்சூரன்.

(இ - ள்.) அக்கினிதேவனானவன் கொடுமை புரிகின்ற வல்லாளால் பெரிய யாகக்கிரியைகளின்றுவிட்டன, அதனால் நாம் அவிப்பாகம் பெற்றோமில்லை, கொடும்பசிப்பிணியால் வருத்தமுறச்செய்த பகையை முடிப்போமெனக் கோபித்து, புகை விசேடித்து ஆகாயத்தி லெழும்புப்படி எரிந்தோங்கினன். எ - று.

உலகத்தில் நடந்துவந்த யாகாதி கிருத்தியங்கள் வல்லாளாற் றடைப்பட்டன, அதனால் நமக் கவி கிடைக்கவில்லை, ஆதலால் பசிப்பிணியுற்று வருந்துகின்றோமல்லவா? என்று அக்கினிதேவன் வெகுகாலமாய்க் கொண்டிருந்த பகையை முடிப்பதற்காக விசேடித்த புகையோடும் எரிந்தோங்கினன், எனக் காரண வடுக்குகளைக் கற்பித்தமை காண்க. (சா)

நாற்புறத்தெரிமடுத்தொளிரரணுநல்லரண
மேற்புறத்தெழூஉம்புகைப்படலங்களுமிளிர்பொ
னேற்புறும்பலமணியளைஇயுருகிவீழ்பெருக்குந்
தோற்பின்மேருவுமெழிலியுஞ்சிந்துவுந்தாக்கும்.

(இ - ள்.) நாற்றிசைகளினும் அக்கினி பற்றிக்கொண் டெரிகின்ற கோட்டையும், சிறந்த அக்கோட்டையின் மேற்புறத்திலே யோங்குகின்ற புகைப்படலங்களும், விளக்கமுற்ற பொன்னுடனே பதித்துள்ள பல இரத்தினங்கள் உருகிவிழுகின்ற குழம்பின் பிரவாகமும், தோல்வியற்ற மேருவையும் மேகமண்டலத்தையும் நதிப்பெருக்கையும் ஒக்கும். எ - று.

எனவே தீவடிவாய்ச் சொலிக்கப்பட்டுள்ள கோட்டை பொன் வடிவாயுள்ள மேருவுக்கொப்பாகவும், அதன்மேலெழும் புகைப்படலங்கள் அதன் வடிவாயுள்ள மேகபடலத்துக் கொப்பாகவும், பொன்னாபரணங்கள் அவற்றிற் பதித்துள்ள மணிகளோ டுருகிவிழுங் குழம்பின் பிரவாகம் மலையருவிக்கொப்பாகவும் கற்பித்தமையை யூகித்துணர்க. (எ)

சாம்பராயினவிண்ணளவோங்குபற்றருக்க
டேம்பலாயினவயவரியாதிமாத்திரள்கள்
கூம்பலாயினவேறுகான்குறுகியேபுட்க
ளோம்பலாயினவொன்றையொன்றயலொரீஇப்படைகள்.

(இ - ள்.) ஆகாயமளவும் நீண்டிருக்கும் பலவிருக்ஷங்கள் சாம்பராய் விட்டன. வெற்றியுள்ள சிங்கம் முதலிய மிருகத்தொகுதிகள் வருத்தமுறலாயின. பறவைகள் வேறோர் காட்டையடைந்து கூடுவதாயின. சேனைகள் அயலிடங்களிலோடி ஒன்றையொன்று காக்குந்தகுதி யுடையவாயின. (அ)

சேடனுயிரஞ்செய்யநாக்கொடுகருவிடத்தோ
டாடிமேலெழுந்தாலெனவடர்புகையோடுங்
கூடியேநிவந்தோங்குதீச்சிகையெலாங்குழுமிக்
கேடிலான்கரத்தோங்குமாமடங்கலிற்கிளரும்.

(இ - ள்.) ஆதிசேடன் தனதாயிரநாக்களுடனும் கருநிறங்கொண்ட விடத்துடனும் படம்விரித்தாடி மேலே எழுந்ததுபோன்று, நெருங்கிய புகையுடனே கூடி மேலோங்குகின்ற அக்கினிக் கொழுந்தனைத்துங் கூடி, அழிவற்றவராகிய சிவபிரான் திருக்கரத்தில் விளங்கியிருக்கும் வடவா முகாக்கினியாகிய மழுவைப்போன்று சொலிக்கும். எ - று.

புகையை விடத்திற்கும் கொழுந்தை நாவுக்கும் உவமித்தமை காண்க.()

அகழிரண்டுளுமடர்ந்துவாழண்டசவினங்க
ணிகழனற்றிரணெருங்கலுநீர்கொதிப்பேறி
யிகழ்செயுந்தொழிலியற்றுபுன்மாக்கள்சூழ்ந்துண்ணத்
திகழ்கறிக்குநேராதலும்பேயினந்தின்ற.

(இ - ள்.) வெளியகழி உள்ளகழி என்னும் இரண்டகழிகளிலும் நெருக்கி வாழ்ந்துகொண்டிருந்த மச்சராசிகள், விளக்கமுற்ற நெருப்புத் தொகுதிகள் சமீபித்தவளவில் அவை வசித்துள்ள நீரில் உட்டிணமேறுதலால், இகழத்தக்க தொழில்புரியும் கீழ்மக்கள் சூழ்ந்து புசிக்கும்படி விளங்கும் கறிவகைகட்கொப்பானவுடனே பேய்க்கூட்டங்கள் புசித்தன. எ - று. (௧0)

இருக்கையுற்றபற்செடிகட்கும்விக்கலனிதயக்
கருக்குகைக்குளேயுதித்தவக்கடையனல்புறத்து
முருக்குவெஞ்சிகைவீசலான்மேற்கடல்வீழு
மருக்கன்மண்டலமொத்துவீழ்ந்ததுவனரணே.

(இ - ள்.) அப்போது பலவித கொரேங்கட்கும் இருப்பிடமா யிருந்த விக்கலனுடைய அந்தகாரமான இதயமென்னுங் குகைக்குள்ளே முன்னருதித்த அவ்வடவாக்கினி யானது புறத்தினும் விசேடித்துத் தனது கொதிப்புள்ள

கொழுந்து வீசுதலால், அவனுடைய கோட்டையானது மேற்சமுத்திரத்தில் முழுகும் சூரியமண்டலம் போன்று வெந்துவிழுந்தது. எ - று.

மேற்சமுத்திரத்தில் வீழும் சூரியன் செந்நிறமடைந்திருத்தலால், சிவந்து வெந்துவீழ்ந்த கோட்டைக் குவமையாக்கினமை காண்க. (கக)

நவமணிக்குலநக்குமாசமைத்தநல்லரணச்
சுவர்முதனதின்றுண்டம்வீழ்ந்திமைப்பதுவான
மிவர்தருங்கதிராதியகோள்களோடெண்ணி
னிவருடுத்திரள்குழீஇயகன்புவிவிழனேரும்.

(இ - ள்.) நவரத்தினத்தொகுதி பிரகாசிக்கும்படி யமைத்துள்ள சிறந்த கோட்டையின் சுவர் முதலியவற்றின் துண்டுகள் வீழ்ந்து பிரகாசிக்கின்றமை, ஆகாயத் துலாவிவருகின்ற சூரியன்முதலிய நவக்கிரகங்களுடனே உயர்வுடைய அளவிறந்த நட்சத்திரத் தொகுதிகள் கூடி இடமகன்ற நிலவுலகத்தில் விழுகின்றதற் கொப்பாகும். எ - று.

எனவே அவனுடைய கோட்டையின் சுவர்களிலெல்லாம் நவரத்தினங்கள் பதித்திருந்தமையின், அவை அக்கினியாற் றுண்டுகளாய் விழுந்து பிரகாசித்தல் நவக்கிரகங்களும் நட்சத்திரங்களும் ஆகாயத்தினின் றுதிர்ந்து பிரகாசிப்பதைப் போன்றன வென்றபடி. (கஉ)

அருத்தியோடழிவிலையெனுவிக்கலனமைத்த
திருத்தமாரரணிமைப்பினிற்றீக்குணவான
சரித்தல்செய்யுமுப்புரத்தினைக்கணத்துளேசார்ந்து
சிரித்தெரித்தவன்மகார்க்கிதுசெயலரிதேயோ.

(இ - ள். அன்புடனே நமக்கழிவில்லையென்று கருதி விக்கலன் ஏற்படுத்திய திருத்தங்கள் நிறைந்த கோட்டையானது இமையளவு நேரத்திற்குள்ளாக நெருப்புக் கிரையாயின. திரிந்துகொண்டிருந்த மூன்று கோட்டைகளையும் கிட்டி ஓர் க்ஷணநேரத்திற் குள்ளாகச் சிரித் தெரித்தவரான சிவபிரான் குமாரர்களாகிய இவ்வீரர்களுக்கு இச்செய்கை அருமையானதோ? எ - று.

திரிபுரமென்பது திரிகின்ற புரங்களென்றும் பொருளாதலை விளக்குவான், "சரித்தல்செய்யுமுப்புரம்." என்றார். (கங)

கண்டவேந்தெழீஇவிக்கலனரண்கனற்றாம
மண்டுகின்றதோவீரருமிரட்டனும்வரிவிற்
கொண்டமர்ச்செயுஞ்சரவனற்றாமமோகுறுகிச்
சண்டையாடிடத்தோங்குமண்டேளிகடானே.

(இ - ள்) இவ்வாறு புகைவதை மேன்மாடத் திருந்து பார்த்த பராந்தகச் சோழன் அங்குநின்றும் புறப்பட்டு, விக்கலனுடைய கோட்டைதான் அக்

கினி பற்றிக்கொண்டு புகை கிளம்புகின்றதோ? வீரர்களும் விக்கலனும் வரிந்துகட்டிய வில்லை வளைத்துக்கொண்டு போர்புரிகின்ற பாணங்களாற் கிளம்பும் அக்கினிப்புகையோ! இருதிறத்தரும் சேர்ந்து போர்புரியும் சமர்க்களத்திற் கிளம்புகின்ற மண் தூசுகளோ? எ - று. (கச)

இத்தகைச்செயனிகழ்தல்யாநம்பொருட்டெழுந்த
வுத்தமர்க்கவண்டுணைசெயாதுறைவிடமிருத்தல்
சத்தியத்ததோவன்றெனத்தன்னுளமதித்துச்
சித்தமொத்திமைப்போதினிற்கூட்டினன்சேனை.

(இ - ள்.) இவ்வாறான செய்கை நிகழ்வதற்குக் காரணம் யாது? நமக்காகப்புறப்பட்ட உத்தமர்களாகிய வீரர்கட்கு அவ்விடத்திலே உதவிபுரியாமல் நாமிருக்குமிடத்திலேயே யிருப்பது உண்மைத்தன்மை யாகுமோ? என்றுதனக்குள்ளே ஆலோசித்து மனமொருப்பட்டு, இமையளவு நேரத்திற்குள்ளாகச் சைனியங்களைச் சேர்த்தனன். எ - று. (கரு)

இடம்பராந்தபாரெத்தலத்தும்புகழாரூர்
விடங்கநாயகன்விரைமலர்த்தாளகத்துன்னி
மடங்கலேறனன்போர்புரிகோலமேவனைந்து
கடங்கலுழ்ந்திடுகரியின்மீதெழுந்தனன்களிப்பால்.

(இ - ள்.) இடமகன்ற உலகத்துள்ள எவ்விடங்களினும் புகழப்பட்ட திருவாரூரில் வீற்றிருந்தருளும் வீதிவிடங்கரென்னும் சிவபிரானுடைய மணங்கமழும் தாமரை மலர்போலும் திருவடிகளை இதயத்திற்றியானித்து, ஆண்சிங்கத்தை யொத்தவனாகிய பராந்தகச்சோழன் யுத்தகோலந் தரித்து, மதத்தைப் பொழிகின்ற பட்டத்து யானையின்மீது உவப்புடன் ஆரோகணித்தனன். எ-று.

விடங்கர் என்பது சுந்தரமுடையவரென்றும் உளியினாற் செதுக்கப்படாதவரென்றும் பொருளாவதாலும், திருவாரூரில் எழுந்தருளும் உற்சவமூர்த்தம் திருமாலினால் இந்திரனுக் களிக்கப்பட்டு இந்திரனால் வீரவாகுதேவர் முதலிய செங்குந்தவீரர்கட்குத் தரப்பட்டு செங்குந்தர்களால் முசுகுந்தச் சக்கரவர்த்திக்குக் கொடுக்கப்பட்டு அச்சக்கர வர்த்தியால் தாபிக்கப்பட்ட தாதலாலும், "ஆரூர் விடங்கநாயகன்." என்றார். இதனை - "விண்டுமோர்பத்திடையிருத்தி வேலைக்கெளரிபணிமாறப் - பண்டுபூசித்திடுங்காலையாகண்டலன்போய்ப்பாற்கடலின் - வண்டுழாய்மாயனைவணங்கிவானிற்பழிச்சுந்தியாகனைமேற் - கொண்டுபோந்துபாரின்முசுகுந்தற்குதவுஞ்செங்குந்தம்." என்னும் ஈட்டியெழுபதின் திருவிருத்தத்துரையானு முணர்க. இதன்விரிவைத் திருவாரூர் லீலையினுங் கண்டுதெளிக. டங்கர் - உளியினாற் செதுக்கப்பட்டவர். விடங்கர் - உளியினாற் செதுக்கப்படாதவர். எனவே தெய்வநியமனத்தாற் சுயம்பாயுள்ளதென்பது கருத்து. சிவலிங்க மூர்த்தங்களினும் அனேகம் சுயம்புமூர்த்தங்களுள்ளன. (கசு)

அனிகநால்வகையுள்ளன வணிபெறநின்ற
குணில்பெறுஞ்சமர்முரசொலியெழுந்தனகொல்லுந்
தனிகடும்புலிக்கொடி யசைந்தார்த்தனதரணி
யினிபிரட்டனுக்கிலைவலமெனச்சொலியிரைந்த

(இ - ள்) அப்போது நான்குவிதங்களா யுள்ளனவாகிய சைனியங்களும் வரிசைப்படநின்றன. குணில் என்னும் தறியையுடைய போர்முரசத்தின் சத்தம் முழங்கின. கொல்லத்தக்கதாய் ஒப்பற்ற கொடூரமமைத்த புலிவரைந்துள்ள கொடிகளசைந் தார்ப்பரித்தன. உலகமெங்கும் இனிமேல் வல்லானுக்கு வெற்றியில்லையென் றுரைத்துக் கோஷித்தன. எ - று.

குணில் - முரசடிக்குங் கோல்-குணில் எனற்பாலது எதுகைக் கிணங்கக் குனில் என்றாயது. (௧௭)

சென்னிமன்விரைக்கேகெனத்தானைகடெரிந்து
முன்னுமுன்னமேகாலினுங்கடுகினமொழிமான்
வன்னிகொள்கரனுள்ளவாலந்துறைமருங்கு
மன்னியுற்றனன்மதகரிநடாத்தியேவளவன்.

(இ - ள். பராந்தகச் சோழன் அதிவிரைவிற் செல்லுங்களென்று கட்டளையிட்ட வளவில், சைனியங்கள் அக்கட்டளையை யுணர்ந்து, நினைத்தற்கு முன்னமே அருமையான வாயுவேகத்தினும் வேகமாய்ச்சென்றன. யாவரும் துதிக்கின்ற மானையும் மழுவையும் தாங்கிய திருக்கரங்களை யுடைய சிவபிரான் நிலைபெறாய் வீற்றிருந்தருளும் திருவாலந்துறைக்குச் சமீபத்தில், மதம்பொழிகின்ற தனது பட்டத்து யானையைச் செலுத்திக்கொண்டு பராந்தகச்சோழன் சென்றனன். எ - று. (௧௮)

வரதனக்குநேர்முற்குறிப்புள்ளநன்மதிப்பாற்
கரதலாமலகம்மெனக்கண்ணுறக்கண்டான்
பரதநாடகமாடுநாற்பரிப்பிணிப்பகுப்பா
ரிரதமிதுளார்வீரநாராயணரென்ன.

(இ - ள்.) பரதநாடக மாடுகின்ற நான்கு குதிரைகளைப் பூட்டியுள்ள இரதத்தின்மீது ஆரோகணித்துத் தனக்கு நேராக அவ்வீரர்கள்வர, முன்னமே அவர்களைக் குறித்திருக்கின்ற நல்ல எண்ணத்தினால் இவர்களே வீரநாராயணர்களென்று உள்ளங்கை நெல்லிக்கனிபோல எதிரிலே பார்த்தனன். எ - று.

வீரலக்குமிமுகத்திருந்தொளிசெயமின்னு
நீரவாள்கரத்தொளிசெயப்புலிக்கொடிநிமிர
மாரவேளிருவோரெனவயங்கிநல்வாகைத்
தாரிலங்ககலத்தராயிருந்தனர்சதுரர்

(இ - ள்.) அப்போது அவ்வீரர்கள் வீரலட்சுமி முகத்திலே யிருந்து பிரகாசிக்கவும், ஒளிர்கின்ற தன்மையமைந்த வாட்படையானது திருக்கரத்தில் விளங்கிக்கொண் டிருக்கவும், வியாக்கிரத் துவசம் ஓங்கவும், இரண்டு மன்மதர்களென்று சொல்லும்படி விளங்கி நல்ல வெற்றிமாலை யணிந்த மார்பினராயிருந்தனர். எ - று. (உ0)

விலையிலாதமன்னவர்மணிமுடிபலவிளங்க
மலைவிலாதமாமணியினவகைபலவயங்கத்
தலைமையென்னெனுந்தனக்குவையிருந்ததேர்த்தட்டு
நிலையிலுள்ளனசொல்லளவின்றியேநிகழ்ந்த.

(இ - ள்.) அநேக அரசர்களுடைய விலையில்லாதனவாகிய இரத்தின கிரீடங்கள் பலவிளங்கவும், மாறுபாடில்லாத சிறந்த இரத்தின வகைகள் பல பிரகாசிக்கவும், என்னினும் முதன்மையுடையது எதுவென்று சொல்லத்தக்க திரவியக் குவியல்களிருந்த தேர்த்தட்டின் நிலையி லிருக்கின்றவைகள் யாவராலும் சொல்லுதற் களவுபடாமலே யிருந்தன. எ - று. (உக)

வெற்றிவீரர்கணடுவொருமுடிச்சிகைமிளிர
நெற்றிநீறொளிதரப்புருவங்கடாநெறியக்
கற்றையாமணிமீசைகடுடிப்பக்கண்சுழல
வுற்றபன்னெறநெறவெனச்சினக்குறியுரைப்ப.

(இ - ள்.) வெற்றியமைந்த அவ்விருவீரர்கட்கும் மத்தியில் ஒருசிரமானது குடுமிவிளங்கவும், நெற்றியில் திருவெண்ணீறு ஒளிரவும், புருவங்கள் நெறிப்பேறவும், கூட்டமாயிருக்கும் மீசைகள் துடிக்கவும், கண்கள் சுழலவும், வாயிற்பொருந்திய பற்களெல்லாம் நெறநெறவென் றொலித்துக் கோபக்குறிப்பைக் கூறிக்கொண்டிருக்கவும், எ - று. (உஉ)

வெட்டுகண்டகின்றுதிரநீர்துளிசெயவீர
பட்டமிக்கொளிபாய்தரவாதியபகருந்
திட்டமுற்றியசென்னியைக்கண்டுளதெல்லாம்
விட்டுணர்ந்தனன்விக்கலன்றலையெனவேந்தன்.

(இ - ள்.) வெட்டுண்ட கழுத்தினின்றும் உதிரமானது ஒழுகிக்கொண் டிருக்கவும், வீரபட்டம் மிக்க பிரகாசம்வீசவும், இதுமுதலாகிய மேற்கூறிய இலக்கணங்கள் நிறைந்துள்ள சிரசைப்பார்த்து; பராந்தகச்சோழன் அங்குள்ள மற்றையவற்றையெல்லாம் பாராமல் விட்டுவிட்டு இச்சிரம் விக்கலனுடையதேயென்று நினைத்தனன். எ - று.

மேற்செய்யுளு மிதுவுங் குளகம். (உங)

நீதிமுற்குணமுற்றியவீரமாகிதிமீ
ரோதநீரகத்துன்னதவரணிருந்தரசர்

காதுவெம்படைக்கஞ்சுறுவலியுளகதிப்பா
ரேதிலன்றலைவெட்டியதெவ்வணமென்றான்.

(இ - ள்.) நீதிமுதலிய குணங்கள்நிறைந்த வீரமென்னும் பெருஞ்செல்வமுடையவர்களே! கடல்போலும் ஏரியின்கணுள்ள அதியுன்னதமான கோட்டைக்குள் ளிருந்துகொண்டு, அரசர்கள் ஏவுகின்ற கொடிய ஆயுதவகைகளுக்கு மச்சமடையாத வல்லபமுள்ள மேன்மைவாய்ந்த நமதுபகைவனுகிய விக்கலனை, நீங்களெவ்வாறு வெட்டினீர்களென்று விஞவினன். எ - று. (உச)

நீபமாலிகாபரணவேணெஞ்சகத்திருத்திப்
பூபனுக்குமெய்த்தலைதரவீரர்பொன்றலையைக்
கோபமிக்குளகோளரியெனவெழுந்தார்த்து
மாபராந்தகாதேறெனவறுத்தெதிர்வைத்தார்.

(இ - ள்.) அப்போது அவ்வீரர்களிருவரும் கடப்பமலர்மாலையை ஆபரணமாகவணிந்து விளங்கும் குமாரக்கடவுளைத் தங்கள் இதயத்தி லிருக்கச்செய்து, அவ்வேந்தனுக்கு மெய்த்தலைகொடுக்க வெண்ணங்கொண்டவர்களாய், ஓ சிறந்த பராந்தகனே! நாங்கள் வெட்டினவிதத்தை யறிவாயாகவென்று கோபம் மேம்பட்ட சிங்கங்களைப்போலக் குதித்தார்ப்பரித்து, தங்கள் பொன்போலும் அழகிய தலைகளையறுத்து அவனெதிரே வைத்தார்கள். எ - று.

பராந்தகச்சோழன் இவ்விருவீரர்களின் வெற்றித்தன்மையைச் சாவதானமாகச் சாங்கோபாங்கத்துடன்கேளாமல் திடீரென்று அவ்வளவுவல்லபமுடையவனை எவ்வாறு வெட்டினீர்களென்றுமாத்திரங் கேட்டானே என்று கோபக்குறியைக் காட்டவும் தாங்கள் மெய்த்தலை கொடுப்போமென்ற சபதத்தை நிறைவேற்றவும் இவ்வாறு வெட்டிவைத்தார்களென்பார், "பூபனுக்குமெய்த்தலைதர" என்றும், "கோபமிக்குளகோளரியெனவெழுந்தார்த்து." என்றும் கூறினர். எ - று. (உரு)

வீரநாரணர்சிரந்தரையிருத்தலும்வியந்து
பாரழுந்தினமன்னவன்றேகமும்பாவை
நேரநின்றதுகண்ணிழிந்ததுமணிநீத்த
மாரழுங்கிடாரசரமுங்கம்பிதமான.

(இ - ள்.) வீரநாராயணர்களுடைய தலைகள் கீழே பொருந்தியவளவில் ஆச்சரியப்பட்டுப் பூமியும் கீழ் அழுந்திவிட்டது. அதுகண்ட பராந்தகச்சோழன் சரீரமும் பதுமைக்கொப்பாயிருந்தது. அவன் கண்களினின்றும் முத்துப்போலும் நீர்த்துளிகள் பெருகிற்று. அவ்வீரர்கள் தலைக ளறுபட்டதற்காக யார்தான் வருந்தார்கள்? அசரங்களும் நடுக்கமுற்றன. எ - று. (உசு)

தெய்வதப்புரவிக்கணீர்வார்ந்ததுதெளிந்தார்
மெய்மறந்தனர்கிளைஞர்முன்மித்திரர்யாரு

னையுநெஞ்சகராயினர்நாரியரகடு
னைதவரீஇக்கரம்பிசைந்தனர் தளர்ந்ததுதானை.

(இ-ள்.) தெய்வீகமுள்ள குதிரைகட்குக் கண்களில் நீரொழுகியது. சகல கலைகளு மறிந்தோர்களாகிய பெரியோர் தங்கள் சரீரத்தை மறந்தனர். அவ்வீரர் களோடு முன்னர் வந்துள்ள சுற்றத்தார் சினேகர் முதலிய யாவரும் வருந்திய சிந்தை யுடையவரானார்கள். மாதர்களாயினோர் தங்கள் வயிற்றைத்தடவிக் கர ங்களைப் பிசைந்தனர். சைனியங்கள் சித்தந்தளர்ந்தன. எ - று. (உஎ)

சோகமாகமண்டலம்படிந்திருந்தெழுஞ்சோழ
னுகமெங்கணும்வெயர்வுறக்கண்பனியரும்ப
வேகமாயெழும்பெரும்பழித்தொடர்பெனைவிட்டுப்
போகவென்செயப்படுவதின்றெனவிதுபுகலும்.

(இ-ள்.) அப்போது சோருதலுற்றவனாகப் பூமியில் வீழ்ந்திருந்தெழு ந்த பராந்தகச்சோழன், சரீர முழுவதும் வெயர்வரும்பவும் கண்களில் நீர்த்து ளிகள் துளிக்கவும் அதிவேகமாய் விளைந்த இப்பெரிய பழியின்சம்பவம் என் னைவிட்டுப் போவதற்காக இன்று யான்செய்யத்தக்க தென்னையோ வென்றெ ண்ணி இவ்வாறு கூறுகின்றனன் எ - று. (உஅ)

விக்கலன்றலையறுத்ததெவ்வணமெனவினவுந்
தக்கணத்திவர்தலைதரும்பழியெனைச்சார்ந்த
தெக்கணத்தளறெனைவினவுறுமதுதீர
விக்கணந்தலைதருவலென்றுடையின்வாளெடுத்தான்.

(இ-ள்.) விக்கலன் றலையைவெட்டிய தெவ்வாறென்று வினவிய தக்ஷ ணமே, இவ்வீரர்கள் தங்கள் தலையை யறுத்துக்கொண்ட பழி என்னைச்சேர்ந் தது. ஆதலால் தென்றிசைக்கணுள்ள யமலோகத்திருக்கும் நரகம் என்னை ஏன் வரவில்லையென்று கேட்கும். அந்நரகப்பிராப்தி எனக்கொழிவதற்காக, இந்த க்ஷணமே என்றலையைத் தருகின்றேனென்று உடைவாளையுருவிக் கரத்திற் றுங்கினான். எ - று.

தலைக்குத் தலைகொடுத்தாற் பழிக்குப் பழியாமாகலின் பாவம் நில்லாதெ ன்னும் கருத்தால் இவ்வாறு கூறினனென்க. (உகூ)

வீங்குபுற்புதங்கானனீர்வானரவிந்த
மாங்குறுஞ்சடந்தரிற்பெறும்பழியகன்றிடுமென்
றோங்கிவீசுவான்கைத்தலமுயர்த்தினனுலகந்
தேங்குசீர்த்திமன்மனுகுலப்பெருமையார்தெரிப்பார்.

(இ-ள்.) விசேடித்த நீர்க்குமிழி கானற்சலம் ஆகாயத்தாமரை என் னும் இவைகளைப்போன்று அழிவுற்றதாகிய இச்சரீரத்தைக்கொடுத்தால் நாம்

பெற்றுள்ள பழி நிவாரணமாகுமென்று, அவ்வுடைவாளினல் வெட்டிக் கொள்ளும்படி தனது கையைத்தூக்கினன். உலகமெங்கும் பரவியுள்ள கீர்த்தி யமைந்த அவ்வரசனுடைய மனுகுலப்பெருமையை யாவர்தான் கூறுவார் கள்? எ - று. (கூ௦)

ஆயவேலையோர்பேரொளிவிளைந்ததவ்வொளியிற்
றாயமாமயிலூர்ந்துசெஞ்சேவலந்துவச
மேயிலங்கிடவேலுடைமுருகவேள்விளங்கி
மாயிரும்புவிவந்துமன்னவன்கரம்பிடித்தான்.

(இ - ள்.) அத்தருணத்திலே ஓர்பெருஞ்சோதிதோன்றி, அச்சோதியிலே பரிசுத்தமான மயில்வாகனத்திலாரோகணித்துச் செந்நிறமமைந்த சேவற்றுவ சமும் விளங்கும்படி வேற்படையேந்திய முருகக்கடவுள் பிரசன்னமாகிப் பெரிய இந்நிலவுலகத்திற் கெழுந்தருளிப் பராந்தகச்சோழனுடைய திருக்கரத் தைப் பிடித்தருளினர். எ - று. (கூக)

அந்தரத்தருந்துந்துபியார்த்தனசுரர்பூச்
சிந்துகின்றமாமழைபுவிபோர்த்தனசேவை
முந்துநின்றமாதவரெலாந்தொழுதனர்மொழித
லெந்தரத்ததோதிருவுளப்பாங்கதனியல்பே.

(இ - ள்.) அப்போது ஆகாயத்திலே தேவதுந்துபிகள் கோஷித்தன. தேவர்கள் மலர்களையுதிர்க்கின்ற சிறந்த வருஷமானது உலகெங்கும் மூடின. முருகக்கடவுளினது தரிசனத்தை முற்பட்டுநின்ற பெருந்தவசிகளெல்லாம் பணிந்தார்கள். அம்முருகக்கடவுளுடைய திருவுளப்பாங்கின்றன்மையைக் கூறு தல் எனதுதன்மைக் கடுத்ததோ? எ - று. (கூஉ)

வேறு.

தஞ்சைவாழ்மன்னநின்னுற்றணந்துயிர்விட்டார்மீள்வ
ரஞ்சலையென்றனெங்களறுமுகப்பெருமான்வென்றி
விஞ்சுமெய்ச்சென்னிதந்தார்வீந்தவப்பதின்மர்வந்தார்
விஞ்சையாரருட்பாற்றேர்வாருண்டுகொல்வியனிலத்தே.

(இ - ள்.) ஓ தஞ்சைமாநகரத்தை அரசாண்டு வாழ்கின்ற மன்னவனே! உன்னுற் சரீரம் நீங்கி யுயிர்விட்டவர்கள் பிழைப்பார்கள், ஆதலால் நீ அச்ச முறாதேயென்று எங்கள் சண்முகக்கடவுள் திருவாய்மலர்ந்தனர். அவ்வாறே உடனே மேம்பாடான மெய்த்தலைகொடுத்த வீரர்களிருவரும், அதற்கு முன் னிறந்த வீரர்கள்பதின்மரும் உயிர்பெற்று வந்தார்கள். இவ்வுலகத்தில் ஞான முடையவர்களடைந்துள்ள திருவருட்டன்மையைத் தெளியவல்லவர்களுண் டோ? எ - று. (கூ௩)

அரசனனந்தவெள்ளத்தழுந்திமெய்யவசமாகிப்
பரசுபுநின்றான்செவ்வேள்பன்னிருவிழியினோக்கந்
தருதலாற்சகத்துதித்ததசத்திருதவத்தரன்னோன்
விரைசெறிகமலபாதம்வீழ்ந்திதுவாழ்த்துகின்றார்.

(இ - ள்.) பராந்தகச்சோழன் பேரானந்தப்பெருக்கில் மூழ்கிப் பரவசமடைந்து துதித்துக்கொண்டிருந்தனன். முருகக்கடவுளின் துவாதசநோக்கப் பார்வையளித்தலையின் உயிர்பெற் றுலகத்துத்தோன்றிய துவாதசவீரர்களாகிய அருளாளர்களும் அம்முருகக்கடவுளின் மணங்கமழும் தாமரைமலர்போலும் திருவடிகளிற்பணிந்து இவ்வாறு துதிக்கின்றார்கள். எ - று. (௬௪)

மருட்கிடனனவெய்யமனக்கிடங்கொடுத்துமாளாக்
கருக்கிடங்கொடுக்குமெம்மைக்காத்தருள்கந்தபோற்றி
யருட்கிடங்கொடுக்குமேலோர்க்கமலமாயழிவிலாத
பொருட்கிடங்கொடுக்குமெங்கள்பொறிமயிலூர்திபோற்றி.

(இ - ள்.) ஒ கந்தக்கடவுளே! மயக்கத்திற்கிடமான கொடிய மனத்திற்கிடங்கொடுத்து அதனால் ஒழியாதபிறவிக் கிடங்கொடுக்கின்ற எங்களைக் காத்தருள்க காத்தருள்க. காருணியத்திற் கிடங்கொடுக்கின்ற பெரியோர்கட்கு மலரகிதமானதும் அழிவற்றதுமாகிய பொருளுக் கிடங்கொடுக்கின்ற புள்ளிகளையுடைய மயில்வாகனக்கடவுளே எங்களைக் காத்தருள்க காத்தருள்க. எ-று. (௬௫)

வாசகத்தான்மனத்தாற்றனுவினன்மறையான்மற்றை
யீசர்களானுங்காணாவின்பவேற்குகனேபோற்றி
மாசகத்தாசையென்னும்வழக்கறுத்தப்பானின்ற
தேசகத்தினிக்கவந்தசேவலங்கொடியாய்போற்றி.

(இ - ள்.) வாக்கினாலும் மனத்தினாலும் காயத்தினாலும் வேதங்களாலும் ஏனைய கடவுளர்களாலும் காணப்படாத இன்பமயமான வேலேந்திய குமாரக்கடவுளே! எங்களைக் காத்தருள்க. பெரிய நிலவுலகத்தில் அவாவென்னும் வழக்கைநீக்கி அதற்கப்புறப்பட்டுநின்ற மெய்ஞ்ஞான நிலைமையிலே இனிமை தருதற்குத்தோன்றிய சேவற்றுவசனே! எங்களைக் காத்தருள்க. எ - று. (௬௬)

வித்தகக்குருவானூலான்விளங்கனுபவத்தான்மேலாஞ்
சுத்தநன்னனவால்வந்தசுப்பிரமணியேபோற்றி
சத்துவப்பொருளாய்வேறுஞ்சகசநாட்டவனேயெங்கள்
சத்தியத்திடையேவந்தசரவணப்வனேபோற்றி.

(இ - ள்.) ஞானசாரியராலும் சுருதிகளாலும் விளங்குகின்ற சுவானுபூதியினாலும் மேம்பாடுற்றுச் சிறந்த சுத்தத்தன்மையுடைய நனவினாலும் தோன்றுகின்ற சுப்பிரமணியக் கடவுளே! எங்களைக் காத்தருள்க. உண்மைப்பொருள்

களாகவும் உலகத்திற்கு வேறுபட்ட சத்துவ வுலகினராகவும் விளங்குபவரே! எங்களுடைய உண்மை நிலைமையிலுதித்த சரவணபவரே! எங்களைக் காத்தருள்க. எ - று. (ஙஎ)

மற்றிலார்க்கிரங்கிப்பெய்யுமாறிலாமழையேபோற்றி
குற்றமுங்குணமென்றாளுங்குழந்தைவேலவனேபோற்றி
யற்றமிங்கோர்ந்தித்தேகமாவியுங்கொடுக்கவென்றே
தெற்றெனமயின்மேல்வந்தசேவடிபோற்றிபோற்றி.

(இ - ள்.) வேறோர் ஆதரவில்லாதவர்கட்குத் திருவுள்ள மிரங்கிக் கருணைமழையைப் பொழிகின்ற மாறுபாடற்ற திருவருண்மேகமே! எங்களைக்காத்தருள்க. குற்றங்க ளனைத்தையும் குணமாகக்கொண்டு ஆண்டருளும் குழந்தைவேற் கடவுளே! எங்களைக் காத்தருள்க. இவ்விடத்திலே எங்களுக்கிருக்கும் சமயத்தை யுணர்த்து இச்சரீரத்தையும் உயிரையும் கொடுப்பதற்காகவே தெளிவாக மயில்வாகனத்தின்மீ தாரோகணித் தெழுந்தருளிய தேவரீர் திருவடிகள் எங்களைக் காத்தருள்க காத்தருள்க. எ - று. (ஙஅ)

இன்னணஞ்சாமிசீர்த்தியெடுத்தெடுத்தோதிவாழ்த்திப்
பொன்னணிமுடிகள்சாய்த்துப்புவியிடைப்படியவீழ்ந்தார்
மின்னெனக்கரந்தசோதிவிளக்கமாய்மறைந்தான்செவ்வே
ளங்நிலைதெளிந்தெழுந்தாரருட்செயல்வியந்தார்மாதோ.

(இ - ள்.) இவ்வாறு முருகக்கடவுளின் புகழை விரித்து விரித்துக் கூறித் துதித்து, பொன்னாலாகிய அழகிய திருமுடிகளைச் சாய்த்து நிலமுறப்பணிந்தார்கள். சோதிப்பிரகாசம் மின்னுப்போன்று மறைந்ததுபோல முருகக்கடவுள் மறைந்தருளினர். அத்தன்மையை யாவருங்கண்டு தெளிந்தவர்களாய்த் திருவருட்செயலை யதிசயித்தார்கள். எ - று. (ஙகூ)

பழுவைவாழ்வீரநாராயணர்புலிக்கொடியைப்பாரோர்
தொழுதெழவுயர்த்திவல்லான்சூகரக்கொடியைத்தாழ்த்தி
விழுமியநெறியாற்றங்கண்மெய்த்தலைகொடுத்தகாதை
வழியிதுவெனநங்கூத்தன்வளவனுக்குரைத்தான்மன்னோ.

(இ - ள்.) அப்போது திருப்பழுவூரில் வாழ்பவர்களாகிய வீரநாராயணர்களிருவரும் வியாக்கிரத் துவசத்தை நிலவுலகத்தார் பணிந்து வந்திக்கும்படி தூக்கி, வல்லானுடைய வராகத்துவசத்தை இறக்கி, மேன்மையான மார்க்கத்தால் தங்களுடைய மெய்த்தலையைக் கொடுத்த சரிதத்தின் மார்க்க மிதுவென்று நமது ஒட்டக்கூத்தர் குலோத்துங்கச் சோழனுக்குத் திருவாய் மலர்ந்தனர். எ - று. (சo)

மெய்த்தலைச் சருக்கம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம், சுசசு.

---

பதினான்காவது,

## மீட்சிச்சருக்கம்.

வென்றிவேலவர்மெய்த்தலை
யன்றளித்ததறிந்தன
னன்றுமீட்சிநவில்கெனத்
துன்றுகூத்தனுஞ்சொல்லுவான்.

(இ - ள்.) ஜெயம்பொருந்திய சுத்தப்படையேந்திய வீரர்கள் தங்கள் மெய்த்தலைகளைத் தந்த சரிதையை யுணர்ந்தேன். இனி அவர்கள் அவ்வாலந்துறையினின்றும் தஞ்சைமாநகரத்திற்குத் திரும்பிவந்த சரிதையைக் கூறுவீரென்று குலோத்துங்கச்சோழன் வினவலும், நல்லொழுக்கங்கள் நிறைந்துள்ள கவிச்சக்ரவர்த்தியாரும் திருவாய்மலர்கின்றனர். எ - று, (க)

சத்திவேலுடைச்சண்முகன்
பத்தியாலிகம்பாய்புகழ்
மெய்த்தவீரரும்வேந்தனுஞ்
சித்தமொத்திதுசெய்வரே.

(இ - ள்.) சத்திவேலேந்திய சண்முகக் கடவுளின் பத்திமையால் இந்நிலவுலகத்தில் உண்மையான புகழ்பரவப்பெற்ற துவாதசவீரர்களும் பராந்தகச்சோழனும் மனவொருப்பா டுடையவர்களாய், இவ்வா றியற்றலாயினர்.

அருட்சத்தியே வேலாகத் திருக்கரத்தி லேந்தினரென்பது நூற்றுணிபாகலின், "சத்திவேலுடைச் சண்முகன்." எனஅர். இதனை, "பூதம்புலன்பொறிகள்கரணங்குணம்பகுதிபுகலருகலாதிசுத்தம் - பொருவிலிருமாயையுங்காணவருமாணவப்பொங்கிருளுமூடுருவியே - பேதங்களைந்துயிர்ப்போதங்கலைந்துகலைபேசொணுநேர்மைவெளியாய்ப் - பேராயிரங்கோடிசூரியருமட்கப்பிறங்கியெழுஞானவெளியா - யேதங்கடந்துட்புறம்பாகியாவைக்குமின்பபரிபூரணமதா - யிலகருட்சத்தியேசத்தியாகக்கையிலெடுத்தஞானச்சேவகா - மாதங்கனங்கண்டும்மாரிபொழிபோரூரமாயூரகுகவருகவே - மலிபுவனமுழுவதுங்கிடுகிடெனநொடியில்வலம்வருகந்தவேள்வருகவே." என்னுஞ்சிதம்பரசுவாமிகள் திருவாக்கானுந்தெளிக. (உ)

தூயவாலந்துறையக
மாயவீசனடியிணைக்
கேய்பூசையியற்றியுண்
ணேயமோடுநினைத்துமே.

(இ - ள்.) தூய்மையான திருவாலந்துறையென்னும் க்ஷேத்திரத்தி லெழுந்தருளியிருக்கும் சிவபிரானுடைய இரண்டு திருவடிகட்குரிய பூசையைப் புரிந்து, உள்ளன்போடு தியானித்து, எ - று. (௩)

ஐயவெங்களையாண்டருள்
செய்யவானைத்திருமுகன்
கையன்வைத்திடுங்காப்பிடைப்
பையவாளப்பணித்தனே.

(இ - ள்.) ஐயனே! எங்களை அடிமைகொண்டு அருள்புரிவதற்காக செப்பமான அழகமைந்த யானைமுகக்கடவுளைக் கீழ்மகனாகிய விக்கலன் அமைத்துள்ள காவலிலே மெதுவாக ஆட்கொள்ளும்படி கட்டளையிட்டருளினீர். எ - று. (௪)

ஏகதந்தனிளவலை
யாகமோடுயிராறிய
தேகமிங்குயிர்சேர்தர
வேகமாகவிதித்தனே.

(இ - ள்.) ஏகதந்தராகிய விநாயகக்கடவுளின் சகோதரரான முருகக்கடவுளை சரீரத்தோ டுயிருந்துறந்தவர்கள் பன்னிருவரை அச்சரீரத்தோ டுயிரும் சேரும்படி செய்வதற்காக அதிவேகமாய் வரும்படி கட்டளையிட்டருளினீர். எ - று. (௫)

அண்டம்யாவுமகம்புற
முண்டுநீயெனவேயுறை
விண்டமாமறைமெய்ம்மையைக்
கண்டனமெமிடர்க்கணே.

(இ - ள்.) அண்டகோடிகளெவற்றினும் உள்ளீடாகவும் வெளியாகவும் தேவரீர் நிறைந்திருக்கின்றீரென்று சிறந்த வேதங்களுரைத்திருக்கும் உண்மையை எங்களுக்கு நேர்ந்த ஆபத்துக்காலத்தி லறிந்தோம். எ - று. (௬)

இன்னசைங்கீதியிற்பல
பன்னியோதிப்பணிந்தெழா
வின்னநீர்ங்கெதழிற்றஞ்சையை
யுன்னிப்போதலுரைத்துமே.

(இ - ள்.) இவ்வண்ணம் சிவபெருமான் சந்நிதானத்திற் பலவாகத் தோத்திரஞ்செய்து நிலமுறப் பணிந்தெழுந்து தங்கள் துயரங்கள் நிவாரணமாகப் பெற்று, அழகமைந்த தஞ்சைமாநகரத்திற்குப்போக எண்ணிச் செல்வதைக் கூறுகின்றோம். எ - று.

மேல் நான்குசெய்யுளுமிதுவுங் குளகம். (௭)

வேறு.

படம்பாயுஞ்சேடன்முடிபரிக்கும்வையம்புயம்பரிக்கும்பராந்தகன்வெங்
கடம்பாயுமாதங்கமீமீதறியிந்திரனேக்கடுப்பநின்றான்
விடம்பாயுங்கையயிலாரொருபத்துவென்றிபெறுவீரரெல்லா
நடம்பாயுங்கொய்யுளேய துரகதமாமீதரிமாநாணநின்றார்.

(இ - ள்.) படம்விரிகின்ற ஆயிரமுடிகளாலும் ஆதிசேடன் சுமக்கின்ற இந்நிலவுலகத்தைத் தனதுபுயங்களாற் சுமக்கின்ற பராந்தகச்சோழன் பெருகிய மதத்தைப்பொழிகின்ற பட்டத்து யானையின்மீ தாரோகணித்து இந்திரனையொத்து விளங்கினான். விடம்பூசியுள்ள செங்குந்தமென்னும் கைவேலுடையவர்களான வெற்றிபெற்ற தசவீரர்களும் கொய்தமயிரினையுடையனவாய் நாட்டியம்புரியத்தக்க குதிரைகளின்மீதேறி ஆண்சிங்கங்களும் வெட்கும்படி விளங்கினார்கள். எ - று. (அ)

வல்லானைவென்றுதிறைகொண்டுவந்தபுட்பகத்தேர்மாயப்பாய்மா
சொல்லானையைத்துதிசெய்வீரனொடுநாரணனுந்தூண்டிநின்றார்
பல்லானையணிநெடுந்தேரணிபுரவியணியணியாய்ப்படைகணின்ற
செல்லானேப்படியரசன்முன்னாலந்துறைநகரத்தெருவிலம்மா.

(இ - ள்.) வல்லானென்னும் விக்கலனைச் சயித்துப் பகுதிப்பொருளாகக் கொண்டுவந்த புட்பகத்தேரையும் மாயக்குதிரைகளையும் புகழ்பெற்ற இடபவாகனமுடைய சிவபிரானைத் துதிக்கின்றவர்களாகிய வீரநாராயணரென்னும் இருவரும் செலுத்திவிளங்கினார்கள். அப்போது செல்லும்படி கட்டளையிட்ட அரசனுக்கிணைப்படி ஆலந்துறையென்னும் நகரவீதிகளில் முற்பட்டு, பல யானைகளின்வரிசையும் நீண்ட இரதங்களின்வரிசையும் குதிரைகளின்வரிசையும் சைனியங்களின்வரிசையும் ஒன்றின்பின் ஒன்றாகநின்றன. எ - று.

இரதகஜதுரக பதாதிகளென்னும் நால்வகைச் சைனியங்களும் கூறியவாறு. (கூ)

வயமிகுவல்லானைவென்றகோளரிகள்வருகின்றவாய்மைகூறிச்
செயவரிவால்வளைமுரலவெண்ணிறந்தவியஞ்சலதிதிரைபரிஞர்ப்ப
நயவொலியானமங்கலவாத்தியமுழங்கப்பலசின்னநாதமோங்கப்
பயன்மலியும்புலிக்கொடியாதியகொடிகளசையெழிலிப்படலமான.

(இ - ள்.) வென்றிமிக்கிருந்த வல்லானென்பவனைச் சயித்த ஆண்சிங்கங்கள் வருகின்ற உண்மையைத் தெரிவித்து வரிகளையுடைய வெண்ணிறமமைந்த செயசங்கங்கள் முழங்கவும், அளவிறந்த வாத்தியங்கள் கடலலைபோல் ஆரவாரிக்கவும், இனிமையான ஓசையுடன் மங்கலவாத்தியங்கள் கோஷிக்கவும், பலவாறான சின்னங்களுடைய நாதங்கள் விசேடிக்கவும், பிரயோசனம் மிக்க புலிக்கொடிமுதலிய கொடிகள் ஆகாயத்திலுலாவும் மேகபடலங்களை நிகர்த்திருக்கவும், எ - று. (௧0)

படையெழுந்தவிப்பெரியவற்புதங்கண்காணவரும்பாரெழுந்தெள்
ளிடவிடமிலாதகன்றுதஞ்சைவளநகரண்மவிமைக்குமுத்தக்
குடைநிழலாவிரவடைந்தபுட்பகத்தேருள்ளமணிக்குவைகண்மின்னூற்
புடைபரந்தபகலடைந்தவீரர்கரவாளொளிமேற்பொங்கிநின்ற.

(இ - ள்.) சைனியங்கள் புறப்பட்டுவருகின்ற இவ்வருமையான அபூர்வத்தைக் கண்களாற் பார்ப்பதற்காக வருகின்ற உலகத்தார்கள் நிரம்பி எள்ளைப்போடுதற்கும் இடமில்லாமற்பரவி வளமிக்க தஞ்சைமாநகரத்தைச் சமீபித்தவளவில், விளங்கும் வெண்முத்தக்குடையின் நிழலா லிரவுவந்தது. புட்பகத்தேரிலிருக்கும் இரத்தினத்தொகுதிகளின் பிரகாசத்தால் எங்கும்பரவிய பகல்வந்தது. இவ்விரண்டிற்குமேல் அவ்வீரர்கள் கைவாளின் பிரகாசம் விசேடித்திருந்தது. எ - று.

மேற்செய்யுளு மிதுவுங் குளகம். (கக)

வென்றியுளாரரசனுடன்வரவுணர்ந்துதஞ்சைநகர்வீதிமுன்போன்
மன்றலெனக்குலையீன்றவிலைபசந்துதலைவிரிந்தவாழைநின்ற
துன்றுநறுந்தெங்கினிரைகமுகநிரைவந்துநின்றதோற்றம்பந்தர்ச்
சென்றிருந்துவனமொழிந்தேயிவ்விழாக்காணவந்ததேற்றம்போலும்.

(இ - ள்.) வெற்றிகொண்ட வீரர்கள் பராந்தகச் சோழனுடனே வருவதையறிந்து தஞ்சைமா நகரத்திலுள்ள வீதிகள் முன்போலவே கல்யாணமென்று சொல்லத்தக்கதாய், குலைகள் தள்ளினதாகவும் பச்சையிலைகளை யுடைத்தானதாகவும் தலைவிரிந்துள்ளதாகவு முள்ள வாழைமரங்கள் நின்றன. அவற்றோடு நெருங்கியுள்ள சிறந்த தென்னைமரங்களின் வரிசையும் கமுகமரங்களின் வரிசையும் அவ்விடத்தில் வந்துநின்றதோற்றமானது, நாம் அனைவரும் சோலையைவிட்டு நீங்கி அவ்வீதிகளிற் போட்டிருக்கும் பந்தர்களுக்குச் சென்றிருந்து இவர்கள் வருகின்ற திருவிழாவைக் காணவேண்டுமென்னும் தெளிவுடைமையை யொத்திருக்கும். எ - று. (கஉ)

பூரணகும்பங்களிருபுடைநின்றமுன்றிறொறும்பூந்தண்மாலைத்
தோரணங்களளவிறந்தசெந்தீபச்சாலமொடுந்தோன்றிநின்ற
தேரணவுநெடுவீதிகுளிர்ந்திருப்பத்தண்பனிநீர்தெளித்திருந்த
காரணத்தாலாடவர்க்குமங்கையர்க்குமங்கலநாட்களிவந்துற்ற.

(இ - ள்.) பூரணகும்பங்கள் அவ்வீதிகளின் இருபாரிசங்களினும் விளங்கிக்கொண்டிருந்தன. ஒவ்வோர் மாளிகைகளின் வாயிற்படிகளெல்லாம் குளிர்ச்சியுற்ற மலர்மாலைத் தோரணங்கள் அளவற்றனவாய் செம்மை நிறமுடைய தீபவரிசைகளோடும் விளங்கிக்கொண் டிருந்தன. இரதங்கள் நெருங்கியிருக்ம்கு நீண்ட அவ்வீதிகள் குளிர்ச்சியா யிருக்கும்பொருட்டுத் தண்ணிய பனிநீர் தெளித்திருந்த காரணத்தால், ஆண்மக்கட்கும் பெண்மக்கட்கும் மங்களம் பொருந்திய திருமணநாளில் விளையும் உவகையுண்டாயின. எ - று. (கங)

நகரடைந்துநெடுமாடவீதியுலாவரக்கண்டுஞாலமுள்ளார்
பகருவகையொடுசெய்தவுபசாரமறிந்தவகைபகரக்கேண்மோ
சிகரமணியிரதமுளவிருவீரரிடைப்பொலிவாய்த்திகழ்ந்தோன்ற
விகலிரட்டர்பதிதலையேயினிநமக்குத்துயரொழிந்ததென்றூர்சில்லோர்.

(இ - ள்.) தஞ்சைமா நகரத்தைச்சேர்ந்து நீண்டமாடவீதியிற் பவனிவருவதை அந்நகரத்துள்ளா ரனைவரும் பார்த்து, சொல்லத்தக்க களிப்புடனேயியற்றிய உபசாரங்களை யானறிந்துள்ளபடி கூறுகின்றேன் கேட்பீராக: அந்நகரவாசிகளுட் சிலர்-சிகரத்தோடு கூடிய அழகிய ரதத்திலிருக்கும் இரண்டு வீரர்கட்கு மத்தியில் விசேடவிளக்கத்துடன் காணப்படுவது, நம்மைப்பகைத்தவனாகிய விக்கலனென்னும் இரட்டர்குலத் தலைவனுடைய தலையேயாகும். ஆதலால் இனிமேல் நமக்குத் துன்பம் நிவாரண மாயிற்றென் றுரைத்தார்கள்.

விக்கலன்றன்றலையென்றூலரசனிடத்திருவீரர்வீசிவாளாற்
சிக்கெனமெய்த்தலைதரலென்பொய்த்தலையேயாகுமெனத்தேர்வர்சில்லோ
ரக்கொடியன்மாண்டிலனன்னான்றலையீதல்லவென்றாலனங்கவல்லி
பக்கமுடன்மங்கலநாணிரந்திருக்கவேண்டுமெனப்பகர்வர்சில்லோர்.

(இ - ள்,) இதுவிக்கலனுடைய தலை ஆகுமென்று சொன்னால், முன்பு நமதரசனுக்கெதிரில் இவ்விருவீரர்களும் வாளாயுதத்தால் வீசிக்கொண்டு உடனே தங்கள் மெய்த்தலையைக் கொடுப்பதேன்? ஆதலால் இது-பொய்த்தலையேயாகுமென்று சிலபேர் தெளிவார்கள். அத்தகைய கொடியவன் இறக்கவில்லை அவன் தலை இது வல்லவென்று சொன்னால், அனங்கவல்லி பட்சமுடனே மங்கலநாண்பிச்சை கேட்டிருக்கவேண்டுமென்று சிலர் கூறுகின்றார்கள். எ - று.

பச்சிரத்தங்கமழ்குந்தப்படையிலவன்வலமொழிந்துபணிந்திவர்க்கே
வச்சிரத்தம்பங்கதைவாள்கொடுத்திருக்கவேண்டுமெனமதிப்பர்சில்லோர்
கொச்சனுயிர்ப்பிச்சையிரந்தித்தீபகில்லாதுகோலமாறி
யச்சமிகுந்தோடியிருப்பானென்றூர்சிலர்பலருமாமென்றுரைத்தார்.

(இ - ள்.) பசுங்குருதியின் நாற்றம் வீசுகின்ற செங்குந்தம் என்னும் வேற்படையினால் அவ்விக்கலன் தனது வல்லபத்தையிழந்து, தனது வயிரக்கவசம் வயிரக்கதை வயிரவாள் என்னும் இவற்றைக் கொடுத்திருக்கவேண்டுமென்று சிலர்யூகிப்பார்கள். முழுமூடனாகிய அவன் இவர்களிடத்தில் பிராணபிட்சைதரும்படி யாசித்தவனாகி, இத்தீவிலேயே வசிக்காமல் தன்னுடைய உருவம் மாறுபடுத்திக்கொண்டு, விசேடித்த பயங்கரமுடையவனாய் ஓடிப்போயிருப்பானென்று சிலர்கூறினார்கள். அது கேட்டவுடனே அங்கிருந்த அனைவரும் இதுவே உண்மையாகுமென்று சம்மதித்தார்கள். எ - று. (௧௬)

வாகாயதவமிருந்துசோமநாதப்பெருமான்வரத்தில்வந்த
வாகாயகமனியிதுபூமியிடைக்கொட்கவருமசுவமீது

பாகாலின்வேகியிதுமீமனத்தின்வேகியிதுபாய்த்தேரீது
மாகாதகன்புவியின்மாண்டானென்றேசொல்லிமகிழ்ந்தார்சில்லோர்.

(இ - ள்.) பெருமந்தவரு தவத்தைப்புரிந்து அத்தவப்பயனாகச் சோம நாதப்பெருமானருளிய வரத்தினாற்கிடைத்த அந்தரமார்க்கக் குதிரையிது, நில வுலகத்திற் சுழன்றுவரத்தக்க குதிரையிது, உலகெங்கும் பரவியிருக்கின்ற காற்றின்வேகமுடைய குதிரை இது, அன்றியும் அதனினும் வேகமான மனோ வேகமுடைய குதிரையிது, ஆகாயத்திலே பாயத்தக்க இரதம் இது, ஆதலால் மிகக்கொடியவனாகிய விக்கலன் இவ்வுலகத்தில் ஒழிந்தானென்றுகூறிச் சிலர் மகிழ்ந்தார்கள். எ - று.

எனவே மாயக்குதிரைகள் நான்கில் ஒன்று அந்தரமார்க்கம் செல்லத்தக்க தும், ஒன்று பூமியிற்சுழன்றோடத்தக்கதும், ஒன்று வாயுவேகமுடையதும், ஒன்று மனோவேகமுடையதுமாமெனக் கூறியவாறு. (கஎ)

அந்தோவிப்புண்ணியரேநந்தமக்கோரன்னைநிகராகப்பூமி
வந்தாரெம்மனைமக்களொடுங்கூடியிதுகாறுமனதிலுள்ள
சந்தாபமறச்சுகமாய்நித்திரைகொள்வோமென்னத்தணிவர்சில்லோர்
முந்தோடிவீரரடிவீழ்ந்திறைஞ்சித்துதிகள்பலமொழிவர்சில்லோர்.

(இ - ள்.) ஐயோ! இப்புண்ணியர்கள்தான் நமக்கு ஒப்பற்ற தாய்போ லப் பூமியில் அவதரித்தார்கள், இதுவரையில் நம்முடைய மனதிற் குடிகொண் டிருந்த வெப்பங்களெல்லாம் நீங்கும்படி இனிநம்முடைய மனைவி மக்களு டன்சேர்ந்து சுகமாய் நித்திரைபுரிவோம், என்று சிலபேர் விஸ்ராந்தியடைவா ர்கள். சிலபேர் முற்பட்டு ஓடி அவ்வீரர்கள் திருவடிகளில் விழுந்து பணிந்து பல தோத்திரங்களைக் கூறுவார்கள் எ - று. (கஅ)

பன்னிரண்டுதலைகொடுத்தோர்தலைகொண்டுவந்தனர்காண்பாருமென்று
சொன்னமொழியான்மகிழ்ந்தார்சிலரவரைமறுத்தரசன்றுணிந்துநின்று
தன்னரியதலைகொடுப்பான்வாளெடுக்கச்சண்முகனார்தந்தபேற்றால்
முன்னிறந்தாரொடுமீண்டார்மன்னவனேமுதலென்றுமொழிவர்சில்லோர்.

(இ - ள்.) பன்னிரண்டு தலைகளைக் கொடுத்து ஓர்தலையைக் கொண்டு வந்தார்கள், அத்தலை இதோ இருக்கின்றது பாருவென்று கூறியவார்த்தை யாற் சிலபேர் களித்தார்கள். வேறுசிலர் அவ்வாறு கூறினவர்களைத் தடுத்து, இவ்வரசர் இப்பன்னிருவர்தலைக்காகத் தமதுதலையைக் கொடுக்கும் பொருட்டு வாளாயுதத்தைத் தூக்கினவளவில் சண்முகக்கடவு ளருளிய வரத்தினால் இவ்விருவரும் அதற்குமுன்னிறந்த பத்துவீரர்களுடனே பிழைத்தார்கள், ஆத லால் இம்மன்னவரே அப்பன்னிருவீரர்களினும் சிறந்தவரென்று சிலர் கூறு வார்கள். எ - று. (கக)

பண்ணாரும்மொழியனமாநடையயிலார்விழிவதனப்பதுமமின்னார்
கண்ணேறுபோக்குமொளிர்தீபங்கள்பலசுழற்றிக்கருதியெங்கள்
பெண்ணாரும்பாகவிவர்க்கருள்சுரந்ததன்றேமக்காம்பெற்றித்தென்ன
விண்ணோருமொழிவாழியதுகூறித்துயராறிவியந்துநின்றார்.

(இ - ள்.) பண்போலும் இனிய மொழிகளும் அன்னப்பறவை போலும் நடையும் வேல்போலும் கண்களும் தாமரை மலர்போலும் முகமும் உள்ளமகளிர்கள், அவர்கட்கு நேர்ந்த திருஷ்டி தோஷத்தைக் கழிப்பதற்காகப் பிரகாசிக்கின்ற தீபங்கள் பலவற்றைச்சுற்றி, சிவபிரானைத் தியானித்து, எங்கள் பார்வதி பாகரே! அக்காலத்தில் இவர்கட்குத் திருவருள் சுரந்தது எங்களுக் காகவேண்டிய தன்மை யுடையதென்று, தேவலோக மடையத்தக்க வார்த்தைகளால் ஆசிவசனங்களைச்சொல்லித் தூக்கம் நிவாரணமாகிக் களித்திருந்தார்கள். எ - று.

வேன்மாடுவலமேந்துவீரருடனணிசிறக்கவேந்தன்றஞ்சை
நான்மாடவீதியுலாவந்தெவருங்களிதூங்கநரைமடங்கல்
போன்மாடல்புரிசமரவீரருக்குத்தனித்தனிபொற்றவிசளித்து
மேன்மாடன்பகைதுறந்தான்சிங்கவணைமீதிருந்தான்விண்ணோர்வாழ்த்த.

(இ - ள்.) வலதுபக்கத்திலே வேற்படை யேந்தியுள்ள துவாதச வீரர்களுடனே பராந்தகச்சோழன் மிக்க மேம்பாடுமையும்படி தஞ்சைமாநகரின்கணுள்ள நான்கு மாடவீதிகளிலும் பவனிவந்து, அனைவரும் உவகைமேற்கொள்ளுமாறு வெண்ணிறமுள்ள சிங்கம்போலும் போர்புரிந்து வெற்றி யடையத்தக்க அவ்வீரர்கட்கு தனித்தனியாகப் பொன்னாலாகிய ஆசனங்கள் கொடுத்தபின், மூடரிற்றலைவனாகிய விக்கலனுடைய பகைமையை யொழித்தவனாகிய அப்பராந்தகச்சோழன் தேவர்கள் வாழ்த்தும்படியாகத் தனதுசிங்காதனத்தில் வீற்றிருந்தனன். எ - று. (உ௧)

நதிபாம்புகொன்றையணிபரனருள்சேயருள்பெற்றானவிலுந்தஞ்சை
மதிவேம்பநின்னுணர்வாலித்துணையபேறடைந்தேன்வயக்கைக்கொண்ட
வதிவீரனுடனுயவீரருக்கென்னாற்செயுமாறியாதுசொற்ற
நிதிநாடுதருவனென்றான்றன்னுயிரைக்கொடுத்தளித்தநீதிமன்னன்.

(இ - ள்.) கங்கையையும் சர்ப்பத்தையும் கொன்றைமலர் மாலையையும் தரித்துள்ள சிவபெருமானின்றருளிய புதல்வரான முருகக்கடவுளின் திருவருள்பெற்றவனும் வீரர்கட்காகத் தனதுயிரைக் கொடுக்க எத்தனித்துப் பாதுகாத்த நீதியையுடைய வேந்தனுமாகிய பராந்தகச்சோழன், யாவராலும் புகலப்படும் அறிவாளரான தஞ்சை வேம்பரே! உமது அறிவின் விசேடத்தால் இவ்வாறான மேம்பாட்டைப் பெற்றேன், வெற்றிபெற்றவர்களாகிய மேன்மைமிக்க வீரர் என்பவருடன் சேர்ந்துள்ள ஏனையவீரர்கட்கு என்னாற்செய்யத்தக்ககைம்மாறு என்னை? நீர்கூறியபடியே வேண்டிய திரவியங்களும் நாடும் கொடுக்கின்றேனென் றுரைத்தனன். எ - று. (உஉ)

மனுவாதிதொடக்கத்துமெட்டுணையுநெறிமாருவழியிற்ரேன்றுந்
தனுர்வேதகுலமன்னுநிற்பெரியபுனிதங்கூர்தருமத்தன்ரே
வினியாதவல்லானைவென்றுதிறைகொடுவந்ததிறையுநுந்த
மனமேதுசெயினதுவேதகுமென்ருன்வேம்பனகமகிழமாதோ.

(இ - ள்.) மனுமுறைகண்ட சோழர்முதலாக எவ்வளவும் நீதிதவருத மர பிலுதித்த தனுர்வேத முணர்ந்த நெறியுடைய வேந்தரே! தேவரீருடைய பெருமையமைந்த பரிசுத்தத்தின் மீக்கூர்ந்த புண்ணியத்தினு லல்லவோ யாவருக்கும் விரோதியாயிருந்த வல்லானென்பவனைச் சயித்துப் பகுதிகொண்டுவந்தது? ஆதலால் இறையளவாவது தேவரீர்மனம் சம்மதித்து எதுசெய்தாலும் அதுவே தகுதியானதென்று அரசன் மனங்களிக்கும்படி கூறினர். எ - று.

வல்லான் வேந்தனுக்கு நேரே பகைவனுகலின் அவனது புண்ணிய பலத்தினுலேயே வெற்றிகொண்டிருக்க வேண்டுமென்று குறிப்பித்தவாறறிக.(உங)

ஆருடையவணியகலவிறைகச்சித்தனியனுடனுயவொன்பான்
பேருடையசெங்குந்தமன்னவர்க்குச்செய்யுதவிபெரிதுமாற்றித்
தேரிடையேவைத்துவழிகொண்டினிதினெடுங்காதஞ்சென்றுமீண்டான்
சீருடையதத்தமதுநகரடைந்துவாழ்ந்தருளிற்றிகழ்ந்தார்மன்னே.

(இ - ள்) ஆத்திமாலையை யணிந்துள்ள அழகிய மார்பையுடைய பராந்தகச்சோழன், கச்சித்தனியர் என்பவருடன் சேர்ந்த கீர்த்திவாய்ந்த ஒன்பது செங்குந்தக்குல வேந்தர்கட்கும் விசேடமான உதவிகளனைத்தையும் புரிந்து, அவர்களை இரதத்தின்மீ தாரோகணிக்கச்செய்து புறப்பட்டு, இனிமையுடனே நெடுந்தூரஞ்சென்று திரும்பினன். அவ்வீரர்களொன்பதின்மரும் சிறப்புற்ற தங்கள் நகரத்திற்சேர்ந்து வாழ்ந்துகொண்டு திருவருளால் விளங்கியிருந்தார்கள். எ - று. (உச)

விருப்பமகங்கொண்டவையிலிருந்திறைவனிதுமொழிவான்விண்ணுர்சோலைத்
திருப்பழுவையூராள்வீரென்னுயிருக்குயிராகித்திகழ்வீர்பூமி
யொருக்குடையாண்முசுகுந்தவிறையாதிநங்குலப்பேருதவிபூண்டீர்
செருக்கிடையாவலமருள்வீர்நாவிலகாமரபுள்ளீர்செப்பக்கேண்மோ.

(இ - ள்.) அதன்பின் பராந்தகச்சோழன் சபையில்வீற்றிருந்து தன்மனத்தில் மிகவும் களிப்புடையவனுகி இவ்வாறு கூறுகின்றனன். ஆகாயமளாவிய சோலைகள் சூழ்ந்துள்ள திருப்பழுவூரை அரசாளும் வேந்தர்களே! எனதுயிர்க்குயிராய் விளங்குகின்றவர்களே! இந்நிலவுலகத்தை ஒற்றைக்குடைநீழலில் அரசாண்டுவந்த முசுகுந்தச்சக்கரவர்த்திமுதலிய எங்கள் குலத்தினர்க்குப் பேருபகாரம் புரிந்தவர்களே! இனி யுத்தமென்பது கிடையாதென்று சொல்லும்படி வெற்றியைக் கொடுப்பவர்களே! வார்த்தைமாருத செங்குந்தமரபினர்களே! அடியேன் சொல்வதைக் கேட்பீர்களாக. எ - று. (உரு)

உலகலைக்கும்பாவிவலங்கெடுத்திசையுங்கொண்டுதருமுதவிக்கென்னாற்
நிலமளவுமுன்னொன்றுநான்செய்துள்ளேனினியேதுசெய்யவல்லே
னிலையதனாலெம்மரசும்மரசாகுமிதுநியதியிறையுமுழுமை
விலகிலனாயுள்ளதுபேருதவியெனவீரமதிவேந்தன்சொற்றான்.

(இ - ள்.) உலகெங்கும் வருத்திக்கொண்டிருந்த பாவியின் வல்லபத்தை யழித்து கீர்த்தியையடைந்து அதனை எனக்குக்கொடுத்த உபகாரத்திற்கென்று எள்ளளவாவது பிரதியுபகாரம் முன்பு நான் என்னசெய்திருக்கின்றேன்? இனி மேல்தான் நான் என்னசெய்ய வல்லபமுடையேன்? ஒன்றுமில்லை. ஆகையினால் எங்களுடைய அரசாட்சி முழுமையுமே உங்களுடைய அரசாட்சியாகும். இது தான் உண்மை. இறைப்பொழுதேனும் உம்மைவிட்டுப் பிரியாதிருப்பதுவே எனக்குப் பெரிய உபகாரமாகுமென்று வீரத்தன்மையும் அறிவின் மேம்பாடு முடைய பராந்தகச்சோழன் கூறினன். எ - று. (உசு)

கேட்டரையனன்புரையாற்களிவந்துவீரரெங்கள்கீர்த்திமன்னா
வீட்டறத்திலித்துணைநாளின்றொழித்தோந்துறவறமேவிழுமிதென்ன
வேட்டனமாற்சிற்சபையானந்தநடம்புரிகின்றவிமலன்பாத
நாட்டமதிற்செல்கின்றோமெமைவிடுகையுதவியலானவிலவின்றே.

(இ - ள்.) வீரநாராயணர் இவ்வார்த்தையைக்கேட்டு, பராந்தகச்சோழனுடைய அன்புள்ள வார்த்தைகட்காகக் களிகூர்ந்து, கீர்த்தியடைந்துள்ள எங்கள் வேந்தரே! இவ்வளவு காலமும் இல்லறத்தினின்று கழித்துவிட்டோம், இனித் துறவறமடைதலே மேன்மையென்று விரும்பினோம், அதனால் சிதம்பரக்ஷேத்திரத்திலே சிதாகாயவெளியாகிய சபையின்கண் ஆனந்தத்தாண்டவமாடுகின்ற நடராஜப்பெருமானுடைய திருவடித்தியானத்தில் மனதைச் செலுத்துகின்றோம், ஆதலால் எங்களைவிட்டுவிடுதலே பேருதவியல்லது வேறு கூறுவது உதவியாகாது எனக் கூறினார்கள். எ - று. (உஎ)

சிற்சுகவானந்தநிலைகண்டுணர்ந்தீரினியுங்கடிருவுளத்தா
நற்சுகத்திற்கிடையூறுசெய்கலனென்றேமகிபனவிலக்கேளா
முற்சகவாசனையதனாலரசவையிற்பணிந்தெழுந்தார்முடிகொண்மன்ன
னுற்சவமீதெனவியற்றிப்பலருடனுஞ்சிலவெல்லைவந்துதவிமீண்டான்.

(இ - ள்.) அதுகேட்ட அரசன் - ஓ ஞானசுகானந்த நிலைமையைக்கண்டுதெளிந்தவர்களே! இனிமேல் உங்களுடைய திருவுள்ளத்திற்றோன்றிய நல்ல சுகத்திற்குத் தடைசெய்யேனென் றுரைத்தான். அதைக்கேட்ட வீரநாராயணர் முன்னைய உலகவாசனைப் பழக்கத்தினால் அவ்விராஜசபையில் நமஸ்கரித்தெழுந்தார்கள். அப்போது அரசன் இஃதோர் திருவிழாவென்று யாவரும் கூறும்படி அநேக வைபவங்களைச்செய்து, அச்சபையிலுள்ள பெருங்கூட்டத்துடனே அவர்களைப் பின்தொடர்ந்து சிலதூரம்வந்து வழிவிட்டுத் திரும்பினான்.

பவக்கோலங்கொடுத்தவினையொப்பாகமலங்கள்பரிபாகமாக
நவக்கோலங்கொடுத்தவிடயானந்தவிழிகள்பரநாட்டமாகத்
தவக்கோலங்கொண்டுசிவதலமூழன்றுசிதம்பரமாந்தலத்தைமேவிச்
சிவக்கோலமென்னவருணிலைநின்றார்சீவன்முத்தத்திசையினம்மா.

(இ - ள்.) இப்பால் வீரநாராயண ரிருவரும் பிறவிக்குரிய வடிவத்தைக் கொடுத்ததாகிய இருவினைகளும் சமமாகவும், மும்மலங்களும் பரிபாகமாகவும், விஷயானந்தத்திலே நூதனமான வடிவங்களைப் பார்த்திருந்த நேத்திரங்கள் பரம்பொருளிலே நாட்டமுடையன வாகவும், தவசிகட்குரிய வேடந்தரித்துக் கொண்டு, சிவக்ஷேத்திர யாத்திரைசெய்து, கடைசியாகச் சிதம்பரமென்னும் க்ஷேத்திரத்தை யடைந்து, சீவன்முத்தத் திசையைப் பெற்று எங்குஞ் சிவசொரூபமாகவே பார்த்துத் திருவருணிலைமையில் நின்றார்கள். எ - று. (உகூ)

சின்னாளித்திசையுழன்றுதூலமுங்காவங்கழலச்சீவன்முத்த
ரென்னுமமுங்கழலச்சச்சிதானந்தவடிவிருந்தவண்ணம்
பொன்னாகித்தைச்சோதிநன்னாளிற்சுத்தபரிபுரணமானார்
தென்னாடும்பன்னாடுஞ்சுகிக்கவருந்திருப்பழூர்தீரவீரர்.

(இ - ள்.) சிலகாலம் வரையில் இவ்வண்ணம் சீவன்முத்தத் திசையிலிருந்து, காலக்கிரமப்படி தூலசரீரம் நீங்கிப்போகச் சீவன் முத்தர்கள் என்னும் பெயருமறையும்படி சத்துச்சித்தானந்த சொரூபமானது இருந்தவாறே பொன் போல்விளங்கி, தென்னாட்டினும் ஏனையபல நாடுகளினும் உள்ளாரனைவரும் சுகமடையும்படி அவதரித்தவர்களாகிய திருப்பழூர் என்னும் நகரத்தை யரசாண்டிருந்த தீரவீரர்கள் இருவரும் தைமாசம் சுவாதிநட்சத்திரத்திற் பரிபூரணமானார்கள். எ - று. (கூ0)

அத்தவர்பானிழனேரதாயபராந்தகச்சோழவரசனந்த
சுத்தமிகுஞ்சடமடங்குமிடத்தின்றுஞ்சினகரங்கடலங்கவாற்றிப்
பத்தியொடுஞ்செய்வனசெய்தொருநகரமருகியற்றிப்பாரோரேத்த
நித்தியவாராதனங்களெந்நாளுமோங்கிவாநியமித்தானே.

(இ - ள்.) அவ்வீரர்களின் சரீரத்திநுடைய நிழலுக்கொப்பாகிய பராந்தகச்சோழனென்னும் வேந்தன், அந்த பரிசுத்தமான சரீரங்களொடுங்கிய விடங்களில் ஆலயங்களை இன்றைக்கும் விளங்கும்படி கட்டி, பத்தியுடனே செய்ய வேண்டியவைகளைச் செய்து, அதற்குச் சமீபத்தில் ஒருநகரமும் ஏற்படுத்தி, உலகிலுள்ளோர் துதிக்கும்படி நித்தியவாராதனைகள் எக்காலத்தினும் மேம்பாடுடன் நிறைவேறும்படி ஏற்பாடுகள் செய்தனன். எ - று (கூக)

மயிலாலும்பொழிற்றஞ்சையரியணையினெடுங்காலமதியின்மிக்க
வயிலாலுங்கரதலத்தவலவேம்பனுடனவனியாண்டிருந்தான்

றுயிலாலவனமரையிலளிபாடுமுறந்தைகுலோத்துங்கவீரர்
செயலாலு திருவுளத்தின்செயலாலுநிகழ்ந்ததிந்தத்தெய்வக்காதை.

(இ - ள்.) அதன்பின் பராந்தகச்சோழன் மயில்கள் அசைகின்ற சோலைகள் சூழ்ந்த தஞ்சைமாநகரத்தில் சிங்காதனத்தின்மீது வீற்றிருந்து, அறிவின் மேம்பட்ட செங்குந்தமென்னும் கைவேலேந்திய திருக்கரமுடைய வல்லபம் அமைந்த தஞ்சை வேம்பரென்பவருடனே வெகுகாலம் உலகத்தை யரசாண்டிருந்தனன். அழகிய தாமரைமலரில் அன்னப்பறவைகள் நித்திரை செய்யும்படி வண்டுகள் கீதமிசைக்கின்ற உறையூரில் அரசாண்டிருக்குங் குலோத்துங்கனே! அத்துவாதச வீரர்களின் அற்புதச் செய்கைகளினாலும் சிவபிரான் திருவுளத்தின்கிர்த்தியத்தினாலும் இத்தெய்வீகசரிதை நிறைவேறிற்று. எ - று. (௯உ)

தேரேறியுலகலைக்கும்வல்லாளனைவென்றரணந்தீய்த்தபின்னர்
பேரேரியினும்வீரநாராயணப்பெயராற்பிறங்குமிக்க
சீரேறுமிவரடைந்தகோயினகருக்கந்தத்திருப்பேரெய்தும்
வாரேறுங்குயவிமலையொருபாகனருளுண்டேல்வாராதென்னே.

(இ - ள்.) ஓர் மாயத்தேரின்மீ தேறிக்கொண்டு உலகத்தை வருத்திக்கொண்டிருந்த வல்லாளனென்னும் விக்கலனைச்சயித்து அவனது கோட்டையை அக்கினிக் கிரையாக்கிய பின்னர், அக்கோட்டை கட்டப்பட்டிருந்த பெரிய ஏரியானது இன்றைக்கும் வீரநாராயணரேரி என்னும்பெயரால் விளங்கிக்கொண்டிருக்கும். மிகுந்த சிறப்புற்ற இவ்வீரர்கள் ஒடுக்கமான ஆலயத்திற்கும் நகரத்திற்கும் அப்பெயரே விளங்கும். கச்சணிந்த தனங்களையுடைய பார்வதியாரை இடப்பாகத்துடைய சிவபிரான் திருவருளுண்டாகில் கிடைக்காத தென்னிருக்கின்றது? எ - று.

அக்கால் "வீரநாராயணரேரி" என வழங்கியது இக்கால் "வீராணத்தேரி" என வழங்கலாயது. (௯௩)

என்றுதலையணையிருந்தோனிரண்டொருபான்வயவீரரிசையையன்னோர்
பொன்றலிலாமரபிசையேழ்பதுகவியாலீட்டிமுகம்புகழப்பாடி
யொன்றவுடலாயிரத்தெணறுசிரங்கண்மற்றொன்றையுரைத்தஞான்று
நன்றிதெனக்குலோத்துங்கநரபதிகேட்டுளமகிழநவின்றான்மன்னோ.

(இ - ள்.) என்று சிரச்சிங்காதனத்தில் வீற்றிருந்த கவிச்சக்கரவர்த்தியாகிய கூத்தர் வீரநாராயணர்முதலிய துவாதசவீரர்களின் கீர்த்தியை, அவர்களுடைய அழியாத குலக்கீர்த்தியை எழுபதுகவியால் அவர்களாயுதமாகிய ஈட்டிமுன்னிலையில் எவ்வுலகினருந் துதிக்கப்பாடித் தமது சிம்மாதனத்தில் அறுபட்டுள்ள ஆயிரத்தெண்சிரங்களும் தங்கள் சரீரத்தினைத்தேடிப்போய் ஒட்டிக்கொள்ளும்படி மற்றொன்றுபாடிய அக்காலத்தில், குலோத்துங்கசோழமகாரா

சன் இது நல்லசரிதமென்று வினவிச் சிந்தை களிகூரும்படியாகத் திருவாய்மலர்ந்தருளினர். எ - று. மற்றென்றென்றது "கலைவாணி" என்னுஞ் செய்யுள்.

இது புராணிகர்கூற்று. மன் - ஓ - அசைநிலைகள். (கூச)

## வா ழி.

வாரணத்துரியோனுமைவாழியே
மதகசானனன்கந்தனும்வாழியே
யாரணங்களோடாகமம்வாழியே
யழிவிலீராதிசைவர்கள்வாழியே
பாரினுற்குலப்பத்தரும்வாழியே
பாமன்மெய்த்திருச்சின்னங்கள்வாழியே
வீரநாராயணர்விசயத்தினை
வினவுவோர்விரிப்போரென்றும்வாழியே.

மீட்சிச்சருக்கத்தோடு,

**வீ ர நா ரா ய ண ர் வி ஜ ய ம்**

முற்றுப்பெற்றது.

ஆகத்திருவிருத்தம். சூஅகூ.

---

## த னி ய ன்.

வளமருவுந்திருச்செய்ஞலூர்ஞானப்பிரகாசவள்ளன்முன்னுட்
டளர்வில்செழுந்தமிழ்ப்பாவால்வீரநாராயணர்விசயமென்றோர்நூன்
மிளிர்தரச்செய்திருப்பவதற்குரைபொழிப்பாவரைந்திட்டான்விபுதர்போற்றித்
தெளிதருநற்கதிபெறுகாஞ்சியிற்கச்சபாலயனுந்தேவன்றானே.

திருச்சிற்றம்பலம்.

---



# இந்நூற் செய்யுட்களின் சோதனபத்திரம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௨௩ | ௨௭ | பச்சிரதம் | பச்சிரத்தம் |
| ௨௮ | ௨ | யீய்ந்து | யீந்து |
| ௩௦ | ௨௪ | புக்கி | புக்கு |
| ௩௧ | ௯ | றெசுயர் | றேசுயர் |
| ௩௮ | ௮ | பொன் | பொன்னி |
| ௪௦ | ௨௨ | உறைந்தை | உறந்தை |
| ௪௦ | ௩௬ | யிறை | விறை |
| ௧௦௯ | ௩௧ | மாணுக் | மாணுக் |
| ௧௧௬ | ௧௯ | பதுவணன் | பதுமவணன் |
| ௧௩௯ | ௨ | மூன்றுயோசனை | மூன்றியோசனை |
| ௧௪௪ | ௨௩ | மின்னமை | மின்னம்மை |
| ௧௪௬ | ௩௦ | லயப | லபய |
| ௧௬௨ | ௧௬ | யேற்கோ | யெற்கோ |
| ௨௦௯ | ௮ | நேருரூவ | நேருறுவ |
| ௨௧௦ | ௭ | நீழ் | நீள் |
| ௨௧௬ | ௨௨ | யிழந்த | யிகழ்ந்த |
| ௨௧௮ | ௧௨ | தேருவனேன் | தேருவனேற் |
| ௨௩௧ | ௨௦ | ழறண் | ழரண் |
| ௨௪௫ | ௩௬ | யுரான் | யூரான் |
| ௨௫௨ | ௧௫ | சுதத்தை | சுகத்தை |
| ௨௫௪ | ௧௫ | ளென்றுள் | ளென்றுன் |
| ,, | ௧௬ | வேற் | வெற் |
| ௨௬௫ | ௩௧ | ச்சின்மிகு | மிரு |
| ௨௭௦ | ௨௭ | மிது | மீது |
| ௨௮௬ | ௧௫ | கண்ணுளிற் | கண்ணுளிற் |
| ,, | ௧௬ | பழுவூர் | பழுவூர்த் |

(௧௦௯) வது பக்கத்தில் (௩௫) வது வரியில் "பக்கத்திலிருந்த" என்பதற்குப்பின், "ஆண்மக்களாகிய யானைகட்குச் சிங்கம்போன்ற வல்லபம்படைந்த கடுங்கோபமுள்ள" என்பதைச் சேர்த்துக்கொள்ளுக.

